ஓம்.

ஸ்ரீ வித்தியாரணிய முனிவர்

இயற்றியருளிய

# சங்கர திக்குவிசய காவிய வசனம்

இது

வேத மொழிபெயர்ப்பாசிரியர்

காசிவாசி

## சிவானந்த யதீந்திர சுவாமிகளால்

மொழி பெயர்க்கப்பட்டு,


சென்னை சூளை,

திரு. த. ப. இராமசாமிப் பிள்ளையவர்களால்

பதிப்பிக்கப்பட்டது.

---

திருவொற்றியூரான்

வேத மொழிபெயர்ப்புக் காரியாலய வெளியீடு.

**1934**

# FOREWORD.

THE display of harmony and order about us and the countless evidence of unchanging universal laws that govern all phenomena assure every moment the existence of a Supreme Soul as the First Cause of this universe and compel us irresistibly to a belief in the same.

Men have always sought the help of higher forces than intellect for a glimpse of this supreme existence. Spiritual masters have always been their guides as may be evidenced by the spiritual change wrought on the life of Swami Vivekananda by the influence of Sri Ramakrishna Paramahamsa.

Various beliefs and convictions with great thinkers as their exponents, mark the different steps of this country's psychological march. Advaita, its final expression, with Sri Sankaracharya as its powerful advocate, forms the blossom of Indian thought. Many a western savant, amongst whom may be mentioned Prof: Maxmuller, claimed it to be the highest attempt at Truth that human mind is capable of.

Sri Vidyaranya's Sankara Digvijayam, the rendering of which into Tamil this present work has attempted, is a key to the Life and activities of

Sri Sankaracharya. I know translations in Tamil drawn from other Sanskrit writers and they are comparatively meagre in biographical description. This work of Sri Vidyaranya, besides other things, presents fully and lucidly the discourses of Sri Sankaracharya with leaders of different Indian thoughts wherein he subjects the opponents' views to rigorous reasoning and makes them aware of their logical inadequacy. Thus Sri Sankaracharya finally asserts the superiority of Advaita over other Schools of thought.

It is gratifying in no small measure to observe that the translator Swami Sivananda Yatheendra has rendered the original Sanskrit into easy Tamil and I hope the public will appreciate his labour and be profited by a close study of the work.

Endeavours to diffuse knowledge of Sanskrit Literature by Translations need financial support. In the publication of this work SRIJUT T. P. RAMASWAMY PILLAI has proved himself nobly inspired by rendering necessary monetary aid, thus affording further stimulus to such enterprises as the Translation of the Four Vedas with which the author is at present engaged.

DR. M. RAJABAHDUR.

# முகவுரை.

கடல் சூழ்ந்த உலகனைத்தையுஞ் செலுத்துவதாலும், அருமறையாகம புராணங்களையும், அளவைகளையும், மற்றுமுள்ள, வருணம், மதம், முதலான கட்டுப் பாடுகளையுங் கடந்திருத்தலானும், எல்லாம் வல்ல கந்தழிக் கடவுள் ஒருவர் உண்டென்பது மக்களனைவருக்கும் ஒப்பமுடிந்ததேயாம். அக் கடவுள் இவரேயாவர் அவரேயாவர் என வழக்கிடுவதற்கு யான் முன்வந்திலேன், என்னை? அது, எல்லாம் வல்ல இறைவனது திருவிளையாடலேயா மாதலின். அற்றுகலினன்றே,

"வேறு வேறுருவும் வேறு வேறியற்கையும்
நூறுநா றுயிர மியல்பின தாகி
ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக்
கூறுடை மங்கையுந் தானும்வந் தருளி"

என்று கூறுகின்றது இனிய தமிழ் வேதம்.

இனி, அத்தகைய கந்தழிப் பொருளை, பக்குவமான மக்களுக்குப் பக்குவம் நோக்கி அறிவுறுத்துதற் பொருட்டு ஆசிரிய ரென்பவர் ஒரு தலையாக வேண்டற் பாலார்; அவ்வாசிரியரும் அம் முழுமுதற் கடவுளின் அநுக்கிரக வடிவமேயாவர் என்பது எல்லா நூல்களின் கருத்து, அதுபற்றியே,

"ஓராணீழ லொண்கழ லிரண்டு முப்பொழு
தேத்திய நால்வர்க் கொளிநெறி காட்டினை"

என்றும்,

" பின்னுங்குரு வாயடைந் தன்னருள்
பேணவைத்தாய் "
என்றும், வலிய சுருதிகள் வழங்குகின்றன.

மற்றும், 'குரு' என்னுஞ் சொற் பொருள் அவ் விறைவனுக்கு மாத்திரமே நன்கு பொருந்தும், அது கொண்டே பதஞ்சலி முனிவரும்,

இறைவன், " முன்னோர்கட்குங் குரு
காலத்தால் வரைவுபா டின்மையின் "
எனச், சூத்திர மியற்றி யருளினர்.

அவ்வியல் பிற்றாய ஆசிரியர்களைப், பல்வகைச் சமயத்தவரும் தத்தமது மதத்தைத் தழுவிப் பலவகையாகக் கொள்வர் அதனாலு மிழுக் கொன்று மில்லை.

ஆனால், வேதா கமங்களிலும், சமய நூல்களிலும், மற்றெல்லா நூல்களிலும் இலைமறை, காயென மறைந்து கிடந்த சுத்தாத்துவித நெறியை உலகெல்லா வற்றிற்கும் வெளிப்படையாய் எடுத்து உபதேசஞ் செய்தருளியவர் சங்கரபகவற்பாதாசிரியரே என்பது எங் நாட்டவரும், ஒரு தலையாகக் கொள்கின்றாரென்பதில் ஐயமு முண்டோ? இல்லை.

அவரா லெடுத் தாளப்பட்ட அத்துவிதக் கொள்கை எச் சமயத்தாராலும் மறுத்தற் கரியதாம். அந் நெறியே எல்லாச் சமயங்களையும் வெற்றி கொள்ளுவதுமாம். அது பற்றியே, இக்காலத்தில் அத்துவிதப் பேராசிரியராய் விளங்கிய சுவாமி விவேகானந்தர் அவர்களைச் சிலர், தாங்கள், இந்தியாவில் பலவகைச் சமயங்களிருக்க அத்துவித மதத்தையே மேனாட்டார்க்கு அறிவுறுத்திய தென்னையோவென

வினாவ, அதற்கவர் ஆம் உண்மை இந்தியாவில் பலவகைச் சமயமுண்டு. அவையனைத்தும் மேம்பட்டனவே யாம், ஆனால் அவைகளைக் கொள்வனேல் மதவாதிகளை வெல்வதரிது, என்று மறுமொழி கூறியுள்ளார்.

அத் தன்மைத்தாகிய அத்துவித நிலை; ஆராய்ச்சியொன்றானே வருமென்பதுவே சங்கரபகவற்பாதரின் துணிபாம்.

அந் நிலைமை, பேச்சால் வருமென்பர் கலைகற்றோர், மூச்சால் வருமென்பர் யோகிகள், கருமத்தால் வருமென்பர், ஒழுக்கமுள்ளார், தருமத்தால் வருமென்பர் விழுமிய கொடையாளர், அன்பால் வருமென்பர் என்பெலா முருகுபவர், யோகத்தால் வருமென்பர் மோகமற்ற மனமுடையார், மற்றும் பலவகையால் வருமென்று பலவாறு கூறுப; அவையெல்லாம் ஆராய்ச்சிக்கு இன்றி யமையாது வேண்டற்பாலதாகிய மனத்தூய்மையின் பாற்படும். அம் மனத்தூய்மை எம் மதத்தாலேனும், எவ் வகையாலேனும், எந் நூலாலேனும் வருக அது எமக்குச் சம்மதமே; அத்துவித நிலைமாத்திரம் ஆராய்ச்சியாலேயே வருமென்பது பெரியார் கொள்கையாம்.

அவ் வாராய்ச்சியோ, கடவுளை யாராய்தலென்பார் கருத்தில்லார், உலகத்தை யாராய்தலென்பார் உண்மை நோக்கிலார், தேக வாராய்ச்சி யென்பர் மோகமிக்குள்ளார், சீவ ஆராய்ச்சி யென்பர் பாவமற்றோர், முத்தி யாராய்ச்சி யென்பர் கூரிய புத்தியர், மற்றும், தத் தமக்கியைந்தவாறே பலவகை யாராய்ச்சி யென்பர் பலர்.

ஆனால், மேற்கூறியவைகள் ஒவ்வொரு கூறுபற்றி ஆராய்ச்சியேயாம். சங்கராசிரியருக்கோ, சடம், சித்து,

என்னு மிரண்டையும் பிரித்தலே ஆராய்ச்சி யென்பதூஉ முக்கிய கருத்தாம். அற்றாகலினன்றே, மறை நான்கிற்கும் முறையாய்ப் பாடிய மியற்றிய மாதவ வித்தியாரணிய முனிவர், இந்நூல், ஐந்தாஞ் சருக்கம் நூற்றுப் பதினாறும் விருத்தத்தில், "பாலையும், நீரையும் அன்னப்புள் பிரித்தெடுக்குமாறு, சங்கராசிரியர் சடத்தையும், சித்தையும் பிரித்து எடுத்துக் காட்டியருளினர், அதுபற்றியே இவருக்குப் 'பரமாஞ்சம்' என்னுந் திருநாமம் மிக்க வழக்குடையதாயிற்று, இவ்வாறு பிரிக்காது விடயவேட்கையா லுழல்பவர் ஏனையவற்றில் ஒருவாறு ஆராய்ச்சி யுடையாராயினும் இதில் பாலையும் நீரையும் பிரிக்க வறியாத காக்கை போன்று சட சித்துக்களைப் பிரித்தறிய முடியாதா ராயினர்" என்றார்.

யாமும் இத் தன்மைய ஆராய்ச்சி முறையில் எல்லா ஆசிரியரினும் இவரே சிறப்புடையாரென உறுதி கூறுவேம்.

இஃதறியாதார் சிலர், உலகத்தா ரெல்லாருக்கும் போதித்தாராதலின் உலக குருவென்று கொள்வர்.

அக் காரணம் பற்றி சகத்குரு வென்பது யாவராலு மறுக்க முடியாததாம். மற்றும் யாதானு மோர் வகை பற்றி அத் தகைய திருநாம மெனினேோ, நன்கமையாததுடன் திருநாமமே இழுக்குற்ற தாகும், என்னை? மறையவர் குலத்துதித்தவ ராதலின் மறையவருக்கே குரு வென்றும், ஸ்மார்த்த மதத்தின ராதலின் ஸ்மார்த்தருக்கே குரு வென்றும், சிவாவதார மாதலின் வைதிக சைவருக்கே குரு வென்றும், தெய்வத்தின் செய்கை யுடையராதலின் ஆத்திகர்க்கே குருவென்றுங் கொள்ளினோ, காம கலை யுணர்த்தியதால் காமத்திற்குக் குருவென்றும், விடயபோகங்

துய்த்து விடயத்தின் இயலை வெளிப்படுத்தினமையின், போகத்திற்குக் குரு வென்றும், கேரளத்திற் பிறந்ததால் கேரளத்திற்கே குருவென்றும், கொள்வதும் வரும். வரவே, "சண்டாளனாக மறையோனாக அவன் குரு வென்பது என்மன நிச்சயம்", எனத் தாமே திருவாய் மலர்ந்தருளினமையின் பஞ்சமர் முதலியோர் அவரை ஆசிரிய ரெனக் கூறில் நம்மனோர்க் குண்டாகுந் துவேடம் அறியாமைப் பெருக்கன்றி மற்றென்னும்? அவரால் நிறுவிய மடங்களில் அவர் ஒருவகைச் சாதியாருக்கே உரித்தானவ ரென்று பிறரை நாடவொட்டாது அஞ்ஞானத்தைப் பெருக்கி மெய்ஞ் ஞானத்தை மறந்து உண் டுடுத்துக் கொண்டு வாணாளை வீணாளாகப் போக்கல் மாயையின் வலியேயன்றி மற்றென்னை?

இத்தகையார்கள் ஆதி சங்கராசிரியரின் கொள்கைக்கு மாறுபட்டவர்களென ஒதுக்கற்பாலர்கள். இக் காலத்திய சங்கராசிரியரின் மரபும் பலவகை யானும் மாறுபட்ட தென் றுணர்க.

ஆகையால் சங்கரபகவற்பாதருக்கும் இதுவே உடன்பாடாம், இஃதன்றி, சாதி பற்றியும், மதம் பற்றியும், வருணம் பற்றியும், தெய்வபேதம் பற்றியும், அத்துவிதத்தை அவர் உணர்த்தி யிருப்பரேல், தாமியற்றிய நிருவாண தசகத்தில் "சாதியுமில்லை ஆசிரமமுமில்லை", என்றற் றொடக்கத்து வாக்கியங்களால் சுத்தாத்துவித நிலையைக் கூறிப் பேதமென்பதையே அடியோடு மறுத்திருத்தல் பொருத்த முடையதாகாது, மற்றும், தம்முடைய விவேக சூடாமணியில் "மக்கட் பிறப்பும், முத்தி வேட்கையும், ஆசிரியனடைவும்" முத்தி யடைவதற்குச் சாதன மென்று கூறியதும் முரணும். அஃதன்றியும் "சிறிதள வேனும்

பேதமுறிற் பயமுண்டு" என்பது முதலிய சுருதிகளுக்கு மாறுபடுதலுடன் சுத்தாத்து விதத்திற்கு ஆசிரியால ரென்பதும் வரும், விரிக்கிற் பெருகும்,

ஆதலின், ஆதி சங்கரபகவற்பாதாசிரியர் பேதமெலா மொழிந்த சுத்தாத்து விதத்தையே நிலை நாட்டினரென் பது இந்நூலை இனிது நோக்குவாருக்குத் தெற்றெனை விளங்கும்.

நிற்க, சங்கராசிரியரின் அவதாரத்தைக் கூறும் பிர மாணங்களைச் சங்கராவதார வுண்மை விளக்கத்திற் காண்க.

இத்தகைய பெருமை வாய்ந்த சங்கரபகவற்பாதரின் அழகிய சரிதத்தைக் கூறும் நூல்கள் பலவுண்டு அவை, ஆனந்த கிரியாரியற்றிய சங்கரதிக்கு விசயம், சித்து விலாச சுவாமி, கந்த சுவாமி, என்பவர்களியற்றிய, சங்கர விசய விலாசம், வியாசலீய மென்னும் மகாகாவியம், பத்ம பாத ரியற்றிய சரித்திரம், என்பனவாம்.

இந்நூல்கள் இப்போது முற்றுங் கிடைக்காமையானும் கிடைக்கினும், அவைகள், ஆதி சங்கரபகவற்பாதரின் அருட் செயல்களையும், பொருளியல்களையும், மதக் கொள் கைகளையும் நன்கு விளக்கில, விளக்கினும் ஒன்றற் கொன்று மாறுபட்டன வாகக் காணப்படுகின்றன.

ஆதலின், இந்தியர்களுக்கு இந்துவாய் விளங்கி, பழைய மறைநெறிகளைப் பலவாற்றானும் விளக்கி, ஆத்தி கரின் நூல்மரபுகளை அழியாது காப்பாற்றிய வித்தியா ரணிய முனிவர், மேற்காட்டிய சங்கர சரிதங்களனைத்தை யுந் தொகுத்து, மற்றையது விரித்தல், என்பதுபோல் வாளாக ஏனைய சரிதங்களை விரிக்காது, ஆதி சங்கரபகவற் பாதரின் அவதாரத் திருச்செயல்களை மாத்திரம் இன்

சுவை மலியக் காவியப் போக்கில் வடமொழியில் நன்கு இயற்றியிருப்பதை யுணர்ந்து, இத்தகைய சரிதத்தை நமது தமிழ் நாட்டிடியில்,

"வருணம் நெறிசார் மதத்தம் மதமெய்ப்
பொருளுணர் ஆடிறு முந்தீபற
பொன்றாத தொன்றேயென் றுந்தீபற"

என்னும் அருமைத் திருவாக்கின்படி, வருணத் துவேஷத்தைத் தமது மதப் பற்றாலும், மதத் துவேஷத்தைத், தமது மெய்ப்பொருளுணர்வாலும் போக்கிச் சமரச நன்னிலையை யடைந்துய்யு மெனக் கருதி, வடமொழி கற்பாருக்கும் அநுகூலமாமாறு ஒவ்வொரு சுலோகமொழி பெயர்ப்பிற்கும் எண்ணிட்டு, ஒருவாறு தமிழ் மொழியையுந் தழுவி, உரையிலுள்ள சில முக்கியப் பொருளையுங் கூட்டி, தென்மொழித் தொடர்பில் இழுக்குவரு மிடத்துச் சில சொற்களையுங் காட்டி, பொருள் மாறுபாடிலாது மொழி பெயர்த்துள்ளேம். வடமொழியிலிருந்து முறையாகத் தென்மொழியி லியற்றிற் சிறிது, வேற்றுமைகள், பால், திணைகள் மாறி வருமென்பது இருமொழியையுங் கற்றார்க் கினிது விளங்கும், இதில், மறதியாலும், பதிப்பின் வழுவாலும், பிழைகளிருக்கில் உலகம் பொறுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகின்றேம்.

இதைப் பொருட் செலவுசெய்து அச்சிட்டு தமிழ் நாட்டில் உலவச் செய்த திருவாளரும், சிவனடியார்களுள் வன்றொண்டரும், சிவனடியாரிடத்து அன்புடையாருள் மேம்பட்டாரும், திருவொற்றியூரா னடியாரு மாகிய சென்னைமாநகர், சூளை, த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களின் நன்மைக்குத் தமிழ்நாடு பேரன்பு பாராட்டுவதாகுக.

மற்றும், வடமொழியிலுள்ள திருநான்மறைப் பொருளைத் தமிழ் நாடறிந்து இன்புறுமாறு தென்மொழியில் அம் மறைகளை மொழிபெயற்குமாறு, எம்மை முயல்வித்த ஷெடி பிள்ளையவர்களின் பெருநலத்தை யாமு மறவேம். தமிழ் வேதமும், சில திங்களில் வெளிவந்துலவுமாறு இறைவ னருள் புரிவானென நம்புகின்றேம்.

மேலும், ஷெடி பிள்ளையவர்கள், திருக்கோயி லியற்றன் முதலிய பல தருமங்களைச் செய்வதுடனும், தமிழ் மறையோதுவித்தல், வடமொழி பயில்வித்தல், முதலிய அநேக பேருதவிகளைச் செய்வதுடனும், இவ்வாறு பண்டைக் காலத்திய நூல்களைச் செப்பனிட்டுத் தமிழுலகின்புறுமாறு செய்விக்கும் ஊக்கத்தையுங் கைவிடா திருந்து, தழைத் தோங்குமாறு திருவொற்றி யூரானை வேண்டுவதுடன், எல்லாம் வல்ல குகப் பிரமத்தையும் முக்கரணங்களாலும் போற்றுகின்றேம்.

இங்ஙனம் :

வேதமொழி பெயர்ப்பாசிரியரும்
இந்நூலின் மொழிபெயர்ப் பாசிரியருமாகிய
காசி வாசி
**ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள்.**

சிவமயம்.

மதுரைத் தமிழ்ச் சங்கப் பரீக்ஷகராகிய
பண்டித சித சங்கத்து
நாராயண சுவாமி யவர்களால்
இயற்றப்பெற்ற

# சிறப்புப்பாயிரம்.



தாமரை பூத்தொளிர் காமரு முகிலே
யாமெனத் திகழ்தரு பூமகள் கேள்வன்
விழிகவர் வனப்பி னெழுகொளி மிளிருந்
தமிழ்தருந் துளபங் கமழ்திரு மேனியி
னுந்தியந் தாமரை வந்தநல் லந்தணன்
நாவினிற் பழுத்துப் பூவினிற் சுவைதருந்
திருமறை முடியி னருமறை யதனை
வேத வியாத மாதவன் றெய்ய
கைத்தல மதனில் வைத்தசெங் கனியெனத்
துருவரும் பிரம சூத்திர மதனால்
விளக்கினன் மன்ற துளக்கரு மதற்கே
யிப்புவி யதனிற் றிப்பிய வலமா
ரொப்பரும் பாடிய வுரைவழி யதனொடு
தேம்பொதி துளபத் தீந்தொடை முகிலின்
பவளவா யமிழ்தப் பனுவற் குரைத்த
பாடிய வழியினும் பன்னூல் வழியினும்
திருமறை முடியி னிறை மைசான் றவற்றின்

பொருடெரி பாடிய வொருபெரு வழியினும்
வாதுரை வழியினும் மண்ணிடை மயங்கிய
இழிமதத் திணியிரு ளிரிதர ஓ, ஓ
வொன்றே பண்ட மிரண்டிலை யுணர்மெனக்
காட்டிய யுளத்தளி பூட்டின னதனு
லெருக்கறு கிதழி திருக்கிளர் வேணி
மிலைச்சிய பெம்மான் விழுத்தகு தமிழ்சேர்
சேரநா டொன்றோ சிறப்பமர் நாவலந்
தீவே புரிந்த செய்தவப் பயனாய்
வெறுத்த கேள்வியர் நிறுத்த நெஞ்சினர்
வியப்புறு நடையினர் நயப்புறு மொழியினர்
தண்ணளி பெருகித் ததும்பு முளத்தினர்
நான்மறை பயின்ற நாவினர் மேலவர்
புலத்தினிற் சிறந்த புரிநூன் முதல்வர்
குலத்தினி லின்பங் குதிகொள நன்றே
தோன்றின னம்ம தோன்றின னம்ம
இன்பே யளித்தரு ளியற்கை தோன்றச்
சங்கர னெனப்பெயர் தாங்கின னாகி
யெங்கணுஞ் செலீஇய விசையுறீஇ யம்மதன்
பாலடி வைத்தோர் மேலடி பெறவே
வாலடிக் கொளீஇய காலடி யதனிற்
றோன்றின னம்ம மான்றம ரிளமையிற்
பொங்குறு மாதவப் புனிதநல் வேடங்
கொண்டன னாகிக் குவலய மதனிடை
நாற்றிசை யுஞ்செலீஇ நலவல முறீஇத்
திருவுளத் தடைத்த செயலொருங் கிழைத்துத்
தனக்குறழ் வின்றித் தங்குமக் குரவன்

வீறுசால் விசயந் தேறுதல் பெறவே
ஆரிய மொழிதனி லாரிய சுவைபல
எம்பெரு மாபி னிறையவ னாகிய
வித்தியா ரணிய மேதகு முனிவரன்
யாத்தனன் மன்ற யாத்தவச் சங்கர
விஜய மதனை மேம்படு தமிழரும்
அறிந்தழி வருமின் படைந்தனர் திளைக்க
தெருள்பூத் தொளிருளத் தருள்பூத்ததனால்
வித்தியா ரணிய மெய்த்தவன் வழிவருங்
கோவிலூர் மேவிய குருபர னாகிய
வீரசே கரனருள் விளங்குருக் கொண்டெனத்
தோன்றிய முனிவர னன்ற வறிவினன்
வடமொழி தென்மொழிக் கடலிடம்பெறவே
தேறுறு புலவன் வீறுறு சிறப்பினன்
நுண்மா ணுழைபுலத் தண்ண லாகிய
வெழிற்சிவா னந்த வேந்தலின் ஞான்று
தனித்தனி சுலோகத் தினித்தமர் பொருடைமைத்
தனித்தனி பொழிப்பாய்த் தந்தனன் றமிழினில்
விளக்கிய வந்நூல் வெளிவந் துலவ
வளமே பழுத்த வள்வநா டதனின்
முத்தமிழ் முழங்கு மூவாச் சீர்திகழ்
தஞ்சைக் கரந்தைத் தமிழ்ப்பே ரூரினிற்
கங்கையங் குலத்தினர் கைவரப் பெறீஇய
புகழினிற் பூத்த பொருவரு தகையினன்
அந்நக ரொரீஇ யிந்நா ளவனியில்
குறிஞ்சியோ புறவமோ நறுந்தகை மருதமோ
நெய்த னன்னிலமோ நெடுநக ரிதுவென
வளம்பல குழுமி மலிதருந் தகைத்தாய்

அன்பே பெரிதா லின்பே பெரிதால்
அருளே பெரிதாற் றெருளே பெரிதால்
வளமே பெரிதா லழகே பெரிதெனக்
கண்டவ ரொன்றே கழறுவ ரன்றி
முழுது மறிந்து மொழிகுந ரெவரே
யென்னப் பொலிவுறு மிறைமை சான்று
பனிமதி யதுவே பானுவே யுடுவே
ஆகிய, சேயிடத் ததனைத் திகழ்த்துநல் லாடியின்
வானநாட் டுறைவோர் வளமறிந் துளத்தே
களிப்புறல் கேட்டனம் களிப்புற யாமும்
அத்தகைக் கருவி யமைந்தில மாயினும்
மேனிவந் துளைத்து விழைவுறக் காண்குவம்
என்னவு ளங்கொளீஇ யெழுந்துவந் துறீஇ
வாலது பிலத்தே வலிபெற நிறீஇ
யுடலது நிமிர வொளிர்மணி முடியதை
வளைத்தனர் நாகர் வனப்பறி தரல்போல்
தெருவிடை வளைந்த நிரலமை கம்பத்துப்
புகைதரா விளக்கணி பொலிவுறப் பெற்ற
நன்னலம் பழுத்த சென்ன னன்னகரினில்
ஒருபுடைச், சிவமுந் தவமுஞ் திகழ்தருஞ் சூளைப்
பதியினிற் கெழுமிய மதிமிகு தோன்றல்
ஆலயந் தொழுவது சாலவு நன்றெனுந்
திருமொழி யதற்கோர் தெரிதரு மிலக்காய்
உவப்புற நாளு முருகுமெய் யன்புடன்
உடலிறு மூறு வுற்ற காலத்தும்
அரும்பெறன் மகார்பெரும்பிறி தாகிய
கையறுகாலங் கவிந்தநா ளதனினும்

வீழ்நாள் படாது காழே ருளத்தோடு
பெற்றமார்ந் திலங்கு மொற்றியூ ரிறைவன்
ஆலயம் புகுந்தவ னடிதொழு வாழ்க்கையன்
குற்றடி யவர்தஞ் சிற்றேவ லெனினும்
அம்மா பெரிதென வகமகிழ்ந் திழைப்போன்
கலையோ புலனோ நிலனோ வளியோ
தவமோ விவ்வுருத் தாங்கிய தெனவே
சிவணிய மெய்த்தவச் சிவரா மலிங்கக்
குருபர னடியே பரவுறீ இப் பெரிதும்
மறைமுடி வதனின் மலிதரும் பொருளை
யுளங்கையங் கனியென வுணர்ந்துளஞ் சிறந்தோன்
அந்தண ரொன்றோ வணுகின ரெவரும்
இயனூற்புலவரு மிசைநூற் புலவரு
முளங்களி கொளவீத் துவக்கு மின்பினன்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரெனச்
சங்கச் சான்றோர் சாற்றிய மொழிதெளிந்
தாற்றா மாக்கட்கு மாற்றுநர் தமக்கும்
பசிப்பிணி போக்குறூஉம் பான்மை யாளன்
வடமொழி யதுவே தமிழ்மொழி யதுவே
யெனுமிரு மொழியு மியலொடு வளர்தரப்
பள்ளியொன் றமைத்துப் பளகறப்பயிலும்
மாணவர் தமக்கே மகிழ்தர வுண்டியு
முடையு மருந்து மடைதரு சுவடியும்
தருந்தொழி லொழிதராத் தகைமை யாளன்
வேதப்பனுவலும் போதப் பனுவலும்
புகழ்ந்தெடுத் தோதிய பொருவாச் சீர்திகழ்
ஒற்றியூ ரதனில் வெற்றிகொ ளிறைவன்
ஆலயத் திருப்பணி மேலவர் மேவரப்

புரிதருஞ் செம்மல் விரிதருங் கேள்வியன்
தண்ணளி யுடைமையிற் றரும னிவனே
வண்மையி னிவனே வருண னழகினி
லிலங்கணைக் கிழவ னெனப் புலவர்
அணிதரத் திகழ்வோன் பணிவுடை மொழியினன்
ஆகிய, இராமசா மிப்பெய ரேந்தலினிதே
பதிப்பித் தனனால் பண்புமீக் கொளவே.

சிறப்புப்பாயிரம்
முற்றும்.



## சங்கராசாரியர்
## தத்வமசித் தோத்திரம்.

ஈதலது ஈதலது வென்பமுத லாய
வேதமொழி கொண்டெவையும் மேதக விலக்கி
ஓதலற நின்றதென வோர்ந்தனர்க ளான்றோர்
சாதல்வர லற்றவது தத்வமசி தத்வம். (1)

காயமுத லானவவை கண்டன மயங்கொட்
டாயவுமி யின்கண்மறை வானவெதை யான்றோர்
ஏயுமெழி லுத்தியது குற்றலி னெடுத்தார்
தாயுல்க மானவது தத்வமசி தத்வம். (2)

இம்பரிழி வென்றவிழி கோனனி யெறிந்து
வெம்புபுல வாறதனின் மேவ விரைகின்ற
ஐம்பொறிய வாயவசு வங்களை யசைக்கும்
தம்பமென நின்றவது தத்வமசி தத்வம். (3)

நன்றுநன வாதிகளில் மாலைதனி ஞர்போல்
நின்றதுணர் வாயென வறிந்தவையி னீக்கி
ஒன்றிய வுபாதிகளின் வேறதனை யோர்ந்தார்
தன்றகவி ஞாதுந றத்வமசி தத்வம். (4)

யாவுமிவை யாவனொரு வேந்தலெனல் முன்னும்
பூவன்மறை யின்மொழிகள் பொன்னென வணிக்கே
பூவின்முத லாகவுரை போதமது மேலோர்
தாவற வறிந்தவது தத்வமசி தத்வம். (5)

இத்தனுவை யானென வெணும்பொருணல் வெய்யோன்
தத்துமுல கின்வதிவ தாகுமது தானே
யித்தனுவை யானென மதிப்பதென மாற்றி
தத்துவ ருணர்ந்தவது தத்வமசி தத்வம். (6)

தானதரு மங்கடவ யோகமவை யாலே
மானமறை மாசறு மனங்களவை தம்மால்
ஆனநல பக்குவ ரறிந்துகொள மேவும்
தானிகர்வி லாதவது தத்வமசி தத்வம். (7)

வித்தகர் சமாதிமுத லானவினை யாலே
சத்தொடுசி தின்பென வறிந்துமிகு தன்னை
இத்திரை யியற்று மதியற்றி நலமுற்றார்
சத்தொடுசி தின்பமது தத்வமசி தத்வம். (8)

தத்வமசித் தோத்திரம்
முற்றிற்று.



## சங்கரபகவற்பாதர் திருவருட் பத்து.

உலகத்தோர் குரவ வுண்மையாம் பொருளே
வொன்றெனை வுணர்த்தினேய் சமயக்,
கலகத்தோர் காணுக் கதியையுங் காட்டிக்
கடையனேக் காத்த கண்மணியே,
பல கற்ருேர் பணித்த பரம தம்பரவு
பரமனுங் குரவர்கள் தம்முள்,
திலகமாந் தேவே சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (1)

ஆதியாங் குருவே யருளதி னுருவே
யறிவரு மறைமுடிக் கமலம்,
நீதியாய் விரிய நிலத்தெழு கதிரே
நிசநெறி நிறுவிய நிமலோய்,
சோதியே சுகமே சுத்தமாஞ் சொரூப
சுருதியிற் சொல்லுமோர் துணையே,
தீதிலா தெனேயாள் சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (2)

தருவெனும் பிரம சூத்திரந் தழைத்து
தனிரச வத்விதக் கனியை,
இருநிலத் தளிக்க விணையில் பாடியநீ
ரெடுத்தரு ளேகமே யிறையே,
குருவதி லரச குணமதிற் குன்றே
கூரருள் ஞானத்திற் கடலோய்,
திருவுறு மெனேயாள் சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (3)

அத்தனே யையா வறிவெலாங் கடந்த
வத்வித வரும்பொரு ளளித்த,

சுத்தனே துரியா சுருதியின் றுணிபைத்
தொல் லுலகெங்கு மீ குருவே,
பித்தனே னெனையாள் பேரருட் பிழம்பே
பெறற்கரும் பேறெனக்களித்த,
சித்தனே தெருளே சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (4)

குருவெனும் பொருளே குவலய விருளைக்
கொய்திட ஞானமாம் வாளைத்,
தருவெனத் தந்தோய் தரணியிற் றூணாய்த்
தனித்திட்ட தாணுவே தமியேன்,
கருவெனுங் கடலே கதியதாய் நிற்றல்
கருணையா லயவுனக் கழகோ,
திருவொருங் கமைந்த சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (5)

மதவிருண் மாற்று மாவொளி மதியே
மறைமுடி மாண்பொருள் மண்ணில்,
உதவிய வுறவே யுண்மையாங் குருவே
யுனதடி யுன்னிடா வுலுத்தன்,
பதவியும் பெறவே பரம வுன்னருளைப்
பாலிப்ப தென்று நீ பதியே,
சிதமுறு தேவே சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (6)

சாலங்கட் கதீத சகச வாழ்வதனைச்
சகமெலாந் தகவிய தாயே,
காலங்க ளோர்ந்து கடற்றரை யதனிற்
கருதரு மறைசொலுங் கருத்தை,

ஆலங்க ளேய வருந் துற வதனு
லடைந்துமே யறிவித்த வண்ணுல்,
சீலங்கள் சேர்ந்த சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (7)

சண்மத நிறுவித் தடிந்தொரு வகையைச்
சதுரருக் கருளிய தலைவ,
உண்மத மூன்று மொழித்துமோ ரிரண்டு
வூழ்வினை விலக்கிய வொருவ,
கண்மணி யேற்பக் கதியையு முணர்த்திக்
கடையனைக் காத்திட லென்றே,
தெண்குரு தேவ சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (8)

அறிவிலாக் கரும மகங்குழை பக்தி
யடங்குறு மியோகமா மவைகள்,
பிறிவிலாப் பெரிய பேறதை யளிக்கும்
பெற்றிய தன்றெனப் பெயர்த்து,
குறியுலா ஞான மொன்றுமே வீடு
கொடுத்திடு மென்னவே குறித்துச்,
சிறியனு மெனையாள் சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (9)

வேதமாம் பசுவில் வியாதனுங் கறந்த
விமலமாஞ் சூத்திரப் பாலை,
போதமாம் நவ நீதம்மெழக் கடைந்து
புவி யுளார்க் களித்தருள் புனிதா,
ஏதமாம் நாயேற் கிரங்கிட லென்றே
யெனக்குனை யன்றியா ரெந்தாய்,
சீதமா மனத்த சங்கர பகவத்
தேசிகச் செல்வமே சிவமே. (10)

திருவருட்பத்து முற்றிற்று.

# ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள்

## தோடக சந்தத் தோத்திரம்.

விதிதாகில சாஸ்த்ர ஸுதா ஜலதே
மஹிதோப நிஷத்கதி தார்த்த நிதே
ஹ்ருதயே கலயே விமலம் சரணம்
பவசங்கர தேசிக மேசரணம். 1

கருணு வருணு லயபா லயமாம்
பவசாகர துக்க விதூன ஹ்ருதம்
ரசிதாகில தர்சன தத்வ விதம் (பவசங்) 2

பவதா ஜனதா ஸுஹிதா பவிதா
நிஜபோத விசாரண சாருமதே
கலயேஸ்வர ஜீவ விவேக விதம் (பவசங்) 3

பவயேவ பவாநிதி மே நிதராம்
ஸமஜாயத சேதஸி கௌதுகதா
மமவாரய மோஹ மஹாஜலதிம் (பவசங்) 4

ஸுக்ருதேதி க்ருதே பஹுதா பவதோ
பவிதா பத தர்ஶன லாலஸதா
அதி தீன மிமம்பரி பாலய மாம் (பவசங்) 5

ஜகதீ மவிதும் கலிதா கிருதயோ
விசரந்தி மஹா மஹஸ ச்சலத:
அஹிமாம்ஸு ரிவாத்ர விபாஸி குரோ (பவசங்) 6

குருபுங்கவ புங்கவ கேதனதே
ஸமதா மயதாம் நஹிகோபி ஸுதி:
சரணுகத வத்ஸல தத்வநிதே (பவசங்) 7

விதிதா நமயா விஶதைக கலா
நச கிஞ்சன காஞ்சன மஸ்தி குரோ
த்ருத மேவ விதேஹி க்ருபாம் ஸஹஜாம். (பவசங்) 8

சுருதிஸ்மிருதிபுராணுனு மாலயம் கருணுலயம்
நமாமி பகவத்பாதம் சங்கரம்லோக சங்கரம்.

தோடக சந்தத் தோத்திரம் முற்றும்.

---

காசியில் கலாநாதர் சங்கரபகவற்பாதரை
வடமொழி விருத்தத்தால் துதித்தது

## வஞ்சி விருத்தம்.

புகழ் மாமறை சொற்றிடு பொருணிதியே
மிக நூல்களைக் கற்றுணர் மிளிர் கடலே
இக மேயுன தங்கழ லெண்ணு கின்றேன்
சக மீதினிற் சங்கர குரு சரணே (1)

பவ வார்கலி தந்திடு பல்துயரால்
அவ மேயுள நொந்தன னருளிய நூல்
கவர் மாய்தரக் கற்றனன் காத்திடுவாய்
தவ மாதவ சங்கர குரு சரணே (2)

அனை யேதனை யாய்ந்திடும கல்மதியோய்
நினை யேய்பவர் நீணல முற்றனரே
உனை யீசனைத் தாவுற வுணர்பவநீ
தனை யீந்தருள் சங்கர குரு சரணே (3)

சிவ மேயென நின்னையென் சித்தமிசை
உவ மானமி லன்புமு தித்ததுவே
பவ மோகெனும் பரவையிற் பரிபாலி
தவ யோகநற் சங்கர குரு சரணே (4)

பல நேரறம் மிச்சிலுன் பதமலரின்
நலங் காணுநல் லிச்சையு நண்ணிடுமால்
இல னேழைய னின்பினி லெனையாள்வாய்
தல மீதொளிர் சங்கர குரு சரணே (5)

அரு ணூல்களு மகலொளி யணிமிக நீ
கரு தாவுல கம்மதைக் காத்திடவே
வெரு வாதிவ ணென்றும் விரிந்தனசீர்
தரு சூரிய சங்கர குரு சரணே (6)

கலை யோசிறி தும்மனி கற்றிலனல்
இலை வாழ்பொரு ளெட்டுணை னீ யென்பால்
அலை யாவிரை வில்லெனக் கருடாராய்
தலை யாசிர்ய சங்கர குரு சரணே (7)

சூர வோர்களிற் சிங்கநல் லுமைபாகா
பொரு வொரிலர் நின்றனைப் புலவர்களுள்
சர ணுகத ருக்கருள் சத்தியனே
தர மோசொல சங்கர குரு சரணே. (8)

## திக்விஜய சாரம்.

எண்சீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஆதிசிவ னளித்தரு மன்னையினு மினிய
வறுமுகவ னம்புவிக்க ணருமறையா கமத்தை
நீதி யினி னிலைநிறுத்தக் குமாரபட்ட னாகி
நெறியகலுஞ் சமண்டொலைத்து நிறுவிச் சாதனங்கள்
பூதியுறு புருகூதன் மற்றுமவண் புடைசூழ்
புகழமரா ரும்புவிக்கண் புனிதர்களாய்த்தோன்றி
போதியநற் சிவஞானம் பூர்த்திசெய மண்ணிற்
புகழ்தருசங் கரன்வருவா னெனப்புகலு போதே 1

சிவகுருபாற் கேரளத்தில் வேதியத்தாய்க் கமரர்
தெளிபூக்க டிகழவருட் டிறமதனிற் றோன்றி
கவருறுநா கத்தையக்க மணியெனவுங் காட்டி
கருதுறுபூச் சுனைக்காயின் கருப்பத்தி லொளித்து
நவலிங்கத் திட்டமணி வில்வமதுந் தனது
நடுமிடற்றி லுறச்செய்து நண்ணியுமே வானை
தவழுமெட்டுக் குழவிகளாய் பூச்சுனைக்காய் வித்தை
தானுணர்ந்து தருப்பயினு னறுமணமுண் டாக்கி 2

இறைவிழா விரதத்தி லெழுந்தருளுச் சவரா
யேழைக்குப் பொன்னெல்லிக் கனியதுவு மீந்து
கறைகராப் பிடிப்பகற்றிக் கடுந்துறவு பெற்று
கனவெள்ளங் கமண்டலத்திற் கடுகளவா யடக்கி
நிறைகாவி யாடையையு நிழற்குடையதாக்கி
நெருங்குசிவப் புலையனுக்கு நிகழுண்மை கூறி
அறைவியா தன்முனிவர் வரமடைந்து மன்னைக்
காறழைத்துக் கங்கைமிசைச் சீடனையுமழைத்தே 3

தருக்குமண் டனக்கவியைத் தாழமிக வென்று
    தனக்குமால் கால்தீதண் கமலனுமாய்த் தோன்றி
இருக்குமவர் களைச்சீட ரீரிரண்டா யேற்று
    விறந்தகோ வுடம்படைந்து வின்புமிக வுய்த்து
பெருக்குகலை மகளாம்பா ரதியாரை வென்று
    பிணமான வேதியன்சேய் பிழைக்கச்செய்து
செருக்குமா ணவர்கட்குக் கவித்திற னு மீந்து
    செந்தீயை வலக்கரத்திற் றிகழ்ந்திலங்கச் செய்து 4

மாறுத கேரளத்தின் மறுசாப மீந்து
    மருவலருஞ் சருவக்ஞ மாபீட மேறி
கூறுரு வருட்செய்கை குவலயத்தி லியற்றி
    கொள்ளுமூல கனைத்திற்குங் குரவனுமே யாகி
ஆறுறு ஞன்கொழிந்த வாயுளதின் முடிவி
    லருங்குகையி லமர்நிட்டை யடைந்த வப்பொழுதே
பேறுன விடபவா கனமதனிற் பிறங்கப்
    பெருங்கயிலை யடைந்தனன்யோர் சங்கரனுஞ் சிவனே.5



# இந்நூலின் விஷய அட்டவணை.



D

# நூல்

## முதலாவது சருக்கம்.



## இரண்டாவது சருக்கம்.



## மூன்றாவது சருக்கம்.

நான்காவது சருக்கம்



ஐந்தாவது சருக்கம்

## ஆறுவது சருக்கம்

| செ. | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| | ஏழாவது சருக்கம் | |



எட்டாவது சருக்கம்

## ஒன்பதாவது சருக்கம்

## பதினைந்தாவது சருக்கம்.

| நெ. | விஷயம் | பக்கம் |
|---|---|---|

பதினாறுவது சருக்கம்.

சங்கரதிக்கு விசய காவிய வசன
விஷய அட்டவணை
முற்றும்.



ஓம் தத்சத்.

# ஸ்ரீ சங்கராவதார

# உண்மை விளக்கம்.

மங்கள வடிவ மான மலைமகள் பாகன் மண்ணிற்
சங்கர குரவ னாகச் சாரவ தாரத் துண்மை
பொங்குறப் புகலவன்னோன் புதல்வனைப் போற்றிப் புந்தி
தங்குறத் தொழுதுதாழ்ந்து தண்டமி ழதனிற் சொல்வாம்.

---

## சங்கர பகவத்பாதாசாரியர் அவதாரத்திற் பிரமாணங்கள்.

### கந்தபுராணம் சிவரகசியகண்டம், ஒன்பதாவது அம்சம் பதினான்காமத்தியாயத்தின் மொழிபெயர்ப்பு.

---

கந்தக்கடவுள் கூறியருளுகின்றார்.

வருங்காலத்துண்டாகுஞ் சிவபக்தர்களின் பக்தியைக் கண்டு வியப்புற்ற மலைமகளால் வினவப்பட்ட முக்கால முணர்ந்த முக்கண்ணர், மதியணிந்த சிரசை யசைத்துக் கொண்டு கூறியருளினர். முனிவ! கலியிலுண்டாகுஞ் சிவபக்தர்களுடைய பிரபாவத்தைக் கணங்களோடும், முனிவர்களோடும், சுரர்களோடுங் கேட்பாயாக. (சுலோகம் 2)

பரசிவன் கூறுகின்றார்.

கேட்டலினுற் பக்தியைப் பெருக்குவதும், பாவத்தைப் போக்குவதும், புண்யமானதும், ஆயுளைத்தருவதும், கேட்போர்க்கு மங்கலத்தைக் கொடுப்பதுமாகிய கலியுகத்திலுண்டாகும் பக்தர்களுடைய சரித்திரத்தைச் சுருக்கமாய்ச் சொல்லுகின்றேன். பார்வதியே! கேட்பாயாக. முயற்சியுடன் மறைத்து வைத்துக்கொள்ளத்தக்கது, ஒருவர்க்குஞ் சொல்லத்தக்கதன்று. அம்பிகையே! பாவ கருமத்தில் இரமிப்பவர்களும், கருமங்களனைத்திலும் பிரியமற்றவர்களும், வருணுசிரம கருமங்களிற் பிறழ்ந்தவர்களும், தருமத்தில் மாறி யொழுகுபவர்களுமான கலியில் மூழ்கிய அந்தச் சனங்களைப் பார்த்து ஆக்குரோசத்தினுற், கலியுகத்தில், எனது அம்சத்தாலுண்டாகுபவரும், தபோதனருமாகிய விப்பிரரைக் கேரள தேசத்திலுண்டாக்குவேன். மாகேசுவரியே! அவருடைய் சரிதத்தையே சொல்வேன் கேட்பாயாக. $(3 \times 7\frac{1}{2})$

இக்கலியுகத்தில் இரண்டாயிரம் வருஷங்கட்குப் பின்பு சாரசுவதர்கள், கௌடர்கள், மிசுரர்கள், கார்ணுந்சினர்கள், ஆமமீநாசனர்கள் (ஆமை, மீன், தின்பவர்கள்) உத்தர (திசை) சம்பந்திகள், விந்தியாசல நிலயர்கள், ஆரியாவர்த்தத்தில் வசிப்பவர்கள் ஆகியோர் பூமியின்கண் உண்டாகுவார்கள். சப்தார்த்த ஞானநிபுணர்கள், தர்க்கத்திற் கூரிய புத்தியுடைய சைனர்கள், அறிவுடைய புத்தர்கள், மீமாம்சையில் (விசாரத்தில்) இரமிப்பவர்கள், வேத போதக வாக்கியங்கட்கு மாறுபாடாகப் பிரீதி யுண்டாக்குபவர்கள், பிரத்தியட்ச விவாதத்திற் குசலர்கள், துன்புறுத்துபவர்கள், மிசிரர்கள், பெரிய சாத்திரங்களால் அத்வைதத்தைக் கெடுப்பவர்கள், கருமமே மேலானது, பலதாயகன் சிவனல்

னென்னும் யுக்தி கருதிய வாக்கியங்கொண்டு போதிப்பவர்களாகிய இவர்களாற் குலாசாரங்கள் கெடுக்கப்பட்டு அவ்வாறே ஜனங்கட்கு கர்மமும் பாரமாகிவிடும். ($7\frac{1}{2} \times 13\frac{1}{2}$)

அப்போதவர்களைக் கரையேற்றுதற்பொருட்டு ஈசுராம்சத்தை யுண்டாக்குவேன். மகாதேவியே! கேரள தேசத்தில், சசலம் என்னுங் கிராமத்தில், எனதம்சமாக அந்தண மாதின் வயிற்றிற் சங்கரனென்னுந் திருநாமமுடைய அந்தணச்சிரேட்டர் பிறப்பார். ($13\frac{1}{2} \times 15$)

அவர் பூணூநூலணிந்த மாத்திரத்தானே அக்காலங்கங்களோடு வேதத்தைக் கவர்ந்துகொள்வர், அவற்றினின்று வருடமொன்றிற் சத்தத்தை (வியாகரணத்தை) இனிது கற்றுக்கொள்வார், ஆராய்ச்சியுடையராய் இனிய தர்க்கத்திலுண்டாகிய புத்தியைக்கொண்டு சாத்திரங்களினுண்மைப்பொருளை நிண்ணயித்து மகா வித்தையுடையவர்களும், சித்தித்த வித்தியாவந்தர்களுமான வாதிகளென்னும் சிறந்த யானைகளைச் சங்கரனென்னுஞ் சிங்கமானது விரைவிற் பிளந்துவிடும். சைனர்களை எளிதில் வென்றுவிடுவார். அவ்வாறே ஏனைய கெட்ட மதங்களையுஞ் செயித்துவிடுவார். ($15 \times 18$)

அவர் (சங்கரர்) அன்னையாரை அம்மாவெனக் கூப்பிட்டுக்கொண்டு சந்நியாசியாகுவார். சந்நியாசவேஷத்தாற், றண்டமுடையராயும், கமண்டலமுடையராயும், காஷாயவஸ்திரந்தரித்தவராயும், நிர்மலராயும், வெண்ணீற்றால் திவ்யமான திரிபுண்டர முடையராயும், உருத்திராக்கவணியாலழகுடையராயுந், தேகத்திற் சிறந்த அவயவங்களில் உருத்திராக்கமணிந்தவராயும், சிவலிங்கார்ச்சனை பண்ணும்

அத்தன்மைய தனது மாணுக்கர்களால் (வேதாந்த பாஷிய) பாடிய வாக்கியங்களை யோதுவிப்பாராயுமுள்ள அந்த யதி யானவர் யான்ளித்த வித்தையாற் சந்திரன்போன்று விளக்கமடைவர். அத்தன்மைய அவர் ஆசிரமத்தைத் தூஷிக்கப்பட்ட மிசிரர்களான அத்வைதத்தைக் கண்டிக் கும் பாபிகளைத் தர்க்கத்தால் ஆட்சேபித்துத் தடையற்ற தனது மதத்தைத் தழுவினவர்களாக்கிவிடுவார். அங்ஙன மாயினும், அவர்கட்குச் சுருதிகளாலுங், தரிசன நூற்களா லுஞ் ஞானமுண்டாகாது. (18 × 22)

சூதர் கூறுகின்றார்.

சாத்திரமாகிய அஸ்திர முடையவர்களும், குசலர் களும், தர்க்கநூலிற் கூரிய புத்தியுடையவர்களுமான அந்த மிசிரர்கட் கறிவுறுத்தற்பொருட்டு, அந்த யதியானவர் (சங்கராரியர்) 'பாடிய' மியற்றுவார். பின்னர்ப் பாடியத் திற் போற்றத்தகுந்த மகா வாக்கியங்களாற் கலியுக தோஷக் கூட்டங்களை நாசப்படுத்துவார். அம்பிகே! வியாச முனிவரியற்றிய சூத்திரங்களிலுள்ள துவைத வாக்கியங் கட்குப் பொருள் அத்வைதமே யெனப் பிரமாணத்தாற் சாதிப்பர், காசியிலுள்ள வியாசரை வாக்கால் வெற்றி கொள்வார், சங்கரரென்னுந் திருநாமமுடைய அந்தச் சந் நியாசியானவர் களிப்புடையராய்ச் சங்கரனை (சிவனை)த் துதிப்பார். (22 × 26)

சங்கராரியர் துதியாக ஈசுவரர் கூறுகின்றார்.

சத்தியம், சத்தியம், ஈண்டு பலமென்பது சிறிது மில்லை, ஈசுரனல் வியாப்தம், பிரமம் சத்தியம், உலகம் பிரமமே, இது பிரமம், பின்னும் முன்னும் உருத்திரன், இரண்டாவதில்லை, தேவனொருவனே எல்லாப் பூதங்களி

லும் மறைந்திருக்கின்றான், பலவித வடிவங்களாற் தோற் றுந் தன்மையால் நீ ஆன்மா, பூரணன், பரிச்சின்னமான ரூபங்களுடன் கூடாதவன், உலகாதீதன், உலகமழியுங் கால் மாகேசுரன், சென்ற காலத்தன, நிகழ் காலத் தன, வருங்காலத்தன (ஆகிய பொருள்கள்) ஈசனாகிய உன்னிடத்திற் சாமான்யமாக விருக்கின்றன, தேச, கால முதலியன அற்றவன், உனக்கு உருவமில்லை, வேதத்தா லுணர்பவன், அசங்கன், சங்கமுடையான்போல் நீ இலிங் கத்துள்ளவனாய்த் தோற்றி விளங்குகின்றனை, சோமன், சூரியன், அக்கினி, இந்திரன் என்பவர்களும் பயத்தால் சஞ்சரிக்கின்றார்கள். சூரியனாகிய தேவன் நீ, வேதத்தின் ஆதியாகிய ஒலிவடிவன், மாகேசுரனொருவனே வேதாந் தங்களின் சார வாக்கியப்பொருளா லுணர்வோன், வைத்தி யன், பேதிக்கப்படாதவன், எல்லாப் பூதங்கட்கும் முதற் காரணன், இப்போது உன்னைக்கண்டு எனதுள்ளம் பயப் படுகின்றது, பிரணவத்தின் பொருளும், புருடனும், அமிருதமும், சத்தியஞானானந்தப் பெருக்கும், சோம! நீயாயிருக்கின்றாய், பந்தமுடையவனாகவும் முத்தியடைந்தவ னாகவும் நீ யிருந்திலாய், சங்கங்களில் அசங்கனாகின்றாய், பிராணனுக்குப் பிராணன் மனதுக்கு மனமும் நீ, அந்த வாக்குகள் உன்னிலிருந்தே மனதோடு நிவிருத்திக்கப்பட் டன, நிச்சயமான பிரமஞானிகளின் ஆனந்த விசேடமும் நீயா யிருக்கின்றாய் மாகேசுர! உன்னிலிருந்தே பூதசமு தாயங்கள் உண்டாயின, இவ்வாறே பிழைக்கின்றன, ஆச் சரியம்; முடிவி லுன்னிடத்திலேயே உலகம் இலயமாகின் றன, உன்னைத் துதிக்கத்தக்க ஈசனென்று துதிக்கின்றார் கள், சிறிதுணர்ந்து சர்வான்மக புத்தியால் உனது சொரூபத் தையே மாகேசுரதேவனென் றுணர்கின்றேன். (26 × 34)

**ஈசுரன் கூறுகின்றார்.**

இவ்வாறான விசுவேசனாகிய சங்கரருடைய (சங்கரபகவத்பாதர்) வாக்கியத்தா (துதியா)ல் மாகேசுரியே! நான் இலிங்கமற்றவனாயிருந்தும், அம்போது தனது இலிங்கத்தினின்றும் வெளிப்படுவேன். (எவ்வாறெனில்) திரிபுண்டர நெற்றியுடையவனாகவும், மூன்றாம்பிறை முடித்தவனாகவும், மான்றோலுடையனாகவும், நீலகண்டனாகவும், முக்கண்ணனாகவும், வயிற்றை மறைத்துள்ள ஆரம்பூண்ட அம்பிகே! உன்னால் (சத்தியாகிய உன்னால்) வெளிப்பட்டு, யதிகளிற் சிறந்தவரும் வணங்கியவருமாகிய அவருக்குக் (சங்கராரியர்க்கு) கீழ் வருமாறு கூறுவேன். (34 × 37½)

**ஈசுரர் சங்கரருக்குச் சொல்வதாக அம்பிகைக் கருளுகின்றார்.**

நான்கு மாணக்கர்களுடன் திருநீறு, உருத்திராக்க ஆபரணமுடையவனாக எனது கூறாகிய நீ, அத்வைத சித்தியின்பொருட்டுப் பூமியில் இனிது அவதரித்திருக்கின்றாய், பாபங்கலந்த மார்க்கமுடையவரான துர்ப்புத்தியுடைய சைனர், புத்தர்களால் துவைத வாக்கியங்களிலிருந்தும் வைதிகமான அத்வைத மார்க்கம் பின்னப்பட்டுவிடத்து, அந்தப் பேதமாகிய மலையைப் பிளப்பதற்கு வச்சிரமாகிய நீ, எனது கூறாக அவதரித்திருக்கின்றனே. உனக்கு முப்பத்திரண்டு வயது; விரைவிற் கைலை யடைகுதி. இந்த ஐந்து இலிங்கங்களைப் பெற்றுக்கொள்ளுதி. இவைகளை வில்வத் தளங்களாலும், பூக்களாலும், பல்வகை நைவேத்தியங்களாலும், திருநீறு, உருத்திராக்க முடையவனாகவும், பஞ்சாக்கர பாராயணனாகவும், சதருத்திரி ஆவர்த்தியாலும், தாரகத்தாலும், வெண்ணீற்றாலும் இனிது பூசை செய்குதி. உனது பயனின் பொருட்டுக் கைலையங்கிரியாகிய சிறந்த ஸ்தானத்திலுள்ளதும், பெரும்பிரகாசமாகிய சந்திரனொளி போன்றதும் நிர்

மலமுமாகிய படிகலிங்கம், விளங்குகின்ற உருண்டை வடிவமானது; இதை நிர்மலமான தாமரை மலர்களால் அருச்சனை செய்குதி. மும்முறை சாவதானமாக எல்லாரையும் வெற்றிகொள்ளுதற்பொருட்டுச் செய்குதி. கலியிற் கேவலம் இலிங்கார்ச்சனையினுலேயே மேலான முத்தியுண்டாகிறதென்றேன். அக்காற் கள்ளமார்க்கத்திற் (சீர்திருத்த) தெய்வ சிற்பியாகிய அச் சந்நியாசியானவர் (சங்கராரியர்) என்னை நமஸ்கரித்தனர். பின்னர் இலிங்கங்களைப் பெற்றுக் கொண்டு விரைவிற் பூமியை யடைந்தனர். அங்கு புத்தர், ஆருகதர், மிசிரர், சைனரென்பவர்களை அந்த யோக போக வர முத்தி தரும் இலிங்கார்ச்சனையால் வெற்றியடைந்து, (தன் வசப்பட வெற்றிகொண்டு) எளிதிற் கேடின்றிய சாத்திர விவாதங்களால் மிசிரர்களைச் செயித்துக்கொண்டு, பின்னர்க் காஞ்சியிற் சித்திபெறுவார். (37½ × 86)

## சங்கரபகவத்பாதரவதாரத்தைக் கூறுகின்ற

### கூர்மபுராணம் முதற் கண்டம், முப்பதாவ்தத்தியாயத்தில் முப்பத்திரண்டாஞ் சுலோக முதலியவற்றின்

## மொழிபெயர்ப்பு

உலகத்திற் கீசுரனும், உருத்திரனும், பரனுமாகிய மகாதேவ (பரசிவ)ன் சிவக்குறியுடன் சங்கரரென்னுந் திருநாமத்துடன் கலியில் அவதாரமானவன். அந்த அவதார புருடரே மநுடர்க்குந், தேவர்க்குந், தெய்வத்தன்மையைச் சாதிப்பான். சுருதி சம்பந்தமானதும் ஸ்மிருதி சம்பந்தமானதுமான மார்க்கங்களை நிலைநிறுத்தற்பொருட்டு நன்மை செய்யவேண்டுமென்னும் விருப்பால் எல்லா வேதாந்தசாரமாகிய பிரமஞானத்தை மாணாக்கர்கட் குபதேசித்

தருளுவான். வேதப்பிரமாணமாகிய தர்மங்களை யநுட்டிப்பவர்கள் அவனை யாதானுமோ ருபசாரத்தாற் பிரீதியுடன் சேவிப்பவர்கள் கலியாலுண்டாந் தோஷங்களைச் செயித்துப் (சங்கரபகவத்பாதரைச் சேவித்தவர்கள்) பரமபதத்தை யடைவார்கள். அவர்கள் கிலேசமின்றியே சிறந்த பெரும் புண்ணியத்தை யடைவார்கள், அநேக தோஷத்தோடுகூடிய கெட்ட கலியுகத்திற்கிதுவே பெருங் குணமாம்.

## சங்கராவதாரங்கூறுஞ்

## சிவபுராண மேழாங்கண்டம் முதலத்தியாயத்திலுள்ள சுலோக மொழிபெயர்ப்பு.

சூரியன்போன்ற முகத்தையுடைய சங்கரர் (சங்கரபகவத்பாதர்) சுருதிப்பொருட் குசிதமாமாறு வியாசசூத்திரப் பொருளை வியாக்கியானஞ் செய்தனர். சுருதிக்கு நியாயமாகிய பொருளதுவே.

## சங்கரபகவத்பாதரவதாரங்கூறும்

## பௌடியபுராணம், பிரதிசருக்க பருவமென்னும் சதுர்யுக கண்டமாகிய மூன்றுங்கண்டம் பத்தாமத்தியாயம் எழுபத்தெட்டாஞ் சுலோக முதலியவற்றின் மொழிபெயர்ப்பு.

அந்தப் பரசிவனனவர் விப்பரதத்தன் வீட்டையடைந்து கோரகலியிற் சங்கரரென்னுந்திருநாமமுடையராய்க் கீர்த்திமலிந்தவரா யவனுக்குப் புத்திரனாகுவர். அவதரித்துத் திரிபுண்டரம், உருத்திராக்கமாலை, சுபமாகிய பஞ்சாட்சரமந்திர செபம் என்பவைகளைச் சைவர்கட்கு மங்கலகரமான அவர் (சங்கராசாரியர்) உண்டாக்குவர். அந்தப் புதல்வரோ குண

முடையவர், அறிஞர், பிரமசாரி ஆகுவர். சங்கரபாடிய மென்று, ஒன்றியற்றிச் சைவமார்க்கத்தை விளக்குவார்.

என்பன முதலிய மேற்காட்டிய புராணப் பிரமாணங்களால் ஸ்ரீசங்கராரியர் தெலுங்கதேச, தமிழ்த்தேச மத்தியிலுள்ள வாயுலிங்க க்ஷேத்திரத்தி (ஸ்ரீ காளத்தியி)ல் ஒரு பிராமணனுக்குக் காளத்தீசர் ஆலயத்திற் கிடைத்த பூசணிக்காயை உடைத்தபொழுது அதனுள் ஓர் குழந்தையிருக்க அது சங்கராலயத்திற் கிடைத்தமையின், சங்கர! என்று அவராற் கூப்பிடப்பட்டார்.

## இதற்குப் பிரமாணம்

### கூழ்பாண்ட சங்கரதிக்குவிசயத்தின்

### சுலோக மொழிபெயர்ப்பு.

செந்நிற முடையவரும், பூசணிக்காயி லுதித்தவரும், உதய சூரியனுக்கொப்பானவரும், பாடியக்காரருமாகிய சங்கரபகவத்பாத முனிவரைத் துதிக்கின்றேன்; என்ற இவ் வாக்கியத்தாலிவர் யோனிவாய்ப்படாது தெய்வத்தால் நிருமிக்கப்பட்டவராதலின், இவர்க்குப் பிதா சங்கரரே. மாதாவோ அம்பிகையே. சரவணத்திற் கந்தக்கடவுளுதித்தாற் போன்றும் பூமியிற் சீதை போன்றும், தீயில் துரோபதை திருஷ்டத்துய்மன் றோன்றியவாறும், அகத்திய முனிவர் கடத்திலுதித்தது கடுப்பவும், யோனிவாய்ப் பட்டுப் பிறவாமை பொருந்தும். நாரதீயத்திற் சங்கரரியற்றிய வாயுலிங்கத்துதியும் பிரமாணமாம். எனவே, பூசணிக்காயிற் றெய்வசெத்தாற் சங்கராலயத்திற் பிறந்தமை பற்றியுங் கூழ்பாண்டஞ் சங்கராலயத்திற் கிடைத்தமையாலும் அவர் சங்கர! என வழைத்தமையாலுஞ் சங்கரரெனப் பட்டாரென்பதாயிற்று.

என்பது முதலாகப் பலர் பலவாகக்கூறும் உண்மைப் பிரமாணமின்றிய போலியுரைகள் தள்ளற்பாலனவாமென்பதும் வியாசர் கூறிய உண்மைப் பிரமாணப்படியே சிவாவதாரமெனக் கொள்ளற்பாலதாமென்பதும் வெள்ளிடைமலை விளக்கென யாவருங்கொள்ளக் கிடந்தமை காண்க.

## திருவேங்கடமலைக்கவி யியற்றியதின் மொழிபெயர்ப்பு.

ஆங்கிலேயர்களின் பன்னிரண்டாமாண்டில் (12) ஸ்ரீராமாநுசரும், ஸ்ரீசங்கரபகவத்பாதரு மொருவர்க்கொருவர் சந்தித்தார்கள்; அதுவே சங்காரிரியர் காலமென்று இந்தியன் எண்டிக்கேரி பதிமூன்றும் புத்தகத்தில் 252, 253-ம் பக்கத்திற் தட்சிண இந்துஸ்தானி தேசத்தின் இதிகாசத்திற் றனது பிதாவா லுணரப்பட்டதாகத் தாமியற்றிய ஸ்ரீவைஷ்ணவோத்பத்தி யென்னும் நூலில், எஸ். எம். பண்டிதர் நடேச சாஸ்திரிகள் கூறுகின்றார்கள்.

இது வித்தியாரணிய முனிவரியற்றிய சங்கரதிக்குவிசய வாக்கியத்திற்கும், பல பண்டிதர்களின் சங்கராவதார கால வாக்கியத்திற்கும், முரண்பாடாதலின் தள்ளத்தக்கதே.

மற்றும், வாசஸ்பதிமிசிர ரியற்றிய "தாத்பரிய பரிசுத்தி" யென்னும் நூலின் உரையையும், உதயணாசாரிய ரியற்றிய நூலையுஞ், சுருக்கிக்கூறியுள்ள தட்சிண காலேசின் சுருக்க நூலில் நம்பர் 19, சங். 1780, (1) விக்கிரம சகாப்தம் 1304-வது வருடத்தில் ஆங்கிலேய வருடம் 1248-ல் எழுதியதென்பதற்கு விரோதமுமாம்.

அவ்வாறே கலி 3909-ம் வருடத்திற் கொப்பான ஆங்கிலேய வருடம் 808-ல் சங்காரிரியர் காலமென்னுங் குருதோத்திரம் பண்ணினவர் கூறுகின்றார்.

மற்றும், கலி 3909-ல் ஆருத்திரா நட்சத்திரத்திற் காலடியினருகிலுள்ள கேபேலி அல்லது கலாபி என்னுங் கிராமத்தில் ரமான பெருமல்லனுடைய பெரிய யுத்த வெற்றிக் காலத்திற் சங்கராசாரியாவதாரமென்பது மலையாள பாஷையிலுள்ள மலையாளோத்பத்தி கூறும். சேரமான் பெருமாள் வருவதன்முன் குந்தி கிருஷ்ணராசனால் மலையாள சிம்மாசனத்திற் றூபிக்கப்பட்ட இந்துவானவர் இந்து மதத்தைவிட்டு மகம்மது மதத்தையடைந்து மக்கா யாத்திரைபண்ணிய காலமுதற்கொண்டு சாகரமென்னுங் கிராமத்திற் கிறிஸ்து 825 அல்லது 827-ல் தஹுபதுல்முஜகதீன் என்னும் நூலிலெழுதியிருக்கின்றது.

அவ்வாறே, அப்துல்ரகிமான் என்பவர் கிறிஸ்து 812 அல்லது 828 அல்லது 831 அல்லது 832-ல் இருந்தவர். இவருடைய சமாதிக்கட்டிடத்தின் கல்லில் திருவனந்தபுரம் மகாராஜாவின் பிதா திருமாற்பேறுமல்லர் ஆங்கிலேய வருடம் 827-க்குமுன் மகம்மதிய மதம் புகுந்தனர். திருமாற்பேறுமல்ல ராசாவானவர் கிறிஸ்து 827-ல் அடங்கினரென்றெழுதி யிருக்கிறார். ஆண் சேரமான் பெருமாள் ராஜா காலமே சங்கராசாரியருக்குச் சமான காலம் எனவே கிறிஸ்து 788-ம் வருடத்திலிருந்து 820-ம் வருட பரியந்த காலமெனக் காசிநாத பண்டிதர் கூறுகின்றார்.

மற்றும், வேணுக்கிராமத்தில் ஹேரலகர் என்னுங் கோவிந்தபட்டருடைய தேவநாகரியில் நிதிநாகேச சகாப்தம் 3889 விபவ வருடத்திற் சங்கராவதாரம். அவர் எட்டாம் வயதில், வேத நான்கையு மோதினர், பன்னிரண்டாம் வயதிலெல்லாச் சாத்திரத்தையு முணர்ந்தார், பதினாறிற் பாடியம் பண்ணினார், முப்பத்திரண்டில் முனிவரானார், கலி சந்திர

நேத்திர அங்க வருடம் 3921-ல் குஹாப்பிரவேசம், வைகாசி பூர்ணிமையிற் சிவமானார்; எனவே கலி 3889 போக விபவ வருடத்தி லவதாரமெனவே யிப்போது கலி சென்ற வருடம் 5015, அதில் 3889-வருடத்தைக் கழிக்க மீதம் 1226. இவ்வருடங்கட்கு முன்னரவதாரமாமெனை இந்தியன் ஆண்டிக்கேரி பாரத வருட இதிகாசத்திற் பதினோராம் பாகத்திற் கூறியிருக்கிறதென்று புரோப்ரேசர் விஷ்ணு மகாதேவ பாடகர் கூறுகின்றார்.

மற்றும், சதானந்த பண்டிதர் தாமியற்றிய சங்கரதிக்கு விசயத்திற் கலி 3889-வருடம் போக 3890-ம் வருடந் தில் ஆங்கிலேய வருடம் 788-ல் விபவ வருடம் வைகாசி மாதஞ் சுக்கில பட்சத் தசமியிற் சிவகுருவின் மனைவியார் சங்கராசாரியரைப் பெற்றனரென்று கூறியிருக்கின்றார்.

மற்றும், பண்டிதர் பார்த்தரென்பவர் பாரதம் என்னுங் கிரந்தத்தில் ஆங்கிலேய வருடம் 788-ற் சங்கராரிய ரவதாரமென்று சிலர் கூறுகின்றார், வித்வான்கள் அதுவே வருடமென்கின்றார்கள், எனக்கு 789 என்று தோற்றுகின்றது. சம்பிரதாயர்கள் மதத்தில் ஆங்கிலேய வருடம் 788 வைகாசியி லவதாரமெனக் கூறுகின்றார் என்கின்றார்.

சிலர், வியாசசூத்திர பாடியத்திற் பாடலிபுத்திர நகரத்தை உவமை கூறியிருக்கின்றார். அந்நகரமோ! ஆங்கிலேய வருடம் 756-ல் நதியின் நீர்ப்பெருக்கா லழிந்ததென்பது இதிகாசம். அதற்கு முன்னரே சங்கராரிய ரவதாரமென்கின்றார்கள்.

தாராநாத தர்க்கவாசஸ்பதியானவர் புத்தரிதிகாசத்தில் ஆங்கிலேய வருடம் 700, 750-க்குள் உண்டாகிய குமாரில

பட்டர் காலத்திற்கு முன்காலஞ் சங்கராவதார காலமென்று கூறுகிறார்.

குமாரிலபட்டர் சங்கராசாரியர் சந்திப்பை எல்லாச் சரித்திரத்திலுங் கூறியிருத்தலின், அதுவே காலம்; அது ஆங்கிலேய வருடம் 650, 700-க்கு மத்தியகால மென்கின்றார் டாக்டர் பர்னல்.

நேபால் தேசத்தரசனாகிய விருஷதேவனைச் சங்கராசாரியர் சந்தித்து அருளியதாற் குழந்தை யுண்டாக, அதற்குச் சங்கரதேவன் எனப் பெயரிட்டனரென்று கூறலால், விருஷதேவர் காலம் ஆங்கிலேய வருடம் 630, 655-க்கிடையிலாகிறது. இதற்கிடையிற் சங்கரபகவத்பாத ரவதாரமாயிருக்கின்றனர். அது ஆங்கிலேய வருடம் 700. இதற்கு முன்னேனும் அல்லது பின்னேனும் இருக்கலாமெனப் பெறப்படுகிறது. எங்ஙனமாயினுமாகுக, நேபால தேசத்து விருஷதேவ வேந்தர் காலமென் றுறுதியாய்ச்சொல்வேன். எனவே, சங்கராவதார காலம் ஆங்கிலம் 1886 அக்டோபர் 9-தேதியிலவதாரமென ப்ளீட் பண்டிதர் இந்தியன் ஆண்டிக்கேரி பாரதவருட இதிகாசம் பதினாறும் பாகத்தி லிருக்கிறதென் கின்றார்.

சூத்திர பாடியத்திலுஞ், சாந்தோக்கிய பாடியத்திலும், பாரதத்திலுள்ள பூரணவர்மனைத் திட்டாந்தமாகச் சங்கராசாரியர் கூறியிருத்தலின், ஆங்கிலேய வருடம் 616 முதற்கொண்டு 635 வரையில் அவர் காலம்; அல்லது 629 முதல் 645 வரையாம். அதுவே சங்கராவதாரமென்பர் சிலர்.

வித்தியாரணிய முனிவர் வாக்கியத்தைத்தழுவித் தண்டிகவி முதலியோர்கள் கூறிய, பாணன், மயூரன் காலமே,

அதாவது கி.பி. 700-ம் வருடஞ் சங்கராவதார காலமென்பர் சிலர்.

சீனதேச வம்ச சரித்திரத்திற் சீன ராசாக்களுடைய காலமாகிய கி. பி. 557-வது வருட முதல் 583-ம் வருடம் வரை அரசு புரிந்த காலம். இதற்கிடையில் 570-வது வருடத்தில் ஈசுர கிருஷ்ணர் செய்த சாங்கிய காரிகைக்குக் கௌடபாதாசாரியர் பாடியமியற்றியுள்ளா ரெனவே, கோவிந்தபகவத்பாதரின் ஆசிரியராகிய கௌட பாதாசிரியர் காலம், ஆங்கிலேய வருடம் 570-வது. அதன் பின்னரே கோவிந்த பகவத்பாதர் காலம்; அதற்குப் பிந்தியதே சங்கர பகவத்பாதர் காலம். அல்லது 590-ஆக இருக்கட்டும், அதுவே இவர் காலமாம்.

மற்றும், பாஸ்கரராயர், பாஸ்கராசாரியராற் செய்யப்பட்ட தீட்சாபத்ததிப்பிரிவில் கலி 600-வது வருடத்திற்குப் பின் 601-ம் வருடத்திற் சங்கராவதார மென்கின்றார்.

சூரிய வம்சம் பதினெட்டாவது உருத்திரவர்மனுடைய புத்திரன் விகாரனுக்கு விருஷதேவன் பௌத்தமூர்த்திப் பிரதிட்டை பண்ணியபோது கலி 2548 முடிவு அல்லதாங்கிலேய வருடம் 553-வதிற்கு முன்னர் 61-வது வருடத்தில் நேபால ராச்சியத்தை அரசு செய்குதி என்று சங்காரியர் அங்குச் சென்றிருந்தபொழுதருளினர். அப்போது கலி 2548-வது வருடத்திற் பௌத்த மதத்தைச் சங்கரரியரழித்தாரென்று 'பண்டிதர் பகவான்லால் இந்திரன்' என்பவர் நேபால தேசவிதிகாசத்தில், இந்தியன் ஆண்டிக்கேரி 15-ம் புத்தகத்தில் 42-ம் பக்கத்திற் சொல்கின்றார். பண்டிதர் மாக்ஸ்முல்லரும் மோக்ஷமூல பட்டாசாரியரும் இதுவே கூறுகின்றார்கள்.

சாலிவாகன சகாப்தம் 421-ம் வருடம் மாசி மாதங் கிருஷ்ண சதுர்த்தசி சிவகுரு ஆர்யாம்பிகைக்கு வித்தியா சங்கரபாரதி யென்பவர் அவதரித்தனர். ஸ்ரீசங்கர பகவத் பாதர் சாலிவாகன சகாப்தம் 491-வது விரோதி வருடம் கார்த்திகை சுக்கிலபட்சத் திரயோதசி சுக்கிரவார சாயங் காலத்திற் சித்தியடைந்தனரென்று சீன சரித்திரக்காரர் கூறுகின்றார். இதைநோக்க இவ்வாசிரியருக்கு (சங்கராசாரி யருக்கு) 70-வயதென்று தெரிகிறது.

இரண்டாயிரம் வருடத்திற்கு முன் சங்கராரிய ரவ தரித்தாரென்று கதலிப்பிராமணர் கூறுகின்றார். முதலா வது நூற்றாண்டிலென்பார் சிலர்.

தென்னாட்டிலுள்ள கந்தபுரவேந்தன் கையெழுத்திற் கொங்குதேச விதிகாசத்தால் ஆங்கிலேய வருடம் 178-ல் இருந்த விக்கிரமதேவ வம்ச சக்கிரவர்த்தி காலமே சங்கராவ தாரமெனத் தெரிகின்றதென்பார் சிலர்.

சங்கராரியர் அவதாரத்திற்குப் பின் 1600-வருடமாயின வென்று சிருங்கேரி நிவாசிகள் சொல்கின்றார்கள்.

1200-வருடத்திற்கு முன்னரே சங்கராரிய ரவதார மென்கின்றார், சம்பிரதாய முணர்ந்தோர்கள்.

போசராசன் காலத்திற் சங்கராரியருக் கவ்வரசனாற் பூசை நடத்தப்பட்ட 800 அல்லது 900-ம் வருடமாகிய போசராசன் காலமே சங்கராரியர் காலம் என்கின்றார். போ சன் பிரபந்தம்பற்றி 900-ம் வருடத்திற்குமுன் சங்கரபகவத் பாதரிருந்தாரென்று டாக்டர் டேலர் சொல்கின்றார்.

ஆயிரம் வருடத்திற்குமுன் சங்கராவதாரமெனப் பண் டிதர் கோலப்ருக்கர் கூறுகின்றார்.

சங்கராரியர் காலமுதற்கொண்டு அவர் மடாதிபதி களாகிய ஆசாரியர்களைக் கணக்கிடும்போது ஆங்கிலேய வரு

டம் 700 அல்லது 800-ம் வருடமே சங்கராவதாரமென் கின்றார் பண்டிதர் ராசமோகனராசா.

ஆயிரம் வருடத்திற்குமுன் சங்காரியரிருந்தாரென்பது வே சரியென்று தோன்றுகின்றது. எங்கட்கு மஃதே யுடன் பாடு. அதாவது ஆங்கிலேய வருடம் 800 அல்லது 900-த்திற் சங்கராவதாரமென்று பண்டிதர் வில்சன் சொல்கின்றார்.

வியாச மகரிஷி சிவரகசியம் ஒன்பதாவதம்சம் பதினாறு மத்தியாயத்திற் கலி 2000-ம் வருடம் போனபின் சிவன் சங்கரராய் அவதரிப்பார் என்று கூறுகின்றார்.

பாண்டாரகர் கூறிய முறையாக ஆதித்தியனுடைய காலம் என ராமபத்திரகவி கூறிய பழய சரிதத்தின்படி விக்கிரமார்க்கனைக்கொள்ளின் அவன் காலம் விக்கிரம சகாப் தம் 1970-ஆம். இதிலோ அல்லதிதற்கு முன்னோ சற் றேறக்குறைய 2000 வருடமானது சங்கராவதாரமென்பர் சிலர். விக்கிரமாதித்தனென்றதால் விக்கிரமார்க்கன் கொள் ளப்படான் என்பர் சிலர்.

அங்ஙனமாகவே திரிவிக்கிரமன் காலம் கலி 3000-ம் வரு டம் போனதாம். அதுவே சங்கராரியர் காலமென்பர் சிலர்.

சதானந்த சுவாமிகள் தாமியற்றிய சங்கரதிக்குவிசயத் திற் கலி 2771-வது, சருவவிசுவசித்தென்னும் வருடத்திற் பங்குனி மாதத்துப் பஞ்சமியில் ஐந்து கிரகங்கள் உச்ச ஸ்தானத்திலிருக்கும்போது சுபமுகூர்த்தத்திற் சங்கராவ தாரமென்று கூறியிருத்தலின் அதுவே காலம் என்பார் சிலர். மற்றுஞ் சிலர் ஐந்து கிரகங்கள் உச்ச ஸ்தானம் இராசாவாகவும், பூர்ண ஆயுளுடையவராகவும் ஆதல் வேண் டும்; அஃதின்மையிற் பொருந்தாதென்கின்றார்.

துவாரகை மடத்தின் நியாமகர்கள் யுதிட்டிரசகாப்தம் 2631-க்கு கலி 2618-வது வருடத்தில் வைகாசி சுக்கில பஞ்சமி சங்கராவதாரமென்கின்றார்கள். இதுவும் வித்தியா ரண்ணிய முனிவர் கூறிய யோக நட்சத்திரப்படி யென்கின் றார்கள். அஃதெதுவென் றவர்களையே கேட்கவேண்டும்.

சிலர் பாண்டவர்காலம் சென்ற கலி வருடம் 653-வது என்கின்றனர். அதன் பின்னரே யுதிட்டிர வருட வழக்கு. முன்னில்லை. கௌரவர் தோல்வியடைந்த பின்னரேயாம். அப்போது யுதிட்டிர வருடம் 60 அல்லது 59-வது வருடமே யுதிட்டிரர் சென்மம், அஃதாவது கலி 712 அல்லது 713 ஆகுமென்கின்றார்.

சனார்த்தன பண்டிதர் துவாபர யுகத்திலுள்ள வியாச முனிவருக்குப் பிறகு 2500-ஞ் சென்றபின்னர் சங்கராவதார மென்கின்றார், தமது மகோததி யென்னும் நூலில்.

சிலர் யுதிட்டிர சகாப்தம் 2157 ரக்தாக்ஷி வருடம் மாசிக் கும்பத்திற் கிருஷ்ணபட்ச சதுர்த்தசி சோமவாரத்தில் விசுவசித் என்பவருடைய மனைவி அம்பிகை வயிற்றிற் சிதம்பரத்திற் சங்கரர் அவதாரமாயினரெனவுந் தனது 22-ம் வயதிற் துன்முகி வருடம் மார்கழி மாதஞ் சுக்கிலபட்சந் திரயோதசி சோமவாரஞ் சாயங்காலத்திற் சங்கராரியர் கைலையை யடைந்தனரென்பதும் சைன விசயத்திற் கூறியிருக்கின்றதென்கின்றார்.

கணிதப்படி அவதார தினத்தில் மாக மாதஞ் சதுர்த்தசி கிடையாமையின் துபொருந்தாதென்பர் சிலர்.

வித்திராணிய முனிவர் வாக்காலோ! மேடத்தில் ரவி, கர்க்கடகத்திற் சந்திரன் என்னு மிவ்விரண்டாலும் வைகாசி மாதச் சுக்கில பஞ்சமி யென்பது பெறப்பட்டது கிரக நிலையைக் கணிக்கும்போது கலியின் முதற்பகுதி, 605-ம் வருடத்திற் கர்க்கடக லக்கினம், அதிற் சந்திரன் மேடத்தில் சூரியன், புதன், குரு, சுக்கிரன், மகரத்தில் செவ்வாய், துலாத்திற் சனி, கேது என்பதாம். கலி இரண்டாவது பகுதி, 2815-வது வருடத்தில் கர்க்கடக லக்கினம், அதில் குரு, மேடத்தில் ரவி, துலாத்திற் சனி, மகரத்திற் சந்திரன் செவ்வாய் என்பதும் பெறப்படுகின்றது.

அன்றியும், வித்தியாரண்ணியரது சங்கர திக்குவிசயத்திற் பதஞ்சலி முனிவர்பாற் கோவிந்தபகவத்பாதர் வியாகரண மகா பாடியத்தை யோதினரென்று கூறியிருத்தலாற் சங்கர பகவத்பாதர் கோவிந்தபகவத்பாதரின் மண்டனமிசிரர் வீட்டில் மாணுக்கரானதாலும் சங்கர பகவத்பாதர் போந்த காலத்தில் வியாசர், சைமினி, மண்டனமிசிரர் என்பவர்கட்கும் பிரயாகையில் உமித்தீயிலிறங்கிய பட்டபாதருக்கும் தரிசனம் கொடுத்திருத்தலானும், பட்டபாதர் சங்கர பகவத்பாதர் காலங்கள் சம காலமேயாம். இதிற் பதஞ்சலி காலமாவது, பட்டபாதர் காலமாவது, சங்கராவதார கால மாகத்தக்கதாம். பதஞ்சலி முனிவர் காலமோ பாணினி முனிவருக்குப் பிற்காலம். பாணினி காலமோ! கதா சரித்சாகரங் கூறியவாங்கு பூருவமீமாஞ்சை வார்த்திகஞ் செய்த நந்தாமாத்தியர் வருடத்திற்குச் சமீபத்திலுதித்த அவருடைய தமையனுகிய பாணினி குருவினது காலம் அவரது சமயமாம். நந்தராச்சிய காலமோ! கலி 1690-க்கு பிற்காலமாம். இது கந்தப்புராணத்திலும், பாகவதத்திலும் வியாச முனிவர் கூறியிருக்கின்றார். அதன்பின்னர்ச் சந்திர குப்தனுடைய காலம். அஃதையடுத்ததோ அல்லததற்குப் பிந்தியதோ! பதஞ்சலி முனிவர் காலம். அஃதாவது கலி 1790-ம் வருடத்திற்குப் பின்பாம். அதுவே சங்கராவதார காலமென்பர் ஏனையோர்.

சிலர் சுதன்வராசன் சங்கராரியருக் கநுகூலமா யிருந்தாரெனச் சங்கரதிக்குவிசயங் கூறியிருத்தலின், சுகர்வாக்கின் படி நந்தருக்கு கலி 2000-ம் அல்லது இதற்குச் சிறிது முற்பட்டதே நந்தர் காலம், அதற்குமுன் கலி 1790-ம் வருடம் சுதன்வராசன் காலம், அதுவே சங்கராவதார காலமென்று காசிக்கைவல்யநகரநிவாசி ஸ்ரீ கிருஷ்ணனந்த சரஸ்வதி சுவாமிகள் சொல்கின்றார்கள்.

பரிச்சித்தின் காலமே சுகமுனிவர் காலம், அவருடைய மாணுக்கர் கௌடபாதர், அவருடைய மாணுக்கர் கோவிந்த பகவத்பாதர், அவருடைய மாணுக்கர் சங்கர பகவத்பாத

ரென்னுமிடத்துப் பரிச்சித்தின் காலத்திற்குப்பின் 300 வருடஞ் சென்றபின்னர் சங்கராவதார காலமென்று பிருகத் சம்மிதையில் வராக மிசிராசிரியர் கூறியிருத்தலின் 2526 சகவருஷம் யுதிட்டிரர் இராச்சிய சமயம். சப்தரிஷிகளின் மகாஸ்திதி சமயம் என்கின்றார்கள்.

மற்றுஞ் சங்கரபகவத்பாதர் தமது பாடியத்தில் இதினின்று பலவர்யாணனை அடைக அதினின்றுஞ் சயசிம்மனை அதினின்றுங் கிருஷ்ணகுப்தனை என்று கூறியிருத்தலின் காலிகபலிவருமன், சயசிம்ம கிருஷ்ணகுப்தர்களின் காலமே பூரணவருமன் காலமுமாமெனக்கொள்ளற்பாலது. அஃதோ கலி 2000 வருடத்திற்குப் பின்னராம். சிலர் கூறும் அதுவே சங்கர பகவத்பாதர் அவதார காலமாம். ஆங்கிலேய வருடம் 700 முதலியனவன்று.

ஈண்டுச் சிவரகசிய வாக்கைக்கொண்டும், வித்தியாரணிய முனிவர் எழுதியதைப்பற்றியும், மற்றும் பல சம்பிரதாயப் பெரியார்களுடன்படுதல்பற்றியும், கலி 2000-த்துக்குப் பின்னர் ஆதி சங்கராவதாரமென்பதே பொருத்தமாம். ஏனைய வாக்கியங்களோ அந்தந்தக் காலத்திலுள்ள சங்கராரியர் பரம்பரையில் வந்த சங்கராரியர்களைக்கொண்டு பொருத்தமாக்கிக்கொள்க.

சங்கரபகவத்பாதர் எக்காலத்தவராயினுமிருக்க முற்காலமாகில் முழுதும் பெரியாரென்றும் பிற்காலமாகிற் சிறிது குறைவுபட்டவரென்பது முண்டோ? அங்ஙனமாயின், முன்னுள்ளார் கூறிய நிரீசுரவாத முதலியவைகளைக்கொள்ளல் வேண்டும். பின்னுள்ள தத்துவநிர்ணயஞ் செய்தவர்கள் வாக்கியங்களைத் தள்ளல் வேண்டும். மிகப் பழையாரொருவர் கடவுளில்லையெனிற் கொள்ளுவதும், மிகப் புதியாரொருவர் கடவுளுண்டெனிற் றள்ளுவதுமுண்டோ? ஆதலிற் கால விவாதத்தை விடுத்து அறிவு விவாத மேற்கொண்டொழுகல் வெண்டும்.

## சங்கராரிய சமயம் என்னும் நூலின்
# மொழிபெயர்ப்பு.

| யுதிட்டிர சகாப்தம், மாதம், பட்சம், திதி. | சங்கரபகவத்பாதர் அவதார முதலியன. |
|---|---|
| 1. 2631 வைகாசி, சுக்கில 5 | அவதாரம். |
| 2. 2636 சித்திரை, சுக்கில 9 | உபநயனம். |
| 3. 2639 கார்த்திகை, சுக்ல 11 | சந்நியாசம். |
| 4. 2640 பங்குனி, சுக்கில துவிதீயை<br>5. 2646 ஆனி, கிருஷ்ண 30 | கோவிந்தபகவத்பாதர் தரிசனம், பாடியங்களியற்றல், வியாச தரிசனம், அத்வைதப் பிரசாரம், பத்மபாதர் மாணாக்கராதல். |
| 6. 2647 மார்கழி, கிருஷ்ண 2 | மண்டனருடன் சம்வாதம். |
| 7. 2648 சித்திரை, சுக்கில 4 | மண்டனர் தோல்வி. |
| 8. ,, ,, ,, 6 | சரசுவதியுடன் விவாதம். |
| 9. ,, ,, கிருஷ்ண 8 | பரகாயப் பிரவேசம். |
| 10. ,, கார்த்திகை, சுக்கில 15 | தன் தேகமடைதல். |
| 11. ,, ,, கிருஷ்ண 1 | பிரமலோகஞ்சென்ற சரசுவதியைத் துவாரகையிற் றடுத்தல். |
| 12. ,, ,, ,, 5 | துவாரகையிற் சாரதா பீடப் பிரதிஷ்டை. |
| 13. ,, ,, ,, 13<br>,, மாசி, சுக்கில 10 | மதிப்பில், சாரதாமடங்கட்டல், பௌத்தர் தோல்வி, வெள்ளியால் ஆலயமியற்றிக் கிருஷ்ண மூர்த்திப் பிரதிட்டை, சித்தேசுரன் கோவிற்கட்டல், பத்ரகாளி யந்திரோத்தாரணம். |

## சங்கராரிய சமயம் என்னும் நூலின் மொழிபெயர்ப்பு.

| யுதிட்டிர சகாப்தம் மாதம், பட்சம், திதி. | சங்கரபகவத்பாதர் அவதார முதலியன. |
|---|---|
| 14. 2648 பங்குனி, சுக்கில 9 | சரசுவதியைத் தடுத்து சிருங்கேரியிற் பிரதிட்டை. |
| 15. 2649 சித்திரை, சுக்கில 9<br>,, மார்கழி, ,, 10 | மண்டனர் சந்நியாசம், சுரேசுரர் என்னும் நாமம். சுதன்வராசன் மாணுக்கராதல். |
| ,, மாசி, கிருஷ்ண 7 | சுரேசுரர் சாரதாபீட அதிகாரம் பெறல். |
| 16. 2650 வைகாசி, சுக்கில 13 | திக்குவிசயத் தொடக்கம் |
| 17. 2953 ஆவணி, ,, 7 | தோடகர் சரணடைதல். |
| 18. 2654 ஆடி, ,, 11 | அத்தாமலகர் சரணடைதல். |
| 19. 2654 புரட்டாசி ,, 15 | அத்தாமலகர் சிருங்கேரி மடாதிகாரத்தை யடைதல், தோடகாசிரியர் சோசி மடாதிகாரமடைதல். |
| 20. 2655 வைகாசி ,, 10 | செகந்நாதத்தில் மரத்தாற் பகவத்பாதர் பிரதிட்டை, அங்கு கோவர்த்தனமடப் பிரதிட்டை, பத்மபாதரை அம்மடாதிபதி யாக்கல். |
| ,, ஆவணி ,, 15<br>21. 2662 பங்குனி, கிருஷ்ண 30 | பௌத்தர், காபாலிகர் முதலிய 89 மதங்களைக் கண்டித்தல். |
| 22. 2663 கார்த்திகை, சுக்கில 15 | கைலைக்கேகல். |

## சங்கர சயந்தியின் காலம்.

மாத்துவர்களில் ஒழுக்கமுடையார் சிலர் சிவநிமித்தம் பற்றி சிவராத்திரியில் சங்கர சயந்தியை நடத்தி வருகின்றார்கள். ஸ்மார்த்தர்கள் வைகாசிச்சுக்கில பட்சம், பஞ்சமி, தசமியில் அநுட்டிக்கின்றார்கள். இது ஆதிசங்கரர்க்கேயாம். வைகாசிச் சுக்கிலபட்சம், பஞ்சமியில் அவதாரம், வைகாசிச் சுக்கில பூரணிமையில் வியாசதரிசனம், என்று யாவரும் வைகாசிச் சுக்கிலபட்ச பஞ்சமி தொடங்கிப்பூரணிமை வரையிலுஞ் சங்கரபகவத்பாதர் சயந்தி மகோத்சவங் கொண்டாடுகின்றார்கள்.

பகவான் விஷ்ணுமூர்த்தியே ஆபத்காலங்களில் பலவகை அவதார மெடுத்து உலகத்தைக்காத்தலியல்பாதலின் வியாசரூபமாய்த் தோன்றிப் பதினெண் புராணங்களையும் பிரமசூத்திர முதலிய சாத்திரங்களையுஞ் செய்து, உலகத்தைக் கடைத்தேற்றி யருளினர்.

அங்ஙனமே "எப்போதெப்போது தருமங்கட்குக் கெடுதிவருமோ? அதர்மம் மேலிடுமோ? அப்போதப்போது வடிவங்கொள்வேனென்றும், வருங்காலத்திலுந் தாமேவந்து உலகத்தை இரட்சிப்பேனெனக் கூறியிருத்தலானும், உருத்திரர்களுட் சங்கரன் யானாயிருக்கின்றேனென்று தானே கூறியதாலுஞ், சங்காராரியர் அவதாரத்திற் சநத்சுசாதீயம், விஷ்ணு சகத்திர நாமம், லலிதாசகத்திர நாமம் முதலிய பாடியங்களியற்றிக் காஞ்சிகாமாட்சி கோவிற் பிரதிட்டை கிருஷ்ணமூர்த்தி பிரதிட்டை முதலியனவுஞ் செய்து ஆப்த்தினின்றும், உலகத்தை காத்திருத்தலினாலும்,

பத்மபுராணம் உத்தரகண்டம் 42-ம் அத்தியாயத்தில் விஷ்ணுவடிவாகிய புத்தரூபத்தால், தைத்தியர்களின் நாசத்தின் பொருட்டு நீலநிற ஆடை முதலியனவின்றிய அசத்திய பௌத்தசாத்திரத்தைக் கூறினேன். மாயாவாதமென்னும் பௌத்தம் மறைந்த பொய்ந்நூலை தேவியே? கலியுகத்திற் பிராமணவடிவமாகிய வெம்மாலேயே செய்யப்பட்டதென்று வியாசமுனிவர் கூறியிருத்தலின், கலியின் சங்கராசார்ய ரூபமாகியவென்னால் மாயாவாதமாகிய அத்வைத சாத்திரம், உலகநாச நிமித்தமாகச் செய்திருக்கின்றேனென்று கொள்ளிற் கேடென்னையோவெனின்?

கூர்மபுராணம் பூர்வகண்டம் 30-ம் அத்தியாயத்திற் கலியில் உருத்திரனாகிய மகாதேவனென்னும் ஈசுரன் சங்கராவதாரமாகுவன். அச்சங்கரபகவத்பாதரே சுருதிமார்க்க ஸ்மிருதிமார்க்கங்கள் நிலைத்தற்பொருட்டுப் பக்தர்களின் நன்மையின் வேட்கையால் வேதாந்தசாரமாகிய பிரமஞானத்தை உபதேசிப்பாரென்று கூறியிருத்தல் விரோதமாகுமாதலின் அவ்வாறுகொள்ளல் பொருத்தமுடையதன்று என்க.

இவ்விரண்டினும் எதுகொள்ளற்பால தென்ற நியமமின்மையின் பத்மபுராணவாக்கியமே கொள்ளற் பாலதாமெனின்?

சிவபுராணம் ஏழாங்கண்டம் முதலத்தியாயத்திற் சூரியன்போன்ற முகமுடைய சங்கரர் சுருதிப்பொருட்கொத்தவாறு வியாசசூத்திரத்திற்கு வியாக்கியானம் பண்ணுவார். அதுவே, சுருதிக்கு நியாயமானபொருளென்று கூறியிருத்தலின் பத்மபுராண வாக்கியம் அப்பிரமாணமாம். அன்றியும், புதிதாக அச்சிட்ட புஸ்தகங்களுட் சிலபதிப்பில் மாத்

திரம் அத்தன்மைய சுலோகங்கள் காணப்படுதலின் பின்றூற் புகுத்திய தெனத் தோற்றுகிறது.

பிரமதேவன் கொடுத்த வரத்தால் உன்மத்தமடைந்த இராவணன் முதலியோர்களின் நிக்கிரகத்தின் பொருட்டு இராமாவதார முதலியன போன்று, கௌதம மகரிஷியிட்ட சாபம் சபலமாமாறு பிராமணர்கள் தோஷமடைவதற்காகச் சிறிதுகாலம் விஷ்ணு பௌத்தாவதார முதலியனவெடுத்து அசத் சாத்திரங்களாகின்ற மாயாவாத மென்னும் பௌத்த மதநூல்களையும் உபதேசித்தனர்.

இங்ஙனமாகவே விஞ்ஞான பிட்சு (கபிலசூத்திரபாடியகாரர்) முதலியோர்களும் பாசுபதர்களென்னுந் தாந்திரிக சைவர்களும், வைஷ்ணவர் முதலானவர்களுங் கௌதமரிட்ட சாபத்திற்குட்பட்டவர்களாதலின், வைதிக அத்வைத சாத்திரமே மாயாவாத நூலென்பதும், அத்வைத வாதிகளே மாயாவாதிகளென்பதும் பேரறியாமையுமன்றிச் சிவாபாரதமுமாம். அது கௌதமரிட்ட சாபத்தின் பலமாமெனக் கண்டு ஒதுக்கற்பாலதாம். அஃதொப்பவே மாணிக்கவாசகர் கூறிய மாயாவாத மென்பது, வேதாந்த நூல்களைக் குறிக்கின்றதெனக்கொண்டு சிவாவதாரமாகிய சங்கரபகவத்பாதரின் மெய்ம்மொழி யுபதேசத்தை நிந்தித்தல், சிவபராதமாவதுமன்றித் தம்மேல் வந்ததோர் பிழைபாட்டைப் பிறர்மேலேற்றிச் சொல்லத் துணிந்த பாதகமுமாகும். விரியுமென அஞ்சி விடுத்தாம்.

---

## சங்கரபகவத்பாத ரியற்றி யருளிய நூல்கள்.

1 பிரமசூத்திரபாடியம், ஈசா
வாஸ்ய முதலாகப் பிருக
தாரண்யமீறாகிய உப
10 நிடத பாடியம் ...
11 பகவத்கீதாபாடியம் ...
12 சுவேதாசுவர உபநிடத
பாடியம் ...
13 பதபாடியம் ...
14 வாக்கியபாடியம் ...
15 சநத்சுஜாதீயபாடியம் ...
16 நரசிம்மதாபநீய உபநிடத
பாடியம் ...
17 மண்டலப் பிராமண உப
நிடதபாடியம் ...
18 காயத்திரீபாடியம் ...
19 மாண்டூக்கிய காரிகையின்
பாடியம் ...
20 உபதேச சகஸ்த்ரி ...
21 சதசுலோகி ...
22 விஷ்ணுசகஸ்ரநாம பாடி
யம் ...
23 அபரோட்சாநுபூதி ...
24 சுவாத்மநிரூபணம் ...
25 விவேக சூடாமணி ...
26 தட்சிணாமூர்த்தித் தோத்
திரம் ...
27 ஆன்மஷட்கம் ...

28 கோவிந்தாஷ்டகம் ...
29 விக்ஞானநௌகா ...
30 மநீடாபஞ்சகம் ...
31 சாதனபஞ்சகம் ...
32 தத்துவாநுசந்தானம் ...
33 பிரபோத சுதாகரம் ...
34 அத்வைத கௌஸ்துபம்...
35 வேதாந்த முக்தாவலி ...
36 வேதாந்தசாரம் ...
37 அரிமீடே ஸ்தோத்திரம்...
38 ஆன்மபோதம் ...
39 தத்வபோதம் ...
40 மகாவாக்கிய விவரணம் ...
41 மகாவாக்கிய விவேகம் ...
42 வாக்கியவிருத்தி தர்ப்ப
ணம் ...
43 வாக்கியவிருத்தி மத்திமை.
44 வாக்கியவிருத்தி லகு ...
45 ஆன்மசிந்தனம் ...
46 ரத்ன பஞ்சகம் ...
47 விவேகார்சம் ...
48 பஞ்சீகரணம் ...
49 சித்தாந்த பிந்து ...
50 ஷட்பதி ...
51 ஏக சுலோகி ...
52 திரி சுலோகி ...
53 சது சுலோகி ...

## சங்கரபகவத்பாதரியற்றியருளிய நூல்களின்—தொடர்ச்சி.

54 ஆன்ம பஞ்சகம் ...
55 கௌபீன பஞ்சகம் ...
56 காசி பஞ்சகம் ...
57 வைராக்கிய பஞ்சகம் ...
58 சிவ மானசபூஜை ...
59 விஷ்ணு மானசபூஜை ...
60 சதுஷ்ஷஷ்டி 64, பார்வதி மானசபூஜை ...
61 பகவத் மானசபூஜை ...
62 நிர்வாணஷட்கம் ...
63 சப்தசுலோகி கீதை ...
64 நிர்வாணதசகம் ...
65 சதாசாரம் ...
66 சர்ப்படமஞ்சரி ...
67 துவாதச மஞ்சரிகை ...
68 ஆன்மானான்ம விவேகம் ...
69 அத்வைதானுபூதி ...
70 பாலபோதினி ...
71 அரிநாம மாலை ...
72 பிரமநாமாவளி ஸ்தோத்திரம் ...
73 பிரசினோத்தர நாமாவளி ...
74 நட்சத்திர மாலை ...
75 நிகம சூடாமணி ...
76 மோகமுத்கரம் ...
77 யதிபஞ்சகம் ...
78 காசிகாத் தோத்திரம் ...
79 விஷ்ணுநாமாஷ்டகம் ...
80 சிவபுசங்கப் பிரயாத ஸ்தோத்திரம் ...
81 சிவபஞ்சாட்சர ஸ்தோத்திரம் ...
82 சிவாபராத க்ஷமாபனத் ஸ்தோத்திரம் ...
83 லட்சுமிநரசிம்மஸ்தோத்திரம்.
84 நாராயண ஸ்தோத்திரம் ...
85 திரிபுரசுந்தரிஸ்தோத்திரம்.
86 தேவி அபராதக்ஷமாபன ஸ்தோத்திரம் ...
87 அன்னபூரணிஸ்தோத்திரம்.
88 சௌந்தர்யலகரி ...
89 ஆனந்தலகரி ...
90 விஷ்ணு பாதாதிகேசாந்த ஸ்தோத்திரம் ...
91 சிவ ஸ்தோத்திரம் ...
92 சிவசர்வோத்தம ஸ்தோத்திரம் ...
93 லலிதாஸ் தவராசம் ...
94 தத்தாத்ரேயர் சகத்திர நாம ஸ்தோத்திரம் ...
95 பவானி ஸ்தோத்திரம் ...
96 அம்பாஷ்டகம் ...
97 பாண்டுரங்காஷ்டகம் ...
98 சிவநாமாவளி யஷ்டகம் ...
99 கால பைரவாஷ்டகம் ...
100 அச்சுதாஷ்டகம் ...

சங்கரபகவத்பாத ரியற்றி யருளிய
நூல்களின்—தொடர்ச்சி.

101 கிருஷ்ணாஷ்டகம் ...
102 சகந்நாதாஷ்டகம் ...
103 யமுநாஷ்டகம் ...
104 தன்யாஷ்டகம் ...
105 சிவராமாஷ்டகம் ...
106 கங்காஷ்டகம் ...
107 திரிவேணி ஸ்தவம் ...
108 நர்மதாஷ்டகம் ...
109 மணிகர்ணிகாஷ்டகம் ...
110 சாரதா ஸ்துதி ...
111 சந்திரசேகர ஸ்துதி ...
112 விட்டல ஸ்தோத்திரம் ...
113 ராம லட்சுமண ஸ்தோத்திரம் ...
114 நீலகண்ட சைவ சம்வாதம். ...
115 அபராதபஞ்சன ஸ்தோத்திரம் ...
116 கிருஷ்ண தாண்டவ ஸ்தோத்திரம் ...
117 காமாக்ஷியஷ்டகம் ...
118 ராசயோகம் ...
119 யோகதாராவலி ...
120 அமருக சதகம் ...
121 லலிதாசகத்திரநாம பாடியம் ...
122 லலிதாதிரிசதிபாடியம் ...
123 அத்துவய விநாயக வாத கண்டனம் ...
124 மகாவாதாவளிக் 12000 கிரந்தம் ...

இவையன்றியும் பலவுள. இப்போதவைகள் கிடைக்காமல் மறைந்தன. ஈண்டுச் சௌந்தரியலகரி 75-ம் சுலோகத்திலுள்ள திரவிடசிசு, என்னும் பதத்திற்கு இதற்கு உரை கூறிய லட்சுமீதரர், சங்கராரியரே என்று பொருள் கூறியிருக்கிறார். மலையாளத்திலும், திரவிட சிசு, என்பதற்கு சங்கராசாரியர் என்று வழங்குகிறார்கள். திரவிடர் - தமிழர், திரவிடம் - தமிழ் என்பதாரும். இதனன்றான் பஞ்சத் திரவிடர், பஞ்சகௌடர் எனப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஆதலின், இது தேசப்பிராந்தியோ! அல்லது சாதிப் பிராந்தியோ! அறியேம், அவர்கட்கே தெரியும். இவ்வாறுள்ள சில குழறுப்படி யுரைகளே உண்மை மதந் தாழ்தற்குக் காரணங்களாகின்றன. இங்ஙனமே பல வுள.

## சங்கரபகவத்பாதரின் முக்கிய மாணாக்கர்களியற்றிய நூல்கள்.

1 சிவபஞ்சாட்சர பாடியம் ...
2 சங்கரபாடிய வுரை (பஞ்ச பாதிகை) ...
3 தைத்திரீய பாடிய வார்த்திகம் ...
4 பிருகதாரணிய உபநிடத பாடிய வார்த்திகம் ...
5 நைஷ்கர்மிய சித்தி ...
6 தட்சிணாமூர்த்தி ஸ்தோத்திரம் மற்றும் பல வுரை ...

## சாயன மாதவாசரியர் என்னும் வித்தியாரணிய முனிவரியற்றிய நூல்கள்.

1 இருக்குவேத சம்மிதைபாடியம் ...
2 இருக்குவேத ஐதரேயப் பிராமண பாடியம் ...
3 யசுர்வேத தைத்திரீய சம்மிதை பாடியம் ...
4 யசுர்வேத தைத்திரீய பிராமண பாடியம் ...
5 சாமவேத சம்மிதைபாடியம்.
6 சாமவேத சம்மிதை எட்டுப் பிராமண பாடியம் ...
7 அதர்வண வேத சம்மிதை பாடியம் ...
8 சதபதப் பிராமண பாடியம்.
9 தைத்திரீய வுபநிடத வியாக்கியான தீபிகை ...
10 தருமம் திரிகாண்ட மண்டனம் ...
11 வேதாந்தம் பஞ்சதசி ...
12 தருமம் காலமாதவீயம் ...
13 பராசர ஸ்மிருதி வியாக்கியானம் ...
14 பூர்வ மீமாம்சை அதிகரண மாலை ...
15 வைத்தியம் மாதவ நிதானம் ...
16 சோதிடம் மாதவீயம் ...
17 நியாயம் மாதவீயம் ...
18 சங்கர திக்குவிசயம் ...
19 பிரமேய சங்கிரகம் ...
20 சர்வதரிசன சங்கிரகம் ...
21 விவரணம் ...

இதிற் சங்கர திக்குவிசயத்தை யாரோ வொரு கவியானவரியற்றி வித்தியாரணியர் செய்ததாகப் பெயரிட்டனரென்று கூறுகின்றார் சிலர்.

## ஆனந்தகிரி யியற்றிய நூல்கள்.

1. நியாய நிர்ணயம் பிரமசூத்திர சாங்காரபாடிய வியாக்கியானம் ...
10 தசோபநிடத சங்கரபாடிய வியாக்கியானம் ...
12 மாண்டூக்கிய காரிகை வியாக்கியானம் ...
13 பகவத்கீதை சங்கர பாடிய வியாக்கியானம் ...

## சர்வதந்திர சுவதந்திர் வாசஸ்பதி மிசிரரியற்றிய நூல்கள்.

1 பாமதி யென்னும் பிரமசூத்திர சாங்கரபாடிய வியாக்கியானம் ...
2 மண்டனர் செய்த விதி விவேகமென்னும் பூர்வ மீமாஞ்சை நூற்கு 'நியாய கணிகை' யென்னும் வியாக்கியானம் ...
3 ஈசுரகிருஷ்ணர் செய்த சாங்கிய காரிகை வியாக்கியானம் சாங்கிய தத்துவ கௌமுதி ...
4 பிரமசித்தி வுரை (தத்துவ சமீட்சை) ...
5 யோகசூத்திரபாடிய வியாக்கியானம் ...
6 நியாய வார்த்திக தாற்பரிய டீகை (தத்துவ விசாரதி).
7 இஷ்ட சித்தி ...
8 பிரம சித்தி ...

இவைகள் இப்போது காணப்பட்ட நூல்கள், காணாதன பல வுள.

## சங்கரபகவத்பாதர் பாடியத்தின் வியாக்கியான நூல்கள்.

1 நியாய நிர்ணயம் ஆனந்த ஞானர், ஆனந்தகிரி செய்தது ...
2 ரத்நப் பிரபை, கோவிந்தானந்தர் செய்தது ...
3 பாமதி, வாசஸ்பதி மிசிரர் செய்தது ...
4 பாமதிக்கு வுரை கல்ப தரு, சகாப்தம் 1247, 1260, இதற்குள் இருந்த அமலானந்தாசாரிய ரியற்றியது.
5 கல்ப தருவின் உரை, பரிமளம், அப்பய்ய தீட்சித ரியற்றியது. ...
6 பிரம வித்தியாபாணம் ...
7 மயூக மாலினீ ...
8 பாடிய பாநுப் பிரபை ...

## பிரமசூத்திரத்தின் விருத்தி நூல்கள்.

1 பிரமாமிருத வர்ஷிணி ...
2 வல்லப சம்பிரதாயம் வேதாந்த கௌஸ்துபப் பிரபை ...
3 ஸ்ரீ கேசவ காஸ்மீர பட்டர் செய்தது, நிம்பார்க்க மதம்.
4 தீபிகா வியாக்கியா விருத்தி மாத்துவமதம் ...

## பிறமதந் தழுவிய பழைய பிரமசூத்திர பாடியங்கள்.

1 ஸ்ரீகண்ட பாடியம், ஸ்ரீகண்டாசாரியர் செய்தது ...
2 சிவார்க்கமணி தீபிகை, அப்பய்ய தீட்சிதர் செய்தது, (வியாக்கியானம் சைவ மதம்) ...
3 ஸ்ரீபாடியம் வைஷ்ணவம், ஸ்ரீ ராமாநுசாசாரியர் செய்தது ...
4 மத்வபாடியம் ஸ்ரீமாத்துவாசாரியர் செய்தது ...
5 அணுபாடியம் வல்லபாசாரியர் செய்தது ...
6 நிம்பார்க்க பாடியம் நிம்பார்க்காசாரியர் செய்தது ...

... இன்னும் பல மதாந்தர நூல்கள் இருக்கின்றனவாகத் தெரிகின்றன.

இதில் மேற்காட்டியவற்றிற் சங்கரபகவத்பாதர் சம்பிரதாயக் கிரந்தங்கள் (179-ம்.)

---

## மடாம்நாய சேது என்னும்

## நூலின் மொழிபெயர்ப்பு.

### தீர்த்தம்.

மறைமு டிப்பொரு ளாகிய தத்துவ மசியாங்
கறைய கற்றிரி வேணியிற் கருதுசங் கமத்தி
னறையுந் தத்துவ பாவனை யாலதி னித்தம்
முறையி லன்புடன் மூழ்குவர் மொழிதருதீர்த்தர். (1)

### ஆசிரமம்.

துரிய மென்றுசொ லாச்சிர மந்தனைச் சுழக்கப்
பெரிது வல்லவ ரைசையுந் தங்களைப் பிரிப்போன்
உரிய முன்வந்து போவதை யொழித்தவன் றனக்கே
யரிய நற்பெய ராச்சிர மம்மென்ப ரான்றோர். (2)

### வனம்.

அழகு மிக்கநல் லருவிநீ ரணிபெறும் வனத்திற்
பழகி யங்குறைந் திடுவராய்ப் பந்தபா சத்தை
முழுதும் விட்டவர் தம்மையே மொழிகுவர் துறவிற்
பழுத கற்றிடு வனமெனப் பழையவர் பாரில். (3)

### ஆரண்யம்.

இலங்கு மிவ்வுல கின்பினை யெளிதினி லெற்றி
நலங்கொ ணின்மல வானந்த நந்தன வனமாந்
துலங்கு பேரொளி யாரணி யந்தனிற் சுகமாய்ப்
புலங்கொள் புத்தியில் வாழ்பவன் போதவாரணியம். (4)

### கிரி.

மிகச்சி றந்திடு மலைதனில் மேவிவாழ் பவனாய்
இகத்திற் கண்ணன்சொல் கீதைபா ராயண னென்ன
அகத்து நின்மல் மசலக்கம் பீரமு மடைந்தான்
செகத்தி லன்னவன் கிரியெனு நாமத்தான் தெரிக்கில். (5)

### பருவதம்.

மலையி னுள்ளடி வாரத்தில் வாழ்ந்துஞா னத்தை
யலைவ தற்றிட வாக்குவன் னகமதில் திடமாய்
நிலையி லிங்குள சாரம சாரத்தை நிறுத்தே
எலைய றிந்தவன் நாமத்திற் பருவத மென்பார். (6)

### சாகரம்.

பன்னு தத்துவக் கடலிற்கம் பீரத்தன் கருத்தில்
உன்னு நல்லுணர் வென்றிடு மாமணி யுற்றுன்
தன்னின் முன்மரி யாதையைத் தாண்டிடான் றன்னை
மன்னு நற்பெயர் சாகர மாமென்பர் மதியோர். (7)

### சரசுவதி.

இன்னி சைச்சுவை யுணர்விணை யிச்சிப்போ னென்றும்
பன்னு மின்னிசை புரிபவன் படர்தரு கவிஞன்
உன்னு மிப்பவக் கடலெனு மசாரத்தை யொழித்தோன்
மன்னு கின்றநற் சரஸ்வதி யென்பவன் மதிக்கில். (8)

### பாரதி.

கல்வி யென்றிடு பாரத்தா னிறைந்தவன் கருத்தில்
பல்வி தத்தன பாரத்தைப் பறித்தவன் பற்றும்
அல்ப கற்றரும் பாரமாந் துன்பம தறியான்
இல்லி கந்திடு பாரதி யென்பரா லினியோர். (9)

### புரி.

உண்மை ஞானத்தாற் பூரண னுரைத்திடு மந்தத்
திண்மை யாகுமோர் பூரண தத்துவத் திதியில்
தண்மை யாகவே யூன்றினேன் றகுபதி னீங்கான்
ஒண்ப ராபரத் தின்புளா னுரைதரு புரியாம். (10)

---

## மடங்களும், மாணுக்கர்களும்.

1. சாரதா மடம் ...
2. கோவர்த்தன மடம் ...
3. சோதி மடம் ...
4. சிருங்கேரி மடம் ...
5. சுமேரு மடம் ...
6. பரமாத்ம மடம் ...
7. கூடலி மடம் ...
8. சங்கேஸ்வர மடம் ...
9. சுமேரு மடம் (காசி) ...
10. கும்பகோண மடம் ...
11. புட்பகிரி மடம் ...
12. விருபாக்ஷ மடம் ...
13. ஹவ்யகமடம் ...
14. சிவகங்கை மடம் ...
15. கோபால மடம் ...
16. ஸ்ரீசைல மடம் ...
17. இராமேசுர மடம் ...
18. ராமச்சந்திரா பூர மடம் ...
19. ஆவணி (அவந்தி) மடம் ...
20. கனகிரி மடம் ...
21. ஹள்ளி மடம் ...
22. பண்டாகரி மடம் ...
23. கைவல்யபுர மடம் ...
24. மூலபாகல மடம் ...
25. சிராலி மடம் ...
26. சித்திராப்பூர் மடம் (சங்கேசுரம்) ...
27. நரசிம்மவாடி மடம் ...
28. மோளவண மடம் ...
29. பைடண மடம் ...
30. பண்டீகர மடம் ...
31. காசி மடம் ...
32. தீர்த்தராசப்பூர் மடம் ...
33. கங்கோத்திரி மடம் ...
34. தீர்த்தஹள்ளி மடம் ...
35. ஹரிஹரப்பூர் மடம் ...

இவைகளிற் சில அழிந்துவிட்டன, சில இப்போதுள்ள ஆசாரியர்களின் அதீனமா யிருக்கின்றன.

1. பத்மபாதாசாரியர் ...
2. அஸ்தாமலகாசாரியர் ...
3. தோடகாசிரியர் ...
4. சுரேசுராசிரியர் ...
5. சித்சுகாசாரியர் ...
6. சமித்பாணியாசாரியர் ...
7. விஷ்ணுகுப்தாசாரியர் ...
8. சுத்தகீர்த்தியாசாரியர் ...
9. பாநுமரீசியாசாரியர் ...
10. கிருஷ்ணதர்சனாசாரியர் ...
11. புத்திவிருத்தியாசாரியர் ...
12. விரஞ்சிபாதாசாரியர் ...
13. சுத்தானந்தகிரியாசாரியர்.
14. முநீசுராசாரியர் ...
15. தீமாந்தாசாரியர் ...
16. பரமதகாலானலாசாரியர்.
17. இலட்சுமணாசாரியர் ...
18. திவாகராசாரியர் ...
19. திரிபுர குமாராசாரியர் ...
20. கிரிசாகுமாராசாரியர் ...
21. படுகநாதாசாரியர் ...
22. ஆனந்தகிரியாசாரியர் ...

உண்மை விளக்கம் முற்றிற்று.

| | ஆம்னாயத்தின் திக்குக் கிரமம். | சம்பிரதாயம். | மடத்தின் பெயர். | அங்கத்தின் பெயர். | க்ஷேத்திரத்தின் பெயர். | தேவதைகளின் பெயர். |
|---|---|---|---|---|---|---|
| 1 | மேற்கில். | கிருமிகீடவாரம் (நிவாரணம்.) | சாரதா மடம். | தீர்த்தம் அல்லது ஆசிரமம். | துவாரகை. | சித்தேசுரர். |
| 2 | கிழக்கில். | போகநிவாரணம். | கோவர்த்தன மடம். | வனம் அல்லது ஆரண்யம். | புருஷோத்தமம். | சகந்நாதர். |
| 3 | வடக்கில். | ஆனந்தவிலாசநிவாரணம். | ஜோதி மடம். | கிரி-பர்வத-சாகரம். | பதரிகாசிரமம். | நாராயணர். |
| 4 | தெற்கில். | பொன் நிவாரணம். | சிருங்கேரி மடம். | சரசுவதி பாரதி புரி. | இராமேசுரம். | ஆதிவராகர் மலஹானிகர லிங்கம். |
| 5 | ஊர்த்துவாம்னாயம். | காசி ... | சுமேரு மடம். | சத்தியம் அல்லது ஞானம். | கைலாசம், | நிரஞ்சனர். |
| 6 | ஆன்மாம்னாயம். | சத்துவ சந்தோஷம். | பரமான்ம மடம். | யோகம். | நபசரோவரம். | பரமஹம்சர். |
| 7 | நிட்கலாம்னாயம் | சத்சிடர். | சகத்திராக்க பிரபை மடம். | குருபாதுகை. | அநுபவம். | விசுவரூபர். |

| தேவிசத்திகளின் பெயர். | ஆசாரியர் பெயர். | தீர்த்தத்தின் பெயர். | பிரமசாரியின் பெயர். | வேதம் அதின் மகாவாக்கியம். | இடம். |
|---|---|---|---|---|---|
| பத்திர காளி. | விசுவரூபர் பத்மபாதர். | கோமதி. | சுவரூபகர். | தத்துவமசி சாமவேத வாக்கியம். | துவாரகை. |
| விமலை தேவி. | பத்மபாதர் அஸ்தாமலகர் என்பது வேறு மதம். | மகோததி (சமுத்திரம்.) | பிரகாசகர். | பிரக்ஞானம் பிரம இருக்கு வேதம். | வட்டி சகந்நாதம். |
| புன்னகிரி பூர்ணகிரி. | தோடகாசாரியர். | அலக்நந்தா. | ஆனந்தர். | அயமாத்மா பிரம அதர்வண வேதம். | வதரிகா வனம். |
| காமாக்ஷி சாரதா. | பிருவீதரர். | துங்கபத்திரா. | சைதன்யர். | யசுர்வேதம் அகம்பிரமாஸ்மி | சிருங்கேரி. |
| மாயை. | ஈசுரர். | மானசம். | பிரமதத்துவ சம்யோகத்தால் சந்நியாசம். | சாமவேதம். | ... |
| மானசிமாயை. | சேதனர். | திரிபுடி. | சந்நியாசம். | வேதாந்த வாக்கியம். | ... |
| சித்சத்தி. | சத்குரு. | சத்சாத்திர சிரவணம். | சந்நியாசம். | ... | ... |

# பாயிரம்.

## முருகக் கடவுள் வணக்கம்.

ஒருபெருங் கொம்பையுள்ளா னிருவர்தங் கேள்வனானோன்
இருசுட ரெரிமுக் கண்ணா னெழிற்றலை நான்கு கொண்டான்
அருவெனு மைந்து சத்தி யாறணி சிரசா னென்றாய்
முருகனென் றொளிரும் வேளா முதல்வனைப் போற்றி செய்வாம்.

## சங்கரபகவத்பாதர் வணக்கம்.

இங்கெழு குரவர் தாள்க ளென்றலைக் கணிகள் மற்றோ
ஓங்குறு மூலக மாகுஞ் சத்தொடு வசத்தைக் கண்டே
பங்கறு பயத்தி னீரிற் பகுத்திலர் பறவை யன்னார்
சங்கர ரன்ன மாவர் சரணது தலைமேற் கொள்வாம்.

## குரு வணக்கம்.

அக்கரத்தினை யறிவித்தவ வனிணை யடியும்
அக்கரத்தினை யரன்பணிக் கிழுத்தவன் பொடியும்
அக்கரத்தினை யங்கையிற் கனியென வளித்த
அக்கரத்தவ னடியரி னடிப்பொடி முடிமேல்.

## மொழி பெயர்ப்புரை.

மொழிகளுக் கிறைவனாய முதல்வனாற் கவியதேனும்
வழுவிது வெனவே சொல்வர் வழுவறிபுலவர் மேலோர்
இழிமொழி யெனினு மேலா யினிக்குமென் றுரைப்ப ரத்தால்
விழிதரு சங்க ராசான் விசயம துரைப்பேன் யானும்.

சிலரொடு தன்மையோடு சிறக்குமா வடமொ ழிக்கண்
உலகெடு சங்க ராசா னொப்பிலாச் சரித மென்னும்
இலகிடு கல்விக் காடரி ருத்துசீர் நிதிய மித்தை
பலரொடு தமிழி லீங்கு பரப்பினேன் பரிவிற் கொள்வீர்.

## ஸ்ரீ வித்தியாரண்ய முனிவரியற்றிய
# ஸ்ரீசங்கர திக்குவிசய காவிய வசனம்
## முதலாவது சருக்கம்.

---

சிவனுக்குந் தேவர்கட்கு முண்டாகிய சம்வாத முதலிய வடிவ உபோற்காதங் கூறத்தொடங்கல்.

பாயிரம்.

*திருவளர் வித்யாதீர்த்த தேசிக னாகித் தோன்றும்*
*அருவெனும் பரமான் மாவை யன்பொடு வணங்கிப் போற்றி*
*தெருடரு சங்க ராசான் செழுந்திசை விசயத் தின்பால்*
*சுருதிகொள் சார மீதைச் சுருக்கியே யுரைப்பாமன்றே* (1)

*சிறிய கண்ணாடியில் பெரிய யானைக் கூட்டங்கள் (உண்மையாகத்) தோற்றப்படுவதுபோல, என்னுடைய இந்தச் சிறிய சுருக்கநூலில், சங்கரபகவத்பாதருடைய சீடரின் சீடராகிய ஆனந்தகிரியின் வாக்கியங்களின் சாரமானது இனிது பார்க்கத்தக்கதாம்.* (2)

*மிக விருப்பமுள்ள இனிப்புப்பண்டங்களிலும், உருசியை யுண்டுபண்ணுதற்பொருட்டு வேறொரு உருசி (புளிப்பு) சேர்க்கத்தக்கதுபோல, எனது இந்த சுலோகத் தொடர்பின் வைப்பு முறையும் அழகிய பழைய கவிகளின் சுலோகங்களில் (இன்சுவையை யுண்டாக்கும். "புளிப்பு" ருசியென்று) விரும்புதற்பாலதேயாம்.* (3)

பாடியக்காரர் (சங்கரபகவத்பாதர்) பழைய கவிகளால் இனிது மிகத் துதிக்கப்பட்டவராயிருப்பினும் எனது நூலினாலுங் களிப்படைகுவர். என்னை! பாற்கடலிற் பள்ளி கொள்ளுந் தாமரை மலர்க்கண்ணன் (விஷ்ணுவானவர்) மீண்டும் இடைச்சேரியில் பாலை இச்சித்திலர் கொலோ! (4)

(ஆகையால்) பாற்கடலின் துவாரங்களினின்று கிளம்பிய அமிருதப் பிரவாகத்தின் சுவையினும் மேலான சுவையுடைய வாக்கியங்களால் படமுடைய சர்ப்பங்கட்கு அதிபரை (ஆதிசேடனை)த் தாழ்மைப்படுத்தியவரும் மங்கலத்தைச் செய்வதால் இனிய சங்கரரெனத் திருநாமங்கொண்டவருமாகிய உலக குருவின் நற்கீர்த்தியானது பெரும்பாலும் இருதயத்தைச் சுத்தி செய்தற்பொருட்டு மிக முயல்கின்றேன். (5)

## அவை யடக்கம்

(வசந்த முதலிய) காலத்தில் மலர்ந்த மல்லிகைப் புட்பங்களின் நறுமணக் கட்டியைக் கசக்கிப் பிழிந்துண்பனவும், திக்குகளின் எல்லைகளைப் பிளப்பனவுமான சங்கரபகவத்பாத சத்குருவின் குண சமுதாயங்கள் எங்கே? அந்தோ யான் எங்கே? அங்ஙனமாயினும் சற்குரு கிருபையாகிற அமிருத வெள்ளத்தில் முழுகியெழுந்த கடைக்கண் பார்வை வலியால் (அந்தக் குணங்களை வர்ணிப்பதில்) மேம்பட்ட யோக்கியதை எனக்கிருக்கின்றது. (6)

(கிருதார்த்தத் தன்மையற்ற தன்னை) தன்னியர்களாக எண்ணிக்கொண்டவர்களும், (துற்சனராகிய தம்மை) நல்ல மனிதர்களாக வெண்ணிக்கொண்டவர்களும், பாற்கடல் மங்கை (சஞ்சலத்தன்மையால்) (இலக்குமி) என்னும் நாட்டியப்பெண்ணின் நாட்டியத்தால் உன்மத்தமானவர்களும்,

விவேகமற்றவர்களுமான கெட்ட மனிதர்களின் விவாதங்களை அரைத்தலாகிற (கண்டித்தலாகிற) தீமை மலிந்த (அழுக்கையுடைய) எனது வாக்கை, இப்போது சங்கர குரவரின் விளையாட்டாலெழுந்த பெருங்கீர்த்தியென்னுஞ் சமுத்திரநீர்ப் பெருக்குக்களால் உள்ளவாறு கழுவுகின்றேன். (7)

(மற்றும்) மலடி மைந்தன் கழுதைக்கொம்புகட்கொப்பான அற்பமாகிய "கணபுக்" என்னும் அரசனுடைய ஆடக்கம், வீரம், ஈகை முதலிய (குணங்களின்) வர்ணனைக் கலையாற் கெட்ட நாற்றத்தை யடைந்துள்ள எனது வாக்கை, எதியாகிய சங்கரபகவத்பாதரது மூவுலகாகிய அரங்க பூமியின்கண் நடிக்கப்பட்ட கீர்த்தியென்னு நாட்டியப் பெண்ணின் சந்தணப்பூச்சின் சமுதாயத்திலிருந்து தரையில் விழப்பட்ட தூளிகளால் நறுமண முண்டாக்குகின்றேன். (8)

அமிருத கிரணங்களையுடைய அம்புலியின்கூறு லலங்கரிக்கப்பட்டவரது (பரசிவனுடைய) மற்றோர் காருண்யத் திருமேனிகொண்ட ஸ்ரீசங்கரபகவத்பாதருடைய அன்பின் வலியால் இனிய பூசையில் யோக்கியமாகிய இன்சுவையுடைய வாக்குக்களென்னும் மலர்க்கூட்டங்களையுடைய இந்த உறுதியான புதிய காளிதாசனென்பவருடைய (வித்தியாரண்யருடைய) கவிப்போக்காகிய கற்பக விருட்சமானது இப்போது மிக விளங்கும் நல்ல மனமுடையாருக்கு ஆனந்தப்பெருக்கை யளிப்பதாகுக (கற்பக விருக்ஷம் தேவர்கட்குக் களிப்பைக் கொடுக்குமாறு இந்தக் கவியின் போக்கும் அறிவுடையோர்கட்குக் களிப்புண்டாக்குக என்பது பொருள்.) (9)

மனக்களிப்புடையவர்களால் மகிழத்தக்கதும், புலா லுண்ணுதவர்களாற் புகழத்தக்கதும், விடயப்பற்றின்றிய விவேகிகளால் சிற்றறிவுடையார்களையும் நுண்ணிறிவாளர்களாக்குந் தன்மைபற்றிப் பூசிக்கத்தக்கதும், காஸ்மீரத்திற் றோன்றியவைகளாற் களிப்படையத் தக்கதுமாகிய புதுக் காளிதாச கவியினுடைய இன்சொல்லாகிய இவ்வாக்கானது, தோஷம் விடுபட்டதாமாயினும், இன்னுச்சொற்களையுடைய கெட்ட கவிஞர் கூட்டத்தார்களால் (கருணையற்ற புலையர்களால்) காமதேனு விகாரத்தை யடைவதுபோன்று வேறுந் தன்மையுற்று விகாரப்படுகின்றது. (இச்சுலோகத்திற்கு பதங்களைத் தழுவாது உரையின் கருத்துப்பற்றிப் பொருள் கூறப்பட்டிருக்கின்றது.) (10)

அல்லது, தீனர்களிடத்துத் தயையுள்ளவர்களும், பிறர் துயரத்தை யறிந்தவர்களும், நட்புத்தன்மையாகிய நதியில் இங்குமங்குந் திரிதலாகிய விளையாடுத லொன்றிலேயே சுவையுடைய மனத்தர்களும், பிறர் வாக்கை முத்துப்போற் போற்றுபவர்களுமான இத்தன்மைய சத்துக்க (அறிவுடைய சத்புருஷர்க)ள் நாற்புறத்துஞ் சூழ்ந்திருக்கின்றூர்கள். (ஆதலின் இத்தன்மைய) பல சிந்தனைகளாற் பயனென்னைகொல்லோ! (இத்தன்மையோர்கள் கிடைப்பதரிதென்று ஆசங்கித்துக் கூறல்) அல்லது கருணைக்கடலாகிய சங்கரபகவத்பாத பரமாசிரியர் சந்தோஷமடைவாராக. (சங்கரபகவத்பாதருடைய சந்தோஷத்தின்பொருட்டு ஒரு தலையாக இதில் முயற்சிக்கற்பாலதென்பது பொருள்.) (11)

சங்கரபகவத்பாத குருவினது குணங்களைத் துதித்தற் பொருட்டுத் தொடங்கி, சிலர் ஒரு விருத்தத்திஞேர்டியியற்றுவதில் விட்டுவிட்டனர். சிலர்களோ! ஒரு விருத்தத்

திற் பாதி யியற்றி மக்கினப்பட்டு விட்டனர். அத்தன்மைத் தூன குணங்களைத் துதிக்கவேண்டுமென்று இச்சித்தயான் சந்திரனைத் தன் கை யிரண்டாலும் பிடித்துக்கொள்ள நிச்சயஞ்செய்த மதியினரின் (பாலரின்) இயற்கைத்தன்மையைத் தேடுகின்றேன்.. அந்தோ! அந்தோ! (12)

அவ்வண்ணமாயினும், பாற்கடலின் விரிந்த பிரவாகங்களினுடைய விளங்கப்பட்ட பெரிய அலைகளின் வரிசை விளக்கத்தைப் பரிகாசம் பண்ணுதலையே மிகப் பிரியமாய்க் கொண்ட (அதினின்று மிகுந்த தெளிவுடைய)வைகளும், ஊமைப்பனையும் வாக்கு வல்லுநனுகச் செய்யும் ஆற்றலுடையனவுமான நீத்தார்க்கிறைவரின் (சங்கரபகவத்பாதர் அல்லது வித்தியாதீர்த்தரின்) கடைக்கண்பார்வைகள் எம்பால் இனிது விளங்குகின்றன. ஆகையால், எனக்குச் செய்யமுடியாத விருப்பத்தைச் செய்வதில் மிகுந்த ஆற்றலுடைமையில் வியப்பு என்னை கொல்லோ! (13)

சாரதாப் பிரார்த்தனை.

அத்வைதாசிரிய (சங்கரபகவத்பாத)ருடைய திருவடித் துதியால் சம்பாதிக்கப்பட்ட புண்ணியத்தால் உதாரத்தன்மையுடைய சாரதாம்பாள்; நடனம் பண்ணப்பட்ட பரசிவனது உயர்ந்த சிரசில் விரிந்த உச்சி ஸ்தானத்தினின்று ஒழுகிய கங்கையின் எல்லையற்ற அலைகளினுடைய கோலாகல (கருவ)த்தின் பிரவாகத்தைக் கண்டிக்கும் பண்டிதத் தன்மையால் அழகு வாய்ந்த விசாலமாகிய தனது வாக்குப் பிரவாகத்தை எனது நாவின் நுனியாகிய சிம்மாசன சமீபமடையுமாறு செய்தருள்வாளாக. (14)

இச் சங்கர சத்குருவினுடைய சரித்திர மெங்கே? அத்தன்மையுள்ள நான் எங்கே? (கவிஞ! என்னை அதை

வர்ணிக்கும்படி) எவ்வாறு நிர்ப்பந்தஞ் செய்கின்றனே? நெடு நாள் தேடிய என்னுடைய கீர்த்தியை சமுத்திரத்தில் அமிழும்படி செய்கின்றனையோ? என்ன! என்றிவ்வாறு சொல்லிவிட்டு சபல (சைன்ய)மடைந்து ஓடப்பட்ட வாணியை பலாத்காரத்தோடு மீண்டும் பிடித்திழுத்து சங்கர சத்குருவின் குணத்துதியில் கவிஞர் கழகங்கள் சேர்ப்பிக்கின்றார்கள். (ஏவுகின்றார்கள்) குருவினுடைய கௌரவத் தன்மை விசித்திரமாயிருக்கின்றது. (15)

## தனது நூல் வன் கவி அன்றெனல்.

நிகண்டையே கதியாகவுடைய இனிமையற்ற பெரும்பாலும் 'உஞ்ஞதி' என்று சொல்லப்படும். இலக்கண நன்கமையாத விகுதிகளும், மிகக்கீழ் மேலாயுள்ள 'யங்' விகுதி கொண்ட இரட்டித்த ஓரெழுத்து மொழியிலுள்ள 'போபூயதே' என்பதில் யகர விகுதி போன்ற சொற்களும், தூரான்வயங்களும், துன்பத்தோடு சேர்க்கப் படுவனவுமான வன்சொற்கவிகளின் சிற்சில பதங்களா லிழுக்கப்பட்டதாகி, வேடர் கூட்டத்தால் பெண்மான் வசப்படுவதுபோன்று அந்தோ! அந்தோ! எனது வாக்கும் அதன் வசமாகுமோ? (என்னுடைய வாக்கும் வன் கவிகளின் முறையைப்பற்றி விடுமோ என்று ஆக்குரோசங் கூறினமை காண்க.) (16)

## நூலியற்றியவரின் பெருமை கூறல்.

எந்தக் காவியத்தில், பகவத்பாதர் என்னுந் திருநாமங் கொண்ட பரசிவன். சுவாமியாக (வர்ணிக்கப்படுபவராக) இனிது விளங்குகின்றனரோ? சிருங்கார முதலிய இரசங்களோடுகூட சாந்திச்சுவை முக்கியமாகக் காணப்படுகின்ற

தோ? எதில் அஞ்ஞான நிவிர்த்தியும் பயனாகின்றதோ? வியாசபகவான் போன்று (யாவரும் போற்றுந் தன்மையால்) அசலமாகிய (மறுப்பற்ற) அந்தக்காவிய நூலியற்றிய கருத்தர் (வித்தியாரண்ய முனிவர்) தன்னியராவர் (கிருத கிருத்தியராவர்) அவருடைய யாப்பியற்றலை இனிதுணர்ந்தோர்களுங் கிருத கிருத்தியர்களே யாவர்கள். (17)

## இந்நூலிற்கூறிய விடயங்களைச் சுருக்கிக்கூறல்.

(பதினாறு சருக்க வடிவமாகிய) இக்காவியத்தின் முதலாவது சருக்கத்தில் (பரசிவன் தேவதைகளின் சம்வாதமாகிய) உபோத்காத வர்ணனம், இரண்டாவது சருக்கத்தில் அந்தப்பகவான் பரமேசுரனே சங்கரபகவத்பாதராக வெளிப்படும் வர்ணனம், மூன்றுவது சருக்கத்தில் அமிருத முண்ணத் தக்கார்களென்னும் அந்தந்தத் தேவதைகளின் அவதாரங் கூறல். (18)

நான்காவது சருக்கத்தில் அந்தப்பகவானுடைய எட்டாவது வயதில் முற்றிய பவித்திர சரிதங் கூறப்பட்டிருக்கிறது. ஐந்தாவது சருக்கத்தில் அவரது யோக்கிய சீவன் முத்திக்குச் சாதனமாகிய சந்நியாசாசிரம மடைதலின் வருணனை. (19)

நெடுநாளாகச் சம்பிரதாயமாய் வந்து (சம்பிரதாய மழிந்ததால்) இடையிற் கெட்டுப்போன அந்தச் சுத்தாத்வைத ஆன்மவித்தையை நிலை நிறுத்தல் ஆறுவது சருக்கத்திற் கூறப்பட்டிருக்கிறது. (20)

ஏழாவது சருக்கத்தில், அவர் (சங்கர பகவத்பாதர்) வியாசாசாரியரை இனிது தரிசித்த விசித்திரம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. எட்டாவது சருக்கத்தில் மண்டன பண்டி

தர் சங்கர பகவத்பாதரிருவர்களின் சம்வாதம் (வர்ணிக்கப் பட்டிருக்கிறது.) (21)

ஒன்பதாவது சருக்கத்தில் சரசுவதியைச்சாட்சியாகக் கொண்ட சர்வக்ஞத்தன்மை நிருவாகத்திற்கு உபாயத்தைச் சிந்திக்கும் வர்ணனம், பத்தாவது சருக்கத்தில் யோகவலி யால் (சங்கர பகவத்பாதர்) அமரக வேந்தன் உடம்புட் பிர வேச வர்ணனமும், மீனக் கொடியான் (மன்மத) கலைகளை யுணர்ந்து அதன் பிரசங்கத்தை வெளிப்படுத்தும் வர்ண னமும்.

பதினோராவது சருக்கத்தில் உக்கிர பைரவனென் னும் பெயருடைய காபாலிகனை வெற்றிகொண்டதின் வர்ண னம். (22, 23)

பன்னிரண்டாவது சருக்கத்தில் அத்தாமலகாசிரியர், தோடகாசிரியர், இருவர்களையும் மாணுக்கர்களாய்க் கொண்ட தின் வர்ணனம், பதின்மூன்ருவது சருக்கத்தில் வார்த் திக மீருகிய பிரமவித்தியா (சாத்திர)ப் பிரசாரண நிரு பணம். (24)

பதினுன்காவது சருக்கத்தில் பத்மபாதாசிரியர் தீர்த்த யாத்திரை சென்ற வர்ணனம். பதினைந்தாவது சருக்கத்தில் சங்கரபகவத்பாதர் திக்குவிஜய வியப்பின் வர்ணனம். (25)

பதினுருவது சருக்கத்தில் அந்த மகாத்மாவானவர் (சங்கர பகவத்பாதர்) சாரதாபீடவாச வர்ணனம் இவ்வாறு பதினுறு சருக்கங்களால் சங்கரபகவத்பாதருடைய சரித்தி ரம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. (26)

அத்தன்மைய இச்சங்கர பகவத்பாதரின் சரித்திர மானது கலியுக தோஷத்தைக் கெடுப்பதும், ஒருதரங்கேட்

டல் மாத்திரத்தானே விரும்பியதைக் (புருடார்த்த நான்கையும்) கொடுக்கத்தக்கதும், பலவித கேள்வி, மறுமொழிகளால் அழகுடையதுமாக, அறிவுடையார்களின் ஆனந்தத்தின் பொருட்டு ஆரம்பிக்கப்படுகிறது. (27)

## நூல்

### தேவர்கள் முறையிடல்

ஓர் காலத்தில் பிரமன் முதலிய தேவர்கள், வெள்ளியங்கிரியின்கண் வீற்றிருக்கும் தேவ தேவனாகிய பரமேசுரனை, உதயகிரியிலுள்ள சந்திரனை யடைகின்றதொப்ப அடைந்து போற்றினார்கள். (ஈண்டு நாரதர் வேத மார்க்கத்தினின்று நழுவிய அந்தணர் முதலிய வருணத்தார்களைக் கண்டு, சத்தியலோகஞ் சென்று பிரமனைப் பிரேரிக்க, பிரமன் தனது அன்பர் முதலியவர்களோடு சிவலோகமடைந்து ஐம்முகத்தானின் அடி தொழுது சொன்னான் என்பதை பழைய சங்கரவிசயங் கூறுகின்றது; இது உரையிற் கண்டது.) (28)

(போற்றவும்) சிவன் பிரசன்னமானதால் (அருள் செய்த குறியால்) தன் பிரயோசனங் கைகூடியதென்பதை அநுமித்தறிந்த தேவர்கள் விரிந்துள்ள கைகளென்னு மலர்களை மொட்டுக்களாக்கிக் (கை குவித்துக்)கொண்டு பரசிவனை நன்கு வணங்கி வினயத்தோடு (கீழ் வருமாறு) விஞ்ஞாபித்தார்கள். :—(29)

பகவானே! எங்களுடைய நன்மையின் பொருட்டு புத்த தேகத்தை யெடுத்த விஷ்ணுவானவர், புத்த மதத்தார்களை வஞ்சித்துக்கொண்டிருக்கின்றார் என்பது (தங்களால்) நன்கறியப்பட்டதேயாம். (30)

பிரபுவே! அந்தப் புத்தராற் செய்யப்பட்ட ஆகமங்களைக் கைக்கொண்டவர்களும் (கர்மோபாசனை, ஞானங்களைக் கூறும்) தரிசன சாத்திரங்களை நிந்திக்கின்றவர்களுமான புத்த மதத்தர்களால் இப்போது பூமி வியாபிக்கப் பட்டிருக்கின்றது. (பேரிருளால் இராத்திரி வியாபித்திருப்பது போன்று என்க.) (31)

(அந்தப் புத்த மதத்தர்களாற் கெடுதி என்னையோ வெனின்?) வர்ணாசிரம தர்மங்களை உள்ளவாறு அநுட்டிக்கின்றவர்களை நிந்திக்கின்றார்கள்; பிரபுவே! மற்றும் பிரமத் தன்மையை (பிரமாவை - பிராமணத் தன்மையை, வேதத்தை - பிரமத்தை) துவேஷிக்கின்றார்கள்; வேத வாக்கியங்களை பிழைப்பின் பொருட்டுக் (கற்பித்தது) என்று சொல்கின்றார்கள். (ஈண்டுப் பிரபுவே என்று விளித்ததால் ஆற்றலுடைய தேவரீரே அதை மறுப்பதில் வல்லுநர் எனக் குறிப்பிட்டமை யுணர்க.) (32)

மக்களனைவர்களும் ஓர் போதேனும் சிறிதும் அநுட்டான முதலிய கருமங்களைச் செய்திலர் (கருமத்தை விட்டவர்களாகிப் பாகண்டிகளாகி விட்டார்கள். பா=மூவேத கருமம், அதைக் கண்டிப்பவர்=இல்லையென்று மறுப்பவர், நாத்திக ரென்பது பொருள்.) (33)

வேள்வி என்னும் இரண்டெழுத்தைக் காதிற் கேட்கினும் காதை யடைத்துக்கொள்கின்றார்கள். அவர்கள் எவ்வாறு வேள்விக்கிரியையிற் பிரவிருத்திப்பார்கள்? (அவர்கள்) வேள்வித் தீயிலிடும் ஆகுதியை யாங்கள் எவ்வாறு உண்ணுவோம்? (34)

சிவாகம விஷ்ணுவாகமங்களை மேற்கொண்டவர்களும், சங்கு சக்கர முதலிய சின்னமுடையவர்களுமான பாகண்டிகளால் கருமங்கள் விடப்பட்டன. துஷ்ட மனிதர்களால்

காருண்யம் விடப்பட்டது போன்றென்க (விதிப்படி கருமங்களை விடாமையின் துறவிகளெனவுங் கொள்ளற்பாலரலர் என்ப. (35)

சுருதிகளென்னுங் கற்புடைய மங்கையர்கள் அபேத பாவனையால் உத்தமபுருடனை (பரமான்மாவை - இனிய கணவனை) அநுசரித்திருக்கின்றார்கள். (தாற்பரியத்தால் அத்வைத பரமான்மாவில் முடிவடைகின்றன) கணவனை தெய்வமென்று கற்பு வழுவாது நடந்து வருகின்றார்கள். அத்தன்மைத்தான சுருதிகள் வித்தை; மதம்; முதலியவைகளால் வெறிகொண்ட சத்தி மதத்தர்களால் (பட்சத்தில் மத்திய பான முதலியவைகளால் பித்துப் பிடித்தவர்களால்) எந்த நிந்தைகள் தான் செய்யப்பட்டில? (எல்லா நிந்தைகளுஞ் செய்யப்பட்டுள்ளன என்க.) (36)

அடியோடு நறுக்கின அந்தணர்களின் சிரங்களென்னுந் தாமரைப்பூக்களாற் பைரவனை யாராதிக்கின்ற காபாலிகர்களான பாவிகளால், அழியப்படாத உலகமரியாதை யாதுகொலோ? (எல்லா வரம்பும் அழிந்ததென்க.) (37)

சனங்கள் எம்மார்க்கங்களிலிறங்கி வருத்தத்துடன் நீக்கற்கரிய துன்பங்களை யடைகின்றார்களோ? அத்தன்மைய (தோடங்களென்னும்) முட்களுள்ள ஏனைய நெறிகளும் பலவகையுள. (38)

ஆதலின், தேவரீர் உலகைப் பாதுகாத்தற் பொருட்டுத் தோட முள்ளார்களனைவர்களையும் முழுது மொழித்து உலகு இன்புறுதற்குரிய வைதிக நெறியை நிலைநிறுத்தியருள்வீராக. (39)

## பரசிவன் தேவர்கட் கருளல்

என, இவ்வாறு கூறிமுடித்த தேவர்கட்கு மலை மகளன்பன் (பரசிவன்) தேவர்காள்? உங்கள் மனவேட்கையி

ஞாலேயே மநிடத்தன்மையைப் பெற்று முடிக்கின்றோம்; என்றருளினர். (40)

தீயொழுக்கங்கள் ஒழியவும், தருமங்களை நன்கு நிலை நிறுத்தவும், பிரம சூத்திரக் கருத்துக்கிசைந்த பொருள் களைச் சிறப்பித்து நிண்ணயிக்கப்பட்ட (அத்துவிதத் தையே மேற்கொண்ட) பாடிய மொன்று செய்துகொண்டு, (மனவேட்கையை முடிக்கின்றோம், என மேற்கூறியதுடன் சேர்த்துக்கொள்க). (41)

அஞ்ஞானத்தை மூலமாகக் கொண்ட "துவிதம்" என்னும் பேரிருட்கு உச்சிப்போதிலுள்ள இரவியொத் தோர்களும், நூன் முதலிய எல்லாவழக்கிலும் வல்லுநர்களு மான, நான்கு மாணாக்கர்களுடன், திருக்கர நான்கு கொண்ட திருமால் போன்று. (42)

துறவிகட்கோர் வேந்தனென்னுஞ், "சங்கர பகவற் பாதர்" எனத் திருநாமம் பூண்டு தரையிலவதரிப்போம், (வானோர்காள்!) எமைப்போலவே நீவிரனைவர்களும் மநுடதேகம் பெற்றோர்களாய், அத்தன்மைய எம்மைச், சுவர்க்கத்தில் வாழும் நீவிர் பின்பற்றுவீர்கள். அப்போது உங்கள் மனவேட்கை முடியும். இதிலோரையமு மில்லை. என்றிவ்வணம் பரசிவன் தேவர்கட் கருளிச்செய்து பிறர் களாற் பெறுதற்கரிய தமது திருக்கடைக்கண்ணோக்கை, இரவி தனது இளங்கிரணத்தைத் தாமரை மொட்டி லெறியு மாறு (அருகிலிருந்த) குமரக்கடவுண்மீது செலுத்தி யரு ளினர். (43, 44, 45)

முருகக்கடவுளுந் திருப்பாற்கடலின் சிறலைகட்கொத்த திருக்கடைக் கண்ணின் செந்நோக்கைப் பெற்றுக், கடலிற்

கலைமதி கதிர்களைச் சேர்ந்து களிப்புறுமாறு பெருங்களிப் பெய்தினர். (46)

பரசிவன் குமரக்கடவுட் கினிமை கூறல்.

(பின்னர்) பற்களென்னும் பனிமதிக் கிரணங்களால், தேவர்களான சகோரப் புட்களைக் களிப்புறச் செய்தவர் (பரசிவனார்) கீழ்வருமாறு கூறியருளினர். (47)

அழகிய திருவுளத்தோய்? மன்னுலகைக் கரையேற் றும் மதிவிடய வாக்கைக் (சொல்கின்றேன்) கேட்பாயாக. முன்னர் மன வொருமைப்பா டுடையோனுகுதி. கருமம், உபாசனை, ஞானம், என்னும் வேறுபாட்டால் முக்காண்டங் களையுடைய வேதத்தை உள்ளவாறே சீர்திருத்துவையேல்? அந்தணர்களைச் சீர்ப்படுத்தியதே யாகும். (48)

அந்தணர்கள் பரிபாலிக்கப்படுவரேல்? உலகங்களில் அனைத்தும் பாதுகாக்கப்பட்டதாம். என்னை? வருண, ஆசிரமங்களின் றொடர்புகள் அந்தணர்களின் சார்பாதலா லென்க. (49)

ஆதலின் “இப்போது இதை (ஞானகாண்டத்தை)ச் சீர்திருத்தஞ் செய்தல் வேண்டும்” என்னுங் கருத்துக் கொண்ட எனது (செய்திக்கு முன்னரேயே) உட்கருத் தை யுணர்ந்த என தருகினின்ற, திருமாலும், ஆதிசேட னும். (50)

தேவதா காண்டத்தை (உபாசனுகாண்டத்தை)ச் சீர் திருத்துமாறு எம்மாற் கட்டளை யிடப்பட்டவர்களாய்ச் சங்கர்ஷணர், பதஞ்சலி முனிவர், என்னத் தரையி லவ தரித்து உபாசனு காண்டத்திற்கும், யோக காண்டத்திற்குங் கருத்தர்க ளாயினுர்கள். (ஞானசாதனத்தின் பொருட்

டென்பதாம்) இனிமேலுள்ள ஞான காண்டத்தையோ? யானே சீர்ப்படுத்துவேனெனத் தேவர்கட்கு முடிவுவீர கூறியுள்ளேன், குமாரனே? நீயும் (இதை) அறிவாயாத லின் சைமினி முனிவரின் (கருமகாண்ட) நியாயமாங் கடற் கோர் கார்காலமதி யாகுவாய். (51, 52, 53)

(சந்திரனுகி) பிரமத் தன்மையின் பொருட்டு (பிரா மணத் தன்மை, இரணிய கருப்பத்தன்மை, பரப்பிரமத் தன்மை, என்பவைகளின் பொருட்டு)ச் சிறப்புடைய கரும காண்டத்தைச் சீர்திருத்துவாயாக. அதனல் இப்போது சுப்பிரமணியன் (பிரமத் தன்மையை நன்கு சீர்ப்படுத்தி னேன்) எனப் பிரசித்தி யுள்ளோனுவாயாக. (54)

(ஆதலால்) தரையின்பா லவதரித்து வேதப்பொருட்கு (வேதப் பொருளென்னுந் தருமத்தால் உபலக்கணமா யுண ர்ப்பட்ட பிரமத்தன்மைக்கு) பகைவர்களான நாத்திகர்க ளனைவரையும் முழுதும் வென்று வைதிகவரம்பைச் செய் வாயாக. (55)

பிரமனுந் (தரையின்பாற் றேன்றி) நினது அநு கூலத்தின் பொருட்டு 'மண்டன பண்டிதர்,' எனத் திரு நாமங் கொண்டதோ ரந்தணராகுவன். கீர்த்திமலிந்த இந் திரனுஞ் 'சுதன்வன்,' எனத் திருநாமம்பூண்ட ஒரு அரச னுகுவன், என்பதாம். (56)

## தேவர்கள் மண்ணிடத் தவதரித்தல்

(என் றிவ்வாறு அருளிய) பிரமனேயு மேவும் பரசிவ னுடைய திருவாக்கைக் கேட்டுத் தேவசேனையின் கொழு நன் (முருக்கக் கடவுள்) 'அவ்வாறே யாகுக,' என அமிரு தப் பெருக்கைக்கொள்ளுமாறு அன்புட னேற்றுக்கொண் டனர். (57)

அதன் பின்னர் இந்திரன் சுதன்வன் என்னும் அரசனாய் மண்ணிலவதரித்து, அரசநீதியாற் பிரசைகளைப் பரிபாலித்துக்கொண்டு மண்ணுட்டை வான நாட்டிலுள்ள தனது, அமராவதி, என்னும் நகரமாக்கினன். அம்மன்னன் எல்லாமுணர்ந்தோனு யிருந்தும் நாத்திக நூல்களிற் பொய்யன்புடையோனுயும், கிரௌஞ்சகிரிக்குப் பகைவனை (மேற்கூறியபடி மண்ணி லவதரித்தருளுங் குமாரக் கடவுளை) எக்காலவதரித்தருளுவரோ? என்று) நோக்குவோனுகவு மிருந்து, புத்தமதத்தர்களைச் சேர்த்து வைத்துக் கொண்டிருந்தனன். (புத்தமதத்தைத் தழுவியிருந்தனனென்க.) (58, 59)

## பட்டபாதர் மண்ணி லவதரித்தல்

பின்னர் தாரகனைக்கொன்ற அவர் (குமாரக்கடவுள்) திக்குக்களென்னுந் திருமாதர்கட்கோர் சீரணியாகிய 'பட்டபாதர்' எனத் திருநாமம்பூண்டவராய் அவதரித்தருளினர். (60)

(அவதரித்து)ச் சைமினி முனிவராலியற்றிய பன்னிரண்டத்தியாய வடிவப் பூர்வமீமாஞ்சை நூலாற்குறிப்பிட்ட வேதத்தின் கருத்தை (வேதமுற்பகுதியின் கருத்தை சைமினி முனிவரின் சூத்திரங்கட்குள்ள சாபர பாடியத்திற்கு இருவகை வார்த்திக மியற்றுதல் வாயிலாக)த் தெளிவாய் வெளிப்படுத்திக்கொண்டு, அருணனுல் விளக்கிய வுலகை இரவியுமினிது விளக்குமாறு விளக்கிக்கொண்டு (பட்டபாதர்) பிரகாசித்தனர். (61)

## பட்டபாதர் புத்தரோடு வாதிடல்

(பின்னர்) அப்பட்டபாதர் திக்குக்களை வெற்றி பண்ணிக்கொண்டு, சுதன்வ அரசனது நகரை யடைந்தனர்

(அது கண்ட) அவ்வேந்தனும் விதிப்படி எழுந்து இறைஞ்சினன். (62)

பட்டபாதரும் மங்கலமொழி கூறுவதால் (அம்மன்னனைக்) களிப்படைவித்து அவ்வரசன் கொடுத்த பொற்பீடத் தமர்ந்தோராய்ச் சுவர்க்கமென்னும் நந்தவனத்தை நறுமணம் அழகுறச் செய்யுமாறு அவ்வரசனுடைய கழகத்தை அழகு மிகுமாறு செய்தனர். (63)

புலவருட் சிறந்தார் (பட்டபாதர்) அக்கழகத்திற்கருகிலுள்ளதோர் தருவின்பாலுள்ள குயிலினினிய குரலைக் கேட்டு அக்குயிற்குக் கூறுமாறு; கபடத்தால் அவ்வரசனுக்குக் கீழ்வரும் வண்ணங் கூறினர். (64)

குயிலே ? கருமையாந் தோடமுள்ளவைகளும், மிகத் தாழ்ந்தவைகளும், செவிக்கின்னாவாகிய வேதநிந்தை செய்யுஞ் சத்தங்களை யுடையவைகளுமான தனது சாதியைப் பாதுகாக்குந் தன்மையாற் காக்கைக் கூட்டங்களின் கூட்டுறவு இன்றெனிலோ ? பெருமை பாராட்டற் குரியதாகுவாய், என்பதாம். (65)

இத்தகைய கருத்தைக் கருவிற்கொண்ட மொழியைக் கேட்டுக் காலால் மிதித்த கரும்பாம்பு போன்று (நாவிரண்டுளதாற் கருநாகவுவமை) பௌத்தர்கள் பெருஞ் சீற்றங் கொண்டார்கள். (66)

பட்டபாதர் புத்தர்களை மறுத்தல்.

(அதன் பின்னர்) அப்பட்டபாதர் புத்தர்களின் சித்தாந்தமாகிய மரத்தை, யுத்தி யென்னுங் கோடரியாற் பிளந்து அவர்களுடைய நூல்களென்னும், பிளந்த விறகுகளால் (அவர்களுடைய) கோபத்தீயை மிக வளர்த்தார். (67)

அப்போது, அக் கழகம், அப் பௌத்தர்களின் கோபத்தி னின்று வெண்மை கலந்த செந்நிற முகங்களால், இளவெயி லாற் சிறித்து செந்நிறமுள்ள தாமரை மலர்களால் தடாகம் விளங்குமாறு விளங்கியது. (68)

(இவ்வண்ணம்) ஒருவர்க்கொருவர் உண்மையாய், ஆசங் கை கூறும்போதும், மறுக்கும்போதும், பாதாளத்தை வெடிக்கச்செய்யத் தக்கதோர் பேரொலி யெழுந்தது.

பின்னர், அக்கணத்திலே பண்டிதர்கட்கோர் இந்திர ராகிய பட்டபாதரால் (மற்றொரு பக்கத்தில் தேவேந்திர னால்) விரிந்து உறுதி வாய்ந்த தருக்கத்தால் (ம-ப-ல். வச்சி ராயுதத்தால் பக்கங்கள் (ம-ப-ல் பௌத்தர்களின் பக்கங் கள்) சிறகுகள் துணிக்கப்பட்ட போதில் (ம-ப-ல்-மறுத்த போதில்) பௌத்தர்கள் என்னும் மலைகள் கீழ் வீழ்ந்தன (தாழ்ந்தன.) (69, 70)

(அதினின்றும்) எல்லாவற்றையுஞ் சிறப்போடுணர்ந்த அப் பட்டபாதர், விரோதிகளான அவர்களுடைய சருவக் ஞத் தன்மையைப் பொறுக்க முடியாததொப்ப அப்பௌத் தர்களைச் சித்திரத்தில் வரைந்த மோன அழகுள்ளார்க ளாகச் செய்தனர் சித்திரித்த பதுமைபோன்று பேசாதிருப் போர்களாய்ச் செய்தனர் என்பதாம். (சருவக்ஞரென்பது பௌத்தர்கட்கோர் பெயர்). (71)

பின்னா (சித்திரப் பதுமை போன்று) பௌத்தர்க ளுடைய கருவமொழிந்தபோது, அப்பட்டபாதர் (அச் சுதன்வ ராசனுக்கு) மற்றை மொழிகளைப் புலவனைகயாக அறி வுறுத்திப் பெருமை பாராட்டினார். (72)

அதன் பின்னர், சுதன்வ ராசன், வெற்றியுந் தோல்வி யுங் கல்வியால் வரத்தக்கன, (ஆதலின்) எவர் மலையி னுச்சியிலிருந்து (கீழ்) வீழ்ந்து அழிவுறு திருப்பரோ, அவருடைய மதமே உண்மையா மென்றனன். (73)

அவ்வரசன் கூறியதைக் கேட்டுப் பௌத்தர்க ளனைவரும் ஒருவர் முகத்தை யொருவர் நோக்கி யிருந்தனர். அந்தணப் பெரியாரோ, (பட்டபாதரோ,) மறையை நினைவிற் கொண்டு மலை யுச்சியின் மீதேறினர். (ஏறி) "மறைகள் பிரமாணங்களாவன வெனிலோ. (74)

எனக்கு அணுத்துணையுங் கேடுறுதாகுக" என, மிக வுரக்கக் கூறிக்கொண்டே மிக்க பெரியோராகிய அப் பட்டபாதர் கிரியி னுச்சியினின்று கீழே விழுந்தனர். (75)

(அக்கால், பட்டபாதரது உண்மை மொழியை நோக்குமாறு வந்த மனிதர்கள்) புத்திரியின் புத்திரர்களான அட்டகாதிகளாற் புண்ணியஞ் செய்யாதபோது யயாதியின் தருமங் கேடுற்றமையின் மறித்துஞ் சுவர்க்கத்தினின்றும் வீழ்ந்தார்போலுமென்று பேசிக்கொண்டார்கள். (76)

உலகிற்கோர் ஆசிரியராகிய பட்டபாதர் மலையி னுச்சியிலிருந்து கீழ் வீழ்ந்தும் பஞ்சுச் செண்டு விழுமாறு அணுத்துணையுங் கேடின்றி யிருந்தனர். வேதம், தன்னை யடைக்கலம் புகுந்தார்களின் துன்பைப் போக்கமுடியாததாங் கொல்லோ! (ஒரு தலையாகப் போக்கு மாற்றலுள்ளதேயாம்). (77)

அவ்வற்புதத்தைக் கேட்ட அந்தணர்கள், மேகவொலி கேட்டுப் பல திக்குக்களிலிருந்து கொடிகளாலாக்கிய கூண்டு

களினின்று மயில்கள் வெளிப்பட்டு வருவன போன்று வந்து கூடினார்கள். (78)

கேடி யாதொன்று மற்ற அப் பட்டபாதரைச் சுதன்வ ராசன் கண்டு, மறையின்பால் அன்பை மிக்க உறுதி பண்ணிக்கொண்டனன்; (மற்றும்) தீயோர்கள் கூட்டுறவாற் பழித்தற் கிடமாகிய தன்னைத் தானே பலவகையாய் நிந்தித்துக்கொண்டனன். (79)

பௌத்த மதத்தர்களோ, மணி மந்திர ஔடத முதலியவைகளினாலும் இவ்வாறே உடம்பைப் பாதுகாப்பாற்றிக்கொள்ளக் கூடுமாதலின் இது மத நிச்சயத்திலோர் பிரமாணமுமாகாதென்றார்கள். (80)

தீயோர்களான பௌத்தர்களால் நேரிற் காணப்பட்ட விஷயத்திலும் மாறு வகையாய்க் கொண்டுபோம்போதில்; சுதன்வ ராசன் கட்புருவத்தா லச்சந்தருங் கடுமுகத்தனாய்க் கீழ்வருமாறு கொடிய உறுதிமொழி கூறினான். (81)

நீவிர், இரு திறத்திர்களையும் யாதேனு மொன்று வினாவுவேன்; அதைச் சொல்லமுடியாதவர்க ளெவர்களோ? அவர்களனைவரையுங் கற்காணத்திலிட்டு அரைத்துவிடுவேன்; இதிலோர் ஐயப்பாடுமில்லை யென்றனன். (82)

சுதன்வ ராசன் இவ்வாறு உறுதி மொழி கூறி, ஒரு குடத்தில் ஒரு பாம்பைப் பிடித்தடைத்துக் கொணர்ந்து முன் வைத்து, இதிலுள்ளது யாது? எனப் பௌத்தர், பட்டபாதர்க ளிருதிறத்தார்களையும் வினாவினன். (83)

(பட்டபாதர் முதலிய) அந்தணர்களும் பௌத்தர்களும், "வேந்த, யாங்கள் நெருநல் விடியற்போதிற் சொல்

வோம்.'' என அரசனுக்கு மறு மொழி கூறி விட்டுத் தம திடஞ் சென்றனர். (84)

சென்ற அந்தணர்கள் கழுத்தளவாகிய நீருக்குள்நின்று கொண்டு வான்மணியை நோக்கித் தாமரை மலர்கள் போன்று வருந்தித் தவஞ்செய்தனர். தவத்திற்கிரங்கி இரவியும் வெளிப்பட்டருளியது. (85)

ஈண்டு (அந்தணருக்குத் தெய்வமரன், என மநு கூறியவாங்கு அந்தணர்க்குத் தெய்வமரனேயா மெனினும், பரசிவனது அட்ட மூர்த்தங்களுள் ஒன்றாகிய சூரியனுங் காயத்திரி மந்திரத்தின் தேவதையாக உபாசித்தற்குரியா னென்பது வெளிப்படையாமாதலின் சூரியோபாசனையும் அந்தணர்க்குப் பொருத்தமுடையதே யென்பது, பழைய திக்குவிசயத்தின் வாக்காமெனஇத்ற்குரை கூறினோர், குறிப் பிட்டிருப்பதுங் காண்க.

இவ்வாறு சூரியன் வெளிப்பட்டு, '' குடத்தினுள் ஆதிசேடன்மேற் பள்ளிகொண்ட அரி வீற்றிருக்கின்றார் '' எனச் சொல்லற்பாலதாகிய சொல்லைச் சொல்லிவிட்டு மறைந் தருளினர். (86, 87)

அந்தணர்களும் (இஃதே அரசருக்குச் சொல்லற்பால தென நிச்சயித்துக்கொண்டு வந்துவிட்டனர். பௌத்தர் களும் (மந்திர நூலில் வெளிப்படையான பெரிய பத்து வித்தைகட்குள் அடங்கிய தாரகை என்னுந் தேவதையி னருளாற் குடத்திலோர் நாகமிருக்கின்றது என்று தீர்மா னித்துக்கொண்டு வந்தனர். (88)

பின்னர் (இரு திறத்தார்களும் வந்து கூடியபோது) பௌத்தர்களெல்லோருங், '' குடத்தினுள் நாகமிருக்கின்

றது" என்றார்கள். அந்தணர்களோ, "நாகராசனிற் பள்ளி கொண்ட நாராயணன்" என்றார்கள். (89)

இவ்வாறு அந்தணர்களின் மறுமொழியைக் கேட்ட (யானே நேரிற் குடத்திலிட்ட பொருளினும் வேறு பொருளைக் கூறிவிட்டார்களென்று கவலையடைந்த) சுதன்வ வேந்தனின் முகம், நீர் காய்ந்த தடாகத்தில் கருகியுள்ள கமலத்தின் கவினைப் பெற்றது (முகம் வாட்டமுற்றதென்பதாம்.) (90)

பின்னர் அவ்வரசனுக்கும், கேட்போரனைவருக்கும் ஐய்மகலும் வண்ணந் தெய்வத்தன்மையுள்ள அசரீரிவாக்குச் சுதன்வ ராசனைக் குறித்துக் கீழ் வருமாறு வெளிப்படையாய்க் கூறிற்று.. (91)

பேரரசனே, அந்தணர்கள் கூறியது யாதோ, அதுவே உண்மையாம்; அதிலுள்ள ஐயப்பாட்டை யகற்றுவாயாக. (கூறிய) உறுதி மொழியை உண்மையா யுடையோனுவாய் என்பதாம். (92)

சுதன்வ ராசன் அவ்வசரீரி வாக்கைக் கேட்டு (ஐயமொழிந்து அக்குடத்தைத் திறக்குங்கால்) குடத்தினுள் அமரர்களின் வேந்தன் அமிருதத்தைக் கண்டது போன்று (சேடன் மீது பள்ளி கொண்ட) திருமாலைத் தரிசித்தனன். (93)

தானே (குடத்தினுள் நேராக) வைத்த தோர் பொருளினும் வேறாகிய தொன்றைக் கண்டமையின், வேந்தன் ஐயப்பாடெலா மகன்றோங்கி வேதத்திற்கு விரோதிகளான பௌத்தர்களைக் கொல்லும் வண்ணம் கீழ் வருமாறு கட்டளை யிட்டனன் :— (94)

சுதன்வ ராசன், (தெற்கே) இராம சேது வரையிலும், வடக்கே இமய மலை வரையிலும், உள்ள மூத்தவர் இளைய

வர்களென்னும் பௌத்தர்கள் அனைவரையும் எமது தொழிலாளர்களுள் யார் கொல்லமாட்டாரோ, அத் தொழிலாளர் எம்மாலேயே கொல்லப்படுவர், எனத் தனது தொழிலாளர்க ளனைவருக்கும் உறுதி மொழி கூறினன். (95)

அன்புடையோர்களாயினும், தோடமுடையர்களாய்க் காணப்படுவர்களேல், கொல்லத் தக்கோர்களே யாவார்கள். அற்றாகலினன்றே (தந்தையாலேவிய) பரசுராமன் தனது அன்னையாரையும் ஆவி துறக்கச் செய்தோன் ஆகானு? (ஆதலின்). (96)

(இவ்வாறாக) குமாரில (பட்டபாத)ரைப் பின்றொடர்ந்த சுதன்வ ராசனால் (வைதிக) தரும விரோதிகளான சைன (பௌத்த)ர்கள் ஒரு யோகீந்திரனால் யோகத்திற்கு விரோதங்களான இடையூறுகள் (உரோகம், வலியின்மை, மறப்பு சோம்பல், வைராக்கிய மின்மை, பிராந்தி தோற்றல், யோக பூமிகளை யடையாமை, நிலைப்படாமை, என யோக நூலிற் கூறியுள்ளன). நாசமடைந்தன போல நாசமானார்கள். (அழிக்கப்பட்டார்கள்). (97)

### பட்டபாதர் கரும காண்டத்தை நிறுவுதல்

அத் தீயார்க ளழிந்தபோது அறிஞராகிய அப் பட்டபாதர், இருணீங்கிய விடத்து இரவி கிரணங்களைப் பரப்புமாறு, மறை கூறிய நெறிகளை (மறை யோதல், வேள்வி யாற்றல் முதலிய ஒழுக்க வாயிலாக) நாற்றிசைகளிலும் நன்கு பரவச்செய்து விட்டனர். (98)

குமாரிலபட்ட ரென்னுமோர் சிம்மத்தாற் பௌத்தர்களான மதகரி (கூட்டங்கள்) அழிந்த காலத்தில் நாற்றிசைகளிலும் மறையின் சாகைகள் (மன்னுலகில்) தழைத்தோங்கிவிட்டன. (99)

முன்னரே இவ்வண்ணமாக எரியி லெழுந்தவரும், எல்லா முணர்ந்தவருமாகிய குமாரிலபட்டரால் (ஈண்டு முழு முதற் கடவுளின் நுதல் விழித் தீயி லுதித்த குமரக் கடவுளின் திருவவதாரமாதலின், எரியி லெழுந்தவரு மெனப்பட்டார்) வைதிக கருமம் (மறை கூறிய தருமம்) விரிந்துள்ள விடத்துக் கருணைக் கடலாகிய கலைமதியைத் தலையிலணிந்தோன் (பரசிவன்) பவ சாகரத்தில் மூழ்கிக் கிடக்கும் இவ்வுலகத்தைக் கரை யேற்றுவான் திருவுளத்தில் இச்சித்தனன். (100)

இவ்வண்ணம் வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கர திக்குவிசயச் சுருக்கத்தில் உபோற்காத சரித
மேற்கொண்ட முதற் சருக்கம்
முற்றும்.

---

# இரண்டாவது சருக்கம்

## சங்கர பகவத்பாதரின் அவதாரத்தை விரித்துரைக்கத் தொடங்கல்

(சிவகுருவின அவதார முதலியன)

(இவ்வாறாக) கருமவழி விருத்தியடைந்த பின்னர், உண்மையிலோர் கருணைக் கடலாகிய காமனைக் காய்ந்த பரசிவன், கேரள நாட்டில் (மலையாளத்தில்) அழகு வாய்ந்த இடபாசலத்தி (க்ஷேத்திரத்தி)ல் புண்ணிய நதிக் கரையிற் சுயம்புலிங்க வடிவா யெழுந்தருளினன். (1)

அவ்விலிங்க வடிவப் பரசிவனால் (உள்ளிருந்தேவுவோனால்) ஏவப்பட்ட இராசசேகரன் என்னுமொரு வேந்தன், (தனது) கனவி லடிக்கடி அப் பரசிவனது அருள் விளையாட்டைக்கண்டோனாய், அவ்வியாபகத்திற்கு (இலிங்கத்திற்கு) அழகமைந்ததோர் ஆலயமியற்றிவைத்து விதிப்படி பூசை முதலியவற்றை நடாத்தி வந்தனன். (2)

தொழுவாரின் றுன்பத்தைத் தொலைக்கும் அப் பரசிவனது அநுக்கிரகத்தால் அறுவகை யிடையூறுகளில்லாத தன்மை வாய்ந்ததும், (மழை மிகல், மழையிலாமை, எலிகணறுக்கல், வெட்டுப் பூச்சிகள் விழல், கிளிகள் தின்றல், கதிரெழாது நிற்றல், என்பனவே பயிர்சட்கு அறுவகையிடையூறுகளாவன) மிகுந்த வளங்களையுடையதும், (சிவனுடைய காலடியின்கண் விளைந்திருத்தலின்), காலடி என்னுந் திருப்பெயர் வாய்ந்ததுமாகிய அந்த க்ஷேத்திரத்தினருகில் அந்தணரின் கிராமமொன்றிருந்தது. (3)

அவ் வந்தணரின் கிராமத்தில் நிலைத்த வுணர்வுடைய வரும், கீர்த்தி மலிந்த வித்தியாதிராயர் எனத் திருநாமம் பூண்டவருமாகிய பண்டித ரொருவர் தோன்றி யிருந்தார். அவரே இடபாசலத்திற் றிருக்கோவில் கொண்டெழுந் தருளி யவதரிக்க விரும்பிய அப் பரசிவாவதாரத்திற்கு (சங்கராவதாரமாய் வந்தருளுங் குழந்தைக்கு) தனது புத்திரனைப் பிதாவாகக் கொண்டு விளங்கினர் என்க. (ஈண்டுச் சங்கர பகவத்பாதர், உலக முறையைத் தழுவி வித்தியாதிராயருடைய பௌத்திரராவர். வித்தியாதிராய ருடைய் புத்திரர், சிவகுரு. சிவகுருவின் புத்திரர் சங்கர பகவத்பாதர், எனக் காண்க). (4)

அந்த வித்தியாதிராயருக்கு முற்பிறப்பிற் செய்த புண்ணியங்களால் நல்ல பிரம வொளி வாய்ந்த குழந்தை யொன்றுதித்தது. அக் குழந்தை, அறிவினுல் அரனை யொப்பவும், வாக்கினுல் வான் குரு போலவு மிருத்தலின், அறிவுமிக்கார் (வித்தியாதிராயர்) அக் குழந்தைக்கு அப் பொருட் கேற்றவாறே, சிவகுரு, எனத் திருநாம மிட்டனர். வான் குரு = பிருகற்பதி. (5)

அச் சிவகுரு, பிரமசாரியாயும், ஆசிரிய ரில்லின்கண் வாழுந் தன்மையராயும், ஆசிரியருக்குத் தொண்டு பண்ணுஞ் சீலத்தராயும், ஐயமேற்று, ஆசிரியருக்கு நிவேதித்து அவ் வன்னத்தை யுண்ணு மொழுக்கம் உடையராயும், காலை, மாலை, வேள்வித் தீயை வழிபடுபவராயும் இருந்து, பிரம சரிய விரதத்துடன் தனது (தைத்திரீய சாகையைச் சிறப் பாகக் கொண்ட) மறையை யோதிவந்தனர். (6)

கருும முதலியவைகளை யொழுகுவதின் பயனுகிய அவ் வர்த்தஞானம், (மறைப்பொருளுணர்ச்சி) ஆராய்ச்சி யின்றி

யமையாதாதலின், மறையை யோதியபின், அதை யாராய்ந்தனர். (அதாவது மறையின் பொருள் வடிவ கரும காண்ட ஆராய்ச்சி நூலைக் கற்றனர் என்பது பொருளாம்; மறையை யறிவது மிக அரிதா மாதலினென்க). (7)

ஆசிரியர் சிவகுருவை இல்லறமடையப் பணித்தல்

அரு மறையை யோதியும் அதன் பொருளை யாராய்ந்தும் முடிந்தவிடத்து, மாணுக்கனிடத்து அன்புள்ள ஆசிரியர் (தனது மாணுக்கனுகிய) சிவகுருவிற்குக் கீழ் வருமாறு இனிது மொழிந்தனர் :—எம்மிடத்தில் அங்கமாறுடன் அருமறையும் ஓதினை ; (அதன் பொருளையும் பூருவ மீமாஞ்சை முதலிய நூல்வழியால்) நன்காராய்ந்தனை ; நினக்கு அதிக காலமாயிற்று. (8)

மைந்த, நீ (எனக்குப்) பிரியனே யாயினும், இச்சமயம் மனைக்கேகுவாயாக. சுற்றத்தார்களும் நின்னைக் காண அவா மிக்குடையோரா யிருப்பார்கள். வீட்டிற்குச் சென்று ஓர் காலத்தில் (ஒரு பேச்சைக்கொண்டு) சுற்றத்தார்களுக்குக் களிப்பை யுண்டாக்குவாயாக, காலம் போக்காதே. (9)

இவ்வுலகின்கண் பிற்பகலிற் செய்ய எண்ணியது யாதோ, (நிலையாமை யுணர்ந்த புருடனால்) முற்பகலிலே செயற்பாலதாம். அது இவ்வாறே ஈண்டு, யாது நாளைக்குச் செயற்பாலதென்று இச்சிக்கப்பட்டதோ, அது இன்றே செய்யத் தக்கதாம் என்னு மிப்பொருள் (நீதி நூல்களால்) நிச்சயிக்கப்பட்டதா மாதலின் என்க. (10)

(முளைக்குங்) காலத்தில் ஊன்றின வித்துக்களி லிருந்துண்டாகும் பயிர்களைப்போல, பயிரிடுதற்கு ஒவ்வாத காலத்திட்ட வித்துக்களினின்று அவ்விதமான பயிர்க

ளுண்டாகா. அது போன்று தனது (தருணப்) பருவத்திற் செய்யப்பட்ட மண முதலியவைகளும் பயனைத் தோற்று விக்க (மக்கட்பேறு முதலியவைகளை யுண்டாக்க) ஆற்ற லுடையன வாகின்றன. இன்றெனிலோ, பயனற்றவை களாகும். (11)

(அன்றியும்) அவ்வக் குலத்தைப் பற்றிய புருடர்களும், மணஞ்செய்யுங் கருமத்தை மிக விரும்பி யுள்ளார்கள். என்னை? அவ்வக் குலத்திற் றோன்றிய தந்தையர்கள் பிண் டம்போடும் புருடர்கட்குச் சந்தானங்கள் இருக்குமாகில் வருங்காலத்திற் பிண்டம் போடாமை இன்றியதாகு மென் பதை நோக்கிக்கொண்டே யிருக்கின்றார்க ளாதலின் என்க. (12)

உனக்கு மணஞ் செய்துவைக்க விரும்பிய தாய், தந்தையர்கள், உண்மையாய் நீ பிறந்ததி லிருந்து சென்ற வருடங்களைக் கணக்கிட்டுக் கொண்டிருப்பார்கள் என்பது இயற்கை யாமாதலா னு மென்க. (13)

இவ் வாராய்ச்சியின் பயனோ, (மறைப்) பொருளை நன்குணர்வதுவேயாம். என்னை? (வேதப்) பொருளின் மெய்யுணர்வும் வியப்பான பலவகைப்பட்ட வேள்விக் கிரியையின் விதிக்குக் காரணமாம் ஆதலினென்ப. இவ் வேள்வியில், மணம் புரிந்துகொண்டு (தம்பதிகள்) இரு வருமாய் அதிகாரத்தை யடைகின்றார்கள். (என மறை மொழிந்தவாறு) என்பது மறை யுணர்ந்தார் கூறும் முறை யாம் என்பதாம். (14)

## சிவகுருவின் வைராக்கியப் பிரசங்கம்

ஆசிரிய, (தாங்கள் சொல்லியது) உண்மையேயாம். (அங்ஙனமாயினும்) மறையோதிய வொருவன், இல்லறத்த

னுதல் வேண்டும்; மற்றைய ஆசிரம பதவியை யடையக் கூடாது, என, ஆசிரியர் கூறல் நியமமில்லை. மற்றே, வைராக்கிய விவேகங்களை யுடையோன் துறவறத்தையும் (அடையினும்) அடையலாம். இன்றெனிலோ, வைராக்கிய முதலியவைகளை யுடையனல்லனேல்) இல்லறத்தனாகவே யிருக்கலாம். என்னு மிதுவே அரச நெறியாம். (பெரு மார்க்கமா மென்பது பொருள்). (15)

(அற்றேல், நினது கருத்து என்னையோவெனின்,) அறிவு மிக்கோய், நைட்டிகப் பிரம (மரணம் வரையுள்ள பிரமச்)சரியத்தைப் பெற்றே நீண்ட ஆயுளுடையோனாகி, யான் மான் தோல், (திரி), தண்டங்களைக் கைப்பற்றியும், வினய முடையோனாயும், தீயி லாகுதி செய்துகொண்டும், மறையை யோதிக்கொண்டும், ஓதிய மறை மறதியற்றிருக்க விரும்பிக்கொண்டும், தமக்கருகிலேயே ஆயுள்வரை வாழ்வே னாக, என்பதே எனது கருத்தாம், என்க. (16)

மனையைக் கைப்பற்றலென்னு மிதுவோ, எதுகாறும் அநுபவ விஷயமாய் ஆக்கப்படவில்லையோ, அதுகாறுமே இன்பிற்குக் காரணமாம். (அநுபவித்த) பின்னரோ, மெல்ல, மெல்ல அத் தன்மைத்தாய இது சுவை யிலாததே யாகிவிடு கின்றது. பெரியோய், சிற்றின்ப விடயம் அணுத் துணையா மாயினும் அநுபவிக்கப் புக்கவிடத்து நீக்குவாய்கொலோ? (தம்மால் நீக்கமுடியா தென்பது பொருள்). (17)

விதித்தவாறே செய்யின், வேள்வியுஞ் சுவர்க்கமாகிய பயனைக் கொடுக்கும், பெரும்பான்மை அஃது உலகிற் செய்வ தரிதேயாம், (மற்றும்) காரீரி வேள்வி, (மழையைத் தரும் வேள்வி), சித்திர வேள்வி, (கோக்களைக் கொடுக்கும் வேள்வி) என்பவைகட்கு மழை, கோ, பயன்களாமாறு

வேள்விக் கருமத்தில் தெய்வ கதியா (லோர்கால்) கூறிய வாங்கு பயனிலாதொழியினோ, (பயனற்றதுமன்றிக்) கேடும் பலமாகும். (18)

எக்கால் அணுத்துணையேனும், அநுபவிக்கவும், அளிக்கவும் பொருளாற்றல் அற்றோனவனோ! அப்போது அவ் வில்லறத்தான் நரக மடைந்தோனேயாவன். எல்லாம் நிறைந்தோனா யிருப்பினும், நல்லறிவிலாமையால் உள்ளவாறே அவ்வவ்விடயங்களிற் சுகத்தை யெண்ணுதோன் யாவனோ, நிறை மனமில்லாத அவனும், உண்மையில் நரகத்திருப் போனே யாவன். (19)

சாந்தியுடையோய், இவர்கட்கு இல்லறத்திற் கநுகூலமான எல்லாப் பொருள்களும் இருக்குமிடத்து (அப்போதைய) விடய திருப்தியுமுண்டாகின்றது, பிற்பொழுதோ, ஓரிடத்திற் சேர்த்து வைத்துள்ளாருக்கு முன்னர்ப் பாதுகாப்பாற்றி வைத்துள்ளவைகள் (மனை, மாடு, மக்கள் முதலியவைகள்) அழிந்து போகின்றன. (பிற்போது தேடிய) அப் பொருளும் அழிந்து விடுகின்றது. மறித்தும், அன்னோருக்கு மற்றையவைகளோடு (வியாதி முதலிய பீடைகளோடு) சம்பந்த முண்டாகின்றது. இவ்வாறே யில்லறத்தார்களுக்கு) இடையறாத் துன்பமேயாம். (20)

## சிவகுரு தனது மனைக் கேகல்

இங்ஙனம் சிவகுரு (தனதாசிரியரிடத்தில்) சொல்லிக் கொண்டிருக்கும்போது, வீட்டின் தலைவராகிய சிவகுருவின் தந்தையார் புத்திரனைத் தனது மனைக்கு அழைத்துக் கொண்டுபோதற்பொருட்டு அங்கேயே வந்தனர். வந்த விநயமாய் வித்தை கற்ற அவ் வித்தியார்த்தியாயர் (சிவகுருவின்) ஆசிரியருக்குத் தட்சிணையாக மிகுந்த பொருளைக் கொடுத்து

விட்டுச் சிவகுருவை முயற்சியால் தனது மனைக்கழைத்துக் கொண்டுபோய் விட்டனர். (21)

இச்சிவகுரு மனைக்குச்சென்று அன்னையாரின் றிருவடியை வணங்கினர். அவ்வன்னையாருங் கட்டியணைத்து (களிப்புற்று) அவரைப் பிரிந்திருந்ததா லுண்டாகிய பெருந்துன்பைப் போக்கிக் கொண்டார். சேயினுடம்பைத் தழுவுதலென்பது, சந்தணக் குழம்பிலுந் தண்மைமிக்குடையதாம் (ஆதலி னென்க). (22)

நெடுநாட்கட்குப் பின்னர், ஆசிரியரின் மனையினின்று அச் சிவகுரு வந்துள்ளாரென்பதைக் கேட்ட அவருடைய சுற்றத்தார்கள், பார்க்கவேண்டுமென விரைந்து வந்தார்கள் வந்த சுற்றக் குழாங்கட்கு, சிவகுரு எழுந்து எதிர்கொள்ள முதலியவைகளால் குலத்தையும் பொருளையுந் தழுவிப் பூசை செய்தனர். (23)

இப் பூவுலகில் திருநாமத்திற்குத் தக்க பொருளுள்ள கீர்த்தி மிகுந்த (வித்தியாதிராயர்) எனத் திருப்பெயர் கொண்ட அச் சிவகுருவின் தந்தையார் அச் சிவகுருவின் (நுண்ணிய) மதியினைக்கண்டு வேதம், மதம், கிரமம், சடை, முதலியவைகளிற் பல வகையாகவும் வினவினர். (24)

மறித்தும், புதல்வனுடைய புத்தி (வலி)யை அறிய விரும்பியவராய் பாட்டமதம், பிரபாகரமதம், கணாதமதம், முதலியவைகளிலும் (பலவகையாய்) வினவினர். தந்தையரால் வினவப்பட்ட புதல்வனு (சிவகுருவு)ந் தொடக்கத்தில் ஆசிரியரை யிறைஞ்சிக்கொண்டு, புன்னகை கொண்ட தாமரை மலர்போன்ற தண் முகத்தினனாய் (சிறிதும் பிறழாது) பெரிய மறுமொழி கூறினன். (25)

மறைநூற்களிலுள்ள மதியையும், கடாவிடைகளிலுள்ள திட நிபுணத்தன்மையையுங் கண்டு இச் சிவகுருவின் தந்தையார் பேரானந்தமெய்தினர். (கல்வியிலாக் காலத்திலும்) இயற்கையிலேயே யாதொரு சொல் இன்புமிக்குளதோ! அச்சொல், கற்ற நூலின் வழியாய் வருமேல் (இன்பந் தருமென) சொல்லவேண்டுவது என்னைகொலோ? (26)

பின்னர் பல அந்தணர்களும் (சிவகுருவின்) நற்குணங்களென்பதோர் பாசத்தாலிழுக்கப்பட்டு (தத்தமது) கன்னிகையை. அன்புடன் (சிவகுருவிற்கு) கொடுக்கவேண்டுமென்னும் விருப்பமேற் கொண்டோர்களாய், அவரது வீட்டிற்கே வந்தார்கள். மணம் புரியுஞ் சமயத்தின் முன்பே அவரது (சிவகுருவினது அல்லது வித்தியாதிராயருடைய) வீடு உண்மையில் மகனுடைய மணத்தை வேட்போர்களாற் சம்பந்தங் கொண்டாடுவது போலவே யாயிற்று. (27)

## சிவகுருவின் மணம்

அந்நாட்டில், பெரும்பொருளீந்து அருமகளுமீவோர்கள் பல்லோர்களிருப்பினும், பெரிய புகழுங் கீர்த்தியுமுள்ள அந்தணரில் மேம்பட்ட அவ்வித்தியாதிராயர் பிறப்பின் மேன்மையை யாராய்ந்து சிறப்புள்ள குலத்திலுதித்த (மக பண்டித ரென்னுமோர்) அந்தணரின் கன்னிகையை (தரவேண்டுமெனக்) கேட்டனர். (28)

(பின்னர்) கீர்த்தியையே பெரிய தனமாகவுடையார்களும், நற்குலத்தவர்களுமான, மணமகன் மணமகளிருவரின் தந்தையர்க ளிருவருக்கும் இவ்வண்ணம் (கீழ்வரும் விதம்) விவாதமுண்டாயிற்று. அதில் மணமகளின் தந்தையார், எமது மனைக்கே வந்து மண மகனுக்கு நின்றல் மணஞ்

செய்துகொள்ளற்பாலது என்றனர். (மணமகனின் தந்தையார்) நினது கன்னிகை எனதில்லிற் கொண்டுவந்து மணமகனுக்குக் கொடுக்கத்தக்காள் என்றார். (29)

(வரமகளின் தந்தையார்) இம்மணச் சடங்கை எமது இல்லையடைந்து செய்பினே, யான் எண்ணிய பொருளினும் இரட்டித்த பொருளை யீவேன் என்றார். (வரமகனின் தந்தையார்) அந்தண! எம தில்லிற்கே கன்னிகை வருவளேல் பொருளின்றியே மகனுடன் மணஞ் செய்விப்பேன் என்றார். (30)

(இவ்வண்ணம் விவாதமிகு மிவர்கட் கிடையில்) வந்தோர் பெரும் பேச்சாளர் அம் மணமகளின் தந்தையாரைத் (தனித்தோரிடத்தில்) அழைத்துக்கொண்டுபோய் நாம் வீட்டிற்குச் செல்வதற்குள் வேறொருவர் வந்து ஒருவர்க்கொருவரின் கலகத்தை (பெரிது) யுண்டாக்கியோ, அல்லது, மணமகளை யலங்கரித்துக்கொண்டு சென்றோ, மணமகனுக்குக் கன்னியைக் கொடுத்து விடுவார்கள் என்று கூறினார். (மிகவிரைவிற் கன்னியைக் கொடுத்து விடுவாயாக என்பது கருத்து). (31)

(அதன் பின்னர்) அப்பெரும் பேச்சாளரால் வழிப்பட்டுவந்த அந்தணர் (மணமகளின் தந்தையாராகிய மகபண்டிதர்) மணமகளையே (மணமகனுடைய) வீட்டிற் கொண்டுவந்து மண மகற்குக் கொடுத்தல் வேண்டுமென்று) கூறியதை யுடன்பட்டுக்கொண்டனர். என்னை? மண மகனுடைய வடிவினழகிற் போரால் கொண்டோர் ஆனதாலும், காணப்பட்ட நற்குணம் மங்கலத்திற்குரியதாம் ஆதலானுமென்க. (32)

நெடுநாட் பாவித்த மந்திரம் மங்கலத்தின் பொருட்டு (முத்தி யென்னும் ஒரு கன்னிகையைத் தான் மணத்தற் பொருட்டு) உரியதாமாறு எனக் கொள்க). (33)

(இவ்வாறாய பின்னர்) வித்தியாதிராயர், மக பண்டிதர், எனத் திருநாமம்பூண்ட அவ் விருவரும் கணபதியையும், வழிபடு தெய்வத்தையும் ஆராதித்துக்கொண்டு விரிவாய் வாக்குக் கொடுத்தலையும் மேற்கொண்டனர். நன்முகூர்த்த காலம் பற்றி கணிதநூற் கற்றாரை யாராய்தல் வேண்டும், என ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள். (34)

(பேசி முடித்து) கணிதநூல் விதித்த நல்லோரையில் நூன் முறைப்படி மணஞ் செய்வித்து விரும்பியவற்றைப் பெற்றோர்களாய், அவ்விருவரும் பெருங் களிப்பெய்தினர். ஆண்டு வந்துள்ள சுற்றவருக்கங்களும் பெருங்களிப்புற்றனர். பல சொல்வதிலென்னை? எல்லாச் சுற்றத்தார்களுங் களிப் படைந்தார்களென்க. (35)

நல்லாடை யுடுத்தியவர்களும், அழகிய பற்களமைந்த வர்களும், சிறந்த அணியுடையவர்களும், மொட்டவிழ்ந்த தாமரை மலரையொத்த முகமுள்ளார்களும், நாணத்தால் ஒருவர் முகத்தை யொருவர் நோக்குவதாற் களிப்படைந்தோர் களுமான அந்த மணமகன் மணமகளிருவரும், தேவர்கள் (அரன் உமைகள்) போன்று எப்போதும் ஒப்பற்ற பெருங் களிப்பெய்தினர். (36)

மணம் முடிந்தபின்னர், வேள்வி யாற்றுவதில் வல்லு நர்களால் அந்தணர்க்கிறைவர் (சிவகுரு அவ்வப் பயன்றரும் உத்தரகிரியைகளை யுடைய வேள்விகள் எல்லாவற்றையுஞ் செய்ய, (முத்) தீ வளர்த்தனர். முறையாய்த் தீ வளர்க்க

தோன் விதித்த உத்தர வேள்விகளிலும் அதிகாரியலன், ஆதலினென்க. (37)

பெரும் பொருளால் முடித்தற்குரிய பலவகை வேள்விகளால் விண்ணுலக முதலியவைகளை வெற்றி கொள்ள விரும்பிய சிவகுரு வேள்விகளை யாற்றினர். அவ்வேள்விகளால், வேள்வியில் விருப்புற்று நாடோறும் வேள்விச் சேடங்கொண்டு உண்ணப்பட்ட தேவர்களும் (மறக்கொணுத) அமிருதத்தையும் மறந்து விட்டார்கள். (ஈண்டுத் துருவாசர் சாபத்தால், தேவர்களின் சம்பத்துக்கள் அழிந்த விடத்து, பாற்கடல் கடைந்து அமிர்தமுண்டாகும் முதற் கணப்போது வரை, அமிர்த முண்ணல் நீங்கியும் அமிருதத்தின் நினைவு மாத்திர மிருந்தது. இப்போதோ, அதுவு மில்லாது ஒழிந்த தெனக் கொள்ளக் கிடந்தமை காண்க). (38)

பிதிர்க்களையும், தேவர்களையும், மனிதர்களையும், அவரவர்கள் விழைந்த பொருட்களால் மிகக் களிப்பிப்பவரும், சிறந்த கல்வி முதலியவைகளென்னுந் திரவியங்களுள்ள நன்மனத்தவர்கள் (தேவர்கள், அறிஞர்கள்) என்னும் புட்பங்களால் நிறையப் பெற்றவரும், ஆகிய அச் சிவகுருவை (அக்கால் கடலுலகி லுள்ளார்கள்) கற்பகத்தரு வென்றே கருதினர்கள். (39)

ஒவ்வொரு பகலினும் பரோபகாரத்தை ஓர் விரதமாகக் கொண்டவர்களும், நியமத்துடன் மறை யோதுபவர்களும், பெரியோர்களும், சுருதி, மிருதி, கூறிய கருமங்களைச் செய்பவர்களுமான அந்த மனைவியும் புருடர்களும், பகல் (பதினைந்து) திங்கள் (பன்னிரண்டு) என்பவை கொண்ட (இருபத்தேழு) வருடங்களைக் கழித்தார்கள். (40)

இங்ஙனங் கழித்த விடத்தும், வடிவத்துள், (அழகிய வடிவுடையார்களுள்) மன்மதனும், பொறுமையிற் பூமியும், கல்வியிற் சிறந்தாரும், தனிகருள் தலைவரும், செருக்குத் தோற்றுதவரும், வினயமுடையாரும், எப்போதும் பணிவுடையாருமாகிய அச்சிவகுரு, புத்திரன் முகத்தைக் காணப் பெற்றிலர் (புத்திரப்பேறற்றவராயின ரென்க). (41)

## சிவகுரு மகப்பேறு விரும்பல்

கோக்கள், தனங்கள், பலவகைப் பைங்கூழ்கள் கொண்ட விளை நிலங்கள், வியப்பாகிய வீடுகள், இனிய சுற்றத்தார்கள், என்பவைகளோடு கூடியவன் யான் என்று உண்டாகும் மதிப்புக்களனைத்தும், புத்திரப்பேறொன்று மாத்திரமின்றிய இச் சிவகுருவை, பெரு விருப்புண்டாக்க மாட்டாதனவாயின (42)

எமக்கு இவ்வாண்டிற், புத்திரன் தோன்றவில்லையாகில், மேல்வருடத்தில் உறுதியா யுண்டாகும், அவ்வாண்டிலு மின்றெனிலோ, அதினின்று மேல்வரு மாண்டி லுண்டாகும் என்றிவ்வண்ணமாகவே, அச்சிவகுரு மனோ கற்பனை செய்து கொண்டே அதிக காலங் கடத்தி விட்டனர். (43)

(பின்னர்) மனக்கிலேச மடைந்தவரும், எஞ்சிய காரியங்களைச் செய்பவருமாகிய சிவகுரு (ஒருபோது மனையாளை நோக்கி) அழகுடையாளே, இனிமேல் நாம் செய்யத்தக்க காரியம் யாது? சிறந்த குலத்திற் செனித்தவளே, உறுப்புக்கள் வலிவுடனிருக்கத்தக்க ஆயுளில் பாதி கழிந்தது; (இதுகாறும்) இவ்வுலகில், அரிதாய்ப் பார்க்கத்தக்கது, என, எல்லா மனிதர்களு மெடுத்தோதும் புத்திரனது முகம் பார்க்கப்படவே யில்லை என, மனைவிக்குக் கூறினர். (44)

(அன்றியும்) அன்பு மிக்காளே, நாமிருவரும் மகவைக் கண்டவர்களாய், மரண மடையின் பின்னரும் நமக்கு நிலமாம். இத்தகைய புத்திரப் பேற்றிற்குப் பலவகை உபாயங்களைத் தேடிப் பார்த்துக்கொண்டே யிருந்தும், புத்திரனைக் கண்டிலேன்; வித்தியாதிராயர் வயிற்றில் யான் பிறந்ததும் பயனற்றதே யானது. (45)

அன்றியும், திருவுடையாளே, புத்திரப்பேறற்ற நம்மிருவரையும் உலகின்கண் எடுத்துப் பேசத் தக்கோர்கள் யாவர்கள்; (யாவர்களு மிலர்கள்) புத்திர பௌத்திர முறைமைகளிலிருந்து நாமிருவரும் பிரசித்தி யடைவதெவ்வாறு; உலகில், தளிர் காலத்திற் பழுத்திருக்குந் தருவை நீக்கிவிட்டு, பூ, காய்களின்றிய தருவை எடுத்துப் புகழார்கள். (ஈண்டு நீ யோர் உபாயங் கூறுவாயாக என்பது கருத்து). (46)

இவ்வண்ணந் தனது கணவன் கூறியபோது, இனிய நாத, இயங்கு திணைப்பொருளுருவாகிய முக்கண்ணனென்னுங் கற்பகத் தருவைத் தழுவுவோம். அதை வழிபடுதலால் பரசிவ சம்பந்தமாகிய நிலைத்த பயனுண்டாகும், எனச் சிவகுருவின் மனையார் சொல்லினர். (47)

இதனால் அன்பர்கள் விரும்பிய அரும் பொருள் அளிப்பதில் கற்பகத்தருவாயுள்ள மாதேவனைத் தவிர்த்து, எல்லாப் பொருளுங் கை கூடுதற்பொருட்டு வேறெந்தத் தேவதையை வழிபடுவோம், (பொருளெலாங் கைகூடுதற்கு அருள் வள்ளலாம் ஈசனே வல்லுநன் என்க) அதில்; "பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கட லீந்த பிரான்," என மாபாரதங் கூறும் உபமந்நியு முனிவரின் மகிமையே சிறந்த பிரமாணமாம். தேவதைகளின் திரு

வுருவத்திற் சடத்தன்மையில்லை (மற்றோ, அறிவாகி யெங் குந் நீக்கமற நிறைந்துநின்ற தெய்வத்தன்மையை யுணராத மனிதரிடத்திலேயே சடத்தன்மை யுளதாம்). (48)

## சிவகுரு, புத்திரப்பேற்றின் பொருட்டுத் தவமாற்றல்

சிவகுரு, அவருடைய மனைக்கருகிலுள்ள நதியில் நீராடிக் கிழங்கருந்துவோராய் முன்னர்ச் சில தினங்கள் பரசிவனை வழிபட்டு வந்தனர். அதன்பின் அவர், சிவன் திருவடியிணைகளென்னுந் தாமரை மலரில் வண்டாயிருந்து உபாசித்தனர். (சிவனது திருவடிக்கமலத் தேனுண்பதே யன்றிக் கிழங்கு, காய், கனி, யருந்துதலு மொழிந்து கடுந் தவத்தால் உபாசித்தனர் என்பது பொருள்). (49)

அவ்வாறநுட்டித்த சிவகுருவின் மனைவியாரும், நிருமலமாகிய நியத தவத்தால் (உடற்ருபத்தால்) நாடோறும் நல்லுடம்பை வருத்திக்கொண்டு இடபாசல க்ஷேத்திரத்தி லெழுந்தருளிய சுயம்பு மூர்த்தியை யாராதித்து வந்தனர். (இவ்வாறே) அவ்விருவர்கட்குந் தவத்தினுற் பலநாட் கழிந் தன. (50)

அதன்பின்னர், கருணுபரவசராகிய பரசிவன், நித்திரை கொண்ட சிவகுருவை நேரேயடைந்து சிவகுருவே, நீ விரும்பிய தென்னை, (யாதுமின்றெனிலோ) விருப்பிலார்க்குத் தவமெற்றுக்கு? (தவத்தாலேயே, விருப்புள்ளானென்று அநுமிக்கப்படுகின்ருய்) என வினவியருளவே, அவ் வந்தணராகிய சிவகுருவானவர் 'புத்திர வேட்கை' யென்றனர். (51)

பரசிவன், அந்தண, யாங் கூறுவதை யுண்மை யென் றுணர்வாயாக. "எல்லா முணர்தற் றன்மை முதலிய குணங்க ளனைத்தோடுங் கூடியதோர் மகவை யளிக்கவோ,

அல்லது அதற்கு மாறுந் தன்மையுள்ள (சிற்றறிவுத்தன்மை முதலிய) பல குணங்களையும், நீண்ட வாயுளையுமுடைய பல குழந்தைகளை நினக்களிக்கவோ, என்று, அச் சிவகுருவை வினவியருளினர். அதற்குச் சிவகுரு (கீழ்வருமாறு) மறுமொழி கூறினர். (52)

'விரிந்த புகழையும், பல குணங்களையு முடைய குழந்தையொன்றே எனக்குளதாகுக' வென்றனர். பரசிவனும் "வேண்டியவாறே விமல பதவியையுடைய வியப்பாகியதோர் குழந்தையைத் தந்தேன்," (இனி இதன்பொருட்டு) தவமியற்ற வேண்டா. புத்திரோற்பத்தியால் நிறைவையடைவாயாக, மனையாளுடன் மனைக்குச் செல்வாயாக, என்றருளிச் செய்தனர். (53)

இவ்வண்ணம் பரசிவ னருளியதைக் கேட்டு, அவ்வந்தணச் சிரேட்டராகிய சிவகுரு துயில் நீங்கினர். துயினீங்கிய தோஷமற்ற அச் சிவகுரு தனது மனைவிக்குக் கனவிற் கண்டதைக் கூறினர். பெண்மணியாகிய இவரது மனைவியாரும் (சிவனருளியதைக் கேட்டு) உண்மையில் நமக்கு மகானாகியதோர் குழந்தை யுண்டாகும் (ஐயமில்லை) என்றனர். (54)

பின்னர், கனவிற் கண்டதை நியதமாய் நினைத்துக்கொண்டேயுள்ள பரசிவன், வழிபாட்டி லொருப்பட்ட சிவகுரு, அவரது மனைவிகளிருவரும் தன் மனைக்கேகி, தக்ஷிணை மிகுதியுடன் அன்னமளிப்பதால் அந்தணர் கூட்டங்கட்கு விருந்தாற்றி, அவர் கூறின மங்கல மொழிகளாற் புனிதர்களாய்ப் பெருங்களிப் பெய்தினர். (55)

(அந்தணர்கட்கு விருந்து செய்த) அந்நாளில் அந்தணர்களருந்தி முடிந்தபோது அவ்வந்தணர்கள் (உச்சிட்ட

மேற்றுக் கொள்வாயாக என்று) கூறியதை யுடன்பட்டுக் கொண்டு, சிவகுருவும் பரசிவனொளிகலந்த சேடான்னத்தை யருந்தினர். தனது கணவன் தாட்கமலத்தில் வண்டாயுள்ள (அவர் மனைவியாகிய) அவ்வம்மையாரும் அருந்தினர். (56)

## சங்கர பகவற்பாத ரவதாரம்

(அன்று தொட்டே) இம்மான் கண்ணார் (சிவகுரு மனைவியார், உமாபதியை யுள்ளிற்கொண்ட கருப்பந் தாங்கினர். அக்கருப்பமும் மிக வளர்ந்துகொண்டே வந்தது. பின்னர், மெல்ல, மெல்ல, ஒளியின் மிகுதிப்பாட்டால் பரந்த வுலகத்தின் பார்வைத் தோடத்தை முழுதும் நீக்கும் உச்சிப் பொழுதின் பருதியின் உக்கிர கிரணத்தை யொத்து உடம்பு பெருங் காந்தியைப் பெற்றது. (57)

(அதன் பின்னர்) கருப்ப பாரத்தைத் தாங்கிய அந்தப் பகவதி யம்மையார் சிறிது தளர்ந்த நடையுடையா ராயினர். புவனங்கள் பதினான்கையுந் தாங்கப்பட்டவரும், தரை, நீர், முதலியவைகளை (மதி, பருதி, யெரி, நீர், கால், வான் அவனி இயமானன் என்பவைகளை) அட்ட மூர்த்தங்களாகக் கொண்டவருமாகிய பரசிவனை த் (கருப்பத்தில்) தாங்கிக்கொண்டுள்ள அவ்வம்மையாருக்கு இஃதோர் வியப்பாமோ? (58)

இப்பரசிவன் எல்லாத் தேகங்களிலும் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பினும் (அவ்வம்மையாரது) இவ்வுடம்பின் கண், பெருந் துன்பமொன்றையுந் தோற்றுவித்திலன். என்னை? அளவுகடந்த ஒளியால் இவ்வம்மையாரென்னுஞ் சத்தியி னுடம்பில் (முன்னமே) நிறைந்துள்ள இக் காரணத்தாலென்க. (59)

நறுமணமலிந்த சிறு மலர்களும் இவ் வம்மையாருக்கு விருப்பை யுண்டாக்கமாட்டாதனவாயிற்று (நறுமணமும் மிகுந்த சிறு மலரையும் விரும்பினாரிலர் என்பதாம்) பளுவாயிருத்தலின் அணிகலன்களைப் பற்றிச் சொல்லற்பாலதென்னை கொலோ? (விரிப்பதிலென்னை?) எவ்வெவ் வணிகள் பாரமுடையனவோ, அவ்வவ்வற்றை யணிந்துகொள்வதிற் சோம்பலுடையாராயினர். (60)

சராரி, என்னுந் தீய பறவையானது பெரும்பான்மை முக்கியமாகிய தனதியற்கையை விடாமை, வெளிப்படையாமாறு, கருப்பிணிக்குரிய தீய மன வேட்கைகள் இடையறாது துன்புறுத்தின. (என்னை யெனிலோ?) கொணர்ந்து, கொணர்ந்து, கொடுத்தோரரிய பொருளையும் (வேண்டாமென) ஒதுக்கி, மற்றோர் பொருளை வேண்டுகின்றனர்; அவை வரினும் மறித்ததையும் விலக்கிவிட்டு மற்றோர் பொருளை அருந்துகின்றார் (விரும்புகின்றாரெனினுமமது). (61)

(இவ்வம்மையின்) மனக்கலக்கத் துன்பத்தைக் கேள்வியுற்ற சுற்றத்தார்கள். அவ்வம்மைக்குக் கிடைத்தற்கரியனவும், விலை மிகுந்தனவுமான அரிய பொருள்களைக் கொண்டு வந்தளிக்கக் களிப்போடவற்றினை யேற்றுக்கொண்டனர். அந்தோ! வருத்தம்! உண்மையிற் கருவுற்றிருத்தல், துன்ப காரணமே யென்க. (62)

(கவியின் கருத்து) அந்தோ! வருத்தம், என எம்மாற் கூறப்பட்ட இதுவோ, மனுட தருமத்தைத் தழுவியதேயாம். தத்துவ முணர்ந்தாரின் தகைமை மொழியோ, துன்பமனைத்தின் தொடர்புகளையும் ஒருங்கே நீக்கும் பரசிவனைக் கருவின்பாற் கொண்டதில் அவ் வம்மையாருக்கு அந்தோ! துன்பமுமுண்டாங் கொல்லோ! (உண்மையில்

அவ் வம்மையாருக்குச் சிறிதுந் துன்பமின் றென்பது பொருள்). (63)

அவ்வம்மையார் கண்படில், இயல்பாகவே வெண்ணிற முள்ளதோ ரிடபவாகனத்தில் ஏறி யிருந்ததாகத் தன்னைக் கண்டனர். மற்றும், வினயத்துடன் தம்பால் வந்தவர்களும், இசை பாடுவதிற் பெரிய வல்லுநர்களுமான, வித்தியாதரர், கந்தருவர், முதலியோர்கள் இனிதாய்ப் பாடுவதாகவுங் கண்டனர். (64)

மற்றும், வரமளித்தபோது சய, சய, வென்னு மொலியும் என்னைக் காத்தருள்வாயாக வென்னும் முழக்கமும், (இவ்வம்மையார் செவியிற்) கேட்டனர். கேட்டு அவர் உள்ளவாறே பெருவியப்புற்றூராய், நித்திரை விட்டெழுந்தனர். (எழுந்து) நோக்குங்கால் அவ்வொலி, கேட்கப்படவில்லை. (அவ்வொலியைக் காதாற் கேட்டும் எழுந்திலரெனினுமாம்). (65)

அன்றியும், மிகவழகிய மஞ்சத்தின் மீதேறுமிடத்தும், விளையாட்டாகப் பேசு மிடத்தும், ஏனையோர் (பேத வாதி)களை, விளையாட்டாகவே வென்று, சரசுவதியின் (அல்லது கல்வி வடிவ) அரியாசனத்தி லிருப்பதாகத் தம்மைக் கண்டனர். மேல்பேத வாதிகளை மறுப்பதோர் விளையாடல் மாத்திரமா மென்பது குறிப்பிட்டமை காண்க). 66)

அவ்வம்மையாருக்கு விடயம் பற்றிய செய்கைகளில் சத்துவகுண விருத்தியுள்ளாருக்கொப்ப, வைராக்கியச் செயல்கள், கருவின்பாலுள்ள குழந்தையினது வியப்பாகிய சரிதத்திற்கோர் அறிகுறியா யிருந்தன. (67)

அவ் வம்மையாரின் உரோமங்களென்னுங் கொடிகள், கொங்கைகளென்னு மலைகளிற் சுற்றிக்கொண்டிருக்கின்ற ஒளியாகிய நதியின் பெரிய பாசிகளாய் விளங்கின. அஃது இக்குழந்தைக்குப் பிரமனால் மிக்க முயலவோடு பண்ணி வைத்துள்ளதும் பெருமை வாய்ந்ததுமாகிய புதிதாயதோர் வேணுத் தண்டமாங்கொலோ? (இதனால் கருவின் கண்ணையே, அக் குழந்தை துறவியாமெனக் குறிக்கப்பட்டது. எதனாலெனின்? வேணுவென்னு முக்கோலின் கற்பனையாலென்க). (68)

மலர் மிசை யுதித்தோன், (சீவன் முத்தி, விதேக முத்தி யென்னும்) புதிய அமிருதங்கள் நிறைந்த குடங்களிரண்டையே, இவ் வம்மையாரின் இரு தனங்கள் வடிவங்களாகப் பாலுண்ணுதற் பொருட்டுப் படைத்தனன். (ஈண்டு உபநிடதங்களென்னும் பாற்கடல் கடைந்தெடுத்த பரமுத்தி அபர முத்தியாம் அமிருத மாதலின், புதியதெனப்பட்டது). (69)

இரண்டு தனங்களிலுமுள்ள, இரண்டு என்னு மெண்ணின் தன்மையையும், (இரு தனங்களுக்கு) இடையின் நடு வெளியையும் (பேதவாதிகளென்னு மாத்திமிகர் முதலிய மதத்தர்களையும்) கருப்பத்திலேயே அக்குழந்தை பெரியோர்களாற் பழிக்கத்தக்க (துவித மதத்)தையும் விரைவிற் பழித்து விட்டது. (ஈண்டு, இரண்டு தனங்களும் மிகப் பெருத்திருத்தலின் இரண்டுமொன்றாய் நெருங்கிய தென்றும். இடைவெளியில்லையென்றுங் கூறி அபேத சித்தியை, யும், பேத வெற்றியையுங் கற்பித்தமை காண்க). (70)

(இவ்வண்ணம் பத்துத் திங்கணிறைந்தவுடன்) இலக்கினத்திற் சுபக் கிரகங்கள் கூடி நிற்கவும், சுபக் கிரகங்கள்

நோக்கவும், சூரியன் தனது உச்சத் தானமாகிய மேடத்தி லும், செவ்வாய், தனது உச்சத்தானமாகிய மகரத்திலும், புதன், தனது, உச்சத்தானமாகிய துலாத்திலும், குரு,கேந் திரத்திலும், (நாலாமிட முதலியவைகளி லொன்றிலும்) இருக்கவு முள்ளதோர் நல்ல முகூர்த்தத்தில் சிவகுருவின் மனைவியார், மலைமகள், முருகக் கடவுளைப் பெற்றது போன்று, இனிதாக ஓர் ஆண் குழந்தையைப் பெற் றனர். (71)

சிவகுரு, குழந்தையைக் கண்டு இன்பக் கடலில் மூழ்கிக் கிடப்பவராயிருந்தும், நீராடி, ஆற்றலுக்கியைய, கூறப்பட்ட பிறந்த நாளின் கரும விதியைச் செய்ய, தனங்கள், கோக்கள், பூமிகள், (என்பவைகளை) சிறந்த அந்தணர்கட்கு (தான மீயப் பாத்திரமாகி யவர்கட்கு) ஈந்தனர். (72)

குழந்தை பிறந்த அந்நாளில், இயல்பாகவே ஒன்றற் கொன்று பகையுள்ள, மான், புலி, யானை, சிங்கம், பாம்பு, எலி, முதலிய எண்ணற்ற மிருகப் பிராணிகளின் கூட்டங் கள், தம்முட் பகை நீங்கிப் பிரியமேலிட்டு ஒன்றற்கொன்று பொறுமையோடு உடம்பி னரிப்பைப் போக்கத்தக்க உராய் தலைச் (நக்குதல் முதலியவைகளை) செய்துகொண்டன. (73)

(மற்றும் அந்நாளில்) தருக்களுங் கொடிகளும், பூ, கனி முதலியவற்றைக் கொடுத்தன. எல்லா நதி நீர்களும் தெளிந்தன. தடாகங்கள் தமது விகாரமான நீர்களைச் சுரந்தன, மலைக் கூட்டங்களிலிருந்து இயல்பாகவே அருவிக ளிழிந்தன. (74)

(அஃதன்றியும்) அத்துவித வாதிகளுக்கு மாறான மதங் களைத் தழுவி யவர்களின், கையிலிருந்த பெரிய சாத்திரப்

புத்தகங்கள் காரணமின்றியே மேலிருந்து கை நழுவிக் கீழே விழுந்தன. மறைமுடிகள் சிறப்பாய் விளங்கின. வியாச முனிவரின் உள்ளக் கமலம் மலர்ந்தது. இயல்பாகவே மறை முடிப் புத்தகங்களின் பரிவட்டக் கட்டவிழ்ந்துகொண்டு எழுத்துக்கள் வெளிப்படையாய்க் காணப்பட்டன. (ஈண்டு வியாச முனிவரின் உள்ளக் கமலம் மலர்ந்ததென்றதோ, வியாச முனிவரின் உள்ள மென்னும் நதியிற் பூத்த (பிரம) சூத்திரமென்னுங் கமல மொக்குக்கள் மலர்ந்தன என்றதாம்). (75)

(அது தவிர்த்தும்) திக்குக்களனைத்தும் பெருங் களிப் படைந்தன; காற்றுக்கள் நறுமணங்களுடன் கலந்தன; தீக்கள் வலஞ்சுழித் தெழுவதான பற்பல சுவாலைகளென்னுந் தீச்சுடர்களால் பேரொளி யுடையன வாயின. (76)

(மற்று மந்நாளில்) பெரியோர்களின் மனத்திற் கினிய நறுமணமுடையனவும், அவர்களுடைய நல்லுள்ள மொத்து நிருமலமானவைகளும், மங்கலங் கொடுப்பனவும், தேவகணங்களா லேவப்பட்டவைகளுமான, மலர் மழைகள் பொழிந்தன. (77)

(அஃதன்றியும்) உலகுக்கோர் கண்ணாகிய இரவியால் உலகங்கள் மூன்றும் விளங்குவது போலும், மா மேருமலை யால், பார் ஓங்கி விளங்குவதொப்பவும், வினயத்தாற் கல்வி விளங்குவதற் கேற்கவும், அத்தன்மைய இரவி முத லியவைகளின் ஒளிகளினுஞ் சிறந்த வொளியோடு கூடிய அக் குழந்தையால் அவ்வம்மையார் விளங்கினார். (78)

(இவ்வண்ணங் குழந்தையை மேன்மை பாராட்டுவது மன்றி அக்குழந்தையின்) சாதகத்தைப் பார்க்குமாறு ஏவப்

பட்ட கணித நூலுணர்ந்த அந்தணர்கள், குழந்தையின் சென்ம (இலக்கன)த்தை (நன்கு கருதிப்) பார்த்து; (இக் குழந்தை) எல்லா முணர்வதுவே யாகும்; தானும்பல சுதந் தர நூற்களியற்றும்; மற்றும் பிருகற்பதியையும் வெற்றி கொள்ளும்; என்று கூறினார்கள். (79)

மற்றும், இக்குழந்தை தரையுள்ள வரையிலுந் தனது கீர்த்தியை, இவ்வுலகின்கண் நன்குண்டாக்கும். பலவாறு விரிக்கிலென்? நினது குழந்தை பரிபூரண பரமான் மாவேயாம் என்றார்கள். சிவகுருவால் (குழந்தையின்) ஆயுள் வினவப்படா தொழிந்தது; கணிதநூற் கற்ற அவர்களும் அதைக் கூறினார்களல்லர். என்னை? பெரும் பான்மை நல்லமறிந்தார்கள் கேட்டைச் சொல்லார்கள், (வருந் தீமை சொல்ற்பாலதன்று) என்னு மான்றோர் வழக்குண்மையி னென்க. (80)

பின்னர்ச் சிவகுருவின் குலத்தார்கள், சுற்றத்தார்கள், நட்பாளர்கள், அன்பர்கள், என்பவர்களின் மனைவியர்கள் சிறிதோர் பொருளைக் கொணர்ந்தோர்களாய் வந்து பிரசவ அறையிலுள்ள, தாமரை மலரொத்த அழகிய முகத்தை யுடைய அக்குழந்தையை நோக்கி, பெருவேனிற் காலத்தில் வாட்டமுற்றோர்கள் கலைமதியைக் கண்டு களிப்புறுமாறு களிப்பெய்தினார்கள். (81)

பிரசவ அறை, விளக்கையே காணவில்லை. என்னை? இரவில் அக்குழந்தையி னொளியினாலேயே விளங்கப் பட்டதாமாதலின். அக்குழந்தையுள்ள வீடு விளக்கில்லா மலே இருள் நீங்கியதாயிற்று. இச்செய்கை பிராணிக ளெல்லாவற்றிற்குமே பெருவியப்பை யுண்டாக்கிற்று. (82)

இக் குழந்தை, காண்பவர்கட்கு மிகுந்த சம் = என்னுஞ் சுகத்தைச் செய்தலின் இதின் தந்தையார் இதற்கு உண்மைப் பொருள்தரும் 'சங்கரர்', எனத் திருநாமஞ் சூட்டினர். அல்லது உண்மையிற் சங்கரனுடைய (பரசிவனது) அருளாற் றோன்றினமையின் சங்கரர், எனத்திருநாமஞ் சூட்டின ரென்பதாம். (83)

அருமை மிக்க அக் குழந்தை, எல்லா முணருந்தன்மையையும், எல்லாம் வல்லதாந் தன்மையையும், உடையதாயிருந்தும், மனிதனுந் தன்மையைத் தழுவிக் குழந்தைக்கொத்த செய்கை யுளதாயிருந்தது. (அஃதியா தெனின்?) மெல்ல, மெல்ல, இக்குழந்தை, நகைக்கத் தொடங்கிற்று, பின்னர், கமலம்போன்ற திருக்கரங்களாற் செல்லவும், வயிற்றால் நகரவும், வலி யுடையதாயிற்று. (84)

பின்னர் இக்குழந்தை தொட்டிலின் மீது தூங்குங்கால் பெரியோர்களின் உள்ளங் களிப்புற்றது. தொட்டிலிற் கட்டியுள்ள மணி மஞ்சரியை இக் குழந்தை நோக்குங்கால் அம்ம! அறிஞர்களுடைய மனங்கள் தெளிவாயின (அல்லது பேதவாதிகளின் முகங்கள் கலங்கின). (85)

அழகிய மஞ்சத்தின் மீதுள்ளதோரரிய படுக்கையைக் கால்களிரண்டாலு மிக்குழந்தை யுதைத்தது. அஃது அக்கணத்திலேயே பேத வாதிகளுட் பெரியோர்களின் மனத்தின் கற்பனைப் பெருக்கங்க ளனைத்தையும் நூற்றுக்கணக்கான வகையிற் கலக்கினது. (86)

அக்குழந்தை, இரண்டோ ரெழுத்துக்களைச் சொல்லுங்கால், துவித வாதிகளான பெரும் வீரர்கள் பேச்சற்றுவிட்டார்கள். பின்னர், திருவடிக் கமலங்களாற் செல்லும்

போது, அப்பேதவாதிகளின் அப்போதைய நிலைமைகளும் யாண்டோ வோர் திசைகளிலோடின (மறைந்தன வென்பதுமது). (87)

அக் குழந்தை (வார்த்தை) சொல்லவும், செல்லவுந் தொடங்கிய பின்னர், அவ்விரு செயல்களில் முதலாவது செயலால் (பேச்சால்) குயிற் கூட்டங்கள் குரலின் இனிமை கெடப் பெற்றன. இரண்டாஞ் செயலால் (நடையால்) மயிற்கூட்டங்கள் நடை யினிமை கெடப்பெற்றன. (ஈண்டு இக்குழந்தையின் பேச்சோ, குயிற் குரலினும் மேலாகவும், நடையோ, மயிலின் நடையினும் மேலாகவும் இருந்ததென்பது கருத்து). (88)

அம்புலியை யொத்த அக்குழந்தை, தனது திருவடியி னொளியால் இரத்தினத் தருவி னிளந்தளிர் பரப்பினாற் போன்றும், குங்குமப் பூவின் வெண்மை கலந்த சிவப்பு நிறம் போன்றும், இத்தரை யாகுமாறு செய்துகொண்டு மெல்ல, மெல்ல, நடந்தது. (89)

(அக்குழந்தைக்கு) தலையிலோர் தண் மதியின் குறியும், நுதலிலோர் விழியின் குறியும், கைகளிரண்டிலு முச்சூலத்தின் குறியும், உடம்பு படிக நிறமாயும், இருப்பது கண்டு அறிஞர்கள் அக் குழந்தையைச் சிவமென்றே கருதினார்கள். (90)

இராச நீதி யுணர்ந்த வல்லவர்களின் இராச்சிய இலக்குமி போன்றும், கவலையே யற்ற புலவர்களின் கல்வியே போன்றும், கார் காலக் கலைமதியின் நிலாவை நிகர்த்தும், தந்தையார் களிப்புற, அக் குழந்தையின் திருமேனி வளர்ந்தது. (91)

மார்பில் நாகம் போன்றும், சரணத்திற் சாமரம் போன்றும், இரண்டு திருக்கரங்களிலும், சக்கரம், கதை, வில், உடுக்கு, என்னு மிவைகளைப் போலவும், சிரசில் திரிசூலம் போலுங் குறிகளமைந்த, அவரது வியப்புற்ற அழகிய திருமேனியை, அங்குள்ள மனிதர் குழாங்கள் கண்ணிமையாது நோக்கி, இரேகையின் பொருட்டு வருணக்குறியிட்ட சித்திரத்தெழுதியதோர் பிரதிமை யென வெண்ணினார்கள். (92)

முதலாம் படைப்பு (சநகாதியின் சிருட்டி) முடியும்போதும், நன்னெறி கெடும்போதும், துறக்க மடைதல் அரிதாம்போதும், முத்தி பெறுதல் முடியாதபோதும், உயிர் வருக்கங்கள் இயல்பாகவே தோடமுற்றபோதும், உலகின் தலைவர்கள் படைப்பில் பெருந் தடையுள்ளார்களான விடத்தும், சங்கர பகவற்பாதரின் திருமேனி கொண்டு சங்கரனே தரையிலவதரித்தருளினன். (93)

இவ்வாறு, வித்தியாரணிய முனிவ ரியற்றிய
சங்கர திக்குவிசயச் சுருக்கத்தில், சங்கர பகவத்பாதரின்
அவதார சரிதத்தை மேற்கொண்ட
இரண்டாவது சருக்கம்

முற்றும்.

# மூன்றுவது சருக்கம்

---

## தேவதைகளின் அவதார விசேடங் கூறத் தொடங்கல்

இவ் வண்ணம், இளமதியை முடிமே லணிந்த இறைவன், சங்கர பகவத்பாதர், என்னுமொரு குழந்தையாகிய போது, தேவர்களுட் சிறந்தோர்கள், ஆறு சாத்திரங் கற்றதோர் அரிய நல்லார் குலத்தில் மண்ணிடத்து அவதரித்தார்கள். (1)

## பத்மபாதரின் அவதாரம்

(அவர்களுள், பரசிவனது திருவடிக்கோர் பேரன்பன் ஆதலின், முன்னர்) திருமால் (இலக்குமி) கொழுநன், எல்லாக் கலேகட்கு மிரு நிதியா யுள்ள விமலர் என்னும் அந்தணரிடத்து அவதரித்தனன். அவனேயே, உலகில் அரிய பெரிய மத வாதிகளின் புகழைக் கேடடையுமாறு செய்த 'பத்மபாதர்' என்பார்கள். (2)

## அத்தாமலகரின் அவதாரம்

வாயு பகவானும், காலேத் தீவேட்டல் முதலியவைகளால் விரிந்த புகழ் மண்டலத்திற் (இரவிக்) கொப்பாகிய 'பிரபாகரர்' என்னுந் திருநாமங் கொண்ட வந்தணர் பாலவதரித்தனன். இவரே (மற்போரில்) கையாற் கழுத்தைப் பற்றிக்கொண்டது போல, பேத வாதிகளேக் கண்ட மடைத்துப் போமாறு (பேதவாதப் பேச்சே பேசா வண்ணம்) செய்த 'அத்தாமலகர்' எனத் திருநாமம் பூண்டோர் ஆவர். (3)

### தோடகரின் அவதாரம்

பத்துப் பிராணக் கூறு கொண்டதி (சூத்திரான்ம வடிவ வாயுவி) லிருந்து தோடகர் என்னும் அத் திரு நாமங்கொண்டார் அவதரித்தனர். எவரது, கீர்த்தி யென்னு மோர் கடலினின்று இத்தரை, கரையேற்றப் பட்டதாய் விளங்குகின்றதோ, பெரும் வாதிகளின் அரும் பேச்சு முறைகள் எவராற் கலக்கப்பட்டதோ, (அவரென்க). (4)

கல்லைத் தின்போரின் புதல்வர், (நந்திகேசுரர்) சங்கர பகவற் பாதரது மாணுக்க ரொருவராகிய உதங்கர், எனத் திருநாமந் தாங்கியவரா யவதரித்தனர், இவரையே, சமய வாதப் பெருக்குக் களை மறுத்ததா லுண்டாய புகழுடையா ரென வுலகிற் கூறுகின்றார்கள். சிலாவிருத்தி யென்னும் ஐய மேற்போராகிய சிலாதரர் என்பதோர் அந்தணர் பால் கூறிப் போந்த அத்தாமலகர் அவதரித்தனர். இதில் அவ் வத்தாமலகர் முன் விருத்தத்திற் கூறப்பட்டுள்ளார் ஆதலின் ஈண்டுங் கூறியது, கூறியது கூற லென்னுங் குற்றமா மாயி னும், மேல் வருஞ் சங்கரபகவத் பாதரது திருவடியை யடை ந்து இறைஞ்சுவதில் அநுகூலப்படுமாதலின், இயையுபு பற்றி, அத்தாமலகருக்கே விசேடண மாக்கிக் கொள்க. உதங்க ரென்னுமோர் சீடர் விளக்க மின்மையின், என, இதற்குரை கூறினோர் கொண்ட கருத்துங் கொள்ளற் பாலதா மென்பது காண்க). (5)

### சுரேசுரரின் அவதாரம்

பிரமன், மண்டன பண்டிதர் என்னுந் திருநாம முடையவராய் அவதரித்தனன். அருணன், (கருடனுக்கு மூத்தோன் அல்லது சூரியன்) சனந்தனர் என்னுந் திருநாமம் பெற்றோனாய் அவதரித்தனன். வருணன்,

சிற்சுகாசாரியர் என அவதரித்தனன். கூறிப் போந்த பத்மபாதர் என்னுஞ் சனந்தனர் திருமாலவதார மெனப் பட்டனர். இப்போதோ, அருணனின் அவதாரமெனச் சொல்லப்பட்டார். ஆதலின் முன்னுக்குப் பின் விரோதங் காணக் கிடக்கின்றதாமாயினும், மேல் வரும் எட்டாம் விருத்த (சுலோக)த்தில் சிலருடைய மதத்தைத் தழுவி மண்டனமிசிரர், ஆனந்தகிரி, என்னுமிவர்களை, பிருகற்பதி, நந்திகளின் அவதாரமெனக் கூறுவது போன்றே சுரேசுரருக்குப் பிரமன் முதலியோர்களது அவதாரர்களெனக் கோடலும், முற்கூறிய திருமாலின் அவதாரமே சனந்தனர்க்கு முக்கியமாமெனக் கொள்ளின் ஒரு வகையால் மாறிலாமை வருமென்பதும் யூகித்துணர்க. (6)

மற்றும், ஏனைய தேவர்களும், பிறர், தம்மில் மேம்பட்டிருக்கின் பொறாமையும், பிறருடைய விஷயத்தை வெளிப் படுத்துவதில் தோன்றுங் களிப்பில் விருப்பும், மிகுந் துள்ள, பிற மதத்தார்கட்குப் பகைவரென்னு மித்தன்மைய இறைவராகிய சங்கரபகவற்பாதரின், உலகனைத்துஞ் சரண் புகத் தக்க திருவடியை உள்ளவாறு வழிபடுதற் பொருட்டுச் சிறந்த அந்தணப் புதல்வர்களாய் மண்ணில் அவதரித் தார்கள். (7)

(முன்னர், பிரமாவின் அவதாரஞ் சுரேசுரர், எனவும், பிருகற்பதியின் அவதாரம் ஆனந்தகிரியெனவும், பிறர் மதந் தழுவிப் பேசுகின்றது இச்சுலோகம்) நாத்திக மதங் களின் தரிசன நூல்களை யியற்றுவதால் முனிவுற்ற பிரம னுடைய சாபத்தால் பிருகற்பதியே மண்டன பண்டிதர் எனத் திருநாமம் பூண்டு அவதரித்தனர். கருணையால், பர சிவனால் ஏவப்பட்ட நந்தீசர் ஆனந்தகிரி என்னுந் திரு நாமங் கொண்டு அவதரித்தனர் என்பர் சிலர். (8)

பாரதியா ரறியாதது உலகிலேயே யில்லை யென்க. ஆன தால், அவ் வம்மையார் எல்லாச் சனங்களுக்கும் ஓர் வியப்ப்பிற்கு இடமானார். (16)

## மண்டன பண்டிதர் உபய பாரதியாரை மணக்க விரும்பல்

(இவ்வாறிருக்குங்கால்) குணம் இதுவென வுணர்ந்த அந்தச் சரசுவதி யம்மையார், சிறந்த அந்தணர்களால் மண்டன பண்டித ரென்பவர் மிகுந்த நற்குண முடையவரென்றும் மனதிற் கினியவரென்றுங் கேள்விப்பட்டனர். மண்டன பண்டிதரும், சிறந்த அந்தணர்களால் சரசுவதி யம்மையாரி (உபய பாரதியாரி)ன் நற்குணங்களைக் கேள்விப்பட்டனர். (இவ்வாறு அவ்விருவர்களும்) ஒருவருக்கொருவரின் நற்குணங்களைக் கேள்விப்பட்டிருத்தலின் அவ்விருவர்கட்கும் ஒருவரை யொருவர் காணவேண்டு மெனுங் காதல் பெருகியது. (17)

இவ்வண்ணமாக, அவ்விருவருக்கும் ஒருவரை யொருவர் காணவேண்டுமென்னுங் காதல் பெருகிய வழி (மனத்தில்) எண்ணமு மிகுதியானமையால் (ஒருவர்க்கொருவர்) கனவிற் சென்றடைந்து கண்டு பேசிக்கொண்டார்கள். பின்னர், துயில் நீங்கிய விடத்து, இருவர்களும் பிரிவாற்றாமை யென்னுந் தீயாற் சுடப்பட்டவர்க ளானார்கள். (18)

ஒருவருக்கொருவர் (கனவிற்) கலந்து பேசிக்கொண்ட வார்த்தையால் மனது இழுக்கப்பட்டார்களாய், காணும் வேட்கையுள்ளவர்களா யிருந்தும் (ஒருவரை யொருவர்) காணப்பெற்றிலர். ஆதலால் தக்கவாறு அருந்தலும் விளையாடலும் அற்றோர்களாய் ஒருவரை யொருவர், நினைந்து, நினைந்து, உடம்பு மெலிவுறப் பெற்றனர். (19)

(இவ்வாறாய வழி) ஓர் போது (மண்டன பண்டிதர் உபய பாரதியார் என்னுமிந்த) இருவர்களின் தந்தையர்கள் அவர்களுடம்பு மெலிந்திருப்பதை நோக்கி, புத்திர, புதல்வியே, உங்களிருவரின் உடம்புகள் மெலிந்தன ; மனமுஞ் சோர்வு பட்டிருக்கின்றது ; (இதற்கு யாது காரணம் ?) உமது தேகத்தில் வியாதிக ளொன்றுங் காணேம் ; மற்று மோர் காரணமுங் கண்டிலோம். (20)

விரும்பிய செய்தலானும் விரும்பாத பற்று வருதலானும், உயிர்கட்குத் துன்பங்களுண்டாகின்றன. ஆயுங்கால், அவ்விரண்டுங் காணேம் ; காரணமின்றேல், காரியந் தோன்றாது. (21)

நுமக்கு, மணம் புரியுஞ் சமயமுங் கழியவில்லை ; பிறர்களால் வரும் மானக்கேடோ இல்லை ; வறுமையுமில்லை ; தாங்கற்குரிய குடும்பச் சுமையும் எமதிடத்திலிருக்கின்றது. தருணப் பருவத்தரான நுமக்குப் பீடை இங்கு யாது கொலோ ? (22)

மிகுந்த இத்தாபத்திற்கு அறியாமையுங் காரணமல்ல ; (பிறரா லுண்டாகுக) தோல்வியுங் காரணமாகா. என்னை ? கற்றோர் கழகத்தில் தருக்க முணர்ந்தோர்களால் அறிதற்கரிய வகையினும் முதன்மைப் பாடம் என்பது (நீவிர் பாடம் படிப்பதில் முதன்மையர் என்பது) வெளிப்படையாமாதலி னென்க. (அறிஞரவையின் கண் யாவரினுந் தலைமையனெனப் படுதலின் என்பது பொருள்). (23)

(அஃதொழிந்தும்) பிறப்புத் தொட்டே மறை விதித்த கருமப் பழக்கமே (ஒழுக்கமா) யிருக்கின்றது. விதிக்காத கரும வொழுக்கங் கனவிலு மில்லை. ஆதலின் நரக

முதலியன வருமென அச்சமுறத் தக்கது மன்று. நினது முகம், நாளுக்கு நாள் அழகிலாத்தாகின்றது. இஃதென்னை கொலோ? (24)

என்றிவ்வாறு, அவ்விருவரின் தந்தையர்களும் வற்புறுத்திக் கேட்டபோது அன்பு மிக்க தந்தையர்களிருவரும் பல நாளாகக் காரணஞ் சொல்லவேண்டுமென வினவி வந்தவிடத்து (ஒருதலையாகச் சொல்லவேண்டு மென்றெண்ணினர்) அவ்விருவருங் கீழ் வருமாறு சொல்லினர் :—

(மண்டன பண்டிதர் கூறல்) எந்தையீர், எனதுளத்திலிருப்பதைக் கூறலாமோ, கூறுவேனோ, என நாணமிகுகின்றதாயினும், உமது கட்டாயத்தாற் கழறுகின்றேன். (25)

பக்வ, சோணபத்திரை யென்னுங் கொழுநனுகிய நதிக் கரையில் வாழும் (விஷ்ணுமித்திர ரென்னுமோர்) அந்தணரின் புதல்வி, எல்லா முணருந் தன்மைக்கு (சருவக்ஞபதவிக்கு) இருப்பிடமானவ ளெனவும், அவளினும் மேலாகிய அழகுடையாளிலள், எனத்தக்க அரிய வடிவழகி யெனவும், சிறந்த வந்தணர்கள் பல்லோர்களாற் கேள்வியுற்றேனுதலின், அக் கன்னிகையையே மணம் புரியவேண்டுமென எனதுள்ள மிச்சிக்கின்றது. (ஈண்டு) நதியைக் கொழுநனென்றது, அக் கன்னிகையின் நீராடன் முதலிய இன்பந் துய்த்தலி னென்க). (26)

இவ்வாறு, வினய நலத்துடன் புதல்வனால் மறுமொழி கூறப்பெற்ற (மண்டன பண்டிதருடைய இம் மித்திரர் என்னுந்) தந்தையார், மணப் பெண்ணின் மணச்சடங்கில் மிக்க வல்லுநர்களான அந்தணரிருவரை (மண மகளிருக்கும் வீட்

டிற்கு) அனுப்பினர். அவ் விருவரும் (மணமகளின் தந்தையாராகிய) அந்தணரைக் காணவிரும்பிப் பல தேசங்களைக் கடந்து தமது காரியங் கைகூடுதற் பொருட்டு விஷ்ணு மித்திரரது மனையை யடைந்தார்கள். (27)

இஃதிங்ஙன மாய வழி, ஆண்டும் உபய பாரதியார் தமது தந்தையாருக்கு மறுமொழி கூறல் :—

எந்தையீர், அரசனென்ன வாழ்பவரும், சாத்திர மனைத்தையுந் தக்கவாறு கேட்டுணர்ந்தவருமாகிய, விசுவரூபர் எனத் திருநாமந் தாங்கினவர், மண்ணுலகிற் புகழ் பெற்றவரா யிருக்கின்றனராம். அவரது திருவடிப்பொடியின் பொருட்டு நாடோறு மிக்க காதலுற்றேன். அத்தூளியை யடையு மிதில் தாமுந் துணை புரிவீராக, (துணை செய்வீரேல் எனது காதல் பயனுள்ளதாம்) என்றனர். (28)

## மண்டன பண்டிதரின் மணம்

இவ்வாறு, புதல்வியின் மொழியைச் (மொழி யென்னு மமிழ்தை) செவித்துளை யென்னும் வாயால் அந்தணரிற் சிறந்த விஷ்ணுமித்திரராகிய அவரது தந்தையார் பருகிய (கேட்ட)போது, ஆடை யணிந்து கொண்டவர்களும், மிக் கொளி யுள்ள தடி யொன்றைக் கைக்கொண்டவர்களுமான இரண்டந்தணர்கள், மண மகனது மணச் சடங்கு ஆருதற் பொருட்டு அனுப்பப்பட்டவர்களாய் வந்தார்கள். (இல்லறத்தான், வழி நடப்போன், இருடிகள், தருமத்திற்குரிய ஆஷாடம் என்னும் வைணவ தண்டங் கொள்ளற் பாலது. கொண்டுழி, இவர்களின் தலைவராகிய விட்டுணு மித்திரரின் ஆன்றோ ரொழுக்கங் குறிப்பிட்டமை காண்க.) (29)

அவ்விட்டுணு மித்திரர், (மண்டன பண்டிதரின் றந்தையராகிய இமமித்திரரால் ஏவப்பட்ட) சிறந்த அவ் வந்தணர்க ளிருவரையும் வரவேற்று, பின்னர், மெல்லிய குரலால் வந்த காரணத்தை வினவினர், அதற்கவர்கள், விசுவ ரூபருடைய தந்தையாரின் சொல்லைப் பற்றிக் கன்னிகையை மணம் புரிவிப்பான் வேண்டி வந்துள்ளோம், என்றனர். (30)

மற்றும், குலம், வயது, செய்தி, தருமம், என்பவைகளால், இம மித்திரரின் புதல்வனுக் கொப்பானவள் உமது புதல்வியே யெனப் பலரா லுங் கேள்விப்பட்ட அவர், தமது புதல்வராகிய விசுவரூபருக்கு நினது கன்னிகையை மணஞ் செய்து கொடுக்க வேண்டுமென்று யாசிக்கின்றார். (இமமித்திரர் எம்மால் யாசிப்பித்தனர்.) ஆதலின் அந்த புருடரத்தினமும், அப் பெண்மணியும் பரசிவனருளாற் கூடுவாராகுக, என்றார்கள். (31)

(அதற்கு விஷ்ணுமித்திரர்) அந்தணர்காள், அந்த இமமித்திரர் கூறிய தெனக்கு இனியதே யாயினும், எமது மனைவியாரை வினவிக்கொண்டு, கூறியவாறு செய்கின்றேன். கன்னிகையை ஒரு கணவனுக் கீதல் இல்லாளுக் குட்பட்டதேயாம். இன்றெனிலோ, இவர்கள், (தெய்வ வசத்தால்) துன்பம் வந்துற்றபோது (எம்மைப்) பீடிப்போர்களாவார்கள், எனக் கூறிவிட்டு, பின்னர், இல்லாளை வினவினர் :—

நலமுடையாளே, புத்திரன் போன்று (கருதப்பட்டுள்ள) உனது புதல்வியை இனிது மண முடித்துக் கொள்ளும் மனத்தர்களாய் இவ்வந்தண ரிருவரும், காசுமீர தேசத்தரசன் வீட்டிலிருந்து வந்திருக்கின்றனர். அதில் யாம்

செயற்பாலது யாது? கன்னிகையைக் கொடுக்கலாமோ? அல்லது கூடாதோ? என இரண்டிலொன்றை யுறுதியாகக் கூறுவாயாக. கொடுப்போம் என்னிலோ, மீண்டும் மாறிக் கூறலாகாது. "ஒரு முறைக் கன்னியைக் கொடுக்கின்றேன் எனக் கூறவே, கன்னிகை கொடுத்தற்குரியளாவள்" என்னும் மிருதிவாக்கா லென்றனர். (32, 33)

மனையாள் கூறல்:—தங்கட்கு யான் சொல்லவேண்டுவதென்னை யுளது? அங்ஙனமாயினும், முதலாவது அவர்களிருக்கு மிடமோ, தூரம், அன்றியும் விளைவற் பாலதாய, வயது, குலம், பொது விருத்தி, தெரியவில்லை; பொருள், நற்குலம், சீலம், உடையவருக்குக் கன்னிகை கொடுக்கத் தக்காள், என்பது உலகத்தும், சாத்திரத்தும், அறியப்பட்டதே. (யான் சொலற்பால தொன்றுண்டோ, என்பது உட்கிடை.) (34)

(விட்டுணு மித்திரர் கூறல்:—தோஷமில்லாளே, இவ்வாறு, இஃதுனக்கு உறுதி சொல்லமுடியாததென்னை? குண்டின தேசத்தரசனாகிய பீஷ்மகன், எனப் பெயர் பூண்ட வேந்தன், எது குலத்தாரும், துவாரகைக்கிறைவரும், (ருக்மணி வரைந்த பத்திரத்தால் உள்ளில் காதலிருந்தும்) தீர்த்த யாத்திரைச் செய்யவேண்டுமென்னுங் கபடத்தாற் சுற்றித் திரிபவரும், (இத்தன்மையரென்) அறியப்படாதவருமாகிய கண்ணபிரானுக்கு ருக்மணியை மணமுடித்துக் கொடுத்தனன். (ஆதலின் உறுதி சொல்லல் கூடுமென்பது உட்கிடை). (35)

(அஃதன்றியும்) யாருடன், யாது சம்பந்தமோ, என்பதை நீ ஆராயற்க. என்னை? வெல்வதற்கரிய பௌத்தர்களை வென்றதுடன் வைதிக வரம்பைப் பெரு முயற்சியாற்

பட்டபாதர் நிலைநாட்டினு ரல்லவா? அப் பட்டபாதர், எவரைச் சீடனாக்கிக் கொண்டனரோ, அவரே மண்டனர் என்பவராவர் (ஆதலின் ஆராயற்க என்க). (36)

(மற்றும்) நகை யழகாளே, நமக்கு மருக னாகுபவரோ, வருணித்துக் கூறுவதற்கரியரே யாவர். சிறந்த இரு பிறப்பாளருக்குக் கல்வியே பொருளாம். வெளியிலுள்ள தனம் பொருளல்ல. என்னை? எல்லாத் திசைகளின் எல்லை வரையும் போற்றப்பட்டுத் தொடர்ந்து நிற்ப தெதுவோ, வேந்தன், கள்வன், விலைமாதர், கொள்ளையிட முடியாத தெதுவோ, அது கல்விப் பொருளா மாதலி னென்க. (37)

இல்லறத்தாளே, வெளியிலுள்ள அப் பொருள்கள் தேடல், காத்தல், கெடுதல்களால் எக்காலும் மனதைத் துன்புறுத்திக் கொண்டே யிருப்பனவாம். கள்ளர், மன்னர், சுற்றத்தார், என்பவர்களால் தனத்துக்குப் பயமுண்டு ஆதலின், கல்லானுக்கு இன்பெனுங் குணம் ஓர் போதுமே யில்லை. (38)

அஃதன்றியும், உலோப வயப்பட்டார் சிலர், தனத்தைத் தரையிற் புதைத்து வைக்கின்றார், (அதை) யநுபவிக்கின்றாரிலர். சிலர், (தரையிற் புதைத்த பொருளைத் துய்க்க வேண்டுங்கால்) அடைகின்றாரிலர். ஒருவர் மறைத்துள்ள பொருளை, மற்றொருவர் அபகரிக்கின்றார்கள், அப்பொருள் ஆற்றின் கரையிற் புதைக்கப்படின், ஆற்று நீரே யிழுத்துச் செல்கின்றது. (39)

ஆதலின், எவ் வகையானும் நம் புதல்வி வீட்டில் வைத்துக் கொள்ளத் தக்காளல்லள். மணஞ் செய்து கொடுக்கு முன்னரே, புதல்வி, பூப்படைவாளாயின் அப் பூப்பை

தாய தந்தையர்கள் காண்பார்கள், (காணிலோ) அந்தோ! அவர்கள் துக்க மலிந்த கோர நரகங்களில் வீழ்வர்கள், என்பது தரும சாத்திரத்துள்ளதாமாதலி னென்க. (40)

இக்கலக்க முண்டாவ தெற்றுக்கு? ஆகாதொழிக. என்னை? நமது புதல்வியையே வினவுவோம், அப்புத்திரி, யாரைக் கணவரென்பளோ, அவரே அவட்குக் கொழுந ராவர், என்று ஏற்பாடு செய்துகொண்டு, புத்திரி சொன் னதே விரும்புதற்குரிய காரியமா மென்று கொண்ட, தாய் தந்தையர்க ளிருவரும், அங்கிருந் தெழுந்து, புத்திரியி னருகிற் போயினர். (41)

(அவர்களருகிற் போய்) வடி வழகாளே, விசுவ ரூப ருடைய தந்தையாரால் கன்னிகை வேண்டுமென அந்தண ரிருவர் அநுப்பப்பட் டிருக்கின்றார்கள். அதற்குச் செயற் பாலது யாது? நீயே கூறுவாயாக, என்றனர். (அதைக் கேட்ட) அவ் வுபயபாரதியாருக்கு உண்டாகிய பெருங் களிப்பு (களிப்பின் பெருக்கு) உடம்படங்காது, மயிர்க்கூச் செறிதல் வாயிலாகத் ததும்பி வெளிப்பட்டது. (42)

(புத்திரிக்கு ஆனந்தப் பெருக்குந் ததும்பியவதனாலேயே அவ் வுபய பாரதியார் தாய் தந்தையர்கட்கு மறு மொழி கூறியதாயிற்று, தாய் தந்தையர்களும் அக்குறிப்பினாலேயே, வந்துள்ள அந்தண ரிருவருக்கும், (நீவிர் கூறியது) உண்மை யாக வுடன்பாடே யென்றனர். அதன் பின் உபய பாரதி யாரின் தாய் தந்தையரது மனையினின்று, மற்று மிரண்டு அந்தணர்களை யழைத்துக்கொண்டு அங்கு வந்திருந்த அவ்வந்தணப் பெரியார்க ளிருவருந் தம் மனைக் கேகினார் கள். (43)

(பின்னர்) கணித நூல்களில் நிபுணத் தன்மையும், அழகிய முகமு முள்ள உபயபாரதியார், "இற்றைக்குப் பதினைலாம் பகலென்னும் தசமியில் (இலக்கான நட்சத்திரம் முதலிய) சுப யோகமுடைய நல்லோரையில் மணம் நடக்கும்" என மணப் பத்திரிகை வரைந்து, அதனை விரித்துரைப்போ ரிடத்தனுப்பி வெளியிடுமாறு சொல்லினர். (44)

விதித்ததையும், விரும்பியதையும் நடத்துபவர்களும் களிப்புள்ள வுறுதி மனத்தர்களுமான அவ் விரண்டந்தணரும் அன்புடன் சென்று விசுவ ரூபரின் தந்தையாரைக் கண்டனர். பெரும்புகழ் கொண்ட அந்த இமமித்திரர், வந்த அவ் விருவர்களின் முகத்தை நோக்கிய வளவிலேயே, (முயர்ச்சித்து விரும்பியது முடிந்ததென்று) உறுதி கொண்டனர். (45)

(விட்டுணு மித்திர ரனுப்பின) ஏனைய அவ்வந்தணர்கள், தங் கையிலிருந்த மணப் பத்திரிகையை (இமமித்திரரின் கையிற்) கொடுத்தனர். அவருமப் பத்திரிகையை நோக்கிப் புன் முறுவல் கொண்டு இன்பக் கடலி லமிழ்ந்தனர் பின்னர், இந்த இமமித்திரர், வந்த அவ் வந்தணர்களை வணங்கிப் பெருந் திரவியங்களாற் பேணிப் பெறத்தக்க ஆடை முதலியவற்று லாராதித்தனர். (46)

வந்த அந்தணர்களால் அறிவுறுத்திய பூசுரரென்னுந் தந்தையா (இமமித்திர) ராற் சிறப்பித் துணர்த்தப்பட்ட அவ் விசுவ ரூபர் வந்து குழுமிய வுறவினர்களுக்குத் தக்கவாறு மணச் சடங்கிற் கநுகூல காரியங்களை (ஒவ்வொருவரும் ஒவ்வொன்றைத்) தனித் தனியே செய்யுமாறு கூறினர். (47)

சுப வேளை நூலுணர்ந்த அறிஞர்களான பல அன்பர்களால் வந்து தெரிவிக்கப்பட்ட சுப வேளையில் (தயிர், அறுகு முதலிய) மங்கலப் பொருளோடு (பார்த்தலோடு), அணிகளனைத்தையு மணிந்தவராய் வடி வழகுள்ள விசுவரூபர், சோணபத்திரை யென்னும் நதிக் கரையை யடைந்தனர். (48)

விட்டுணு மித்திரர், பலவித அலங்காரத்துடன் மருகன் வருவதைக் கேள்வியுற்று எழுந்து அன்புள்ள மருகரை நோக்கி உண்மையிற் களிப்பெய்தினர். பின்னர், பலவித வாத்திய முழக்கத்துடன் மருகனைத் தனது மனைக்கழைத்துச் சென்றனர். (49)

அழைத்து வந்த மருகனுக்கு ஆசன மளித்து இன்சொற் கூறி, மதுவுடன் கூடிய விலையற்ற பொற் கலசத்தில் அர்க்கிய மளித்துப் பின்னர், இப்புதல்வி, இக்கோக்கள் இம்மனைகள், இத்திரவியங்கள், என்னு மனைத்துந் தங்களுடையனவே, என்றனர். (50)

இப்பொழுதே யெங்கள் குலந் தூய்மையானது ; யாங்களும் ஆதரவு பெற்றவர்களானோம் ; மண வடிவத்தால் நற்தரிசன முண்டாகியது ; இன்றெனிலோ, பேரறிஞர்களில் மிக மேம்பட்ட தாங்களெங்கே! யானெங்கே! மனிதன் புண்ணிய கரும பரிபாகத்தால் நலம் பெறுகின்றான். (51)

(விரிப்பதி லென்னை ?) பகவ, இம்மனையின் கண் எவ்வெப்பொருள் விருப்பமோ அவை யனைத்தும் தெரிவிக்கத் தக்கன. தெரிவித்த வனைத்துந் தங்களுடையனவே என (விட்டுணு மித்திரர் கூறியதைக் கேட்டுப் பக்கத்தி லிருந்த இம் மித்திரர்) தம்மால் விரும்பிய எனது பொருளனைத்துந்

தம்முடையதே, என யானுங் கூறுவேன். இடையறாது பெரியார் சங்கத்தை விரும்பும் உம்மிடத்தில் இது (இவ்வணங் கூறுதல்) பொருத்த முடையதேயாம் என்றனர். (52)

இங்ஙனம், இன் சொல்லுடன் ஒருவருக்கொருவர் பேரன்புடன் பேசிக்கொண்டு இருவரும் பெருங்களிப் பெய்தினர் மணமகன் மணமகள், சம்பந்தமான ஏனைய இருதிறத்தார்களும், தம திச்சையாலாக்கிய விளையாட்டுகளாலும், விரும்பிய நற் கதைகளாலும், செயற்பால செய்தவர்களாய்ப் பெருங்களிப் பெய்தினார்கள். (53)

இயல் பாலமைந்த அழகிய நல் வடிவக்கோலமுள்ள மணமகன் மண மகளிருவரையுங் கண்டவர் மனதையுங் கண்களையும், மண மக்களினியற்கை யழகு கவர்ந்து கொண்டமையின், கண்டோர் அவர்களையே நோக்கிக் கொண்டிருப்பதொழித்து, அலங்கரிக்கமுடியாதவரானுரேனும், ஒருதலையாயலங்காரஞ் செயற் பாலதே யென்னுங் கருத்துடன் நல்லாடைக ளுடுத்தியுள்ள மண மக்களிருவரையும் காலங் கடந்து அணிகளா லலங்கரித்தார்கள். (அந்நுவயமாதற் பொருட்டுச் சில சொற்கள் வருவித் துரைக்கப்பட்டிருக்கின்றன இச்சுலோக மொழி பெயர்ப்பில்). (54)

மணமக்க ளிருவரின் ஒளியால், இரத்தினப் பூண் கூட்டங்களின் அழகு மலினப்பட்டமையின் (குன்றியதால்) இரத்தினப் பூண்களையும் மிகுதியா யணிந்திலர். மற்றோ, உலகத்தோற்றம் பற்றிச் செயற்பால தென்னுங் கருத்தால் (சிறிது) அலங்காரஞ் செய்தனரே யல்லால் இவ் வலங்காரத்தால் மண மக்க ளிருவருக்கு மோர் சிறப்புண்டா மென்னுங் கருத்தா லலங்கரித்திலர். (55)

கணித நூலை நன்கு கற்ற கவிஞர்களாயிருந்தும், தோழிகளுடன் விளையாடும், கெடாமதியு (எல்லா முணர்தற்றன்மையு) முள்ள மண மகளாகிய வுபய பாரதியாரை (சுபவேளை யாது?) என வினாவினர். வினாவிய விடத்து அவ்வுபயபாரதியார் கூறிய சுபக்கிரகம் நவாம்சத்திலிருக்கும் போது தனது மதியால் சுபமுகூர்த்தம் அறிந்து கொண்டார்கள். (56)

(அந்தச் சுபவேளையில்) பேரி, மத்தளம், படகம், மறையோதல், சங்கு, என்பவைகளின் பேரொலிகளால், திசைகள் மிக வியாபிக்கப்பட்டன. அச்சமயம் இம மித்திரரின் புதல்வராகிய விசுவரூபர், தம் திருக்கரங்களென்னுந் தளிர்களால், விட்டுணு மித்திரரின் புதல்வியராகிய உபயபாரதியாரின் திருக்கரமென்னுந் தாமரை மலரைப் பற்றிக்கொண்டனர். (ஈண்டு, விட்டுணு மித்திரர், இம மித்திரர், என்பன, தேவதத்தன், யக்ஞதத்தன், முதலியன போன்ற குறிப்புப் பெயர்கள்). (57)

யார், யார், எவ் வெப்பொருளை விரும்புகின்றாரோ அவரவர்கட்கு அவ் வப்பொருள்களைக் கொடுத்து, மணமக்களாற் போற்றப்பட்ட அவர்களது தந்தையர்க ளிருவருங் களிப்புற்றோர்களாய்க் கற்பகத் தருவென நல்ல பெரிய மனதுடன் (பூக்களுடன்) கூடியவர்களாயும், அலங்கார முடையோர்களாயும், விரும்பிய தடைந்தோர்களாய் அவையின் பாற் றிரிந்தார்கள். (58)

பின்னர், அவ் விசுவரூபர் தனது கிருகிய சூத்திர (தரும நூல்) நெறியைத் தழுவி, தீ வளர்த்து அதில் ஆகுதி செய்தனர்; உபயபாரதியா ரென்னும் அவரது மனைவியாரும், பொரிகளைத் தீயிலிட்டு அதிலிருந்தெழும் புகையை

மோந்தனர். பின்னர் விசுவ ரூபர் மனையாளுடன் தீயை வலஞ் செய்தனர். (59)

தீயோம முடிந்த விடத்து சிறந்த அந்தணர்களனைவரை யுங் களிப்பித்தவரும், வந்திருந்த சுற்றத்தார் கூட்டங்க ளனைத்தையும் பிரயாணஞ் செய்து வைத்தவருமாகிய விசுவ ரூபர், (தனது மனையாளாகிய) சரசுவதி தேவியாருடன் தீ வளர்த்துத் தீட்சைமேற் கொண்டவராயுங் களிப்புற்ற மனத்தராயும் நற்றீ மனையில் நான்கு தினம் வசித்தனர். (60)

பின்னர், அவ் விசுவரூபராகிய மண மகன் பிரயா ணப்படுங்கால், மண மகளின் தாய் தந்தையர்கள் வந்து, மணமகளை நோக்கி "பிரிய, யாங் கூறுவதைப் பொறுமை யுடன் கேட்பாயாக" வென்று கீழ் வருமாறு சொன்னார் கள் :— (61)

பாலருந்துங் குழந்தை போன்று இப்பெண் ஒன்று மறியாதாள், இவள், பெண் மக்களுடன் சொக்கட்டான் விளையாடுவாள்; பசிக்கிலோ வருத்தத்தோடு வீட்டிற்கு வருவாள்; (வந்துண்பாள்) ஒரே புதல்வி யென்று இல் லறக் காரியங்களொன்றையுஞ் (செய்யுமாறு) சொல்வதில்லை. இவள் நினது புத்திரி போன்று பாதுகாக்கத் தக்காள். (62)

அழகுடையோய், இக் கன்னி, இன் சொற் கொண்டே வற்குரியாள், கடுஞ் சொற் கூறிலோ, முனிவுடையவளாகி ஒரு காரியமுஞ் செய்யாள். இன் சொல்லால் வசப்படுவார் சிலர், மாறுபட்ட தன்மை யுடையார்களோ, கடுஞ் சொல் லால் வசப்படுவார்கள். (இக் கன்னி, கொழுநன் சொல்லாற் கோபங் கொள்வாளேல் ஒரு காரியமுஞ் செய்யா ளென்பது உட்கிடை.) (63)

மற்றும், ஓர் கால், மகாத்மாவாகிய பிராமண ரொருவர் வந்து, இக்கன்னி, கையி னிலட்சணங்களைக் கண்டு இவள் மானிடப் பிறப்பாளே தவிர, தேவத் தன்மையை நித்தியமா யுடையா ளெனக் கூறியுள்ளார். ஆகையாலும் தாங்களும் இக்கன்னி யிடத்திற் கடுஞ்சொற் கூறன்மின். (64)

(அஃதொழிந்தும்) இக் கன்னியின்பால் நிறைந்த முழுது முணரற்றன்மை யுளது மற்றும் தோடமே யற்ற இக் கன்னிகை ஓர் காலத்தில் வாதமிடும், வாதி, பிரதிவாதி கட்குச் சாட்சியாந் தன்மையையும் பெறுவாள், என எங் கட்கு அந்தப் பிராமணர் சொல்லிப் போயினர். (65)

இப் பெண்ணின் மாமியாகிய நினது அன்னையாரும் யாங் கூறிப் போந்தவாறே வார்த்தை பேசத்தக்கார். அம்மாமி யாரிடத்தும் இப் பெண் முயற்சியாஞ் சீலத்தளாவள். ஆத லின் இப் பெண் தங்கட்கோர் நிதிவடிவா யிருக்கின்றாள். (புதையற் கிடைத்தது போன்ற தென்பதுமது) அத னாலே சுந்தரி யென்னு மிக்கன்னிகை தம்மாற் பேணத்தக் காள், இல்லறக் காரியங்களை அவர்கள் மெல்ல, மெல்ல செய்விக்கப்பாலார். (66)

குழந்தைப் பருவமாந் தன்மை பற்றி, இளமையில் எளி தாய் பிழைகள் தோன்றுவனவாம். அவைகள் இல்லறத் திற்குரியார்களாற் பார்க்கத் தக்கனவல்ல. என்னை? யாங்க ளனைவரும், (இளமையில்) அறியாமையோடு கூடியிருந்து பின்னர், மெல்ல, நன் மதியுடையோர்களாய்ப் பெருந்தன் மையை யடைந்தோம், (ஆதலின்). (67)

தங்களுடைய அன்னையாரை நோக்கிச் சொல்வதற்கு, எங்களுக்கு மன ஆற்றலில்லை. என்னை? இல்லாளை யினிது

பாது காப்பாற்றுவதில் (கொழுநனைத் தவிர்த்து) மற்றையோர் உளரெனத் தோற்றிலர், ஆதலின். அன்றியும், இருவருக்குந் தோன்றிய வண்ணமே அன்புள்ள மனிதர்கள் நினது தந்தையாருக்குக் கூறுவார்களாக. (68)

## தனது புதல்விக்கு அறிவுறுத்தல்

புதல்வியே, நீ இப்பொழுது அருமையாகிய நிலையை யடைந்திருக்கின்றாய், வளர்ந்த புருவத்தாளே, அதைக் காப்பாற்ற வேண்டு மென்பதில் எப்போதும் நிபுணமதி யுடையளா யிருப்பாயாக. சனங்கள் கூடி நகைக்குமாறு, இளையோர் செய்கை செய்யற்க. அது, எங்கட்கு இனிமை தந்தது போன்று, அவர்களுக்கு அன்பை யுண்டாக்காது. (69)

(அஃதன்றியும்) மணஞ் செய்வதற்கு முன் தாய் தந்தையர்களே அப்புதல்விக்குத் தலைவ ரெனப்படுவர், அதன் பின் கணவனே தலைவனவன். ஆதலின் அத்தன்மைய கொழுநனையே முக்கியமாய்ச் சரண்புகுவாயாக. அதனால் வெல்லுதற்கரிய இரண்டுலகங்களையும் வெற்றி கொள்வை. (70)

அழகுடையாளே, கணவன் உண்ணா திருக்குங்கால், நீயும் உண்ணாதே. கணவன், நெடுவழி சென்றிருக்கும் போது, அழகுற அலங்கரித்துக் கொள்ளாதொழிகுதி. நீராடல், உண்ணல், முதலியவைகளில் முன் பின் என்னும் நியம முண்டு. இதில், (இத்தன்மைய குணங்களில்) அருந்ததி, உலோபாமுத்திரை, என்பார் முதலிய) பண்டைக் காலத்திய மங்கையரின் சரிதமே சிறந்த பிரமாணமாம். (71)

கணவன் கோபிக்கில், நீயும் முனிவுடன் ஒன்றும் பேசற்க. கணவன் முனிந்து கூறும் வார்த்தைகள் பொறுத்துக் கொள்ளற் பாலன. கணவனும் தானாக வே அடங்குவன். கணவன் முகக்களிப்புட னிருக்கும் போது, புதல்வியே, நீ பயமுடையாள் போல இருப்பா யாக, அடக்கத்தாலேயே விரும்பியவனைத்துங் கைகூடு கின்றன. (72)

கூடவே, கணவனிருப்பினும், ஏனைய புருடரது முகத் தை நோக்கிக்கொண்டு ஒருபோதும் (ஒன்றும்) பேசற்க. மங்கல முடையாளே, (பிற புருடரது நட்பே யின்றிய விடத்தும்) பிற புருடனாகிய இவன் தனித்தோரிடத்திற் பேசுகின்றது என்னை ? என்னும் ஐயப்பாடு, மனையாளுக் கும் புருடர்க்குமுள்ள மனத்தின் நட்பைக் கெடுக்கும். (ஆதலின் எனக). (73)

(வெளியிலிருந்து) கணவன் வருங் காலத்தில், மனை யாள் தான் செய்யுங் காரியத்தை விட்டு, எழுந்து விரை வில் அவருடைய திருவடியை வெந்நீராற் கழுவுதல் வேண் டும். கற்புடையாளே, கணவன் விரும்பியவாறே, உண் பொருளேனும், வெந்நீரேனுங் கொடுத்தல் வேண்டும் குடும்பத்தில் உனக்கு, சுகம் அனுத் துணையா யிருப்பி னும் அதை அருவருக்கலாகாது. (74)

கணவன் வெளியே சென்றிருக்கும் பொழுது, அவ ரைச்சேர்ந்த பெரியார் ஓர்கால் இல்லிற்கு வருவார்களேல், அவர்கள் மேம்பாடாகப் பூசிக்கத்தக்கார்கள். இன்றெனி லோ, அவர்களிடத்திலுள்ள வெறுப்பு (நமது) குலத் தைக் கொளுத்துவதாம். (75)

தாய் தந்தைகளுக்கு ஒப்பாகவே மாமன், மாமிகளிடத்தும், ஒற்றுமையுடன் நடந்து வரல்வேண்டும். மான் விழியாளே, அது போன்றே, அவருடன் பிறந்த கொழுநர்களிடத்தும், ஒற்றுமையுடன் நடந்துவரல் வேண்டும். அவர்கள் கோபங் கொள்ளிலோ, (மனைவி, புருடர்களுக்கு) ஒருவர்க் கொருவர்க்குள்ள நட்பின் பற்றை வேறுபடுத்தி விடுவார்கள், என, என் மனதில் ஐயந் தோற்றுகின்றது. (என மணமகன் மணமகளிருவருக்கும் அறிவுறுத்தினர்). (76)

(இவ்வாறு செய்த) இனிய உபதேசத்தில் மிக அழுந்திய மன முடையவர்களும் ஆசிரியரா (பட்டபாதரா)லும், சுற்றத்தார்களின் கூட்டங்களாலும், மேன்மை யடைந்தவர்களுமான, மணமகன் மண மகளிருவரும், அரசனது மனைக்குச் சென்றார்கள். (சரசுவதியாரும் தந்தையின் குலம், கணவனின் நிலயம், என்னும் இரண்டிடங்களிலும், யாவரு மேற்குமாறு) எல்லா முணர்தற் றன்மை யுடைமையால், உபயபாரதி எனத் திருப்பெயர் தோன்றப் பெற்றனர். (77)

## குழந்தைச் சங்கரரை விதத்தல்

அவ் வுபயபாரதியார் முன்னர் வேண்டிக் கொண்டதால் களிப்புற்ற துருவாச முனிவரருளிய சாப நீக்கத்தை, அவையின் கண் எவரது முழுது முணர்தற் றன்மையாம் பொறுப்பிற்குச் சாட்சியாந் தன்மையைப் பெறுவரோ, அச் சங்கர பகவற்பாதர், உபய பாரதியாரைச் சாட்சியாகக் கொண்டுள்ள சருவக்ஞத் தன்மையுடையவராயிருந்தும், தனது சத்தியாற் சிறந்த சரித முடையவரும், வெளிப் படையான வருமாகிய, கண்ணபிரான் போன்று, குழந்தை

யெனக் காணப்பட்டவராய்த், தமது குழந்தைப் பருவத்திற்கு ஒத்த திருவிளையாடலைச் செய்தார். (78, 79)

சங்கர பகவற்பாதர், நிலையற்ற இச்சையை யுடைய குழந்தைப் பருவத்தராளுலும், ஆலிலையி லமர்ந்துள்ள, திருமால் போன்று, சென்ற காலம், வருங் காலங்களிலுள்ளவை யனைத்தையும் தமது ஆன்மாவின் கண் பார்த்தற் குரியவராயிருந்தார். (80)

விநோதத்தால் பெற்றுள்ள புதிய தொட்டிலைப் பெற்றவரும், அழகிய விளையாட்டை யுடையவருமாகிய, ஆச்சரியமுள்ள குழந்தைச் சங்கரரைச் சனக்கூட்டங்கள் இமைமூடாத நேத்திரங்களால் இடையருது கண்ணபிரானைப் பார்ப்பது போன்று பார்த்தார்கள். (81)

பிரமன், விட்டுணு, சிவன், என்பவர்களுக்கு ஒப்பாகிய, சங்கரருடைய கரு நிறமுள்ள மயிர்க் குச்சுக்கள், மிருதுவாகிய நீருண்ட புதிய மேகத்தின் நிறம் போன்று இயல்பாகிய நீல நிறத்தால் மிக்க அழகுடையனவாக விளங்கின. (82)

பௌத்தம், திகம்பரம், பாசுபதம், காபாலிகம், வைணவம் என்னும் மதங்கள், மற்றைய மதங்கள் எனப்பட்ட தீய விவாத மிடுபவர்களால் முழுதுங் கேடுற்ற வைதிக நெறியை, மிகக் காப்பாற்றுதற் பொருட்டு மண்ணிடத் தவதரித்து, குடும்ப மென்னுங் கொடிய வனத்திற் றிரிபவர்களுக்கு முத்தி யின்பமாகிய மங்கலத்தைச் செய்யுங் குழந்தைச் சங்கரர் நன்கு விளையாடுகின்ருர். (83)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கர திக்குவிசயச் சுருக்கத்தில், அவ்வத் தேவதைகளின் அவதாரங் கூறும் மூன்ருவது சருக்கம்
முற்றும்.

---

## நான்காவது சருக்கம்.

### நம் குழந்தைகளினும் வேற்றுந்தன்மையுடைய குழந்தைச் சங்கரரின் சரிதங் கூறத் தொடங்கல்

### பால சங்கரரின் திருவிளையாடல்

அதன் பின்னர், பரசிவன் தனது மாயா சத்தியால், சிவகுரு, என்னும் அந்தணர் வீட்டில் குழந்தையாகப் பிறந்து, சிவ குருவிற்குக் களிப்பை யுண்டாக்கிக் கொண்டு, முதல் வருடத்திலேயே, எல்லா எழுத்துக்களையும், தனது பாஷையையும், இப்பால சங்கரர் நன்றாய்க் கற்றுக் கொண்டனர். (1)

பின்னர், இரண்டா மாண்டிலேயே இப்பாலசங்கரர் நுண்ணிய மதியுடைய ராதலின், அக்கரங்களனைத்தையு மறிந்தோராய், எழுதியதைப் படிக்க ஆற்றலுள்ளவராயினர். மூன்று மாண்டில் இப் பாலசங்கரர் கேள்வியின்றித் தானாகவே காவியங்களையும், புராணங்களையுங் கற்றனர். (2)

இப்பாலசங்கரர் ஒருமுறை பாடங் கேட்டவினாலேயே நுண்ணறிவுடையா ராதலின் நன்கு உள்ளத்திற்கொள்வர். ஆதலின் ஆசிரியருக்கு வருத்தங் கொடுப்பவரல்ல ராயினர். தன்னுடன் கற்போருக்குத் தானே ஆசிரியராயினர், ஒரு காற்கேட்டதனின்றே தானாகவே ஓதிக்கொள்வர். (3)

இராசதகுண, தாமத குணங்களின், இலேசமுமற்ற, கலை ஞானம் (பதினான்கு வித்தை) உடையவருக்குள், மிகமேம்பட்டவரி (சிவகுருவி)ன் புதல்வராகிய அப்பாலசங்கரர், விளையாடும் பருவத்திலேயே பேச்சுக்க ளனைத்தையுங் கற்றுக்கொண்டனர். (4)

கூரிய மதியுள்ள குமரசங்கரரது, அழகிய திருமேனி, முடிவைத்தல் (சௌளம்) முதலிய சமத்காரங்களைச் செய்ததால், நெய்யால் ஆகுதி செய்த தீ போன்று மிக்க ஒளி பெற்று விளங்கியது. (5)

அமைத்துக் கூறுவதில் ஐயமேயகன்ற மதியினையுடைய அப் பாலசங்கரர், வியாகிருதி (பூர், புவ:, சுவ:) முதலியவைகளோடு கூடிய மந்திரசாத்திரங்களையும் நன்கோதிக் கொண்டனர். காவியத்தில் விளையாடும் மதியுடையராயினர். மிக்க வன்மையாகிய தருக்க நூலில் மிகக் கற்றுரையும் பீறினர். (6)

வானவர்களாற் பூசிக்கப்பட்ட பிருகற்பதியின் வல்லுநத் தன்மையையும், தோல்வி யடையுமாறு செய்தற்குரிய, அப் பாலசங்கரர் முன்னில், வாத மிடுவதில் வாக்கின் வைபவத்தால் விவாதஞ் செய்பவர்களையும், தோல்வி யடையுமாறு செய்யத் தக்க பண்டிதர்களும், பேசுவதற்கு ஆற்றலில்லாதவர்களாயினர். (7)

விவாத மிடுவோர்களும், ஆதிசேடனது வாக்குப் பெருக்காகிய விவாதத்தையும் கீழ்ப்படுத்தற்குரிய இப் பால சங்கரர் பேசுகின்ற வாக்கு முறைமையைக் கண்டு, பேராவற் கொண்டார்கள், (மறு மொழி கூற மறந்துவிட்டார்கள்). (8)

பேரறிவாளராகிய அப் பாலசங்கரரால், கெட்ட மதங்கள் எவைகள் தாம் கலக்கப்பட்டில? (மதங்களனைத்தும் மறுக்கப்பட்டதென்க). அப் பாலசங்கரராற் கண்டிக்கப்பட்ட தமது மதங்கள் எவர்களால் மிக முயன்று நிறுவப்பட்டன? (எவரும் நிறுவிலர் என்பதாம்). (9)

மக்கட்பே றுள்ளார்களில் மேம்பட்ட அச் சிவகுரு, இரவியின் ஒளியையுடைய இப்புத்திரனை (பால சங்கரரா)ல் அலங்கரித்துள்ள தனது குலத்தை, ஒப்பற்றதாய்க் கருதினர், (குலமனைத்தினுஞ் சிறந்ததெனக் கொண்டனர் என்பதாம்). (10)

## சிவ குரு கைலைப் பேறு

அச்சிவகுரு, புத்திரனாற் களிப்படைந்தோராய், தாம் பால சங்கரருக்குப் பூணு நூற்போட விருப்புற்றோராயிருந்தும், கிழப்பருவ மிகுந்து, பாலசங்கரரின் மூன்றும் ஆண்டில் கரும வசத்தாற் சிவகதியை யடைந்தனர். உயிர்களைக் கவருங் காலன் இவனால் இது செய்யப்பட்டது, இவனால், இது செய்யப்பட வில்லை, என்பதை நோக்கான். (11)

தனது புத்திரனது முகத்தைக்காணல், இவ்வுலகில் எளிதன்று. அதிலும், (புதல்வனது) மகத்துவத்தைப் பார்ப்பதோ) இயல்பாகவே மிக்க அரிதாம். ஆதலின் இவ்வந்தணர் (சிவகுரு) யாதோ ஒருவகையாற் புத்திரப் பேறடைந்தனர். அடைந்தும், புதல்வனது வைபவத்தைக் காணாதொழிந்தனர். (12)

(பின்னர்) இறந்த, இப் பாலசங்கரரின் தந்தையாருடம்பை இவரது அன்னையார் பிண்டத்துடன் தகிப்பித்தனர், பின்பு கணவனிழந்தவ (அவ்வம்மையா)ரை சுற்றத்தாரின் கூட்டங்கள், கணவனின் மரணத்துயரை நீக்குதற்குரிய இன் சொற்களாற் களிப்புண்டாக்கினர். (13)

## சங்கரருக்குப் பூணு நூற்போடல், முதலியன

இறந்தாருக்கு விதித்ததைத் (தன்னாற்செய்ய முடிந்ததை) தானே செய்தனர். தன்னாற்செய்ய முடியாத கரு

மத்தை, சுற்றத்தாரைக் கொண்டு செய்வித்தனர், அஃதன்றியும், தனது புதல்வராகிய பால சங்கரருக்கு வருட முடிவிற் செய்யுந் தீட்சைகளைச் செய்து முடித்து, பூணுநூற்போட விரும்பினர். (14)

அதன் பின்னர், விதவையின் தருமத்தில் நியதமாயுள்ள சிவகுருவின் மனைவியாகிய அவ்வம்மையார், ஐந்தாமாண்டு உறுதியான விடத்துச் சுபயோகமுள்ள நல்லோரையில், சுற்றத்தார்களுடன் களிப்புற்றோராய், இப்பால சங்கரருக்குப் பூணுநூல் மணஞ் செய்வித்தனர். (15)

அப்பாலசங்கரர், ஆறங்கங்களுடன் மறைகள் நான்கையும் முறையாக ஓதினர் (ஆசிரியர்பால் கேட்டுணர்ந்து கொண்டனர், என்பதாம்) சிறிய திருமேனியும், பெரியவுணர்வும், உடைய இப்பால சங்கரரிடத்தில் கூட்டமான சனங்கள் பெரும் வியப்பை யடைந்தார்கள். (16)

அப்பால சங்கரருடன் ஒருசாலை மாணுக்கர்களான, அந்தணச்சிறுர்கள், பால சங்கரருடன் கற்கமுடியாதவர்களாயினர். அன்றியும், ஆசிரியரும், " இவ்வாறு இயற்கையிற் கற்பதற்கு வல்லுநர் யாவர் கொலோ " என்னும் ஐயப்பாட்டை யடைந்தார் போலாயினர். (17)

ஆசிரியரை ஓர் நிமித்தமாகக்கொண்டு, சாத்திரங்களனைத்தையுங் கற்றுக்கொண்ட, இப்பாலசங்கரரிடத்து, இரண்டு, மூன்று, மாதங்கற்றதால், அவ்வச் சாத்திரங்களில் ஆசிரியருக் கொப்பாகிய கல்வியுடையவராணு ரென்பது, வியப்பாமோ ? (18)

மறையில் மலரோன் போன்றும், மறையின் அங்கங்களில், கார்க்கியர் போன்றும், மறை, மறையின் அங்கப்

பிரசங்கக் கருத்துக் கூறுவதில், பிருகற்பதிக்குச் சமமாக வும், மறைகூறிய கருமங்களை விரித்துரைப்பதில், சைமி னிக் கொப்பாகவும், மறைமொழியாலுண்டாகுந் தத்துவ ஞான காரணங் கூறுவதில் வியாசமுனிவருக்கே சமமாக வும், அப்பால சங்கரர் இருந்தனர். அவர் உலகப் பார்வைக்கு வாக்கு விலாசங்களோடு கூடிய புதியதோர் திருமேனி கொண்டார் போன்று காணப்பட்டனர். (அங்ஙனங் காணப் படினும் அவர் அத்துவிதீயப் பிரமவடிவரே யாவர்). (19)

பாலசங்கரர் தருக்க வித்தையைத் தடையின்றி யுணர்ந் தனர். கபிலமுனிவரியற்றிய சாங்கியநூலில், ஒப்பற்ற தும், கூறற்கரியதுமாகிய, அறிவுடையதாந் தன்மையைப் பெற்றனர்; பதஞ்சலிமா முனிவரியற்றிய (யோக நூலென் னும்) நீரைப் பருகினர்; (சைமினி சூத்திரத்தின் சாபர பாடியத்திற்கு) பட்டபாதரியற்றிய, வார்த்திகத்தினது பிராமாண்யவாத முதலிய பொருளின் இரகசிய உண்மையை நன் குணர்ந்தனர்; தருக்க நூல் முதலியவைகளால் உண் டாகிய இன்பம், இப்பால சங்கரருக்குத் தோன்றிய, அப ரோட்சமும், நிருமலமும், ஆகிய அத்துவிதப் பிரமஞான ஆனந்தத்தில் அடங்கியது; கிணற்று நீரிலுண்டாகும், அருந்தல் முதலிய பயன்கள், அந்தோ! நன்னீருள்ள விரிந்த நதியின் கண் அடங்காதனவாமோ? என்னே! (அடங்குவனவே, என்க). (20)

## சங்கரர் பொற்கனி மழை பெய்வித்தல்

பகவான், என்னும் அப்பாலசங்கரர், குரு குலத்தில் வசிப்போராய், ஒத்த வயதுள்ளவர்களுடன் ஐயமேற்க வேண்டுமென்னும் இச்சையால், வறியதோர் அந்தணரின் மனைக்குச் சென்றனர். (21)

அங்கு அம்மனையிலுள்ளதோர் அம்மையார், "தம்மைப் போன்றார்களின் தகுதியாகிய உபசாரத்தைப் பெற்ற இல்லறத்தார்கள் எவரோ, அவர்கள் செயற்பாலன செய்தார்களே யாவர்கள்" எனப் பிரமச்சாரிகளிற் சிறந்த பாலசங்கரர், என்னும் பிரமசாரிக்கு அன்புடன் கூறினர். (யான் அத்தன்மைய ளல்லள் எனக்குறிப்பிட்டமை காண்க). (22)

'யானோ, உள்ளவாறே தெய்வத்தால் வஞ்சிக்கப்பட்டுள்ளேன், ஆகையால் ஒரு பிரம்சாரிக்கு ஐயமிடவும் ஆற்றலற்றேன், அந்தோ! அணுத்துணை யேனும் ஐயமிடாததால், இப்பிறப்பு மிகப் பழிப்புடையதாயிற்றே, பயனற்றதுமாகி விட்டதே. (23)

என் ஏழ்மையை (வறுமையால் வருந்துந் தன்மையை) இவ்வம்மையார் சொல்லிக்கொண்டு, பிரமசரிய விரதமுடையார்க்கோர் இந்திரன்போன்ற பாலசங்கரருக்கு நெல்லிக் கனியொன்றை அளித்தனர். ஞானத்திற்கோர் நிதியாகிய அப்பாலசங்கரர், (அவ்வம்மையாரின்) கருணை மிக்கதோர் வார்த்தையைக் கேட்டுத் தயையால் இளகிய மனமுடைய ராயினர். (24)

(பின்னர்) பாலசங்கரமுனிவர், மூரன், என்னும் அசுரனைக் கொன்றவர (விஷ்ணுவினு)து மனைவியை (இலக்குமியை) அவ்வந்தணமாதின் வறுமை நிலைமையை நீக்குதற்பொருட்டு, இன்சுவை மலிந்த, அழகுமிக்க, பதங்களாலமைத்த தோத்திரங்களாற் போற்றினர். (25)

(அதன் பின்னர்) கைடபன், என்னும் அசுரனைக் கொன்றவர (விட்டுணுவின)து மனைவியார் (இலக்குமி தேவியார்) மின்னலொளி போன்ற திருமேனியின் காந்தி

யால் திக்குக்களைப் பிரகாசிப்பித்துக் கொண்டு, பாலசங்கருருக்கு முன்பு, இனிது தோன்றினர். (26)

(தோன்றவே) தேவேந்திரன் போற்றும், அவரது திருவடியிணையை வணங்கிக் கைகுவித்து, முன்னிற்கின்ற, அப்பால சங்கரருக்கு, (அவர் செய்த) அழகிய தோத்திரங்களாற் களிப்பு மிக்குடையராய், (இலக்குமி தேவியார்) வியப்புடன் மேல்வருமாறு கூறினர்:—“ மைந்த, நினது உள்ளத்திலிருப்பது (எம்மால்) உணரப்பட்டது முற்பிறப்பில், மகத்தாகிய எமது கடைக்கண் நோக்கிற்குப் பாத்திரமாகத் தக்க புண்ணியத்தை இவர்கள் செய்திலர், இப்போது அதை இவர்கள் எவ்வாறடைவர்?” (27 28)

அப்பால சங்கரர், இலக்குமி தேவியாரருளிய, அவ்வார்த்தையைக் கேட்டு, அம்மையே, (முற்பிறப்பிற் செய்ததோர் புண்ணிய மின்றேனும்) இப்போது இந்த நெல்லிக்கனியை எமக்கு அருப்பணஞ் செய்தாரன்றோ! இந்திராளே, நினக்கு யான் தயை புரிதற்குரியனேல் அதனுடைய பயனை அளித்தருள்வாயாக, என்றனர். (29)

(பாலசங்கரருடைய) கருணை ததும்பிய இவ்வாக்கியத்தைக் கேட்டுக் களிப்புற்ற இலக்குமி தேவியார், அவ்வந்தணமாதின் மனை நிறையுமாறு பொன் நெல்லிக்கனி மழையை நாற்புறத்தும் பெய்வித்து, அந்த இல்லை அப்பொற்கனியால் நிறையச்செய்தருளினர். அதைக்கண்ட சனங்களின் மனத்தையும் அற்புதத்தால் நிறையுமாறுஞ் செய்தனர். (30)

(பின்னர்) சக்கரந் தாங்கினோனுடை (விட்டுணுவினுடை)ய மனையாளென்னும் இலக்குமி வடிவாகிய புண்ணியமானது மறைந்தபோது, அப்பால சங்கரரின் மகிமை

ணயக் கண்டு, சனங்கள் வியப்புற்றோர்களாய்ப் பேசமுடியாப் பெருமையுடன் புகழ்ந்தனர். (31)

வானுலகிற் கற்பகத்தருப்போன்று, மண்ணுலகில் மங்கல குணமுள்ள பாலசங்கரர், வேண்டிய பொருளெலாங் கொடுப்பாராயினர். (அங்ஙனமாயினும் வானுலகிலுள்ள கற்பகத்தருவோ, தேவர்கட்கே விருப்புடையதாம்). இப் பால சங்கர்வடிவக் கற்பகத்தருவோ, அந்தணர்களுக்கும் அமரர்களுக்கும் விருப்புடையதாம் (ஆதலின் அதினின்றும் மேம்பட்ட தென்றுணர்க). (32)

அவ் வந்தண மாதின்வீட்டை, தேவர்களும் விரும்பத்தக்க சம்பத்துடையதாகச் செய்துவிட்டு அப்பால சங்கர ரென்னும் பெரியார் முன்போன்று ஆசிரியர்பால் சாத்திரங்களைப் பழகி வந்தனர். (33)

அழகிய கபட நோக்குள்ள மாதர்கள் தங்களுக்கொத்த கொழுநனைப் பெற்றுப் பெரும்பாக்கியத்தை எவ்வண்ணம் அடைகின்றார்களோ, அது போன்று கலைஞானங்கள் யாவும், இப்பாலசங்கர ரென்னும், பரமபுருடனைப் பெற்றுப், பெரும்பாக்கியத்தைப் பெற்றன. (34)

தனித்திருந்து, கல்விகளனைத்தையும் உள்ளவாறு கற்றுக்கொண்டு, பெரும்புகழ் மலிந்த பாலசங்கரரது திருமேனி, உவமை கூறத்தக்கதோர் வார்த்தையையு மொவ்வாத, அழகமைந்ததாயிற்று. (35)

## பாலசங்கரரது அங்கத்தை விதத்தல்.

தாமரை மலரின் காந்தியினுடைய மத்தத்தைக் (கருவத்தை) தாழ்த்துஞ் செயலுடையதும், துவிச இராசனின்

(சந்திரனுடைய, அந்தணர்களுடைய) கரங்களால்=கிரணங்களால், அல்லது கைகளால், பற்றிவிளையாடப் பட்டனவும், ஏனையபேத வாதிகளின் ஆணவத்தைக் கெடுக்கப் பட்டனவுமான, (பாலசங்கரரது) திருவடியிணைகள், மேம்பாடாய் விளங்கின. (36)

தண்ணீர், சந்திரகாந்தக் கல்லை யொழுகச் செய்து, அதினின்று தாமரை மலர்களை யுண்டாக்கி, அதிலிருந்து தடாக முண்டாக, அதில் தாமரை மலர்களுண்டாகில், அம்மலர்களை, இப் பாலசங்கரருடைய திருவடிக்கு, உவமை கூறலாம். (37)

சில கவிகள், பாலசங்கரருடைய, தோடமிலாத திருவடியிணைகள், தாமரை மலர்களை ஒத்தன எனக்கூறுகின்றார்கள். திருமுகத்தை மதிமண்டலத்திற்கு ஒப்பாகவுங் கூறுகின்றார்கள். இவ் விருவிதமும், மரபன்று, என்னை! பத்மபாதர், என்னும் புகழுள்ள திருப்பெயர் கொண்ட தொண்டன், (பால சங்கரரது மாணாக்கன்) உள்ளவாறே தாமரை மலர்களில் தனது அடிகளை வைத்தனன் (ஆகையாலும்) மதிமண்டலங்களென்னும், நூற்றுக்கணக்கான அந்தணத் தொண்டர்களால், திருமுகம் வழிபடத்தக்கது, ஆகையாலும், என்க. (ஈண்டுப் பத்மபாதர் தாமரை மலரில் அடிவைத்தது, மேல்வரும் அவரது சரிதத்திற்காண்க. துவிசராச மண்டலம், என்பதற்கு, சந்திரன், அந்தணர்கள் எனவும் பொருளாகும்). (38)

நல்லோர்களான, யோகீந்திரர்கள் அடிக்கடி தமது உள்ளக் கமலத்தை மிகப்புநித மாக்குதற்பொருட்டு, அவர்களுடைய உள்ளமாங் கமலத்தின்மீது, சங்கரருடைய திருவடிக்கமலத்தை (தியானித்தற்குரியதாக காட்டுகின்றார்கள்.

மற்றும், பிரமன் முதலியோருக்கும் அடைதற்கரிய (பரப் பிரம வடிவ) புதிய அமிருதத்தைத் திருமுகம் பொழி கின்றது. ஆகையால், தாமரை மலரினும் இவரது திரு வடி, மேலாகியது எனவும், சந்திரனிலும் இவருடைய திரு முகஞ் சிறந்தது, எனவும் யான் கருதுகின்றேன். (39)

சங்கரபகவற்பாதரின் திருவடி, தத்துவ ஞானமென் னும் பலத்தைக் கவருவதும் (அன்பர்களின்பொருட்டு தன தருகில் நிலை நாட்டுவதும்) உறுதியாகிய ஆன்மாவின் மறப் பை, கையால் கசக்கிப் பிழிந்து குடிப்பதும் (அன்பர்க ளுடைய), கவலைகளனைத்தையும் உண்பதும் (வழிபடுவோர் களின்) பாவப் பெருக்கின் எல்லையை யுடைப்பதும், (ஆற் றைப்போன்று வேரைக்களைவதும்) செருக்கு, பொறாமைக ளின் பெருக்கைக் கொள்ளையிடுவதும், முத்தாபங்களின் மருமத்தைக் கெடுப்பதும், மிக வுத்தண்டமானதுமாம். அது கருணையால் மங்கலத்தைத் தருவதாகும். (40)

மற்றும், பாலசங்கரரது திருவடி, மார்க்கண்டே யரைப் பாதுகாப்பாற்றுங்கால்) இடத் தாளால் உதைத்த லால் உண்டாகிய பெருந் தழும்பால் காலனது தோளை ஓர் குறியுடையதாகச் செய்ததும், வாசலின் வெளிமுற்றத் தில் கால் தரை தோய நன்கு பணிவார்களது உள்ளும் புறம்பு முள்ள பகைகளுக்கு (இராகத் துவேஷ முதலிய வைகளுக்கு, பேதவாதி முதலிய மதத்தர்களுக்கு), கெடு தியே செய்வது என்னும் விருதா (பட்டத்தா)ல், புகழ் பெற்ற திருப் பெயரை யுடையதுமாம், அவர் பரப்பிரம வடிவே யாதலின், மங்கலமுமாம். அத் திருவடி, இக்காலத் தும் பெருந்தன்மையுடையோர்களை, அபஸ்மாரம், என்னு மோர் மாமோகத்தை நீக்கியவர்களாகச் செய்கின்றது.

(அம்பலத்திலாடுங்கால் அபஸ்மாரன் என்னுமோர் அசுரனைக்கொன்ற, அரிய திருவடியாதலால், இப்போதுஞ் சீங்கர பகவற்பாதருடைய திருவடியைத் தியானஞ் செய்பவருக்கு (காசம்) என்னும் வியாதியும் நீங்கு மென்பதும் ஒன்று). (41)

தாரக மென்னும் ஓங்காரத்தை இடைவிடாது செபிக்கின்றவரும் எல்லாக்கலைகளையுங் கற்றவருமாகிய பாலசங்கரர், திருவடி யெடுத்து வைக்கும், களிப்புள்ள அழகிய முறை, புதிதாகக் கடலை மேலெழுந்து பொங்குமாறு செய்வதும், தனது ஒளியால் உலகினிருளை யொழிப்பதும், நட்சத்திரக் கூட்டங்கள் நெருங்கியிருக்கப் பெற்றதுமாகிய கலை தாங்கிய மதியின் சுத்தமாகிய கிரணத்தின் வரிசை, வெப்பத்தை நீக்கி, களிப்பைத் தருகின்றது போல, கலைமகள் வடிவ மறைகளின் பொருளைப் புதிதாகப் பொங்கியெழுமாறு செய்வதும், (பாடிய முதலியவைகள் இயற்றலால் அத்துவிதப் பொருளை வெளிப்படுத்துவதும்) தனது பிரத்தியக் சைதன்ய பரமான்ம தத்துவஞான ஒளியால் உலகத்தின் அஞ்ஞானவடிவ இருளை யொழிப்பதுமாம். அது எமது குடும்ப தாபங்களைக் கெடுக்கின்றது ; மற்றும், பிரமானந்தத்தையும் உண்டாக்குகின்றது. (42)

சங்கரபகவற்பாதருடைய திருவடியின் வணக்கமே, முத்தியைக் கொடுக்கின்றதா ? அல்லது, வணங்கப்பட்ட சங்கரபகவற்பாதரது திருவடியே முத்தியைக் கொடுக்கின்றதா ? என, சுருதியை யுணர்ந்தார்களும், உலகில், வலிவால் விவாத மிடுகின்றார்கள். ஈண்டுச் சங்கரபகவற்பாதருடைய திருவடித் திருத்தொண்டிற் பிரியமுள்ளார்களின் திருவடித் தூளியை இருதயத்திற் கொள்ள, செய்கின்ற முயற்சியே

அந்தக்கரணத்தில் முத்தியைக் கொடுக்கும் என, யாம் சொல்கின்றோம். (43)

பேரறிவாளராகிய பாலசங்கரரின் தொடைகள், (பிரமசாரிகள் கௌபீனத்தின்மேற் சுத்திக்கொள்ளும்) வெண்மை இலை(களாற் செய்யப்பட்ட) ஆடையால் மறைக்கப் பட்டனவாய், பாற்கடலின் நுரைகளால் நிறையப்பட்ட ஐராவதத்தின் தும்பிக்கையினுடைய பெருமை யுள்ளனவாய் விளங்கின (தொடைகள் யானைகளின் தும்பிக்கை போன்றன என்பதாம்). (44)

படிக மலையின் முடியிலுள்ள நடுவிடம், பொற் கொடிகள் மூன்றை யுடையதாமாகில், மூன்று மேகலை யணிந்த இப் பாலசங்கரரின் கடிதடமும் (இடைக்குந் தொடை மூலத்திற்கும் நடு) உண்மையாய் அதனுடன் உவமையாகும். (45)

யோகியாகிய பாலசங்கரர், சுருதிகளின் சாரமென்னும் உபநிடத புத்தகத்தை ஒரு திருக் கரத்தில் ஏந்திக் கொண்டும், தமது மற்றோர் திருக் கரத்தில் ஞான முத்திரையைத் தரித்துக் கொண்டும் இருப்பது, உபநிடதத்திற்குப் பேதவாதிகளாற் செய்யப்பட்ட ஆசங்கை யென்னுந் தடைகளை நீக்குவதே போன்று மிருந்தது. (46)

நல்ல புத்தி யுடையோர்களில், அரசராகிய பால சங்கரர் என்னுங் கற்பகத் தருவின் இலைகளை யொத்த இரண்டு திருக் கரங்களும், (தமது மாணுக்கர் முதலியோர்களின், அத்த மத்தக சம்யோகத்தினாலே) இரவி போன்று, அவர்களுடைய உள்ளக் கமலத்தை விரியச் செய்கின்றன; ஆதலால், சூரியன், தனது கிரணத்தை, (சங்கரரது திருக்

காங்களென்னும) இரண்டு கள்வர்கள் திருடுகின்றனர். அன்றியும், இக்கள்வர்கள் இரவில் திருடுகின்றனரோ? அல்லது பகலில் திருடுகின்றனரோ? என ஐயுற்று, இரவிற் கள்வர் திருடுவர் என உறுதி பண்ணிக்கொண்டு, அப்பயத்தால், அச் சூரியன் இரவில் மறைந்து, பின்னர் உதிக்கும் வரை, தனது மண்டலமாகிய கதவத்தை அடைத்துக் கொள்கின்றான். (47)

கதவத்தின் பலகை போன்றதும், விரிவானதும், தசை நிறைந்ததும், மிக்க அழகியதுமாகிய அப் பாலசங்கரரது மார்பிடமானது, பூமியிற் சுற்றித் திரிந்ததாலுண்டாகிய களைப்பால், வெற்றி யென்னும் இலக்குமி தேவியார் நிலைத்திருக்கின்ற படுக்கையைப் போன்றதாம். (48)

உள்ளும் புறம்பு மிருக்கின்ற பகைவரைக் (காம முதலியவைகளை, பேதவாதிகளை) கெடுப்பதில், வாசலின் அருகு காலைப் போன்ற வலுவுடையனவும், வெற்றியாகிய இரண்டு தூண்களின் பாரத்தைத் தாங்கத் தக்கனவுமான, மங்கல வடிவப் பால சங்கரரது இரண்டு தோள்களும் நன்கு விளங்குகின்றன. (49)

தாமரை நூல்களாற் செய்யப்பட்டு மிக்க அழகு வாய்ந்ததும், கார்கால மதியினது நிலவின் வெண்மை நிறத்தை அதிசயத்தால் தாழ்த்தற்குரிய மிக விரைவுள்ள காந்தியுடைய இப் பாலசங்கரரின் பூணு நூல் மிகுந்த காந்தியோடு விளங்குகின்றது. (50)

எக்கழுத்திலிருந்து எழுந்த ஒலி மத வாதிகளென்னும் பகைவரை வென்று முழக்கும் வெற்றிச் சங்கின் ஒலியைப் பெற்றுள்ளதோ, சங்கர பகவற்பாதருடைய அக்கழுத்துச் சங்கங்களுக்கெல்லாம் அரசனாய் விளங்கியது. (51)

புதிய மாணிக்கத் தருவின் கொடிகளிற் படிகின்ற கார்கால மதியின் நிலவு விளங்குவது போல், அச் சங்கர பகவற்பாத்ரின் பிரசித்தி பெற்ற சிவந்த அதரங்களுக் கிடையிலுள்ள, புன்னகை கொண்ட பற்களின், கிரணம் மிக அழகாய் விளங்குகின்றது. (52)

வெண்மைக் கிரணமுடைய மதியினொளி போன்ற புகழ் மலிந்த சங்கரபகவற்பாதருடைய அழகு வாய்ந்த கபோலங்கள், அவ்வாறுய அவருடைய திருவதனத்திலுள்ள கலைமகளுக்கு, பிரமனால் (இதில் முகம் நோக்குவாளாக என) நினைத்துச் சிருட்டிக்கப்பட்ட கண்ணாடிகள் போன்று விளங்குகின்றன. (53)

உலகனைத்தின், புண்ணியமென்று அனைவரும் போற்றுங் கடலில், சங்கர பகவற்பாதரின் திருமுகந் தோன்றியது. பனி மதியும் பாற்கடலில் தோன்றியது. ஆதலின், சங்கராது திருமுகம், சந்திரன், என்னு மிவ் விரண்டிற்கும், அமிருதப் பெருக்கை யுண்டாக்குந் தன்மை சமமாம். ஆயினும், மதியோ, உடுக் கணங்களின் ஒளிப் பிழம்பை யொழிக்கின்றது. சங்கரருடைய அத் திருமுகமோ, நல்லோர்களுக்கு வொளிப்பிழம்பை நன்கு கொடுக்கின்றது (இதில், இதுவே சிறப்பென்பது காண்க). (54)

சங்கரபகவற்பாத முனீசுரருடைய யாதொரு திருக்கண், பூர்வத்தில், பாற்கடல் மங்கையை (இலக்குமியை) விஷயஞ் செய்யப் பெற்றதோ, மற்றும், அந்தணமாது என்னும் எளியாளின் முன்பு, இலக்குமிப் பிழம்பாகிய (பொன் நெல்லிக் கனி வடிவ) சுவர்ணப் பெருக்குள்ள மழையைப் பொழிவித்ததோ, அத்தன்மைய, வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாளின், பெருகிய அன்பிற்குப் பாத்திர

மாகிய, அந்தத் திருக்கண்ணைத் துதிப்பதற்குப் புண்ணியஞ் செய்துள்ளார்களே, ஆற்றலுள்ளவராவார்கள் (ஏனையோர்களாற் சங்கரருடைய திருக்கண்ணைத் துதிக்கமுடியாதென்பது கருத்து). (55)

## சங்கரபகவற் பாதரின் திருமேனியை விதந்தோதல்

நிந்திக்கப்பட்டனவும், நீக்குதற்கு அரியனவுமான இராக்கதர்கள் வாழுகின்ற கடலில், அன்னோர்கள் நாசமாதற் பொருட்டு, அணை கட்டுவதில், ஒருவருத்தமுமின்றியவனும், தவமியற்றுவார்களின் குலத்திற்கோர் சந்திரனுமாகிய, இராமபிரானது, தெளிந்த பாற்கடலின் அலையினது காந்தி போன்ற அழகுடைய இலங்கையிலுள்ள சத்துருவான அதிகாயன் முதலிய இராக்கதர்களின் கோரத்தன்மையை நீக்குவனவாய், எழுந்த கடைக் கண் பார்வை, இறந்தது போன்ற நிலைமையை யடைந்த கிளை மிருகங்க(வானரங்க)ளை, பிழைத் தெழுமாறு பண்ணியது. இனி, தார்ட்டாந்தத்தின் அந்நுவய முறை வருமாறு :—நீக்குதற்கரிய, புறச்சமயத்தார்க ளெனப்பட்ட பகைவர்களின் நிந்தைகள் இருக்குமிடங்களில் அந் நிந்தைகள் கெடுமாறு, அணை, (மூன்றுபாடியங்கள்) இயற்றுவதில் தோஷமற்றவரும், தவஞ்செய்வார் (துறவிகள்) குலத்திற்குச் சந்திரன் என்னவுங் கூறப்பட்டவருடைய, (சங்கரபகவற்பாதருடைய) பாற்கடலின் அலை போன்றெழுந்த அழகிய கடைக்கண் நோக்கம், தூல வுடம்பு முதலியவைகளிலுள்ள மயக்கங் கட்குக் காரணமான, மூல அஞ்ஞான முதலிய பகைவர்களைக் கெடுத்து, (பிராந்தியுடன் அஞ்ஞானத்தையுந் தொலைத்து) பிறப்பிறப்பு முதலிய சம்பந்த மென்னுங் கிளைகளிலுள்ள மிருகமெனப்பட்ட சீவர்களைக் (துக்க

நிவர்த்தியுடன் பிரமானந்தத்தையுங் கொடுத்து) காப்பாற்று கின்றது. (56)

நிமித்தமின்றித் தோன்றப்பட்ட, ஆபத்தென்னுங், கூரிய முட்களை யுடையதும், மன்மதனாகிய அக்கினியின் சுடர்க (மாதர்க)ளை யுடையதும், பாவம், என்னும் வழியை யுடையதும், திடத்தைக் கெடுத்தற் குரிய நீங்காத வியாதி வடிவ யானையை யுடையதுமாகிய, துன்பச் சமுசாரத்தை, புத்தமிருத மழைபோன்ற ஒழுக்க முள்ள சங்கரபகவர்பாத ருடைய திருக்கண்ணோக்கங்கள், தமை யடைந்தார்களுக்கு, நீக்குகின்றன (சங்கர பகவற்பாதருடைய திருக்கண்ணோக் கம் பட்டார்கள் சம்சார துன்பத்தை நீக்கிக் கொள்ளுகின் றார்கள், என்பதாம்). (57)

சங்கர பகவற்பாதரது, அழகிய வெண்ணீற்றுத் திரி புண்டரங்களை, கருணைக் கடலாகிய சங்கரமுனிவரைச் சார்ந் துள்ள மூன்று (கங்கை, யமுனை, சரசுவதி), வழியாய்ச் செல்லும், தெய்வநதி யென்பார்கள் சில கவிகள். அவை களையே, மூன்று மறை முடிகளின் (உபநிடதங்களின்)பாடி யங்களை யுதவியாக்கொண்டு எழுந்த மிக வழகிய மூவுல கத்துமுள்ள முப்புகழ், என்கின்றோம் யாம். (58)

இச் சங்கரபகவற்பாதர், பரசிவனது அருள் விளை யாட்டுத் திருமேனியர், மிக வழகிய வடிவுடையயர், என்னு மிவ் விரண்டும், சனங்க ளனைவருடைய மனதில் இப் பொழுது உள்ளவாறு துணிவுற்றிருக்கின்றன. இச் சங் கர பகவற்பாதருடைய உவமை யற்ற திருமேனியை உள் ளத்தால் நோக்குவோர்கள், அழகிய காமனையும், துரும் பெனச் செய்கின்றார்கள், (காமனை யெரித்த கண் மூன்

னுடையான் கருணை யவதார மாதலின்) என்பது எமது கருத்தாம். (59)

(அஃதன்றியும்), அஞ்ஞான மென்னும் ஆரணியத்தின் நடுவில், விழுந்து கிடப்போர்களையும், சமுசார மென்னுங் காட்டுத் தீயினுடைய சுடர்களின் (மனை, மக்கள், திரவியம், நீங்குதலின்) வெப்பத்தால், வெந்தவர்களையும், ஆன்மஞானமாகிய நதியில் நீராடுவித்தற் பொருட்டு, மோனத்தை நீக்கிக் கல்லாலடியிலிருந்து தட்சிணாமூர்த்தியே மண்ணில் வந்து அவதரித்துச் சங்கரபகவற்பாதர் வடிவமாய்ச் சஞ்சரிக்கின்றனர். (60)

தமது திருவடியை வழிபடுவோர்களின் குடும்ப தாபச் சிந்தையைப் போக்கும் சங்கர பகவற்பாதர் அவதரித்த போது, முனிவு மிகுந்த, வீண் வாத வல்லுநர்களின், பயனற்ற விஷயமாகிய பண்டிதத் தன்மையா லுண்டாகும் விதண்டாவாதம், வைபாடிகன் முதலியோர்களின் மனதில் (இருக்க) இடமிலாததாயிற்று. அவ்வாறே உள்ளத்தில் அழுக்குள்ள வைசேடிகர் முதலியோர்களின் விவாத வலியும் ஒழிந்தது. (61)

இச் சங்கரபகவற்பாத மூர்த்தியால், (வைதிக நெறியை நிறுவும் வாயிலாக) வேள்விகள் நன்கு முடிக்கப் பட்டன. (கைலையில் வாழும்) அந்தச் சங்கரராலோ (தக்கன் வேள்வி யாற்றும்போது) வேள்விகள் கெடுக்கப்பட்டன. இதுவே சங்கரபகவற்பாதர், பரசிவன் என்னும் இவ்விருவருக்குமுள்ள வேறுபாடாம். மற்றைய, காமனைக் கடிதற்றன்மை, முழுது முணர்தற்றன்மை, புதர்களால் (தேவர்களால், அறிஞர்களால்) போற்றப்படுந் தன்மை என்பவைகள் இருவருக்கும் ஒத்தனவேயாம் என்ப. (62)

மூவுலகத்துமுள்ள அறிஞர்களில், ஒரு கூறுவேனும் (இச் சங்கரபகவற்பாதருக்கு) ஒப்புள்ளார் என ஒருவரை யும் யான் எண்ணிலேன். தானே தனக்கொப்பாகு மிடத்து, அஃது இல்லை யென்பார் எவர் கொல்? (63)

## சங்கர பகவற் பாதரின் குணங்களை விதத்தல்

வானுலக நந்தனவனத்தின் நடுவில், கற்பகத் தருப் போன்றும், தருவில் பூங் கொத்துக்கள் போன்றும், பூ மஞ் சரியில் வண்டினங்கள் போன்றும், பிரசித்தி பெற்ற சங் கரபகவற்பாதரிடத்தில் (உள்ள அரிய பெரிய) குணங்கள் எண்ணிறந்தனவே. (64)

இச் சங்கரபகவற்பாதர், பொருளாராய்ச்சியாற் காம னைக் கடிந்தனர்; கொடுஞ் சொல்லால் பிறரைப் பீடிக் கின்ற கோபத்தைப், பொறுமையாற் போக்கினர்; ஏழ் மையை யடைதல், பெரும் பொய் கூறிப் பிறர் பொருளை விரும்பல், தன் பொருளீயாமை, என்பவைகளையோ, களிப் பாற் போக்கினர்; பிறரின் மேம்பாட்டைக் கண்டு பொறுக் காமையை, அசூயை யின்மையால் (பிறரது குணத்தில் தோடந் தோற்றுவியாமையால்) ஒழித்தனர்; தன்னை மேம் பாடாக மதித்தலையும், கருவத்தையும், தன்னில் மேம் பட்ட குணங்கள் உள்ளன என்று நெடுநாட் சிந்தித்தலால் நீக்கினர்; ஆசை யென்பதோர் பேயையும், திருப்தி யென்னுங் குணத்தால் துரத்தினர். (65)

எவர், தனதருகில் வாழுகின்ற நல்லார்களென்னும் மாணுக்கர்களின், சுவர்க்கம், முத்தி, என்பவைகளை (அடையாது) கெடுக்குங் காமத்தை, முழுதும் ஒழித் தனரோ, அன்றியும், தோஷ மனைத்தையுங் கொடுக்குஞ்

சினத்தைப் பொடியாக்கினரோ, அது தவிர்த்தும், மற்றைய உலோப முதலியவைகளையும், துரும்பைக் கிள்ளுமாறு, கிள்ளி யெறிந்தனரோ, அத்தன்மயை சங்கரபகவற்பாதரை, எவ்விதத்தால் விதந்தோத முடியும் ? (66)

திக்குக்கள், என்னும் ஆண் யானை பெண் யானைகளின், கடா விடைகளில், பெண் யானையின், வினா :—கொழுந? பகற் பொழுதில், மிகுந்த வெயிலினது உயிர் நிலையைக் கெடுப்பனவாகத் தோற்றப்படுமிவை, சந்திரனுடைய நிலவுகள் தானோ? (பகற் போதில் சந்திர நிலவு பொருந்தாமையின்) மற்றெவைகளோ ? (ஆண் யானையின் மறுமொழி :—) தருணை முடையாளே, அவைகள் பரசிவனது புதிய அவதாரமாகிய சங்கரபகவற்பாத தேசிகரது,குணக் கூட்டங்களேயாம். அற்றேல், (சந்திரனுடைய நிலவால் மலருகின்ற) நீலோற்பல பூக்கூட்டங்கள், எதனால் விரிந்தன ? பெண்மணியே, இவைகள் நீலோற்பல மலர்களல்ல, மற்றோ, சங்கரபகவற்பாதருடைய குணத்தின் கூட்டங்களால் வியப்பு மிகுந்த, திக்குக்களென்னும் மாதர்களின் கடை விழி நோக்கின் பெருக்குக்கள் என, திக்குக்களிலுள்ள ஆண்யானை, பெண்யானைகளின், வினாவிடைகள் விளங்குகின்றன. (67)

“ஒருபோதும், தேனைக் கண்ணாலுங் காணுதவர்களும், அடிக்கடி திராட்சை பழங்களைப் பார்க்கின்றார்களல்லவா ? பார்த்து, (திராட்சைப் பழங்காள், நீவிர் மதுர மிக்குள்ள சங்கர பகவற்பாதரது குணக்கூட்டங்களொன்னும்) இதினின்று மதுரத் தன்மையைத் தேடிக்கொள்வீர்களாக, என, அறிவுறுத்துகின்றார்களோ, பால், கருப்பு, என்பவைகளை, அருவருத்துத் தள்ளுகின்றார்களோ, அத்தன்

மைய சங்கர பகவற்பாதரது அடியாள்கள் என்னும், பல திசைகளின் எல்லைவரை, கடப்பதில் மிக விரைவுள்ள அக் குணக் கூட்டங்களின் மிக மதமலிந்த மதுரத்தன்மையின் வரிசைகள், முழுதும் மிகப் புகழத்தக்கன (தன்னியங்கள்) எனக் கருதுகின்றேன். (எல்லாச் சுவையினுஞ், சிறந்த மதுரச் சுவையுடைய சங்கர பகவற்பாதரின் குணக்கூட்டங்கள் மிகப் புகழத்தக்கன, பெரும்புண்ணிய முடையன, என மதிக்கின்றேன், என்பது பொருள்). (68)

முனிவர்களுக்கோர் முடி மணியாகிய சங்கர பகவற்பாதரின் பொறுமையைக் கொள்ளுங்கால், மகத்தாகிய தரை, (யான் அனைத்தையும் பொறுத்துக் கொள்ளுகின்றேன், என்னும் புகழ் விடற்பாலதாம்). கல்வியைக் கொள்ளுங்கால், முருகக் கடவுள் முதலியோர்களுந் தமது செருக்கின் பெருக்கை சேர விட்டார்களாவார். வைராக்கியத்தைக் கொள்ளுங்காலோ, சுக முனிவரின் புகழனைத்தும் அருவருக்கற்பாலதாம். வீண் வார்த்தையை விரிப்பதிலென்னை? சங்கர பகவற்பாதருக்குச் சமமானவரை யாண்டுங் கண்டிலேம் என்பதாம். (69)

சங்கரபகவற்பாத முனீசுரரது யாதொரு திருமேனியுண்டோ, அது, தரைக்கொப்பாயதோர் சாதியுடையது போலும், (பூமி போலும்) தோஷமின்றிப் புகழ் மலிந்த கல்வி முதலியவைகளால் கலைமகளுக்கோர் விகற்ப வடிவம் போலும், (நெற்களால் வேட்க, அல்லது கோதுமைகளால் வேட்க என்பதில், நெல்லுங் கோதுமையும் விகற்ப வடிவமானதுபோன்று சரசுவதியுஞ் சங்கரபகவற்பாதரும் விகற்ப வடிவினரென்க), அன்பர்களுக்கு வேண்டியவற்றை முற்றச் செய்யுந் தன்மையால் இயல்பாகவே

கற்பகத்தருப் போன்றும், நடக்கின்றதோ, அத்தன்மைய சங்கரபகவற்பாத மூர்த்தியை, ஏனைய பிராகிருதர்களுடன் உவமை கூற, எந்த வல்லுநர், நாணமுடையார் போலாகார்? (ஆற்றலுடையா ரனைவரும் நாணுவர் என்பதாம்). (70)

அச் சங்கரபகவற்பாதருக்குச் சமமாக (இறந்த காலத்தி லிருந்த) பண்டைக் காலத்தார்களில் ஒருவரும் உண்டாயினரலர். நிகழ் காலத்திலுள்ளோர்களிலும், யாருங் காணப் பட்டிலர்; வருங் காலத்திலேனு முண்டாகுவாரோ? உண்டாகார். அரியதோர் மேருகிரிக்கு உரியதோர் உவமையற்றவாறே போல் என்க. (71)

சங்கரபகவற்பாதரால், அவரது குலம், மிக்க, அலங்கரிப்புடையதாயிற்று; சங்கரபகவற்பாதரும் சீலத்தால் (சாதுவாந் தன்மையால், அல்லது நற்சரிதத்தால்) மிக்க அணி பெற்றோராயினர். சீலமுங் கல்வியால் விளங்கிற்று; வித்தையும் வினயத்தால் (அடக்கத்தால்) நன்கு அலங்கரிப்புடையதாய் விளங்குகின்றது. (72)

புகழ்களென்னும் பூங் கொத்துக்களை யுடையதும், பண்டிதர்கள், அல்லது, தேவர்கள் என்னும் வண்டுக் கூட்டங்கள் மலிந்ததும், நற் குணங்களான தளிர்களை யுடையதும், தத்துவ ஞான மென்னுங் கனியை யுடையதும், பொறுமை யென்னும் இரசத்தை யுடையதுமாகிய பண்டிதர்களுக்கோர் பார்த்திபனென்னுஞ் சங்கரபகவற்பாதர், கற்பகத் தருப்போல் விளங்குகின்றனர். (73)

## சங்கர பகவற்பாதரின் திருவாக்கை வியத்தல்

கவிச்சக்கரவர்த்தி யென்னுஞ், சங்கரபகவற்பாதருடைய திருவாக்கின் திறத்தை வழிபடும்போது, பதஞ்சலி

முனிவரின் வாக்கும், ஓர் கணக்காகாது; கபில முனிவரின் வாக்கும், ஓர் எண்ணிக்கைப்படாது; கணாத முனிவரின் வாக்கும், ஒரு கணக்கைப் பெறாது; ஏனைய நாத்திக மதத்தர்களின் வாக்குக்கள் என்னும்? (74)

(சருவசங்கர வாதியாகிய) பட்டபாஸ்கரரால் கலக்கப் பட்டதால், கெட்ட நிலைமையை யடைந்து மூழ்கிப் போன மறை முடிகள், சங்கரபகவற்பாதரது திருவாக்குக்களால் (உபநிடதங்கள்) மேல் தூக்கிவிடப்பட்டன. அம்ம! அம்ம! அவ் வாக்குக்கள், வாக்கு மனங்களுக்கெட்டாத (அறுவகை பிரதங்களினும் மேலாகிய அத்துவிதப்பிரம அபேதவடிவ) அம் மதுர இரதத்திற் கிடமாகிய அமிருதத்தைப் பொழிகின்றன. (75)

பரசிவனது சடைகளென்னுமோர் சிறுமனையில் விளையாடும், தேவர்களுக்கிடமென்னும் வான் நதி, தரைக்கிறை வணங்கிய பகீரதனுக்குக் களிப்புண்டாக்கிக் கொண்டு, மண்ணிற் புதிதாயிறங்குதல், (கௌதமருக்குக், கோதாவரி வடிவாய் இறங்கியது பழைமையதாம்) அதினின்றும் புதிய இறக்கத்தாலுண்டாகிய, நிருமலத் தன்மை, வேகமாந் தன்மை, சீதலமாந் தன்மை, முதலிய அதின் கோலாகலங்களைத் தாழ்த்துபவைகளும், முழங்குபவைகளும், சங்கர பகவற்பாதரென்னும் மேருகிரியினின்று, எழுந்தவைகளுமான, அவரது வாக்குக்களான ஆற்றுப் பெருக்குக்களிருக்கும்போது, துர்ப்பிட்சுக்கள் (தீய துறவிகள்; நாத்திகர்கள்) என்னும், துர்ப்பிட்சத்தால் (வறுமையால்) எவ்விடத்தும் பயம் யாது? (யாண்டும் பயமின்றென்க). (76)

மன மென்னும் ஒரு மதகரியைக் கட்டுதற் குரிய (இருப்பு முளை போன்ற)தும், தத்துவ ஞான வடிவ

வேந்தனுக்கோர் தலை நகராகவும், தள்ளுதற்கரிய தீய வாதிகளின் பெருக்கத்தை, மிகத்தூரமா யொதுக்கத் தக்கதும், அறிஞர்களால், மாலையாக்கி (முத்து மாலையாக்கி) அணிந்து கொள்ளப்பட்டதும், கவலைப் பெருக்கென்னும் பஞ்சுகளுக்குக் காற்றோட்டமானதும், மறையை விளக்கும் நிபுணத் தன்மையாகவும், பவக்கடலைக் கடக்க, ஓடமாகவுமுள்ள மிக விளங்குகின்ற சங்கரபகவற்பாதருடைய திருவாக்குக்கள், புறப்படுகின்றன. (மேலான வாக்குக்களினின்றும் மிகவும் மேலாய் விளங்குகின்றன, என்பதாம்). (77)

விவாதமென்னுங் கதையாடுவதிற் கருவமலிந்த வாதிகளுக்குள், மிகுந்த புத்திமான்களின் (வாதமிட) தினவெடுத்துள்ள நாக்கள், நாபியிலுள்ள மூலைகளுடன் கீழ் வீழ்வதற்கு, இயல்பாகிய மந்திரமும், மறைமுடிகளென்னும் மரை மலர்களின் நறு மணமானதுமாகிய சங்கர பகவற்பாதரின், அத்துவித வெற்றியாகிய இலக்குமியின் விருது மணியாற் கண, கணவென்று ஒலிக்குந் திருவாக்குத் தொடர்பு வெற்றி பெற்று விளங்குகின்றது. (78)

கஸ்தூரி, பச்சைக் கற்பூரங்களின், நறுமணத்தை யணைந்து கொள்ளுவதிற் பிரிய முண்டாவது போல பிரியங் கொடுப்பதும், முத்தாபப் பெருக்கை முடிவாக்குவதும், தண் மதியின் ஆணை (யானே தாபத்தைப் போக்கித் தண்மையைக் கொடுக்கின்றேன், என்னுங் கரு)வத்தை முழுதுமொழிப்பதும், திராட்சை, தேன், சர்க்கரை, என்பவைகளின் மதுரத் தன்மையின் பெருக்கினும் மாறுபடாததுமாகிய முனிவர் தலைவராகிய, சங்கரபகவற்பாதரின் திருவாக்குக்கள், களிப்பை யுண்டாக்கமாட்டாதன, என்பதெவ்வாறும் ? (79)

தமது ஆணவத்தை மேற்கொண்ட தீய விகற்ப வாதிகளின் சம்பந்தமிலாததும், பேத வாதிகளின் முள் வழிகள் நீங்கப் பெற்றதும், (சாதன முடையார்களென்னும்) பேரறிவாளர்களான வழிச் செல்வோர்களாற் சூழப் பெற்றதுமாகிய அத்துவித முத்தி யென்னும் இராச மார்க்கத்தில், சங்கர பகவற்பாதரின், இயல்பாகவே புத்தமிருதந் தெளித்த திருவாக்குக்கள், தேன் பெருகி யொழுகுந் திருமலர்களின் தோரணங்கள் என்னுமொரு கற்பனையைப் பெருக்குகின்றன (நன்னெறியாகிய அத்துவித மார்க்கத்திற் செல்வோருக்கு அழகு தருந் தோரணங்கள் போன் றிருக்கின்றன, என்பது பொருள்). (80)

தீயோர்களின், மாறுபட்ட யுத்திகளென்னுந் தூளி படலங்களைத் தூரத்திற் கொண்டு போவனவும், மிக்க மழை முதலிய இடையூறுகளில்லாதனவும், மங்கலந்தருங் குணக் கூட்டங்களுக்கோர் ஆலயமானதும், இலக்குமிக்கோர் இனிய கோவிலானதும், விளங்குகின்ற நறு மண நல்லழகால் வலியுடையதுமான சங்கர பகவற்பாத தேசிகரது திருவாக்கு மயமான வாயுக்கள், புத்தி யென்னும் புதர்களுள்ள சம்சாரமென்னும் அடவியில், மனோ வியாகூலத்தால் வரும் எனது தீய களைப்பைப் போக்குகின்றன. (81)

சங்கரபகவற்பாதரது திருநாவின் நுனியாகிய அரங்கில் நடிக்கின்ற கலைமகளின் காலிலணிந்துள்ள சதங்கைகளின் சத்தங்களோ, என்னை? இடுப்பிலணிந்துள்ள மேகலையின் ஒலிகளோ, என்னை? அங்கைக் கமலங்களிலணிந்திருக்கின்ற அசையுங் கங்கணத்தின் அரவங்களோ, என்னை? என, சங்கரபகவற்பாத தேசிக கவி யரசனின்

தெளிந்த யுத்திகளையுடைய திருவாக்குக்கள் இவ்வாறு ஐயப்பாட்டை யுண்டாக்குகின்றன. (82)

மழை தொடங்குங்கால் சூழ்ந்துள்ள மேகங்களின் முழக்கத்திற் கொப்பானவைகளும், சுழற்காற்றால் விரைவி லெடுத்தெறியப்பட்ட கடலலைகளின் கருவத்தை யொழிப் பனவும், இனிது மலர்ந்த புதிய மல்லிகைப் பூக்களின் நறு மணத்தின் ஆணவத்தைத் தொலைப்பனவும், பயமற் றனவுமாகிய, சங்கர பகவற்பாத யோகீந்திர தேசிகரது திருவாக்குப் பெருக்கின் முறைகள் அழகுபெற்று விளங்கு கின்றன. (83)

செய்யுள் வடிவமலாது இயற்றப்பட்டதாயினும், (வசன வடிவா யிருப்பினும்) மனோரம்மியமானதும், அஞ்ஞா னத்தை யகற்றுவதும், உண்மையை யுரைப்பதும் (அல் லது உலகம் மித்தை யெனத் துணிபுறுத்துவதும்), அமிரு தம்போன்று நன்கு சுவைத்தற்குரியதும், கல்விச் செருக் குள்ள (பேத வாதிகளான) சத்துருக்களின், ஆசங்கைகளை யழிப்பதில், வச்சிராயுத மொத்ததும், (மற்றைய வாதி களின் யுத்திகளால்) கலக்கப்படாததும், கல்விக்கோர் களஞ்சியமும், பயனோடு கூடிய செய்கை யுடையதும், அழ கிய சரித முடையதும், உடம்பு பற்றி வருதன் முதலிய முத்துன்பங்களைக் காரணத்தோடு களைவதும், முத்தியென் னும் பதவிக்கோர் மரமெனப்படுவதுமாகிய, சங்கரமுனி வரின் மிக்க வெளிப்படையான பாடியங்களென்னுந் திரு வாக்கு, இப்போது, அஞ்ஞானத்தை வடிவ வியாதியைப் போக்கி யருள்வதாகுக. (84)

தூக்க மென்னுந் தரு எழுவதற்கோர் புதிய முளை யும், உறுதியான மனோ தாபத்திற்கு நற் காரணமும், இலை

சங்களுக்கு முன்னேயுள்ள அரங்கும், குற்றங்களுக்கு இனிய நாடகந் தொடங்குங்காலுள்ள பேரொலியும், பொய்யாகிய மூல கருமத்தின் பெருக்கிற்கு, வீடும், அல்லது விளை நிலமும், ஆகிய, உடம்பு முதலியவைகளிலுள்ள பேராணவத்தை, சங்கரபகவற்பாத முனிசேகரரது திருவாக்கு, நாசஞ் செய்கின்றது. (85)

சுழற் காற்றால் அலைக்கப்பட்ட சுரநதியின் பேரலைகளினுடைய அதிசயத்திற்கு முழுதுமொப்பாய், இடையறாதெழுஞ் சங்கர பகவற்பாதரின், திருவாக்கின் பெருக்குக்கள், பல வகைப்பட்ட கெட்ட பொய் மதங்களென்னும் தூளிபடலங்களின் உயிர் நிலைகளைத் துணிப்பனவாம். அவைகள், எமக்கெழுகின்ற கெடு மதி முதலிய தீய ஞானங்களாலுண்டாகும் அடக்க மிலாமையைப் போக்குகின்றன. (86)

மலர்ந்த புதிய மல்லிகை மலர்களின் நறு மணத்தைப் பெறுவதில் எழும் பிரியத்தினும், மிகுந்த பிரியத்தையுண்டாக்குவனவும், மந்தார தருவின் மலர்க் கொத்துக்களிலிருந்து, ஒழுகுந் தேன் சுவையினும், மேம்பட்டதுமான, கரையிலாக் கருணைக் கடலென்னுஞ் சங்கரதேசிகரால், அன்புடனருளப்பட்ட திரு வாக்குக்கள் அம்ம! அம்ம! நன் மனதை இரமிக்கப் பண்ணுகின்றன; விரைவிற் களிப்பையுந் தருகின்றன. (87)

பிரவாகமா யெழுகின்ற பேரின்பானுபவத்தைக் கொடுக்கும், சங்கரபகவற்பாதரது பெருகிய திருவாக்கின் அமிருத மிகுதிப்பாட்டில் விளையாடி விட்டு, பேதவாதிகளின் வாக்குக்களில் மீண்டும் விளையாடுவோர் மூட

ரொழிய மற்றி யாவர்? (மூடரே விளையாடுலரென்க) எதைப் போலெனின், வியப்பைத் தரும் பொன்மய ஆடை யுடுத்திஞேர், அழுக்கு மலிந்ததும், கெட்டதும், பழைமையதுமாகிய, கந்தையை, உடுக்கவேண்டும் என மனதிலும் விழைவரோ? (விரும்பார் அதுபோ லென் பதாம்). (88)

அத் தன்மைய சந்திரனென்னுஞ் சங்கரபகவற்பாத முனிவரது திருவாக்கில் மிகுந்த பழக்கமும், அத்துவிதக் கருத்தும், அறிவு மிகுதியுமுள்ள அந்தக்கரணமுடையார், பாலை, உப்புச் சுவை யெனக் காண்பார்; தேனை விரும்பார்; வெள்ளிய சர்க்கரையைக் காரமுள்ள பொடி யெனக் கண்டு தரையின் மீதெறிவர்; கரும்பைக் கண்ணாலேயே காணார், திராட்சையைக் காணச் சிறிதும் விரும்பார்; அற்பமாகிய வாழைக் கனியை மோத்தல் செய்யார், (சங்கர பகவற்பாத ரின் வாக்கென்னும் அமிருதத்தை யுண்டு, திருப்தியடைந் தார்க்கு எவ்விதக் கனிகளிலும் விருப்பெழாதென்பது கருத்து). (89)

சங்கர பகவற்பாதரின் திரு வாக்கினுடைய பெரிய ஐசு வரியத்திற்கு, தேனால் தனது மதுரச் சுவை விற்கப்பட் டது; திராட்சையால்; தனது மதுச்சுவை அன்போடு கொடுக்கப்பட்டது; பால்களால், தங்கள் இன்சுவை, (தானத் திற்கு) நல்ல பாத்திரமென்னும் புத்தியால், அளிக்கப்பட் டது, போரில் வெற்றிகொண்டமையாற் கரும்பின் மது ரத் தன்மை, கட்டாயத்தாற் பெறப்பட்டது; அமிருதம் தனது தீஞ் சுவையைக் கள்ளர் பயத்தால் இதன்பால் வைத்துவிட்டது, அம்ம! அம்ம! அதனது பெரிய அதிசயத் தன்மை மற்ருேரிடத்திலுங் காணப்படவே யில்லை. (90)

எந்தத் திருவாக்கின் நறுமணம், கர்ப்பூரத்தாற் கடன் வாங்கப்பட்டதோ, கற்றுக்கொண்டு கஸ்தூரியாற் சம்பாதிக்கப் பட்டதோ, பலநாளுந் தொண்டு செய்து மல்லிகையாற் பெறப்பட்டதோ, குங்குமப்பூவால், விலைக்கு வாங்கப்பட்டதோ, சந்தனத்தருவால், களவால் அடையப் பட்டதோ; அத் தன்மைய சங்கர பகவற்பாதரின் திருவாக்கின் மகத்தாந்தன்மை வழுவாது ஆராதித்தற் குரியதாம். வேறோர் உவமையுமற்ற அந்த நறு மணத்தின் மாகான்மியம், பெருஞ் சிறப்புடையதாம் (தன்யமாம்). (91)

(சங்கரபகவற்பாதரது திரு வாக்கின் சுவையைச் சார்வதன்) முன்னம், யான் உண்ண விரும்பிய தின் பண்டங்களை யுண்டேன், பாலையும் பல நாளருந்தினேன்; கரும்பையுந் தின்றேன், திராட்சையையு மருந்தினேன், தேன் இரதத்தையுஞ் சுவைத்தேன்; மலர்த் தாதையும் அருந்தினேன்; வாழைக் கனியையும் உண்டேன்; இப்போது, எவற்றினுஞ் சிறந்த சங்கர பகவற்பாதரது மதுரச்சுவையின் மகிமையையு மநுபவித்தேன்; அவ் வுண்பொருள் முதலியவைகளாற் பயன் என்னை? (அவை யாவும் சுவையற்றவைகளென்க, எதனாலெனின்?) அம்ம! அம்ம! (சங்கரதேசிகரின் திரு வாக்கினுடைய மதுரச் சுவைத் தன்மையோ,) அமிருத சாரத்தின் மதுரச் சுவையினுடைய அவதிக்கும் மேம்பட்டதா லென்க. (92)

பவ வெப்பால் மிகச் சுடப்பட்டவர்களுக்கு அரிய கர்ப்பூரமழையும், முத்தி யென்னுமோர் இலக்குமி மாதுக்கு இயற்கையில் நிருமலமாகிய முத்துக் கொடியும், அளவற்ற அத்துவித ஆன்மானந்த மழையால் நிரம்பிய தடாகத்திற்கோர் அன்னமுமாகிய சங்கரபகவற்பாதரின் தெய்

வீகத் திருவாக்குப்பெருக்கு புத்தியைச் சுத்தஞ் செய்தற் பொருட்டாகுக. (93)

மதி யணி முடியோனின் அவதாரமாகிய சங்கர பகவற்பாத தேசிகருடைய திரு வாக்கென்னுமோர் கொடி, மறையின் முடிகளென்னும் மதிற்சுவர்களை யுடையதும், மிக்கப் புநிதமான, சுரேசுவர், பத்மபாதர், முதலியோர் களின் இன்சொற்களான நீர்கள் விடப்பட்டதும், முத்தி விருப்பென்னும், இலைகளையுடையதும், விபுதர்க (தேவர்கள் பண்டிதர்க) ளென்னும் ஆச்சாமரக் கூட்டங்களிலேறிய தும், மெய்ஞ்ஞான மென்னும் பூ வுள்ளதும், சுயம்பிரகாச மாகிய அமிருத வடிவப் பிரமானந்தம் என்னுமோர் கனி யையுடையதும், அந்தணர்களால் வழிபடத் தக்கதுமாம். அது எமக்கு வழிபடத்தக்கதாகுக. (94)

நடிக்கின்ற பரசிவனது அசையுஞ் சென்னியில் ஒலித் துக்கொண் டிருக்கின்ற கங்கையுடன் பொருமையுடை யதும், அமிருத நதியின் கெடாத கரையினின்றெழுங் கிளைக ளென்னும், சிற்றாறுகளின் முறையை யுடையதும், (வரலாற்றை யுடையதெனினுமது) மறையின் வரம்பைக் கடந்த பேத வாதிகளின் மதத்தின் பரிணாமமான ஆணவங் களைப் பழித்துத் தள்ளுவதும், உபநிடதங்களென்னுமோர் நதியில் இடையறாது நீராடுவதுமாகிய, திரு வாக்கால், சங்கரபகவற்பாத தேசிகர் விளங்குகின்றார். (95)

ஆணவமுள்ள வரிசையான தேவர், அசுரர்களின், கைகளாலிழுக்கப்பட்டதாற் சுழலுகின்ற மா மேரு கிரியாற் கலங்கப்பட்ட பாற்கடலின் அலைகள்போன்ற திருவாக்குக்க ளால் அமிருத மழை பெய்தலின், மிகச்சூடுள்ள சமுசார

மென்னும் அக்கினிச் சுடர்களாற் சூழப்பட்ட மாந்தர்களுக்கு, மேகமாகிய சங்கரபகவற்பாத தேசிகர், தோத்திர வாக்கியங்களுக்குப் பாத்திரராகாரென்பது எவ்வாறு! (ஒரு தலையாகத் துதிக்கத் தக்கோரே என்பது கருத்து)? (96)

சங்கரபகவற்பாதரின் பெருமையை விதத்தல்

பாற்கடலுடன், மயிர்பிடிபோரில் வலிவுள்ளதும், கலைமதியுடன், கதை யென்னுமோர் ஆயுதங் கொண்டு போராற்றுவதிற் பிரிய முள்ளதும், கைலையங்கிரியுடன் தோட்சண்டை யிடுவதுமாகிய, சங்கர பகவற்பாதரின் அப் புகழுடன் கூடிய வல்லுநத்தன்மை விளங்குகின்றது. (97)

(பரிசுத்தமானது யாது? என்னும்) பேச்சு வருமிடத்து, (ஒருவர்) சங்கரபகவற்பாத தேசிகரது புகழே, பரிசுத்தமானது, மதியில் ஓர் களங்க முள்ளதால் என்றனர். அதுபற்றியே, சங்கரபகவற் பாதரது தோஷமற்ற கீர்த்தியால், களங்கமுள்ள சந்திரன் வெல்லப்பட்டோனானன். அற்றாகலினன்றே, சந்திரன், தனது கலங்கத்தைப்போக்க இதுபோதுங் கடலில் மூழ்குகின்றான். பரசிவனையும் வழிபடுகின்றான். (என்றார் மற்றொருவர்). (98)

வானளாவியுள்ள சங்கரபகவற்பாத முனீசுரருடைய புகழ்கள், திக்குக்களென்னும் மாதர்களின் மயிர் முடியில் மல்லிகைக் கொடியின் புதிய பூக்களின் மாலைகளைக் கற்பனை செய்வதிற் சிற்பியாயிருக்கின்றன; மற்றும் அம்மாதர்களின் புருவ நடுவில் மங்கலந் தரும் சிகண்டமென்னுஞ் சந்தனக் குழம்பாற் சித்திரங்களையும் வரைகின்றன; திக்குக்களென்னும் அம் மாதர்களின் கழுத்தில் நட்சத்திரமாலை

போன்ற அழகியதோர் ஆரத்தை (கொடியை) யுண்டு பண்ணுவதில் வல்லனவா யிருக்கின்றன. (99)

சங்கரபகவற்பாத தேசிகரது நற்குணக் கூட்டங்களென்னுமோர் சந்திரனுடைய பேரழகு, உலகமூன்றினும் பெரும் வியப்பாயிருக்கின்றது. (யாதினுலெனின்?) (புகழென்னும் இச் சந்திரனை) திக்குக்களென்னுந் தெரிவையர்கள், தமது உடம்பிற்றரித்துக் கொள்ளுகின்றார்கள், (வான்மதியையோ இவ்வாறணிகிலர்) ; உடுக்கணங்கள் தமது கிரணங்களென்னுங் கைகளாற்பிடித்து வான்மதியை இழுக்கின்றன. (விண்மதியோ, முறையாய் இருபத்தேழு) நட்சத்திரங்களிற் செல்கின்றதாமாதலின், இங்ஙனமன்று) ; வான், அம் மதியை இச்சையால் தழுவிக் கொண்டு முத்த மிடுகின்றது, (வெளிமதியோ) ; ஆகாயத்தில் நிலைத்திருக்காமையின் இங்ஙனமன்று, வான் கங்கை, அதைத் தழுவிக் கொள்கின்றது, (விண்மதியோ) இங்ஙனமன்று ; உலோகாலோகமென்னும் பருவதக்குகை (புகழென்னுஞ் சந்திரனற்) களிப்படைகின்றது ; (விண்மதியோ அங்ஙன மன்று. ஆண்டுச்செல்ல முடியாமையின்), சேடன் என்னும் நாகமும், அதற்குப் பிரியத்தைக் கொடுக்கின்றது ; வெளிப்படைச் சந்திரனுக்கு இங்ஙனமன்று. (இவ்வாறு பிரசித்தியாகிய சந்திரனி (வான்மதியி)லும் சங்கரபகவற்பாதருடைய புகழென்னுமோர் சந்திரன் மேற் கூறியவாங்கு வேறுபாடுடையதாயிருத்தலின் மூவுலகத்திலும் அது வியப்புடையதாமென முடித்துக் கொள்க). (100)

முனிசேகரருடைய (சங்கரபகவற்பாதருடைய) புகழ்களென்னும் பாற்கடலின் அலைகள், திக்குக்களின் எல்லை

வரையும் நாற்புறத்தும் விளக்கமாயின ; சந்திரனுடைய நிலவை நோக்கி மிக நகைக்கின்றன. தீய மதங்களென்னும் அமிருதத்தை, (தீய மதங்கள் அமிருதம்போன்று உருசியாயிருந்தன, என்பதை) அதாவது வல்லுநத் தன்மையை, யாண்டுங் காணுதொழிவதைப் பெருக்குகின்றன (முழுதுங் காணுமற்றொலைக்கின்றன வென்பதாம்). உலகத்தை மறைத்த அஞ்ஞானக் கூட்டத்தையும், அடியோடு தொலைக்கின்றன. (101)

ஊக்கத்துடன் கூடிய, நீக்கற்கரிய சிம்மத்தின் சிறந்த நகங்களாற் பிளக்கப்பட்ட மத கரியின் மத்தகத்தினின்றும் விழப்பட்ட முத்துக்களான மணிக் கூட்டங்களின் அழகால் கட்டுப்பட்ட தோட்சண்டையாகிய விளையாட்டைச் செய்வதும், மா மேரு பருவதத்தாற் கலங்கிய பாற்கடலின், மிகச்சலிக்கும் பேரலைகளுடன், அன்பு பாராட்டுதற் குரியதுமாகிய நீத்தார்க்கரசரின் (சங்கரபகவற்பாதரின்) புகழ் எவற்றினும் மேலாய் விளங்குகின்றது. (102)

(நீலோற்பலம் உலோகாலோகம் என்னுமொரு பருவதத்தின் குகையென்னும் பெண்ணை நோக்கி வினவுகின்றது :—) உலோகாலோகமென்னுங் குகையே! நீ களிப்புடையவளாக நெடு நாளாக இருக்கின்றனைகொல்லோ ? அற்றேல், சங்கரபகவற்பாத தேசிகரது, நன்கெழுந்த புகழென்னுமோர் சந்திரனைத் தழுவியதால் மகிழ்வுற்றாய் போலும்? (பின்னர், நீலோற்பலத்தை உலோகாலோக குகை வினவுதல் :—) நீலோற்பலமாய பெண்ணே, நீ, நீண்ட காலமாய் மகிழ் வுற்றிருக்கின்றனையே அதன் காரணம் யாது ? என அவ்விரண்டும் ஒன்றற்கொன்று வினவியதற்கு, அவைகள் முகமலர்ந்ததே விடையாயிற்று. (103)

நீக்குதற்கரிய பெருஞ் செருக்குள்ள இனிமையற்ற பேத வாதிகளென்னும் பஞ்சுச் செண்டுகளுக்கு வேகமுள்ள காற்றானதும், கேடிலாத தத்துவஞான மென்னுமோர் சந்திரனுதிப்பதற்கு ஆழ்ந்த பாற்கடலானதும், தடையிலாது பரவும், சம்சாரமாகின்ற காட்டுத் தீயாலுண்டாகும் பெரும் வெப்பத்திற்கு மேகமானதுமாகிய, இத்தன்மைய பரந்த புகழை யுடையவரும், சிறந்தவரும், நீத்தார்களுக்கு இறைவருமாகிய சங்கரபகவற்பாதர், உலகில் கவனத்தோடிருக்கின்றார் (அஞ்ஞானத் தூக்கத்தினின்றும் விழித்துக்கொண்டிருக்கின்றனர்). (104)

## எல்லா முணர்தற்றன்மையை விதத்தல்

(மா பாரத முதலிய) இதிகாசங்கள், புராணங்கள், (சநத்சுசாதீயம், கீதை, சகத்திரநாமம், என்னும்) பாரத மிருதிகள், (உத்தரமீமாஞ்சை முதலிய) சாத்திரங்கள், எனப்படு மிவைகளைக் களிப்புடன் மீண்டும், மீண்டும், அறிஞர்களுடன் இனிதாராய்ந்து கூரிய மதியுடைய சங்கர பகவற்பாதர், சருவக்ஞத்தன்மையைப் பெற்றுக் கொண்டனர். (105)

அஃதன்றியும், அச் சங்கரபகவற்பாதர், மறித்தும், மறித்தும், அன்புடன் (மும்மறைகளின் முடிவானதால்) வியாசபகவானருளிய சிறந்த சாந்திபருவ வாக்கியங்களை ஆராய்ந்து பார்த்தனர்; பார்த்து எல்லா முணர்தற்றன்மையை யடைந்தது போன்றே உபசாந்தத்தாலுண்டாகிய பரிசுத்தத்தன்மையையும் அடைந்தனர். (106)

(சங்கரபகவற்பாதர்) சதுர் முகராயிருந்தும், (சதுர்-சாமர்த்தியம் அதாவது வல்லுநத்தன்மை எனவே வலிய முக முடையராயிருந்தும்) உலகமிலாதவராயினர், சதுர்

முக (தலைநான்குடைய) பிரமனோ, பிரபஞ்ச முள்ளவனு யினன், இவர் புருடோத்தமரா யிருந்தும், போகயோக மிலாதவர், (புருடோத்தம ரென்னும் விட்டுணுவோ, (போகம்=ஆதிசேடன், யோக=துயிலல், அதாவது) ஆதி சேடன்மீது பள்ளி கொள்பவர், இவர் காமனைக் கடிந்தவரா யிருந்தும் மாறுபட்ட நோக்குடையாரல்லர், மற்றோ, அத்து வித நோக்கால் நல்ல நோக்கையே யுடையவர். காமாந் தகனாகிய பரசிவனோ, காமனைக்காய விகார நோக்குடைய ராயினன். இத்தன்மைய அரிய அத்துவித வித்தியா குரு, மண்ணிடத்து விளங்குகின்றார். (107)

பிரமசாரிகளின் வருக்கத்திற்கோர் அணியாயிருந்தும், தமது திருமுக மென்னும் ஒரு பெருந்தாமரை மலரால், கலைமகளைத் தாங்கிக்கொண்டிருக்கின்ற சங்கர பகவற் பாதரை, அருகில் வந்துள்ள அறிஞர்கள் நோக்கி, உலகில் இவர் பிரமனோ? என ஐயப்படுகின்றார்கள். இச் சங்கர பகவற்பாதர், சாந்தி யென்னுமோர், இலக்குமியை, எப் போதுந் தரித்துக் கொண்டிருத்தலின், இவர் விசுவம்பர ராகிய விட்டுணு மூர்த்தியோ? என்றும் ஐயப்படுகின்றார் கள்; அவ்வாறே, ஆரியாளால் பார்வதியால் அல்லது தேவர்களால் ஆராதிக்கப்பட்ட மிக்க மிருதுவாகிய திரு வடிக் கமலங்களையுடைய (இவரைக்கண்டு) இவர் தேவ தேவனாகிய பரசிவனோ எனவும், ஐயப்படுகின்றார்கள். (108)

ஒன்றாகிய (அத்துவிதீயமாகிய) பரமான்மாவினிடத் தில், (ஒருவராகிய பகவான் இராமச்சந்திரரிடத்தில்) ஆனந் தத்தோற்ற முதலியவைகளுமற்று (நித்தியமாகிய) சத்துத் தன்மையை (இன்பவடிவாய் யோனிவாய்ப்பட்டுப் பிறவாத சத்துத் தன்மையை=சீதையை) மாயாபிட்சுக்க ளென்னும்

க்ஷணிக விஞ்ஞானவாதிகளால் (மாயாபிட்சுவாகிய இராவணனால்) க்ஷணிகம், என்றே கொள்ளப்பட்டதை (கவர்ந்து கொண்டு போகப்பட்டவளை) அநேக ஆன்மாக்களிடத்துச் சம்பந்தமாய், பின் பிராந்தியால் இடையூறடைந்த அந்தச் சத்தாத்தன்மையை (இராவணன் முதலிய பல இராக்கதர்களுடைய விருப்பு இவள்பால் இருக்கின்றது, என்னும் பிராந்தியால் தீயிலிறங்கல் முதலிய இடையூற்றை யடைந்த அச் சீதையை) புதர் = விவேகத்திற்குப் பகைவர்களான அந்த க்ஷணிக விஞ்ஞான வாதிகளை (புதர் = தேவர்கள், அவர்களுக்குப் பகைவரான இராக்கதரை) உணர்வு, கணப்போதுள்ளதா மெனின்? முன் அநுபவத்தின் மிருதி அமையாது, என்பது முதலிய யுத்திகளால் வென்று, (போர்செய்து வென்று) அன்போடு நீண்ட நாள் உடன்பட்டுவந்த சத்தை, ஒன்றே சத்து அதுவும் நித்தியமேயாம், என நிலை நாட்டிய (சீதாபிராட்டியாரை நன்கு கொண்டுவந்த) இராமச்சந்திரனாய் அவதரித்து மூன்றுலகத்தையுங் காப்பாற்றும் அப் பரசிவன், எங்களுக்கோர் தவ வடிவச் சங்கரபகவற்பாதராய் எழுந்தருளி யருள் செய்கின்றான். (சிவன் இராமபிரானாய் அவதரித்தமை கந்தபுராணத்திற் காண்க). (109)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கர திக்குவிசயச் சுருக்கத்தில், சங்கரபகவற்பாதரது,
எட்டாவது வயது, வரும் வரையிலுள்ள
சரிதத்தை மேற்கொண்ட நான்காவது சருக்கம்

முற்றும்.

———

# ஐந்தாவது சருக்கம்.

## சங்கர பகவற் பாதர் துறவடைதல்

இவ் வண்ணம், ஏழாமாண்டில், சாத்திரங்களனைத்தின் கரையைக் கண்ட பிரமசாரியாகிய சங்கரபகவற்பாதர், குருகுல வாசத்தினின்றுந் திரும்பிவந்து பெரும்புகழுடையராய், அன்னையாருக்குத் தொண்டு புரிந்தும், சாத்திரங்களை யோதியும், சிறந்த மநுக்களால் நியமித்த, இரவி, தீக்களின், இரண்டு வேள்வி வடிவ, ஆராதனையைச் செய்து கொண்டும், பாலசங்கரர் அருணன் போன்று வளர்ந்து வந்தனர். (1, 2)

இப் பாலசங்கரரைக் கண்ட (முனிவுக்கிடமான) காளைப் பருவத்தர்களும், முனிவு கொள்ளார் (வழிபடத் தக்க) மிக்க மூத்தாரும், தமது ஆசனத்தை, (இவருக்கு) அளிப்பார். அக் கணத்திலேயே மாந்தரனைவரும், அவருடைய வயத்தராய்க் கையிரண்டையுங் கூப்பிக்கொண்டு வணக்க முறையாய் வணங்குவார்கள். (3)

மற்றும், இம் மைந்தனது, இன்சொல், நன்னடை, நுண்ணறிவு, ஆற்றல் முதலியவைகட்கிடமாகிய சிறந்த திருமேனி, என்னும் இவ்வனைத்தையுங் கண்டு, அவ்வன்னையாரும், தடையற்ற இன்புற்றனர். (4)

## சங்கர பகவற் பாதர் நதியை வரவழைத்தல்

ஓர் கால், தவத்தால் மெலிந்த வுடம்புடையாராதவின், மெல்ல நடக்கின்ற, இவரது அன்னையார் கடலிற் கலக்குமோர் நதியில் நீராடச்சென்றனர் ; ஆண்டு அவ்வம்மையார் இரவியின் முதுவேனிலாற்சோர்வுற்று, (இல்

விற்கு வரும்) வேளை கழிந்தபோது, சங்கரபகவற்பாதர் அவரைப்பற்றிய ஐயமுடையாராய்ச் சனங்களோடு அவ் விடஞ்சென்று (சோர்ந்த அவ்வம்மையாரை) தெளிந்த நீ ரால் நனைக்கப்பட்ட தாமரை மலர்களால் வீசி, சோகத் தைப் போக்கி, அன்னையாரை இல்லிற்குக் கொண்டுவந்து சேர்த்தனர். (5, 6)

பின்னர், பிழையற்ற நற்சரிதமுள்ளவரும், இருடிக ளுக்கிறைவருமாகிய சிவகுருவின், செல்வப் புதல்வராகிய சங்கரபகவற்பாதர், உண்மையாகிய, பொருள், அணிகளை யுடையனவும், கவிஞருள்ளத்தைக் களிக்கச் செய்வனவுமான சுலோகங்க (விருத்தங்க)ளால், அந் நதியைத், தமது வீட் டிற் கருகிற் கொண்டுவர வேண்டுமெனத் துதித்தனர். (7)

(துதித்தபோது, அந்நதி ஒருருவாய்த் தோன்றி) " சங்கர, நீ இளமை தொட்டே உலகிற்கு இனிய செய்வதில் விருப்புடையோனாதலின், நினது விருப்பம் நெருநலில் முடியும் " (என வரங்கொடுக்க) அவ் வரத்தை நதியி னின்று பெற்றுக் கொண்டு, வாக்குண்மை யுடையவரும், அடக்க மதியுள்ளவருமாகிய சங்கரபகவற்பாதர் தமது மனைக்கு வந்து விட்டனர். வரவே, விடியுமுன்னரே அங் குள்ளார்கள், குளிர்காற்று லெடுத்தெறியப்பட்ட நீர்த்திவலை களாற் புனிதர்களாய், திருமாலின், ஆலயத்திற்கு மருங்கில் மிகப் பெருக்கெடுத்தோடும் புதியதோர் நதிபோல், அந்நதி யைக் கண்டார்கள். (8, 9)

## கேரள தேசத்தரசனது மந்திரி வருகை

மநுடத் தன்மையைக் கடந்த (தெய்வத்தன்மையுள்ள) இத்தன்மைய சரிதத்தை யுடையவரும், இறைஞ்சுவோர்

களின் ஏழ்மையைப் போக்குபவருமாகிய அச் சங்கரபாக வற்பாத தேசிகரைத் தரிசிக்க விரும்பியவரும், துறந் தாருக்கோர் துணைவருமாகிய கேரளதேசத்து (இராச சேகரன் என்னும்) வேந்தன் தனது மந்திரியை அனுப் பினன். (10)

அம் மந்திரியும், யானை முதலிய வெகுமானத்துடன் பயமற்றவராய் (சங்கராசாரியர் இருக்குமிடத்திற்கு) வந்த பின்னர், அறிவாற்றலுடன் இன்சுவை மலிந்த பதமஞ்சரி களையுடைய, கீழ்வரும் இன்சொற்களால், சமயம் நோக்கித் தெரிவித்தனர் :—உலகத்தில் ஒப்பற்ற நுண்ணறிவாள ராகவும், போர்முகத்திற் போர்புரிவோராகவுங் காணப்படு கின்ற, கேரளதேசத்தரசரது, ஏவலானும், எனது புண் ணிய வசத்தினும், பகவனே, தாங்கள் தரிசிக்கப்பட்டீர் கள். (11, 12)

(எமது வேந்தர் எத்தன்மையரோ எனின்) பொன் னுடைகளால் விளங்குவோரும், ஆராதிக்கப்படுவோருமான புலவர்கள், எந்த அரசனது அவையின்க ணிருந்து கொண்டு, பயனிலாமையற்ற இன் சுவையுள்ள வார்த்தை கள் பெருகிய விவாதங்களால் அன்னிய வாக்கியங்களை மறுக்கின்றார்களோ, அத்தன்மையரும், புறம்பாயுள்ள மன்னர்களைப் போரில் வென்றவரும், போற்றத்தக்க திருத் தாளரும், குலத்திற்கோர் விளக்குப் போன்றாருமாவர், அவர், சம்சாரத்தில் உழல்வோர்களைப் பாதுகாக்கும் தங்க ளுடைய திருவடித் தூளியை அன்போடு அடையத் தக்கவ ராவர். (13, 14)

மதம் மிகுந்ததும், தோஷங்களின் வாசனையேயிலாததூ மாகிய இந்த நல்ல யானை அவரால் தங்கட்கு அன்போ

டளிக்கப்பட் டிருக்கின்றது. இதுபோது, இயல்பாகவே புநிதமாகிய அவரது அரண்மனே, தங்களுடைய திருவடிப் பொடியால் மிகப்புநித மாகற்பாலது. (15)

என்று, இவ்வாறு கூறித் தம்பால், தூதுவனுந் தன் மையை இனிது முடித்தவரும், (இடையில்) இனிய மறு மொழிகள் கூறியவருமாகிய அம் மந்திரியை நோக்கி, சங்கர பகவற்பாதர், பெருந்தன்மை யுள்ளனவும், இருடிகளாற் போற்றத்தக்கனவுமாகிய மறு மொழிகளைக் கீழ் வரும் முறையாய் அருளிச் செய்தனர். (16)

## சங்கரபகவற்பாதர் வேந்தன்பாற் செல்ல உடன் படாமை

வள்ளல்களிற் சிறந்தோய், இன்பந்தரும் மறையோது வதில் வல்லுநர்களான பிரமசாரிகளுக்கு, மறைமுதலிய நூல்கள், ஐயத்தாலேவரும், அன்னம், மான் தோலாகிய ஆடை, நியமமாய் உறுதிப்பாட்டுடன் செய்யத்தக்க கரு மம், என்பவைகளை விதித்திருக்கின்றன. (17)

ஆகையால் தனது கருமத்தைவிட்டு, யானை முதலிய பழிப்புள்ள போகப் பொருள்களாற் பயன் என்னை? மந் திரியே, விரும்பி வந்தவாறே இனிது ஏகுவாயாக, இவ் வண்ணமே நினது அண்ணலுக்கும் பன் முறை கூறு வாயாக. (18)

அஃதன்றியும், மன்னரால், வருணத்தார்களனைவரும், (ஆசிரமத்தர்க ளனைவரும்) தத்தமது ஒழுக்க முறையால் வாழ்வோர்களாகவும், (தென்புலத்தார்க்கு பிண்டமீதல் முத லிய) அறுவகைக் கடன்களை நீக்கினவர்களாகவும், தரும வழியை மேற்கொண்டோர்களாகவும், செய்யற்பாலார்கள்;

அவற்றையொழித்து கருமங்களை விடுவீர்களாக, என, மொழியத் தக்காரலர். (19)

## வேந்தன் வரவு

இவ் வண்ணம், சங்கரபகவற்பாதர் அருளிய வார்த்தைகளாற் களங்கமற்ற மதியைப்போன்ற மந்திரி (வேந்தனிடஞ்சென்று அனைத்தையும்) கூறினர் அச் செய்திகளைக் கேட்ட மன்னன், ஆன்றோர்களுடட் சிறந்த சங்கரபகவத்பாத தேசிகர்பால், தானே வந்தனன். (20)

(வந்து), சிறந்த அந்தணச் சிறுவர்களாற் சூழப்பட்டவரும், காந்தி மலிந்த கலைமதி போன்ற முப்புரி நூலுடையவரும், தருக்கள் சூழ மிக வெண்மையாகிய கங்கையால் நன்கு விளங்கும் இமய மலையைப் போன்றவரும், கரிய மான் தோலையுடையவரும், உரிய கருமங்களனைத்தையுஞ் செய்பவரும், புதிய மேக நிறம்போன்ற ஆடை யுடுத்தவரும், பொன்னொளி போன்று விளங்குந் தருப்பைக் கயிற்றால் மறைக்கப்பட்ட இடையையுடையவரும், முதிர்ந்த பசுங் கொடியாற் சுற்றப்பட்ட கற்பகத் தருவைப் போல், புண்ணியத்தாலடையத் தக்கவரும் புன்னகையுள்ள, சிவகுருவின் புதல்வருமாகிய, சங்கரபகவற்பாத தேசிகரைத் தரிசித்து, அவ் வேந்தன் வியப்புடையோனாய், பன்முறை பணிந்து வரங்கொடுப்பதில், இவ் வுலகின்கண் பிரமனுக் கொப்பானவரென்று, அச் சங்கரபகவற்பாதரை எண்ணினன். (21, 22, 23, 24)

அதன்பின்னர், சங்கரபகவற்பாதரால், சுகத்தை வினவப்பட்டவரும், பகைஞருக்குக் காலனைப் போன்றவருமாகிய, அம்மலையாள வேந்தர், தம்மாலியற்றப்பட்ட மூன்று

நாடக நூல்களை, சங்கர பகவற்பாதருக்குப் பதினாயிரம் பொன் வெகுமானமாகக் கொடுத்து அவருடைய திருச் செவிக்கு அறிவுறுத்தினர் (25)

## கேரளதேசத்தரசன் வரம்பேறல்

இன் சுவை மலிந்ததும், சிறந்த நற்குணங்களை யுடையதும், அரிய போக்கை யுடையதும், குற்றமிலாத புணர்ச்சிகளை யுடையதும், மிக்க வழகியதும், அரிய புலவர்களாற் பெரிதும் விரும்பத் தக்கதுமாகிய அந்த நாடக நூலைச் சுருங்கக் கேட்டு, இன்சொற் கூறிய அவ் வேந்தனுக்குச் சங்கரபகவற்பாத தேசிகர் "அரச, நீ யாதேனுமோர் வரம் பெறுவாயாக", என்றருளினர். (26)

மனேவிருப்பம் மிக்குள்ள அமிருதப் பெருக்கைக் கொடுப்பது போன்ற அந்த இன் சொல்லைக்கேட்டுக் கைகட்டிக் கொண்டோனாய் நல்ல உறுதி மொழியையுடைய அவ் வேந்தன், ("என்னைப்போன்றதோர் புத்திரப்பேறு வேண்டும்,)" என, தன்னை யொத்ததோர் மகற்பேறு வேண்டியிரந்தனன். (27)

(இரந்துழி) "இப்பொன் எமக்கு இனியவை யாகா, எமைச்சார்ந்த இல்லறத்தார்களுக்கு அவைகளைக் கொடுப்பாயாக. நீ விரும்பியது விரைவில் முடியும், குறைவிலா மனத்தனாய்ச் செல்வாயாக" என, அவ்வேந்தனுக்குத் திருவாய் மலர்ந்தருளினர். (28)

(அதன் பின்னர்) தனி யிடத்தில், சிறப்புள்ள அவ் வேந்தர் குலந் தழைத்தற்பொருட்டுச் சங்கரபகவற்பாதர், மறையில் வெளிப்படையாகிய புத்திரகாமேட்டியாகஞ் செய்யும் விதியை அவ் வேந்தனுக்கு உபதேசித்தருளினர். அதனால் அம் மன்னன் பெருங்களிப் பெய்தினன். (29)

இவ் வண்ணம், பேரறிவாளராகிய சங்கரபகவற்பாத தேசிகரால் மதிக்கப்பட்ட கேரள தேசத்தரசனும், செயற்பாலன செய்து முடிந்த மனத்தனுய்ச் சங்கரபகவற்பாதரது நற்குணங்களை வியந்துகொண்டு தனது நகரத்தைச் சேர்ந்தனன். (30)

(பின்னர்) சாத்திரங்களின் கரையைக் கண்டார்களும், புலவர்களும், மகான்களுமான பல்லோர்கள், (பெரியோர்கள்) ஆதிசேடனது (ஆதிசேடன் போல்) வல்லுநத் தன்மையை யடைய சங்கரபகவற்பாதரிடத்தில் பெருமை மிகுந்த ஆறு சாத்திரங்களையும் ஓதினர். (31)

இவ் வண்ணம், ஓதியதையுங் கேட்டதையும், தனியிடத்தில் மறித்தும், மறித்தும், முழுதும் பார்த்து ஆராயுமாறு செய்வித்து, கூரிய மதியுடைய சங்கரபகவற்பாதர் அவர்களைச் சுகத்தில் (பிரமானந்தத்தில்) மூழ்கியவர்களாய்ச் செய்தனர். (32)

இத் தன்மையாய் மேம்பட்டவரும், சிறந்த அந்தணர்களால் மதிக்கப்பட்டவரும், வினய மதி யுள்ளவருமாகிய சங்கரபகவற்பாத தேசிகர், சாத்திரங்களனைத்தையும், தடையிலாது உணர்ந்தவராயிருந்தும், தருமநூல் கூறும் தண்ணளியின் மேலீட்டால் அக் காலத்திய திருத் தொண்டுகளால் அன்னையாரைக் களிப்பித்துக்கொண்டு சிலநாட் கழித்தனர். (33)

அவ் வன்னையார், சங்கரபகவற்பாதருக்குச் சரணுவர்; (பாதுகாப்பாற்றுஞ் சாதனமாவர்) சங்கரபகவற்பாதர் அவ் வன்னையாருக்குச் சரணுவர். இவ் வண்ணம் ஒருவருக்கொருவர் பிரிவாற்றுமையைப் பொறுக்க முடியாதவர்களா யிருந்

20

தும், சங்கரபகவற்பாதர் மணஞ் செய்துகொள்ள விரும்பி லர். அங்ஙனமாயினும், தெய்வத்தன்மை யுடையாராத லின் மலையை யடைந்தார் கொலோ? அல்லது கஷ்ட மாகிய வோரிடத்தை யடைந்தார்கொலோ? (அன்று, துறக் கும் வேட்கையைக் கொண்டாரென்பது பொருள்). (34)

அக்கால், கல்வியனைத்துங் கைவந்த பிரமசாரியாகிய சங்கர பகவற்பாதரை, இல்லறத்தனுக்க வேண்டும் என விரும்பின உண்மையானவர்களும் உறவினர்களும் நற் குலத்தில், இவருக்கு, ஒப்பாகிய கன்னிகையை மணஞ் செய்து வைக்கக் கருதினார்கள். (35)

## சங்கரபகவற்பாதரிடத்து முனிவர்கள் வரல்

பின்பு ஒருபோது, பரசிவ கலையாய் அவதரித்த பால சங்கரபகவற்பாதரைக் காண விருப்புற்ற உபமன்யு முனி வர், ததீசி முனிவர், திரிகல முனிவர், முதலிய முனிவர்கள், சங்கரபகவற்பாதரிடத்து வந்தார்கள். (36)

விதியை யுணர்ந்த சங்கரபகவற்பாதர், பத்தியுடன் பணிவுடையராய் அன்னையாருடன் நன்கு இறைஞ்சி விதித்த வாறு, கனி முதலியன கொண்டு செய்யும் ஆராதனையால் அம் முனிவர்களை நன்கு வரவேற்றனர். (37)

விதி முறையே வணங்கும் அறிஞராகிய சங்கரபக வற்பாதரால் (தாங்கள் இவ் வாசனத்திலமர்வீர்களாக என்னும்) வினய வார்த்தைகளுடன் ஆசனமளிக்க அதி லமர்ந்த இருடிகள் சீவன் முத்தர்களாயிருப்பினும், சங்கர பகவற்பாதருடன் பேச விருப்புற்றோராய் முத்தி விஷய மான வார்த்தைகளை அவருடன் பேசிக்கொண் டிருந்தார் கள். (38)

இவ் வண்ணம் பேசிக்கொண்டிருக்கும்போது சங்கர பகவற்பாதரது அன்னையார், யாவுமுணர்ந்த அம் முனிவர்களை நோக்கி, முனிவர்காள், தாங்களனைவரும் எமது மனைக்கு எழுந்தருளியதால், யாம் இப்போது கிருதார்த்தர்களானோம், என்றனர். அஃதன்றியும், பெரும் பிழைபாடுள்ள கலியுகம் எங்கே; தங்களுடைய திருவடியின் தரிசனமெங்கே; தமை யடையா தொழியினே, முன் செய்துள்ள எமது புண்ணியத்தை யாம் என்னென்று எடுத்துரைப்போம். (39, 40)

அஃதல்லாமலும், இக் குழந்தை, உண்மையில் மிக்க பாலப் பருவத்திலேயே சாத்திரங்களனைத்தின் கரைகண்டதாயிற்று; இதனுடைய மகிமையோ, பேராச்சரிய முள்ளது; இதனுடைய இவ்விரண்டு தன்மைகளும், மனதிற்குக் குதூகலத்தை யுண்டாக்குகின்றன. மற்றும், கருணை பெருகிய திருநோக்கால் தாங்களும் தாமாகவே வந்து இக் குழந்தைக்கு அருள் செய்தீர்கள். இக் குழந்தையின் முற்பிறப்பின் தவத்தை யான் கேட்பதற்குரியனேல் திருவாய் மலர்ந்தருள்வீராக. (41, 42)

## அகத்திய முனிவர் சங்கரபகவற்பாதரின் முற்செய்தி கூறல்

கற்புடையாளே, முன்னர் உனது கொழுநன், புத்திரப்பேற்றின் பொருட்டுச் செய்த தவத்தாற் களிப்புற்ற இளப்பிறை சூடிய இறைவன், (தோன்றி, நினது கொழுநனை நோக்கி) "நூறு வயதுள்ள, அறிவற்ற, அநேக புதல்வர்களை வேண்டி வரமேற்கின்றனையா? அல்லது எல்லாவற்றையுமுணர்ந்த ஒரு குழந்தையை வேண்டி வரமேற்கின்றனையா?" எனப் புன்னகையோடு வினவி யருளுங்கால்,

கற்புடையாளே, நினது கணவன், எல்லாமுணரும் ஒரு குழந்தையையே யிரந்தனன். புகழுடையாளே, உனது கணவன் விரும்பியவாறே நிறைவேறவும், உன்னுடைய பாக்கியத்தினாலும், அத் தன்மைய பரசிவனே ஓர் குழந்தை வடிவாய் வந்திருக்கின்றனன். தேவர்களுக்குள், பரசிவனை யன்றி சருவக்ஞர் வேறே எவருமிலர் ஆதலின், என்றருளினர் அகத்திய முனிவர். (43, 44, 45, 46)

இவ்வாறு (அகத்திய முனிவர்) கூறியருளியதைக் கேட்ட அவ் வம்மையார், மீண்டும் அகத்திய முனிவரை நோக்கி, "முனிவர, இக் குழந்தையின் ஆயுள் எவ்வளவு? தாங்கள் எல்லாமுணர்ந்தவராதலின் தயையுடன் திருவாய் மலர்ந்தருள்வீராக," என வினவினர். (47)

(அகத்திய முனிவர் கூறல் :—) இக் குழந்தையின் ஆயுளோ, எட்டு ஆண்டாம்; மறித்தும் எட்டு ஆண்டு வரும்; அங்ஙனமாயினும், வேறோர் காரணத்தால் இக் குழந்தை, மறித்தும் பதினாறு வயதைப் பெற்றுக்கொள்ளும். (48)

இவ்வாறு முனிகளிற் சிறந்த அகத்திய முனிவர் மேல் வருஞ் செய்தியைக் கூறும்போது, மற்றைய இருடிகள் கண் சாடை முதலியவற்றால் அதைக் கூறுமற் றடுத்துவிட்டு, அகத்திய முனிவரோடு பாலசங்கரரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு வந்தவாறே சென்றனர். (49)

புத்திரனிடத்து அன்பு மிகுந்துள்ள அவ் வன்னையார், அகத்திய முனிவரது இத் தன்மைய வாக்கியத்தால், தோட்டியாற் றுன்புறும் பெண் யானை போன்று துன்புற்றனர்; கடு வேனிலாற் கமல மலர் வாடுவது போல் வாடினர்; காற்றாற் கதலி யசைதல் போல நடுக்குற்றனர். (50)

### சங்கர பகவற்பாதர் அன்னையாரைத் தேற்றல்

அந்தணர்களுக் கிறைவராகிய அப் பாலசங்கரர், அன்னையாரை நோக்கி, அன்னையீர், நீவிர் இச் சமுசார நிலைமையை யுணர்ந்தவராயிருந்தும், சமயமலாத விடத்து இவ்வாறு பரிதபித்தல் தமக்குந் தகுமா? சுழற் காற்றின் வேகத்தால் மிகவசைகின்ற கொடியின் நுனி போன்று நிலையாமையுடைய உடம்பின்கண் மூட மதியினரா யிருப் பினும் நிலையெனப் புத்தி வைப்பரோ? வைக்கமாட் டார். (51, 52)

(முற் பிறப்பில்) எவ்வளவோ புத்திரர்களுடன் விளையாடி யிருந்தோ மன்றோ? எத்தனையோ மனைவிமா ருடன் அநுபவித்திருந்தோமல்லவா? அப் புத்திரர்க ளெங்கே? அம் மனைவிமாரெங்கே? நாம் எங்கே? உண்மை யில் குடும்பப்பற்று, வழி நடப்போர்களின் பற்றைப் போன்றதேயாம். (53)

அன்னையீர், மயக்கத்தாற் சம்சார நெறியிற் சுழல் வோருக்கு எள்ளளவேனுஞ் சுகமுண்டென எண்ணுதீர். ஆகையால், யான் துறவடைந்து சம்சார பந்தமொழித்தற் பொருட்டு முயல்வேன் என்றனர். (54)

### அன்னையார் சங்கரபகவற்பாதருக்கு இனிது கூறல்

இவ்வாறு பால சங்கரபகவற்பாதர் கூறிய, செவிக் குக் கொடுமையாகிய, வாக்கியங்களைக் கேட்டதால், கண் ணீராலடைக்கப்பட்ட கழுத்தினராய் முன்னிலும் இரட் டித்த சோகமுடையாராய், தழு தழுத்த பேச்சுடன் மைந்த, இம் மதியை (துறவடைய வேண்டுமென்னும் புத்தியை) விடுவாயாக; அல்லது, அடைவாயாக; ஆனால் முன்னர், மக்கட் பேற்றை யடைவாயாக; வேள்விகளால் வேட்டா

யாக; பின்னர் துறவியாவாயாக. இதுவே ஆன்றோர்களின் மரபு. (55, 56)

(அங்ஙனமாயினும்) மைந்த, ஒரே குழந்தையாகிய உனைப்பிரிந்து அவலமாகிய யான் எவ்வாறு வாழ விரும்புவேன்; அஃதன்றியும், யான் இறந்த காலத்தில், உடம்பிற்குச் செய்ய வேண்டிய, சுடல், முதலிய உத்தரக்கிரியைகளைச் செய்பவர் யாவர்? நீ யாவு முணர்ந்தோனாயிருந்தும், புத்திர, எனை விட்டு விட்டு எவ் வண்ணஞ் செல்வாய்? நினக்குத் தயை யுண்டாகாதது என்னை? (என்றனர் அன்னையார்). (57, 58)

இவ் வண்ணம் பல வகையாகப் பீடையுற்ற அன்னையாரை, விதி யுணர்ந்த பாலசங்கரர், மோகத்தாலுற்ற துன்பத்தை நீக்கத்தக்க வாக்கியங்களால் சோகத்தை நீக்கி, கலி தோடங் கலக்காத எட்டாமாண்டில், கீழ்வருமாறு எண்ணினர், (59)

### துறவுபூண உபாயந்தேடல்

என் மனமோ, சம்சாரத்தை விரும்பவில்லை; அன்னையாரோ என்னை (துறவடைய) விடார்; கிழப் பருவமானதால் (இதை அவர்) நோக்கார்; (துறவடைவதற்கு) அன்னையாரின் அநுமதி சிறிது வேண்டற்பாலது, எனவெண்ணி, ஓர்போது அப் பாலசங்கரர் நீராடல் வேண்டுமென்னும் விருப்பால் நீர்ப் பெருக்குள்ள நதியை யடைந்து நீரில் மூழ்கினர். மூழ்கிய அவருடைய இரு கால்களையும் முதலை பிடித்துக் கொண்டது. (60, 61)

முதலையாற் கால் பிடிக்கப்பட்டுள்ள அப் பாலசங்கரர், நீருக்குள் நின்று கொண்டே, அந்தோ! அந்தோ!

அன்னையே, என்னை முதலை பிடித்திழுக்கின்றது; யான் ஒரு காலையேனும் எடுத்துவைக்க வல்லேனல்லேன்; உறுதியாய்த் திறந்த வாயுடைய முதலையாற் பிடிக்கப்பட்டுள்ளேனாதலின் (என்றழுதனர்). (62)

அழுதலைக் கேட்டு, வீட்டிலிருந்த அன்னையார், மிக விரைவாய் நதிக்கரைக்கு ஓடிவந்து, எனது கணவன் இறப்பதின் முன்னரோ, எனக்குச் சரணங் கணவனே, (இறந்த) பின்போ, சரணம் புதல்வனே, அப் புதல்வனும், முதலைவாயிற்பட்டு இறப்பனேல், சிவனே, இதன் முன்னரே எனக்கு மரணம் நேராததென்னையோ? (முன்னமே யானிறக்கில் இவர்களுடைய மரணங்களையுங் கண்ணாற் காணுதொழிவனன்றோ? என்பது கருத்து) என்றிவ்வாறு நதிக்கரையினின்று நதிக்குள்ளிருக்குந் தனது புத்திரனின் முகத்தை நோக்கிக் கொண்டே வருந்தினர். (63, 64)

(சங்கரர்) "அன்னையீர், யான் உமது அநுமதியுடன் அனைத்தையும் விடுதலென்னுஞ் சந்நியாசத்தை (துறவை) மனதினுற் சங்கற்பித்துக் கொள்வேனெனில், உண்மையில் இவ்வலிய முதலை விட்டு விடும், ஆகையால் இச் சமயமே உமது அநுமதி மாத்திரங் கிடைக்கில் (பின்னர் பிரேஷ (விடுவிக்கும்) மந்திரத்துடன் சந்நியாசத்தைப் பெற்றுக்கொள்வேன்," என்றனர்.

(ஓம் பூர் புவ: ஸ்வ:, மயா சந்நியஸ்தம்=ஓம், மண், விண், துறக்கம் எம்மால் விடுவிக்கப்பட்டது என்பது ஓர்வகைப் பிரேஷ மந்திரமாம்). (65)

இவ் வண்ணம் தமது புத்திரன் கதறிச் சொல்லும்போது, பயமுற்ற அவ் வன்னையார், புதல்வன் உயிரோ

டிருப்பனேல், யான் அவனைக் காணப் பெறுவேன்; உயிர் துறப்பனேல் காணவும் பெறேன், என வுறுதி பண்ணிக்கொண்டு (துறவை யடைவாயாக என) அநுமதி கொடுத்தனர். (66)

## சங்கரபகவற்பாதர் மனத்துறவு பூணல்

அநுமதி பெற்றுக்கொண்ட பின்னர், சங்கரபகவற்பாதர் உட் துறவை யடைந்தனர். பிறகு அவ்வலிய முதலையும் பாலசங்கரரை விட்டு விட்டது. அவர் நதியின் கரைக்கு வந்து அங்கு நின்று கொண்டு சோகத்தில் மூழ்கிய அவ் வன்னையாருக்குத் தயையால் கீழ் வருமாறு இன்சொற் கூறினர். (67)

"அன்னையீர், ஈண்டுச் சந்நியாசி (துறவி)யாகிய என்னாற் செயற்பாலதான காரியங்களை அறிவுறுத்துவீராக. அவற்றை ஒருதலையாகச் செய்வேன். இதில் யான் ஐயுறேன், எனது தந்தையார் தேடிய பொருளைக் கைக்கொள்ளுவோர்கள் (உறவினர்கள்) உமது விருப்பின்படியே உமக்கு அன்னமும், ஆடையுங் கொடுத்து வருவார்கள். (68)

(மற்றும்) அம்மையீர், நீர் வியாதியால் வருந்தும் போதும், உறவினர்களே ஆற்றலுக்கியைய உம்மைப் பார்த்துக்கொள்ளுவார்கள். மரிக்கும்போதும், இவர்களே அத் திரவியத்தை எடுத்துக்கொண்டமையானும், உலகம் பழிக்குமென்னு மச்சத்தானும், உடலைச் சுடல், முதலிய உத்தரக்கிரியைகளையுஞ் செய்வார்கள். சிறிதும் அஞ்சற்க. என்றனர்." (69)

(அவ் வார்த்தையைக் கேட்ட அன்னையார்) "மைந்த, நீ துறவை யடைந்து கொண்டமையால் முதலை வாயினின்று

நீங்கி வாழ்ந்திருக்கின்றது எனக்கு உடன்பாடே. எனது உடல் வீழுங்கால் அவ்விடம் வந்து விதிப்படி சமஸ்காரஞ் செய்வாயாக." அஃதுமின்றெனிலோ, உன்னைப் பெற்றதாலுண்டாகும் பயன் யாது? நீயே கூறுவாயாக, என்றனர். (70)

(அதைக் கேட்ட சங்கரபகவற்பாதர்) மாதாவே, நீ, இரவிலோ, அல்லது பகலிலோ, அல்லது, வேறெந்த நேரத்திலோ, வியாதி மிகுங்காலோ, அல்லது வியாதி மிகாவிடத்தோ, என்னை நினைப்பையேல், அருட்டிப்ப தெல்லாவற்றையுமகற்றி அங்கு வந்து சேருவேன். உயிர் துறப்பையேல் (உடற்குச் செய்ய வேண்டிய) சமஸ்காரமுஞ் செய்வேன். இவ் வார்த்தையில் அன்பு வைப்பாயாக. அணைப்பாரற்றவளும், கணவனை யிழந்தாளுமாகிய என்னை விட்டு விட்டு இப் புதல்வன் துறவியாயினன், என என்னைக் குறித்து ஓர் போதுங் கவலையடையாதே. தாயே, யானிங்கிருந்தால் எத்துணைப் பயனை யடைவையோ, அதினும் நூறு மடங்கு அதிகமான பயன்களை நினக்கு அடைவிப்பேன் என்றனர். (71, 72)

இவ் வண்ணமாக பாலசங்கரபகவற்பாதர் தமது அன்னையாருக்கு அநுக்கிரகிக்கும் விருப்பால் இன் சொற் கூறி விட்டு, அறிவு மிக்கார்களிற் சிறந்த இவர், சுற்றத்தார்களைக் குறித்து, சுற்றத்தார்காள், யான் துறவு பூணும் மனத்தனாய்த் தூரஞ் செல்கின்றேன்; கணவனிழந்த எனது அன்னையாரைத் தங்களிடத்து விட்டு வைக்கின்றேன், (பாதுகாத்துக் கொள்வீர்களாக. என்பது எஞ்சியதாய்க் கொள்க), என்றனர். (73, 74)

இவ் விதமாக, பெரியோர்களிற் சிறந்த பாலசங்கரபகவற்பாதர், அன்னையாருக்குச் செய்யவேண்டிய காரியங்களைச்

சிறப்புள்ள சுற்றத்தார்களுக்குச் செய்யுமாறு சொல்லிவிட்டு, கண்ணீரில் மூழ்கிய அம்மையாரை அவ் வுறவினர்பால் இருத்தி, இருகை குவித்துப் பெரும் வினயத்துடன் அன்னையாரைப் போற்றினர். (75)

## சங்கரர் கண்ணனைப் பிரதிட்டை செய்தல்

(அதன் பின்னர்) முன் சங்கர பகவற்பாதர், தூரத்திற் போய்க்கொண்டிருந்த நதியைத் தனது அன்னையாருக்கு அநுகூலமாமாறு தமது மனைக்கருகில் அழைத்தார் அன்றோ? அழகிய அந்நதி, அங்குள்ள கண்ணபிரானது திருக்கோயிலை அலைகொண் டடிக்கத் தொடங்கிற்று, அஃதன்றியும், இந்திரனால் மழை பெய்வித்தபோது, அந்நதி நீர் பெருகி, பகவானது திருவாலயத்தினுட்சென்று (அங்குள்ள) மண்ணைக் கரைக்கவுந் தலைப்பட்டது. அதனால் (அவ் வாலயத்திலெழுந்தருளி யிருந்த) கிருஷ்ண பகவானே பயந்தது போன்று தோடமிலாத அக் கண்ணபிரான் திருவுருவம் மெல்ல நகரத் தொடங்கிற்று. மேலும், நதியானது துன்புறுத்துவதை விடவில்லை (ஈண்டு இராமர் கடலைத் தடுத்தது போன்று, இக் கண்ணபிரானும் நதியைத் தடுக்காததென்னையோவெனின்? பரசிவாவதாரமாகிய பாலசங்கரபகவற்பாதரால் வரவழைக்கப்பட்டதாம் ஆதலின் சிறிது அச்சமுற்றதே போன்றதென்க. அங்ஙனமாயினும் நதி, ஓர் பெண் வடிவாமாதலின் பீடிக்குஞ் செயலை விடவில்லை, என்பதைத் "துன்புறுத்தலை விடவில்லை," என்பதிரூய கற்பனையணியாற் குறிப்பிக்கப்பட்டிருத்தல் காண்க). (76)

எவ்வாற்றானோ ஓர் வழியால் அன்னையாரின் அருமைத் திரு வடிகளைப் பணிந்து அவரது அநுமதியைப் பெற்

றுக்கொண்டு உலகிற்கு இனியவைச் செய்வதே தனக்கோர் முக்கியமாகிய சுமையெனக் கொண்டவரும், வெளிச் செல்லும் மன விருப்புள்ளாருமாகிய சங்கரபகவற்பாத தேசிகருக்கு, அக் கண்ணபிரான், (அருவாய்த் தோன்றி, "சங்கராரிய, நீ, முன்னம் அன்னையாரின் பொருட்டு) தூரத்திற் சென்றுகொண்டிருந்த நதியைத் தயையால் வீட்டிற்கருகில் அழைத்தாயன்றோ? அந்த நதி, அளவற்ற அலைகளென்னுங் கைகளால் இடையறாது எம்மை அடிக்கத் தலைப்பட்டதாய்த் துன்புறுத்துகின்றது; அதற்கோருபாயங் கூறுவாயாக; இன்றேல் அங்கு இருக்க முடிந்திலேன்; அந்தணச் சிறுவ, நீயோ வெளியிற் செல்கின்றாய் ஆதலின் முழுதும் அங்கு வசிப்பதற்கு ஆற்றேன்," என அசரீரியாய்க் கூறியருளினர். (77, 78)

(கவிகூற்றல்) எமது ஆசிரியர், அவ் வசரீரி வாக்கைக் கேட்டு, அசைவற்ற அக் கண்ணன் திரு மேனியைத் தமது இரு கரங்களாலும் மிருதுவாய்க் கிளப்பி யெடுத்து. "அந் நதிக் கரையிலேயே கேடிலாது நெடுநாள் இனிது வாழ்வாயாக," என மங்கல மொழி கூறி, ஆண்டே பிரதிட்டை செய்தனர். (தாபித்தனர்). (79)

பின்பு, அப் (கண்ணபிரானது) பக்தி வசத்தால் அன்னையாரின் அநுமதியைப் பெற்றுக் கொண்டு பவப் பெருங்கடலில் வெறுப்புடையராய்த் துறவு பூணுதற்குத் தூரஞ் செல்ல மனங்கொண்டனர். ஓடத்தின் மீதிருப்பார் கடலில் வீழவுங் கருதுவார்கொலோ? (80)

## சங்கரர் இல்லை விட்டேகல்

இவ் வண்ணமாய், அன்னையார், பொன்மகள் கேள்வன், என்னுமிவ் விருவர்களின் தடையிலாத அநுக்கிர

கத்தைப் பெற்றவரும், முன்னர், அகத்தியமுனிவர் அறிவுறுத்தியதை யுணர்ந்தவரும், நுகர் பொருள்களில் ஒரு சிறிதும் வேட்கை யிலாதவரும், கிருஷ்ணன், என்னும் பிரமமாகிய உள்ளொளியி லொருப்பட்டவரும், ஆகிய நல் லுணர்வுள்ள அப் பாலசங்கரர், இல்லினின்று வெளி யேறினர். (81)

காமன், தனது கண் முன்னும் நிற்பதற்குமே முடியாத முக்கண்ணனது மற்றொரு (அருள்) திருமேனி கொண்ட மகானிடத்தில் (பாலசங்கரர்பால்) அக்காமனையே மூல மாய்க்கொண்ட பவப்பற்றுப் பொருந்துவதெவ்வாறு? (82)

பிரமனுஞ் சந்திரனும், காமனால் மோகமுற்றவர்களாய்த் தெரிந்துந் தீ நெறியில் இறங்கினார்கள், அந்தோ! அந்தோ! யானும், மங்கையின் கொங்கை முதலியவைகளைக் கண்டு மடவார் வயப்படக் கடவேனோ, என ஆராய்ந்து அப் பர சிவனே, முன் காமனாற் செய்யப்பட்ட கலக்க வார்த்தை யையுமே கழித்தோராய், துறந்தாருக்கரசரென்னும் இத் (சங்கரபகவற்பாதர்) திரு மேனி கொண்டு கவனத்துட னிருக்கின்றனன். (83)

ஐங்கணையோன், அரக்கரைத் தனது கணை படாதவர் களாகச் செய்தனன்; அமரரைக் கணை பட்டோர்களாகச் செய்தனன், மற்றைய கந்தருவ வித்தியாதரர்களை, உறுப்புக் கள் சிதறு மாறு துளைத்தனன்; மாந்தர்களை யெரித்தே யொளி பெற்றனன். அத் தன்மைய வில்லாளியிற் சிறந் தோனை (காமனை) வெல்வதில் தீரராயிருந்த சங்கரபகவற் பாதர், முனிவர்களாலும் எவ்வாறு விதந்தோதப்படுவர் (முனிவர்களுஞ் சங்கரபகவற்பாதரை விதந்தோதற்காற் றார் என்பது பொருள்), (84)

(இவருடைய) சாந்தமே, மனச் செயல்களைக் கட்டுப் படுத்திக் கொண்டது; அம் மனதின் அடக்கமே, கருமேந்திரியச் செயல்களைத தடுத்துக் கொண்டது; இந்திரிய வெற்றியே (கேட்டல் முதலியவைகட்குப் புறம்பான) ஞானேந்திரியச் செயல்களைத் தகைந்தது; பொறுமையே மிருதுவாந் தன்மையை யுண்டாக்கினது; சமாதியின் மிகுதிப்பாடே தியானத்தில் ஊக்கத்தைக் கொடுத்தது; (மறைமொழியில்) தனம், எனப் பிரசித்தியாயுள்ள விசுவாச மென்னும் அன்புமிருந்தது; ஆகையால், இச் சங்காரியருக்கு இவைகள் வைராக்கியத்தாலுண்டானவைகளென்று அறிவதெவ்வாறு? (ஈசுரனவதாரமாமாதலின் இவைகள் இயல்பாகவே யிருந்தன) என்க. (85)

சங்கராரியர் தனியிடமாகிய மங்கையால் மிக்கக் களிப்புற்றவராயும், தெய்வத்தா லீயப்பட்ட உணவால் தமது உடம்பை நிலைக்கவைப்போராயும், அகத்தின் பாலுள்ள, எனது, என்னும் அபிமானத்தை யறவே நீக்கி, மனதிலொளிர்ந்து கொண்டிருக்கும் பரசிவனோடு சென்றனர் (பரமான்மாவைத் தியானித்துக்கொண்டு சென்றனர், என்பது பொருள்). (86)

(சங்கரர்) செல்லுங்கால், வழியில், வனங்கள், நதிகள், நகரங்கள், மலைகள், கிராமங்கள், மனிதர்கள், விலங்குகள், என்பவைகளையும் பார்த்து உண்மையில், பரமான்மாவே, இந்திரசாலிகன் போன்று, வியப்பான இவ் விந்திர சாலங்களைக் காட்டுகின்றது, என வெண்ணினர். (87)

மத வாதிகளால், தத்தமது வழியில், வலிந்திழுத்ததால் மெலிவுற்ற பழைய மறைப் பசுவைத் தமது (அத்துவித) நெறியில் திருப்புவதின் பொருட்டுத் தீநெறிக் கூட்

டத்தாரை அடிப்பதற்கு ஒரு தடியொன்றைக் கைக்கொண்டனர். (88)

ஆணவ முடையனவும், கட்டினின்று அவிழ்க்கப்பட்டனவும், வாயாற் கத்துவனவும், பிறருடைய உயிர்நிலையை யுக்திகளாற் பிளப்பதற்குத் தினவுமிகுந்த நாவின் நுனியை யுடையனவுமான வேட்டை நாய்களென்னும் பாகண்டர்களாற் பயமுற்ற மனத்தர்களான வேதநெறி நடப்போர், தடியொன்றைக் கொண்டு காப்பாற்றுஞ் சங்கரபகவற்பாத முனிவரின்றேல் எக் கிலேசங்களைத் தான் அடைய மாட்டார்கள் (கிலேசங்க ளனைத்தையுமண்டவார்கள் என்பது கருத்து). (89)

## சங்கரர் கோவிந்த பகவத்பாதரின் ஆசிரமத்தை யடைதல்

கையிலோர் தடியையும், கடியிற் செந்நிற ஆடையையு முடைய சங்கரபகவற்பாதர், இந்துவிலுதித்த நருமதா நதிக்கரையிலுள்ள கோவிந்த பகவத்பாதர் வசிக்கும் வனத்தை, மாலையில் இரவி அத்தமனகிரியின் முடியை யடைந்தாற் போன்று அடைந்தனர். (90)

ஆண்டுக் கரையிலுள்ள தருக்களின் தண்மையை யளைந்துவந்த காற்றுற் களைப்பு நீங்கியவராய், மான் தோல்களையே கரிய மரப்பட்டைகள் எனக்கொண்ட கிளைகளால் விளங்கப்பட்ட தருக்கள், முனிவர்கள் வசிப்பதைக் குறிப்பிக்குங் கோவிந்த பகவற்பாதரின் வனத்தினது நடுத்தானத்தைக் கண்டனர் (ஈண்டு அவ் வாசிரமத்திலுள்ள முனிவர்கள், கௌபீனம், மான்தோல், முதலியவைகளை அதற்கருகிலுள்ள தருக் கிளைகளின் மீது போட்டுவைத்

திருக்கின்றனர். ஆதலின் அத் தருக்கள், முனிவர்கள் உள்ளார்களென்பதற்குக் குறிகளாயினமை காண்க). (91)

அங்குள்ள முனிவர் கணங்களாற் காட்டப்பட்டதும், ஒட்டைச் சாணளவு (பத்து விரற்கடைப் பரிமாணம்) துவாரத்தையே வாயில் காப்பாளனாகக் கொண்ட கோவிந்த பகவற்பாதரது குகையை, உபதேசமொன்று கேட்டுக் கொள்ள விருப்புடைய சங்கரபகவற்பாதர் கண்டனர். (92)

### சங்கரர் கோவிந்த பகவற்பாதரைத் தரிசித்தல்

கண்டு, சங்கர பகவற்பாதர், அடைக்கலம் புகுந்தாருக்கு ஆனந்தப்பெருக்கை யுண்டாக்கும், கோவிந்த பகவற்பாதரது குகைக்கு, மும்முறை வலஞ் செய்து, வாசலின் கண்ணேயே வணங்கிக் களிப்புடையராய், சோகமற்று அவரைச் சனங்கட்கெதிரில் கீழ் வருமாறு தோத்திரித்தனர். (93)

" கருடக் கொடியோனுக்குப் படுக்கையா யுள்ளவனும், பரமேசுரனுடைய பாதங்களுக்கோர் அணியானவனும், பருவதம், கடல், என்பவைகளுடன் பாரைத் தலையாற்றாங்குவோனுமாகிய ஆதிசேடனது நிறைந்த வுருவத்தை யான் போற்றுகின்றேன். (94)

முன்னர், தமது ஆயிர முகங்களை நோக்கி மாணாக்கர் அச்சமுற்றன ரன்றோ? அத்தகைய ஆதிசேடத் திருமேனியை நீக்கி, சாந்தராய் (விடமற்றோராய்) ஒரு முகத்துடனவதரித்து; மாணாக்கர்களுக்கு அநுக்கிரகித்துக் கொண்டிருக்கின்ற தாமே, பூமியின் துவார வழியாய்ச் (பாதாளஞ்) சென்று ஆதிசேடனிடத்தில் நேரே கல்வி கற்று, உலகவுபகாரத்தின் பொருட்டு, யோக சூத்திரம், வியாகரண

(இலக்கண) மாபாடியம், என்பவைகளை வெளியிட்ட பதஞ்சலி பகவானுவீர். (95, 96)

வியாச முனிவரின், புதல்வரது (சுகரது) மாணுக்கராகிய, கௌட பாத மகரிஷியி னிடத்திலிருந்து பரமார்த்த (உண்மையாகிய) தத்துவத்தை யுணர்ந்து கொண்டவரும், மிகுந்த மகிமை யுடையவரும், நற்குணங்களெல்லாம் நிறைந்தவரும், பிரமநிட்டை யுடையவருமாகிய தேவரீரை, பிரமநிட்டையை யடைய விருப்புற்ற யான் பெருகியபத்தியாற் சரணடைந்தேன். (97)

இவ்வாறு, சங்கரபகவற்பாதர் துதித்தபோது, (கோவிந்த பகவற்பாதர்) ஆனந்த மேலீட்டால் நிருவிகற்ப சமாதியிலிருந்து வெளிப்பட்ட மனத்தராய், நீயார்? என வினவினர்; இவ் வண்ணம் வினவிய கோவிந்த பகவற்பாதரைச் சங்கரர் நோக்கி, முன் செய்த புண்ணியத்தாலுண்டாகிய ஆன்ம ஞானக் குறிகளடங்கியுள்ள, வாக்கியங்களாற் கீழ் வருமாறு மறு மொழி கூறினர்:—இறைவ, யான், தரையல்லேன்; நீரல்லேன்; வளியல்லேன்; வானல்லேன்; இவைகளின் குணங்களுமல்லேன்; இந்திரியங்களு மல்லேன்; மற்றே? இவைகளைக் கடந்து தனித்து நின்ற அப் பரசிவமே, யானென் றுணர்வீராக, என்றனர். (98)

இவ்வாறு, கூறிய சங்கரபகவற்பாத முனிவரது, அத்துவித சாட்சாத்காரத்தினின்றெழுந்த வாக்கியத்தைக் கேட்டுக் களிப்புற்றவராய், " சங்கர, நீ, நேரே சிவ சங்கரராகவே தோன்றி யுள்ளாய் என்பதை யான் முன்னரே சமாதி நோக்காலுணர்ந்தனன், என்றனர். (99)

கோவிந்த பகவற்பாதர் தமது திருவடியைக் குகையின் வழியாய்க் காட்ட, சங்கரபகவற்பாதர் அத் திருவடிக ளிரண்

டையும் பெற்று ஆராதித்தனர். கோவிந்த பகவற்பாதர், தம்மைக் குருவாகக் கொண்ட சங்கரபகவற்பாதருக்கு, இம்முறையே (இவ்வாறு திருவடியைப் பூசிக்க வேண்டுமென்னும் மரபே) ஆன்றோரொழுக்கமென அறிவுறுத்தருளினர். (100)

இச் சங்கரபகவற்பாதரும், பிரமத்தை யறிந்திருந்தவரேயாயினும், ஆன்றோரொழுக்கத்தைக் காப்பாற்ற வேண்டுமென்னும் புத்தியால் பிரமத்தை யடையும் பெரும் வேட்கையராய் வினயத்தோடு அவ் வாசிரியரை உபசரித்தல், ஆராதித்தல், என்பவைகளாற் களிப்புறச் செய்தனர். (101)

### சங்கரபகவற்பாதர் உபதேசம் பெறல்

அன்பார்ந்த அவ் வாராதனையை யேற்றுக்கொண்டவரும், துறவிகளில் மேம்பட்டாருமாகிய கோவிந்தபகவற்பாதர், இச் சங்கரருக்கு மறை நான்கின் முடியில் விளங்கும் மா வாக்கியங்கள் நான்கையும் உபதேசித்தருளினர். (102)

பின்னர், நுண்ணறிவாளர் (சங்கரபகவற்பாதர்), துயை மலிந்த தத்துவத்தை யுபதேசிக்கும் ஆசிரியர் பரம்பரையில் வந்த பராசமுனிவரின் புதல்வராகிய வியாச முனிவர் செய்த பிரம சூத்திரங்களின் உடன்பாட்டின் போக்கைத் தழுவி, சாத்திரங்களின் உட் கருத்துக்களை அறிந்தனர். (103)

சத்தியவதிக்கு, பராசமுனிவரானுதித்தவர் வியாச முனிவர்; அவரது புத்திரரோ மகானுபாவராகிய சுக முனிவர்; அவருடைய மாணாக்கர் கௌடபாதர்; அவருடைய மாணாக்கர் கோவிந்தபகவற்பாதர். (104)

பாதாளஞ் சென்று, மண்ணுலகனைத்தையுந் தன் றலை மேற் றாங்கும் ஆதிசேடனிடத்து, ("நம்பாற் கற்ற சாத்திரங்களை மண்ணுலகில் விரிப்பேன் என") உறுதிமொழி கூறிச் சத்த நூற்கடலைக் (வடமொழி யிலக்கணக் கடலை) கற்றுணர்ந்த, அக் கோவிந்தபகவற்பாதரிடத்தில் சங்கராரியர் வேதாந்த சாத்திரங்களனைத்தையும் நன்குணர்ந்து கொண்டனர். (105)

## சங்கரர் இலிங்க சந்நியாச மடைதல்

சங்கரபகவற்பாதர் முற்பிறப்பிற் செய்த பற்பல புண்ணியங்களாலடையத் தக்கதும், முடிந்த ஆசிரமுமாகிய உயர்ந்த நிலையை (சந்நியாசத்தை) அடைந்து, துருவனைப் போல் விளங்கினர். (106)

மற்றும், அத் துறவி வேந்தர், (சங்கரபகவற்பாதர்), வெண்மை விரவிய செவ்வாடை (கல்லாடை) என்னுந் தளிர்களால் மறைக்கப்பட்ட திருமேனியராய், அந்தி வெய்யிலுடன் கூடின மேகங்களால் மறைக்கப்பட்ட இமய மலையின் முடியே போன்றனர். (107)

(சங்கரபகவற்பாதரென்னும்) இப் பரசிவனார், அஞ்ஞானமாகிய யானையைக் கொன்று, அருணனெழுந்ததொத்த தளிரென்னுஞ் செவ்வாடையை யணிந்த தன்மையால் இரத்தம் தோய்ந்த அவ் யானைத் தோலைப் போர்த்துக் கொண்டனர் போன்றார். (108)

மற்றும், சுருதிகளில் ஆடல் செய்பவரும், சிறந்த பரமாஞ்சர்களுடன் உசிதமாய் நடப்போரும், மூவுலகுங் கடந்த சத்தியமாகிய தாமாம் வடிவப் பேரொளியில் இன்புறுவோருமாகிய இச் சங்கரபகவற்பாதர் பிரமமே யாவர்.

இதில் யான் ஐயமே யடையேன் ; மற்றோ, இவர்பால் பிரு கத், என்னும் பகுதியின் பொருளை (பெரிதை=வியாபகத்தை) உபசாரமின்றி (அருத்தாபத்தியன்றி) நேரே உள்ளவாறு காண்கின்றேன். (109)

## பரமாஞ்சத்தை விதத்தல்

ஈண்டுச் சங்கரபகவற்பாதர், தமது பேரொளி யென்னும் ஒரு பாதத்தினாலேயே உலகங்கள் மூன்றையுமளந்தனர் ("இப் பரமான்மாவின் பாதம் பூதங்களனைத்துமாம்," என்னும் மறைமொழியும் இங்குக் கருதற்பாலது; விட்டுணுவோ, மூவுலகத்தை ஈரடியாலளந்தனர்). அவ் வண்ணமே ஆக்கல், அளித்தல், அழித்தலென்னும் முத்தொழில்களினுமுள்ள சத்துவத் தன்மையை யுடையவர் ; (விட்டுணுவின் சத்துவமோ, அளித்தல் மாத்திரத்தில் நிற்பது) தசாகாரங்களைக் கடந்தவர் (அவத்தை, ஆகாரங்களி (வடிவி)னின்று நீங்கியவர்); விட்டுணுவோ, தச (பத்து) ஆகாரம்=மச்சம் முதலிய வடிவம், என்பவற்றைக் கடந்தவரலர்) ; தமது மகிமையில் ஆசையற்றுக் களித்திருப்பவர்; (விட்டுணுவோ, விடயாசக்தியுடன் களிப்பவர்) ஆகையால், சுருதிகள் அச் சங்கரபகவற்பாதரை விட்டுணுவினும் மேலாகிய பதவடிவரென விளங்கக் கூறுகின்றன. (110)

அன்றியும், இச் சங்கர பகவற்பாதருக்கு பூதங்களுடன் (ஆகாய முதலியவைகளுடன்) ஒரு காலத்திலேனும், ஒரு தேசத்திலேனும் சம்பந்தமில்லை ; (சிவனுக்கோ பேய்களுடன் சங்கமுண்டு). கோவுடன் (இந்திரியத்துடன்) விளையாடல் இல்லை, (சிவனுக்கோ = இடபத்துடன் விளையாட்டுண்டு) விபூதியுடன் (ஐசுவரியத்துடன்) சம்பந்தமில்லை ; சிவனுக்கோ அணிமா முதலிய ஐசுவரியங்களுடன்

சம்பந்த முண்டு); போகிகளுடன் (விடயிகளுடன்) சம்பந்த மில்லை; (சிவனுக்கோ, போகிகள்=சர்ப்பங்கள் ; அவைகளுடன் சம்பந்தமுண்டு) இவ்வாறு (சிவனுடன்) மாறுபாடாயிருந்தும், முப்புரத்தை (மூவுடம்பை) எரித்தலின், உண்மை நோக்கால், உபநிடதம், அச் சங்கர பகவற்பாதரை துவந்துவமற்ற துரிய பரசிவ மெனவே கூறுகின்றது. (111)

மற்றும், இச் சங்கர பகவற்பாதருக்கு சுவர்ண (நல்ல ஜாதி) தருமம் (வில்) இல்லை. (சிவனுக்கோ நல்ல தன்மையுடைய வில் உண்டு) புருட (விஷ்ணு) பலத்தில் (பாணத்தில்) ஆசத்தி யில்லை (இவருக்குப் புருடார்த்தத்தில் விருப்பில்லை (சிவனுக்கு விஷ்ணுவாகிய பாணத்தில் விருப்புண்டு) பகல் இரவுகளில் விளங்கும் அரிகளையுடைய (சந்திர, சூரியர்களை காமாதிகளை) பிருதிவி யிரதம் (பூமியாகிய தேர் ; தூல வுடம்பு) இல்லை ; (சிவனுக்கோ சந்திர சூரியர்களைச் சக்கரமாகக் கொண்ட பூமியாகிய இரதமுண்டு) இவ்வாறு, அநுகூலமின்றியே பரந்த புரியட்டகத்தை வெற்றி கொண்டபோது அச் சங்கராரியரை மறைகளனைத்தும் பரசிவ மென்றே கூறுவன அன்று, என்பதெங்ஙனம் (மறைகளெல்லாஞ் சங்கரபகவற்பாதரை பரசிவ மென்றே கூறுகின்றன, என்பது பொருள். ஈண்டு, ஐவகைப் பிராணன், ஐவகைக் கருமேந்திரியம், ஐவகை ஞானேந்திரியம், நால் வகை அந்தக்கரணம், அவித்தை, காமம், கருமம், வாசனை, என்பன புரியட்டகமாம்) ? (112)

பாவங்களென்னும் மேகங்களாற் பெய்யப்பட்ட துன்பமலிந்த சம்சார மென்னும், நீக்கற்கரியனவும், பயங்கரத் தக்கனவுமான, வேகமுள்ள சோனை மழையைத் தாரமாய்

விட்டு விட்டு, துணிவுள்ள மாறுன மதங்களின் பண்டிதர்களைத் புகழென்னுந் தாமரைத் தண்டின் புதிய முளைகளைத் தின்னுகின்ற பெருமித மனம் வாய்ந்த அந்தண குலத்தின் தலையலங்காரமாகிய பரமாஞ்சமானது, சிறந்த மானச சரோருகத்தில் (தெளிந்த மனமாகிய புட்கரணியில்) விளையாடுகின்றது (ஈண்டு அன்னத்தையுஞ் சங்கரபகவற்பாத பரமாஞ்சரையும், ஒன்ருக்கிக் கூறினமை காண்க). (113)

மற்றும், பரப்பிரமமென்னும் பாலும், உலகமென்னுஞ் சலமும், ஒன்றை யொன்று பிரியாமல் அநாதி தொட்டே அபேத சம்பந்தமாயின; அவ்விரண்டையும், முறையாக வேறு படுத்துவதும், துறவிகளிற் சிறந்ததுமாகிய (சங்கரபகவற்பாதர் என்னும்) அன்னம் பெருகிய துன்பங்களனைத்தையும் அநுபவிக்குஞ் சீலமுள்ள புத்தியைப் புனிதமாக்குகின்றது. (114)

உண்மையும், பொய்யும், (சத்தும் அசத்தும்) ஒன்றுபட்டு, பண்டிதர்கள் அனைவராலும் (பிரிக்க) அறிய மாட்டாமற் கிடந்ததை, நீரையும், பாலையும், பிரிக்கும் நெறியாக, நன்கு வேறு பிரித்த சங்கரபகவற்பாதர் என்னுந் திருநாமம் பூண்ட முனிவரே, சிறந்ததோர் அன்னமாவார்; ஆசையென்னும் வியாதியால், விடய போகமென்னும் வேப்பங்கனியை, உண்பதே சிறந்த சுவையெனக்கொண்ட ஏனைய மத வாதிகளை, காக்கைகளெனக் கருதுகின்ரேம். (115)

இந்த அன்னம் (அம்சமும் இரவியும் வெளியிருளால் மூடப்பட்ட கண்ணை விளக்குகின்றது;) உள்ளிருளாகிய அஞ்ஞானத்தால் மூடப்பட்ட ஆன்ம நோக்கை நோக்கத் தக்கதாகச் செய்கின்றது; (அது, நலீகம், என்னுங் கமலத்தை விரும்புகின்றது;) இதுவும், நலீகம்=பொய் விடயங்

களை விரும்புவதில்லை; இரண்டும் உலகிற்கநுகூலஞ் செய்வதில் கெடாத மித்திரத் தன்மையை யடைகின்றன; அது, நல்ல மனமுடைய சக்கரவாகப் புள்ளின் (ஆண் அன்னத்திற்கு தனது பிரிவினாலுண்டாகிய) பெருந் துன்பத்தைப் போக்குகின்றது இதுவும், நல்ல மனத்தார்களின் கூட்டத்தினுடைய பவபந்த மென்னும் உறுதிப்பட்ட துன்பத்தை நீக்குகின்றது; இரண்டும் பெரியோர்களுக்கு அறிய விரும்பிய பொருள்களை அடிக்கடி காட்டுகின்றன (ஆகலின் இரவியும், சங்கர பகவற்பாதரும் ஒப்புள்ளார்களென்பது காண்க). (116)

## மழைகாலத்தை விதத்தல்

நல்ல அறிவாளர்களுக்கு இறைவராகிய சங்கரபகவற்பாததேசிகர் பரமாஞ்சத் தன்மையைப் பெற்று, பந்த நிவிருத்தியின் பொருட்டு பரமான்மாவைத் தியானித்துக் கொண்டிருக்குங்கால், "விடயங்கள் கணப்போதைய," எனத் தெரிவிப்பதைப் போல மேகங்கள் திரிந்தன. (117)

இச்சூரியன் கொடிய கால்களால் (வெய்யிலால்) எங்களைத் தொடுகின்றான்; அஃதொருவாறு இருக்க, எங்களால் எமது மனைவியாகிய பூமியின் பொருட்டுக் கொடுக்கப்பட்ட மழைகளென்னும் பூக்களையும் உலர்த்துகின்றான்; (என, மேகங்களும் முனிவடைந்து, யாமும், கதிரவனது மனைவியாகிய கமலத்திற்குத் துன்பமாற்றுவோம் எனவெண்ணிக் கதிரோனை மறைத்து விட்டதால்) மேகங்களாலே, கமல மலரின் கணவனாகிய கதிரவன் அழுதனன். (118)

கார் சூழ்ந்த போது, கணப்போது நிலைக்குங் கவினைப் பெற்ற மின்னல், விடயப் பிரவிருத்தி யுள்ள ஞானிகளின் உள்ளத்திலுள்ள உணர்வின் கூறுபோல விளங்கியது, (119)

இம் மேகங்களின் ஒலிகளைக் கேட்டு யாவரும் பெரு மின்னைப் பெற்றனர்களாதலின், இம்மேகங்கள், விட்டுணு பதத்தை (ஆகாசத்தை)ப் பெற்றமையின், தெளிந்த மனத்தார்களுக்குப் பிரமத்தன்மையைத் திருந்த வுபதேசிக்கின்றனபோலும் (காரொலிக்கும் சீரிய பிரமோபதேசத்திற்கும், ஒப்புரைத்தமை காண்க). (120)

அமரர்களுக் கெல்லாமோர் அரசனாகிய எம்மையும், ஆன்ம ஞானத்தாற் கருவ மலிந்த துறந்தார்கள் ஆராதிக்கின்றாரிலர், என்னுங் கோப வசத்தால் எழிலித்தேரோனாகிய இந்திரனால் வான்வில் வளைக்கப்பட்டிருந்தது. (121)

மலை மல்லிகையின் புதிய மொக்குக்களின் இரேணுக்க ளென்னும் கணைகள் நிறைந்த வன வாயுக்கள், வெண்மை, சிவப்பு, கறுப்பு, (சாத்துவிகம், இராசதம், தாமதம்) என்னுங் குணங்களை (நிறங்களை) யுடையனவாகி, உலகில் மாயாவிகள் (சாலஞ் செய்வோர்) திரிவதுபோன்று வீசிக்கொண்டிருந்தன. (வன வாயுவிற்கும் மாய வித்தை செய்வோனுக்கும் ஒப்புக்கூறினமை காண்க). (122)

இருளொத்த நிறமுள்ள உடம்பை யுடையனவும், வியப்பாகிய வில்லை யுடையனவும், பெரிய சத்தத்தை யுடையனவும், மின்னலென்னும் ஒளி மிகுந்த கண்களை யுடையனவுமான, மேகங்களென்னும் அசுரர்கள் எதிகளின் தியானங்க ளென்னும் வேள்விகளை யழிக்கச் சுற்றிக்கொண்டிருந்தார்கள் (மேகத்திற்கும், அசுரருக்கும், உவமை கூறியது காண்க). (123)

### சங்கரபகவற்பாதரின் சமாதி

இவ்வண்ணம், கொண்டல்கள் அண்டத்தை மறைத்து (வானில் இரவி யெழாது மறைத்து) பெரு மழையை நிரம்

பப் பெய்தன ; அக்கால் சங்கர பகவற்பாதர், இந்திரியச் செயல்களை நிறுவி மனதை ஆன்மாவிலடக்கிக் கொண்டனர். (124)

## சங்கரபகவற்பாதரின் மனோ விருத்தியில் இலயங்கூறல்

அருகணைந்த உப நிடதங்களென்னும் மாதர்களின், நெடுநாளீட்டியதும், உறுதியாகியதும், இயல்பானதுமாகிய ஆணவத்தை, (யாங்களே அரிய பெரிய அழகை யுடையோமாதலின் நுமக்கு உடன்படோம் என்னுஞ் செருக்கை) நியாயத்தோடு கூடின மிருதுவான இனியவாக்கியங்களால், நீக்கி, பிரியத்திற் கிடமாகிய பரமான்மாவை யுடனே சேர்ந்தும், மறித்தும் அதைத் தொடுவதற்கு (விடயப்படுத்துவதற்கு) தைரிய மற்றதாய் விரைவில் அப் புத்தி (பரமான்மாவை விடயஞ் செய்ய வேண்டுமென்னும் அம் மாதர்களின் அந்தக்கரண விருத்தி) இலயமாகிவிட்டது (ஈண்டு ஒரு மாதர், பலவகை யுபாயத்தால் ஒரு புருடனிடத்து அருகிற் சென்றும் நாணத்தால் அவனுடன் கலத்தலின்றி மறைந்தது போன்று, அந்தக்கரண விருத்தி பலவித வுபாயத்தால் பரமான்மாவினிடத்தில் நெருங்கிச் சென்றும், பல வியாப்தியின்மையின் இலயமானமை ஒப்பிட்டிருத்தல் யூகித்துணரப்பாலது). (125)

## பரமான்மாவில் இரவி முதலிய விளங்காவிடத்து மனவிருத்தி யாதாம்? எனல்

அஞ்ஞானமே யிலாததும், எப்போதும் ஆன்மானந்த ரசப் பிழம்புமாகிய சிதாகாயத்தில், இரவியும் பிரகாசிக்கின்றதில்லை ; மதியும் விளங்குகின்றதில்லை, உடுக் கூட்டங்களும் விளங்கில; மின்னலொளி விளக்கமெவ்வாறும்? தீயினொளி எத்துணையாம்? என, மறை கூறுகின்றது ; இப்

பரமான்மாவி னிடத்தில், மண்ணுலகம், விண்ணுலகம், பொழுது, என்பனவும் விளங்குவனவாம் என்பதையும் யாம் கண்டிலேம். (இவைகளும் விளங்கா, என்பதாம்). (126)

அச் சங்கரபகவற்பாதர், இயல்பாகிய இன்பக் கடலாயும், மிகத் தெளிவாயும், மாயைகளனைத்தையும் பொய்யாக்கியதும். பரசிவபதமானதும், தனது மகிமையிலேயே வியப்புற்றிருக்கும் பதமானதும், இயல்பாகவே சத்தியமானதும், நித்தியமானதும், மிக இரகசியமானதுமாகிய பிரத்தியகபின்ன பரமான்மாவில், யாது கொள்ளற்பாலது? யாது தள்ளற்பாலது? என எழாமலே சமாதியிலிருந்தனர். (127)

## மழை விதப்பு

மேகங்கள் விட்டுணு பதத்தைப்பற்றி யிருந்தனவாயினும், (மநிதர்கள் விட்டுணுவின் திருவடியை யடைந்திருந்தவர்களாயினும்) இனிய மழை வந்ததால் (இனியதை நிறையக் கொடுக்கின்ற காமினி வந்ததால்) மலினப்பட்டன; (தோடமடைந்தார்கள்), மற்றும் மின்னலின் காந்தியையுடைய மழை அடிக்கடி வருமேல், தெளிந்தவானும் களங்கத்தை யடையாதாங்கொலோ? மின்னலை யொத்த வொளியுடைய ஒரு மாது அடிக்கடி ஒருவனிடத்தில் வருவளேல், அவன் இல்லறத்தனா யிருப்பினும் ஒருதலையாக மையல் கொள்வான் என்பதாம். (128)

இனிய சத்தமுடைய அம்சப் பறவைகள், (சந்நியாசிகள்) சலாசயம் (தடாகம் மனம்) கலங்கியபோது, மானச சரோருகத்தை (மனச்சிந்தையை) அடைகின்றன, (அடைந்தார்கள்) என்னை? பற்றுக்கோடாயுள்ளது மாறுதலையடையின் சீவனத்தை (சலத்தை) விரும்பிய எவர்கள்தான்

மனத்தில் சிந்தையை யடையார்? (ஈண்டுத் தடாகம் வறண்ட போது அன்னங்கள் மானச சரோருகத்தை யடைவன போன்று துறவிகள், மனங் கலங்கியபோது மனதைப்பற்றிய வியாகூலத்தை யண்டவார்களென்பதாம்) (129)

மேகங்கள் மிகச்சூழ்ந்த விண்ணில், திரிவதற்கு விரும்பிய கலை யுடையானும் (சந்திரனும் அறிஞனும்) பிரகாசியான்; மலினும்பரவாசியாதலின் என்க, (ஈண்டுக் கற்றுணர்ந்த கலைஞரும் மலினமான ஆடை யுடுத்தோர்களின் கூட்டத்துள்ளிருக்கில் விளக்கமாகார், என்பதைச் சந்திரனோடு உவமித்துக் கூறினமை காண்க). (130)

நெடுநாள் மிகுந்த வேட்கையுடைய சாதகப் புட் கணங்கள் நீரால் திருப்தியடைந்தன. கனத்தைப் (மேகத்தை பெரியாரை) பற்றியுள்ளார் அமிருதத்தை விரும்பினும், காலக்கிரமத்தில் அடைவார்கள்; இது மிகப் பிரசித்தியாம். (131)

கூறிப்போந்த தன்மையுள்ள மேகங்களால், இருள் மூடியதும், சுழற்காற்றால் கூந்தற்பனைகள் சுழல்வதுவும், சீவர்கள் நடக்கத் தடைப்பட்டதும், நெருங்கிய மேகங்கள் உலவுகின்றதாகவுமுள்ள மழைக் காலத்தில், நூற்றுக் கணக்கான அந்தணக் கிராமங்களால் அழகு வாய்ந்த நருமதா நதிக் கரையில், இந்திரியங்களென்னும் பரிகளை முழுது மடக்கிக்கொண்டு, பெரியோராகிய அச் சங்கரபகவற்பாதர், ஆன்றோர்களா லருச்சிக்கத்தக்க அடிக்கமலங்களையுடைய தமது ஆசிரியரை யாராதித்துக் கொண்டு வசித்தனர். (132, 133)

அக்கால், மாந்தர் குழாங்கள் பயமடையவும், திக்குக்கள் அத்தமிக்கவும், இந்திரன் மின்னலைத் தெரிவிக்கவும்,

யானைத் துதிக்கை போன்ற பெரிய தாரையாக ஐந்திரவு மழை பெய்தது. (134)

## சங்கரர் நதியைக் கமண்டலத்தி லடைத்தல்

பின்னர், அந்தணர்களின் கிராமக் கூட்டங்களுடன், தீரத்திலுள்ள (வேரற்ற) கூட்டமான தருக்களையும் அடித்துக் கொண்டுவந்த அந்நதியின் பெருக்கு, கற்பாந்தக் கடலின் அலை யொலிப்பது போன்று, பேரொலி செய்தது. (135)

அப்போது, அத்தன்மைய இச் சங்ரபவற்பாத தேசிகர், பேரொலியுள்ள நதிப்பெருக்கால் வருந்தின மாந்தர்களின் இரக்க வொலியைக் கேட்டும், நிருவிகற்ப சமாதியை யடைந்துள்ள தமது ஆசிரியரைப் பார்த்திருந்தும், (இதைச்) சொல்ல விருப்பற்றவராய், ஒருகணப்போதிருந்தனர். (136)

பிறகு, சங்கர பகவற்பாதர், இனிது ஆலோசித்து, விரைவாய், அவ் வாற்றுப் பெருக்கிற் கெதிரில், தமது கமண்டலத்தை வைத்து, அதில் அப் பெருக்குக்களனைத்தையும், குடத்தின்பாலுதித்த முனிவர், கடலைக் கையிலடக்கியது போல, அடக்கினர். (137)

## கோவிந்த பகவற்பாதரின் விதப்புரை

சமாதியிலிருந் தெழுந்த இச் சங்கரபகவற்பாதரின், ஆசிரியராகிய கோவிந்த பகவற்பாதர், சனங்களனைவராலும், அச் செய்தியைக் கேட்டு, இச் சங்கரர் மிக விரைவிலேயே யோகசித்தியை யடைந்துள்ளார், எனப் பெருங் களிப் பெய்தினர். (138)

(பின்னர்) சில பகற் சென்று, வானிற் செறிந்துள்ள வளரெழிலிகள் நீங்கியபோது, அக்கோவிந்த பகவற்பாதர்,

மாணுக்கர்களுட் சிறந்த இச் சங்கரமுனிவரை நோக்கிச் சொல்கின்றார் :—பிரிய, கார்காலத்திலிருந்து ககனந் தெளிந்தது, காண்பாயாக (எதைப் போலெனிலோ), ஆன்ம ஞானத்தாற் பரமான்ம தத்துவம் நன்கு விளங்குவது போன்று. (139)

தடாகங்களும், துறவிகளில் தலைவர்களும், நல்ல தண்ணீர்ப் பெருக்கால், உபதேசவாக்கால், நெல் முதலியவைகளையும், தம்மைப் பின்பற்றினவர்களையும், கிருதார்த்தர்களாக, (பல முடையனவாகச்) செய்துவிட்டு, இப்போது விரும்பியவாறே செல்கின்றார்கள். (செல்கின்றன, காண்பாயாக ; துறந்தார்களுக்கும், குளங்களுக்குந் தோன்று மூவமை காண்க). (140)

ஆன்மஞானிகளின், தத்துவஞானம், மாயையினது மறைப்பிலிருந்து நீங்கி விமலமாய் விளங்குவது போன்று, மேகங்களிலிருந்து (மறைப்பினின்று) விடுபட்ட விண்வழியிலுள்ள தண்மதி, பேரொளியோடு பிரகாசிக்கின்றது, பார்ப்பாயாக. (141)

மச்சரமுதலிய தீக்குணங்கள் நீங்கியபோது, மைத்திரி (நல்லாரிடத்துள்ள நட்பு) முதலிய நற்குணங்கள் நன்கு விளங்குவன போன்று, மேகக்கூட்டங்கள், சென்றொதுங்கியபோது, (வானில்) அழகிய ஒளியையுடைய குழுமிய உடுக்கள் ஒளிர்கின்றன. (பார்ப்பாயாக). (142)

இந்நதி, ஆமை, மீன், மயமாயும், சக்கரத்தை (சுழலை) யுடையதாயும், கமலாளை (இலக்குமியை, கமல மலரை) யுடையதாகவும், பரந்தாமனைப் போன்று பரமாஞ்சங்களால் (துறவிகள், பறவைகள்) சேவிக்கவும் படுகின்றது. (பார்ப்பாயாக). (143)

செல்கள் (மேகங்கள், பறகள் போனவர்கள் அதாவது மிக மூத்தோர்கள்) சீவனங்களை (நீர்களை, தன, தானிய முதலியவைகளை) துவிசக்கூட்டங்களுக்கு, (பறவைகளுக்கு, அந்தணர்களுக்கு) கொடுத்து விட்டு, தியாகஞ்செய்து, மின்னலை (காமினியை) ஒதுக்கி, மேகங்களின் வீதிகளிலிருந்து, (மனைகளிலிருந்து) துறந்து, செல்கின்றன (செல்கின்றார்கள்) பார்ப்பாயாக. (மழை பெய்து ஓய்ந்தகாலத்திய முகில்களுக்கும் இல்லறமாற்றி முடிவில் துறப்பாருக்கும் ஒப்புக் கூறினமை காண்க). (144)

இம் மழைகாலம், நிலவென்னும் நீறுபூசிய உடம்பையும், மதிமண்டல மென்னுமோர் கமண்டலத்தையும், செம்பிரத்தம் பூவென்னுங் காவியாடையையு முடையதாய்ச் சந்நியாசிபோல் விளங்குகின்றது (பார்ப்பாயாக). (145)

அம்ச சங்கத்தால், (சந்நியாசி அல்லது அன்னப் புள்ளின் கூட்டுறவால்) விளங்குவதும், இரசமற்றதும் (தூளி, அல்லது, இரசோ குணமற்றதும்) களங்கமிலாததும், நிருமலமானதும், மிக ஆழமானதுமாகிய, கார்காலநீர், நினது மனம் விளங்குவது போல் விளங்குகின்றது. (பார்ப்பாயாக). (146)

முகில்களால் மூடப்பட்ட வானம், (அம் மறைப்பு நீங்கியபோது) இனிது விளங்கும் இரவியுடன், சந்தனக் குழம்பு பூசியதும், கௌஸ்த்துப மணியை யுடையது மாகிய திருமாலின் மார்புபோன்று திகழ்கின்றது. (பார்ப்பாயாக) (ஈண்டு மேகங்களுக்குஞ் சந்தனக் குழம்பிற்கும், இரவிக்குங் கௌஸ்துப மணிக்கும் வெண்மை நிறம் ஒன்று பற்றியே உவமித்தமை காண்க). (147)

பிரிய, முனிவர்களின் கீழ்முகமாகிய உள்ளக் கமலங்கள் யோக கலையால், மேனோக்காய் விரிந்தன, அதிலேறி

யுள்ள அரிகளையுடையனவாய் விளங்குவனபோல் (ஈண்டு ஆறுதாரத்தில் அனுகதம் என்னும் எட்டிதழ்க் கமலத்தில் விட்டுணு வீற்றிருப்பர் என்பது யோகநூல் மரபாம்) கமல மலர்கள் காணப்படுகின்றன. (பார்ப்பாயாக இதில் அரி, என்றதை, ஒருபட்சத்தில், விட்டுணு வெனவும், மற்றொரு பட்சத்தில் இரவியின் கிரணங்க ளெனவுங் கொள்ளற்பாலது). (148)

தூசுகளால் அழகுடையன வாதலானும்; இலைக ளென்னும் ஆடைகளை யணிந்திருக்கின்றன வாதலானும், வண்டுக்க ளென்னுஞ் செபமாலைகளை யுடையனவாதலானும், பூங்கொத்துக்க ளென்னுங் கமண்டலங்களை யுடையன வாதலானும், தருக்கள், துறவிகளைப் போன்றிருக்கின்றன. (பார்ப்பாயாக). (149)

புலனடக்கல், முதலியவைகளாலும், கேட்டல், முதலியவைகளாலும் மழைக்காலங்களைக் கழித்துவிட்டு (துறவிகள் நியதமாய் ஓரிடத்திலிருந்து வியாசமுனிவரின் பூசையென்னும், "ஈண்டேயான் இந் நான்கு திங்களும் மழையாலெழுங் கிரிமி கீடங்களை வருத்தலின்மையே காரணமாகிய அருந்தவம் புரிவேன்" என்னும் உறுதிப்பாடு கொண்டு தவமியற்றுஞ் சாதுர்மாசியத்தைப் போக்கி) இப்போது தமது திருவடிக்கமலத் தூளிகளால் உலகங்களைப் புநிதஞ் செய்கின்ற மகான்கள் வெளியில் திரிகின்றார்கள். (பார்ப்பாயாக). (150)

## கோவிந்த பகவற் பாதர் சங்கர பகவற் பாதரைப் பாடியஞ் செய்யுமாறு அருளல்

அறிஞ, நீ இத்தன்மையோனாதலின், பொது மறைகளினிருந் தெழுந்ததும், பிறப்பிறப்பாகிய பெருந்தீக்கு, முகிற் கூட்டமு மாகிய பகுப்பற்ற தத்துவ வழியைப் பாகுபாடு

செய்வதின் பொருட்டு விரைவாய்க் காசிக்ஷேத்திரத்தை யடைவாயாக. (151)

மைந்த, இதில், வியாசமுனிவராற் சொல்லப்பட்ட தோர் கதையைக் கூறுகின்றேன் கேட்பாயாக :—முன்னொரு காலத்தில், இமயகிரியில் இந்திரன் முதலியோர்களால் வேட்கப்பட்டதும். அத்திரி முனிவரைத் தலைவனாக வுடையதுமாகிய சத்திரயாகத்தில், வியாசமுனிவ ரிருந்தனர். (152)

பராசமுனிவரின் புதல்வராகிய அவர், அங்குள்ள கழகத்தில் (சிலர்க்கு) வேத முடிப்பொருளை, ஓதுவித்துக் கொண்டிருந்தபோது, ஆராதித்தற் குரியவரும், கற்றுணர்ந்தார்களுள் முற்றுஞ் சிறந்தவரு மாகிய, அவ்வியாச முனிவரை, யான் கீழ்வருமாறு வினவினேன். (153)

ஆசிரிய, பொதுவாகிய வேதத்தைப் பிரித்தனை, பாரதத்தை யியற்றினை, புராணங்களுஞ் செய்தனை, யோக நூலுக்கு உரை கூறினை, பிரமசூத்திரங்களையும் அருளினை, இவற்றுள், பிரமசூத்திரத்தில் இவ்வுலகத்தார் சிலர் விவாதமுடையராய்த் தத்தமது, மதங்களைத் தழுவிப் பொருளைக் கற்பிக்கின்றார்கள். ஆதலின், பகவ, பிரமசூத்திரத்திற்குப் பொருள் மாறுகக் கொள்வதை நீக்கத்தக்க, பாடியமொன்று தம்மாற் செயற்பாலது. என்பதாம். (154, 155)

அறிஞர்களிற் சிறந்த வியாச பகவான் அவையின் கண், யான் வினவியதைக் கேட்டு, அன்ப, நீ வினவிய இவ்விஷயம், முன்னமே, மலைமகள் பதியின் மா கழகத்தில், தேவர்களாற் கூறப்பட்டிருக்கின்றது ; எனத்திருவாய் மலர்ந்தருளினர். (156)

மைந்த, தேவர்கூறிய அவ்விஷயத்தையுஞ் சொல்கின்றேன் கேட்பாயாக :—“ உன்னைப்போல், எல்லாமறியுந் திறமையுள்ளா ரொருவர், நினக்கு மாணுக்க ராவர். அவர் எத்தன்மைய ரெனின் ?* குடமுனி, கடலைக்கையி லடக்கியதுபோல, நதி நீ ரியாவையுந் தனதோர் கமண்டலத்தி லடக்குந் தன்மையராவர். (157)

அத்தன்மை வாய்ந்த அவரே பிறமதங்களை மறுத்துச் சிறந்த இன்பந்தரும் பாடிய மியற்றுவார். மற்றும், கார் காலத்திய கலைமதியின் நிலவினுடைய பெருமகிழ்ச்சி போன்று, உனது புகழை உலகிற் பரவச்செய்வரோ ! (அவரே என்றுணர்வாயாக) ” (158)

இவ்வாறு, அம்முனிராசர், மெய்மொழிகூறி விட்டு, மலைமகள் கொழுநனது மலையை யடைந்தனர். அவ்வியாச முனிவரின் முகத்தாற்கேட்ட வலைத்தும், முனிவர்களுக்கு நனிப்பிரிய, நின்பால், இப்போது எம்மாற் பார்க்கப் பட்டன. (159)

ஆகையால், தத்துவஞானிகளிற் சிறந்தோய், நீ ஒரு உத்தமபுருடனுக (பரசிவனுக) இருக்கின்றனை, பிறர்களுக்குச் சமமானவனலன் குற்றமிலாத நூல்களியற்றுவதால், இவ்வுலகைக் கடைத்தேற்றுதற் பொருட்டு இப்போதே முயலுவாயாக. (160)

புதல்வ, கலைமதியைக் கற்றைச்சடையில் தரித்தோனுடைய காசிக்ஷேத்திரத்திற் கேகுவாயாக. தெளிந்த தெய்வ கங்கையால் அழகுவாய்ந்த அந்த க்ஷேத்திரத்திற்குப்போன அத்துணையானே அங்கு ஆதியாகிய விசுவநாதர் நினக்குச் சிறந்த அநுக்கிரகஞ் செய்வார். (161)

இவ்வாறு, தயை மிகுந்த கோவிந்த பகவற்பாதர், எப்போதும், தமது திருவடித் தொண்டையே மிக விரும்பும் இச் சங்கர பகவற்பாதருக்கு இனிது அறிவுறுத்தியும், தமது திருக்கண் ணோக்காற் புநிதமாந் தன்மையை உண்டாக்கியும், அவரை, காசிக்குப் பிரயாணப்படுத்தினர். (162)

## சங்கரபகவற்பாதர் காசிக்குச் செல்லுதல்

செங்கமலத்தின் பிரதிவிம்ப மென்னும் இவ் வாசிரியரின் திருவடி யிணையின் பிரிவாற்ருமையைச் சங்கர பகவற்பாதர் சகிக்க முடியாதவராயிருந்தும், ஆசிரியரின் திருவடியை வணங்கி, அவரது திருக்கடைக் கண்ணோக்கையும் பெற்றுக்கொண்டு, காசிக்குப் புறப்பட்டனர். (163)

(பிரயாணப்பட்டுச் சென்று) மருங்கிற் கதம்பவனங்கள் சூழ்ந்ததும், கங்கை நதிக்கரையிற் பொன்மயமாய்ப் பொலிகின்ற வேள்விப்பசு கட்டுந்தறிகளின் வரிசைகளால் மிக அழகுவாய்ந்ததுமாகிய, காசியைச் சங்கர பகவற்பாத ரடைந்தனர். (164)

யோகீந்திரராகிய சங்கர பகவற்பாதர், (ஆண்டுச் சென்று) பகீரதனது பெருந்தவத்தின் பயன் வடிவானதும், கரையில், உரித்தான கொடிப்பந்தர்களை யுடையதும், நாகப்பூணனது செஞ்சடைக்கண் சிறந்த அணியுமாகிய, கங்கையைத் தரிசித்தனர். (165)

## கங்கையை விசேடித் துரைத்தல்

திருமகள் கொழுனனது திருவடி நகத்தினின்று, எழுந்ததாலோ, அல்லது இமயமலை முடியிலிருந்து இறங்குவது பற்றியோ அல்லது, சிவனது திருமுடியில் திகழும் மதியின் சம்பந்தத்தாலோ, அக் கங்கை நீர் படிகம்

போல் விளங்குகின்றது. (ஈண்டுப் பிரமாவின் கமண்டலத்தி லிருந்தமையாலோ, என விதந்து கூறினும், பொருந்தும் என்பது எமது கருத்தாம் என்னை? அக்கங்கை "முத்தெய்விக கங்கை" எனச் சாத்திரங்களிற் கூறப்பட்டிருத்தலின், என்க. சிறியார் பெரிதுரைக்கினுஞ் சிறிதே, என்னும் வழக்கு அறிஞர்களுக் கிருக்காதென்பது பற்றி அணிலுங் கடலடைத்தவாங்கு கூறினும் பிழை பொறுக்க). (166)

வண்டுகளின் இன்னொலியாற் பாடுவதுபோலும், காற்றாற் கிளப்பிய கமல மலர்களால், நடிப்பதுபோலும், அசைகின்ற அலைகளால் தழுவுவதுபோலும், வெள்ளிய நுரைகளாற் புன்னகை செய்வதுபோலும், (கங்கை விளங்கியது). (167)

தெய்வ கன்னியரின் திருக்கடைக் கண்ணோக்கால் ஓரிடத்திற் சிறிது கருமைவாய்ந்தும், (அவர்களுடைய) அணிகளினொளியால் மற்றோரிடத்துச் சித்திரநிறம் வாய்ந்தும், அவர்களுடைய கொங்கைகளிலிருந் துதிர்ந்த குங்குமங்களால் மற்றுமோ ரிடத்திற் சிறிது பசுமை வாய்ந்ததுமாய் கங்கை விளங்கிற்று. (168)

அச்சங்கர பகவற்பாதர் அத்தெய்வநதியில் நீராடி, பரசிவனது சடைகளிலிருந்து வருங் கங்கை நீர்களின் வேகத்தாலடிக்கப்பட்டு அதன் சம்பந்தத்தா லுண்டாகிய புண்ணியத்தால் நிறைந்த மதிபோல், புளகித முற்றெழுந்தனர். (169)

அக்கால், மதியின் நிலவாற்றோன்றின நீர்த்துளியென்னுங் குறிகளையுடைய சந்திரகாந்தக் கல்லாலமைத்த பிர

திமை போன்று இச் சங்கர பகவற்பாதரின் திருமேனியில் கங்கை நீர்த் துளிகளாற் றோன்றிய அழகு உள்ளவாறு இனிது விளங்கியது. (170)

தேவர்களிற் சிறந்த திருமால் முதலியோர்களால் ஆராதிக்கப்பட்ட விசுவநாதப் பெருமான் திருவடியிணையைச் சங்கர பகவற்பாதர் வணங்கி களிப்புற்ற வுள்ளத்தராய் உலகைப் புநிதமாக்கும் அக்காசி க்ஷேத்திரத்திற் சின்னாள் வசித்தனர். (171)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கர திக்குவிசயச் சுருக்கத்தில் சங்கர பகவற்
பாதரது சந்நியாச ஆசிரமத்தைக் கூறும்
ஐந்தாஞ் சருக்கம்

முற்றும்.

---

## ஆறுவது சருக்கம்

### பத்மபாதர் சங்கரபகவற்பாதரை யடைதல்

*சங்கரபகவற்பாதர் காசியில் வசிக்கும்போது, மறையை ஓதியவனும், கமலம் போன்ற கண்களை யுடையவனும், மெய்யுணர்வை விரும்பியவனுமாகிய ஓர் அந்தணச் சிறுவன், தன தொளியாற் பிரகாசத்தைப் பரப்பிக்கொண்டு பேரன்புடன், (அச் சங்கரபகவற்பாதரென்னும்) ஆசிரியேந்திரர் பால் வந்தனன்.* (1)

*வந்து, வைராக முடையானும், இல்லாளைக் கொள்ளாதவனும், ஆசிரியரது அருளென்னுமோர் தோணியேறித் தாண்டுதற் கரிய பவக்கடலைத் தாண்டும் வேட்கையாளனுமாகிய அவ் வந்தணச் சிறுவன் சங்கரபகவற்பாதரது திருவடி யிணையில் விழுந்தனன் (அட்டாங்கப்படிய வணங்கினன்).* (2)

*சங்கரபகவற்பாத தேசிகர், அச் சிறுவனைத் தமது திருக்கரங்களாலெடுத்து, நீ யாவன்? நினது மனை எங்கே? எங்கிருந்து வந்தனை? பாலனுயிருந்தும், வல்லானுதலின் மதியாற் பாலனல்லன்போல் எமக்குக் காணப்படுகின்றாய், மற்றும், நீ ஒருவனே யாயினும், அநேகர்போற் றோன்றுகின்றனை; (பயமின்மையால்) உடம்பிலோர் சிறிதும் அபிமான மின்றியவனுமாவாய்,'' என்றனர்.* (3)

### அந்தணச் சிறுவன் தனது மரபுரைத்தல்

*(சங்கரபகவற் பாதரால்) வினவப்பட்ட அவ் வந்தணச் சிறுவன், அவ் வினவிற்கு விடை யுணர்ந்தோனய், ஆசிரிய, அந்தணன் யான். அறிஞ, திருமாலின் திருவடிக் கமலத்தி*

துள்ள அன்பு காரணமாகிய கவேர முனிவரின் புதல்வியின் (காவேரியின்) நீர் என்னுட்டில் பாய்கின்றதோ, அச் சோழ நாட்டில் உள்ளது எனது மனை. (4)

பெரியோரைத் தரிசிக்க (பெரும் பொருளைக் காண) பெரு வேட்கையனாய் யாண்டுந் திரிந்து மெல்ல, மெல்ல, இந் நாட்டிற்கு வந்துள்ளேன்; பவக்கடலில் மூழ்கிப் பயமுற் றேன். என்னைக் கருணையோடு பவக்கடலினின்றுங் கரை யேற்றி யருள்வீராக. (5)

பேராசிரிய, எனது, குண தோஷங்களைக் கருதாமல் சோகத்தால் மெலி வெய்தித் துன்புற்ற என்னை திருக் கடைக் கண் பார்வை யென்னும் அமிருதப் பெருக்கின் அலை களோடு கூடிய தயையால் நோக்கி யருள்வீராக; எனது குண தோஷங்களைக் கருதுவீரேல், தேவரீரைக் கரையிலாக் கருணைக் கடலென எடுத்துப் புகழ்வ தெங்ஙனம்? (6)

மூவுலகுக்கோர் ஆசிரிய, விரைவில் எனக்கு அருளு வீரேல்? ஏழ்மை யுடையார்களுக்குத் தயையால் இன் னருள் செய்வதால் வரும் பெரும் புகழ்கள் திருவாளராகிய தம்மிடத்தில் வருவனவாகும், என்னை? காய்ந்த மேட் டில் கனத்த மழையைப் பெய்த மேகங்கள், நல்லோர்க ளாற் போற்றப் படுகின்றன. அவை போலாதலின் நூற் றுக் கணக்கான வருடம் மா கடலில் மழையைப் பொழியி னும் (அம்மேகங்கள்) போற்றப்படுவன வாகா. (7)

முனிவ, எனது மதி, தம்முடைய வாணியின் சார மென்னுஞ் சந்திரனுடைய அமிருத கூபத்திலிருந்து எழு கின்ற உண்மையான பெருக்குக்களோடு கலந்து எப்போ தும் நன்கு விளையாடுவதாய், ஐங் கணைக்கிழான் முதலி

யோர்களாற் கெடுக்கப்பட்டனவும், தாழ்மையை யுடையன வும், தன்னுடைய அநுகூல வுணர்ச்சி சிறிது மில்லாதனவு மான பிரமனுலக மீறான வுலகங்களைப் பார்த்துக்கொண்டு திரிவதாகுக, (தமது திரு வாக்காற் பெற்ற அத்துவிதீய சாட்சாத்காரத்தாலுண்டாகிய சீவன் முத்திச் சுகமாகிய ஆன்மாக் களிப்புறும் இரத்தின மண்டபத்தில், எப்போதும் எனது புத்தியானது விளையாடுவதாகுக, என்பது உட் கிடை). (8)

தமது திரு வாக்குக்களில் பேரன்பு பூண்ட மனமுள்ள சுத்தாத்துவிதத்தை யறிந்தவர்களின் வைராக்கியமென் னும் இலக்குமியை, இரவி மண்டலமேனும், அல்லது, அமிருத கிரண நகரமேனும் (சந்திரநகரமேனும்), இந் திரனது மாளிகையேனும், குபேரனுடைய பட்டின மேனும், அக்கினி யுலகமேனும், வாயுவினுடைய புர மேனும், பிரமனது மாளிகையேனும், கெடுக்கத்தக்க முழுக் களிப்பைக் கொடுக்கா (சங்கர பகவற்பாதரது உப தேசத்தால் உண்மை ஞானம் பெற்றவர்களின் வைராக்கியம், சூரிய வுலக முதல் பிரமனுலகமீறான அநித்திய சம்பத்துக ளாற் கெடாதென்பது கருத்து). (9)

மண்ணிடத்துண்டாகிய அழகு வாய்ந்த மங்கையர்கள் முதலிய விஷக் கொடி போன்ற விடயங்கள் எனக்கு ஓர் போதும் கடுகளவேனுங் களிப்பை யுண்டாக்குவன வாகா; சிறந்த புண்ணியமுங் களிப்பை யுண்டாக்காது; விண் ணுலக வேசியரின் பயோதரத்தைத் தழுவத்தொடங்கியதால் (மனோரம்மியத்தால்) விளங்கும் இந்திரபதவியும் உண் டாக்காது. (10)

நிலையாமை வாய்ந்த பிரமனது பதமும் விரும்புதற் கிடமாகாது; (மற்றெதையெனிலோ?) வரிசையான சகோ

ரப் புட்களின் மூக்குக்களால் துவாரஞ் செய்யப்பட்டதால், (மதியிலுள்ள களங்கமே துவார மொத்த தென்றுணர்க) அதினின்றொழுகும் அமிருதப் பெருக்கு வடிவாகிய சங்கரபகவற்பாத தேசிகரால் செய்யப்பட்ட இனிய புதிதாகிய திரு வாக்கின் நிருமாணத்தை யான் அடிக்கடி விரும்புகின்றேன். (கூறிப் போந்தவாற்றால் தத்துவ ஞானத்திற்கு அதிகாரியானதால் வேதாந்த சிரவணத்தில் விருப்பங் கூறியவாறு காண்க). (11)

வானுலகிற்கும், மண்ணுலகிற்கும், மங்கலங் கொடுப்பதும், பெருமை வாய்ந்த புகழ்ப் பேச்சுகளுக்கு மங்கலச் சொல்லானதும், முற் பிறப்பிற் செய்த பெருந் தவத்தின் அரும் பயனானதும், எளியார்களுக்கு அன்னமளிப்பதுமாகிய தமது திருத்தொண்டில் எனது மனம், தொழிற் செய்யும் வலிவுடையதாய்க் கட்டுப்பட்டிருப்பதாகுக. (தமது திருப் பணியே வேண்டுகின்றேன், என்பது கருத்து). (12)

குடும்ப பந்தமாகிய கொடும் வியாதியின் பீடை அடங்குதற் பொருட்டு, பகவானாகிய தேவரீரே உபாசித்தற்குரியீர். என்னை ? "வைத்தியரிற் சிறந்த வைத்தியனாகிய உன்னைக் கேட்டுள்ளேன்," என்னும் மறை மொழியிற் கூறியுள்ள கறை மிடற்றான் கருணை யவதாரமாய் வந்திருக்கின்றீர் ஆதலின். (13)

### பத்மபாதர் மாணாக்கராதல்

இவ் வண்ணங்கூறிய அவ் வந்தணச் சிறுவரைச் சங்கர பகவற்பாதர் விதிப்படி துறவை யடையச் செய்தருளினார். ஆசிரியர்களுக்குத் தலைவராகிய சங்கரபகவற்பாதருக்கு இவரையே 'சனந்தனர்' என்னும் முதல் மாணாக்கராக பெரியோர்கள் கூறுகின்றார்கள். (14)

பவக் கடலைக் கடக்க, எப்போதும் ஓடத்திற் சென்று வியாபாரஞ் செய்யும் வணிகராய் அருள் செய்வீராக, என வேண்டிய இச் சனந்தனரை, ஐயகோ! மாணுக்கர்களிடத்து இயல்பாய் உறுதி யுடைய காருண்யமென்பதோர் தோணியைச் செலுத்தும், கைக் கோலைக் கொண்ட சங்கரபகவற் பாதர், சிறந்த துறவாசிரமமென்னுந் தோணியிலேற்றி, அக் கணத்திலேயே அக் கரையிற் சேர்த்தனர். (15)

மற்றும், தேவக் கூறுடையோர்களான (சிற்சுகாசிரியர், ஆனந்த கிரியாசிரியர் முதலியோர்களும், இச் சங்கரபகவற் பாதரைத் தொழச் சென்ற ஏனையவர்களும், பெரும் வைராக்கியவான்களும், அக் காசி க்ஷேத்திரத்தின் கண் உலக முறையிலும், "இவர்கள் சங்கரபகவற்பாதரின் மாணுக்கர்கள்," எனப் பிரசித்தியாதற் பொருட்டு, முன்னர், கல்லாலடிக்கீழ் வளர்ந்த கருணைக் கடலானுக்கு மாணுக்கர்களாயிருந்தவர்களும், இச் சங்கரபகவற்பாதருக்கு மாணுக்கரானார்கள். (16)

(மேற்கூறிய பொருளையே விரித்தல்) மோனத்தையே உபதேசமாகக் கொண்டவர்களும், கலக்கமான ஐயப்பாட்டினுடைய முளைகளை அடியோடு கெடுத்தவர்களும், உலகைப் புனிதமாக்குவதும், வியப்பானதுமாகிய சரிதமுடையவர்களும், ஒப்பற்ற வாமதேவர் முதலியோர்களும், ஒழுக்கமுள்ள உலகக் கூட்டத்தார்களைக் கரையேற்றுவிப்பான், மண்ணிடத்து அவதரித்த இச் சங்கரபகவற்பாதருக்கு மாணுக்கரானார்கள். அவர்கள் ஒப்பிலாதவர்களாதலின் தன்னியர்களை யாவர்கள் (இது சம்பாவனை விதப்பு). (17)

ஆதிசேடரோ, புருடார்த்தம் விரும்பிய மாந்தர்களை (இலக்கண நன்கமைந்த) ஓசைகளாலேயே களிப்படையச்

செய்கின்றனர். (அக் கணத்திலேயே கிருதார்த்தர்களாக்குகின்றாரிலர்) வான்மீகி யென்னுங் கவிகட்கரசரோ, பொய்ப் பொருள்களின் கற்பனையாலே அடிக்கடி மனிதர்களை மகிழ்விக்கின்றார், வியாச முனிவரோ, சூத்திர முறையிலுள்ள தொடர்பு வாக்கியங்களை, நெடு நாட் கேட்ட பின்னர் பொருளுணருமாறு செய்து மக்களை யின்புறச்செய்கின்றார். உபநிடதப் பொருளாகிய சிவப்பிரம அபேதத்தையே விரித்துரைக்கினும், இச் சங்கரபகவற்பாத தேசிகரோ, உபதேசித்த அக் கணப்போதிலேயே மாந்தரைக் கிருதார்த்தர்களாக்குகின்றனர். அம்ம! (ஆதலின் அவரே தொழற்பாலரென்பது கருத்து). (18)

(கங்கையைக் கற்றைச் சடையிற்றாங்கிய பரசிவன்) விட்டு நீங்காத காசி க்ஷேத்திரத்தில் வாழ்வோர்கள், திருமாலுக்கொத்த மகிமை யுடையராய்க் கருதி இச் சங்கரபகவற்பாதரை உபாசித்து வந்தார்கள். வளைந்த நெறியைப் பற்றியவர்களும், அவ் வுபாசனையால், தத்தமது புத்திகளை, நலமுடையதாய்ச் (அத்துவித மார்க்கத்தில் நடப்பனவாய்) செய்து கொண்டார்கள் (ஈண்டு மூலத்தில் அவிமுக்த, என்றதற்கு உயிர் துறந்த பின்னரே முத்தியை அளிக்காமல், உயிரோடு வாழும்போதே முத்தியைக் கொடுக்கத் தக்க காசி க்ஷேத்திரம் எனினு மமையும்). (19)

## உச்சிப்போதின் விதப்பு

அங்கு, கிரண மண்டலங்களால், உக்கிரமாகிய இரவி விளங்குவது போன்றும், பூக் கூட்டங்களால் பாரிசாத புட்பம் விளங்குவதொப்பவும், முண்டகக் கண்களால் அண்டர்கோன் விளங்குவதற்குச் சமமாகவும், மாணுக்கர் குழாங்களாற் சங்கரபகவற்பாதர் பொங்கி விளங்கினர். (20)

அவ் வண்ணமிருக்குங்கால் ஓர்போது, முப்புரத்தின் மேல் முனிவு கொண்டவனது (சிவனுடைய) நெற்றிக் கண்ணெனும் தீவடிவ இரவியின் கிரணங்கள், மிகச் சூட்டின் சூரியகாந்த கற்களினிடத்து தீப்பொறிகளின் பதவியைப் பெற்றனவோ, (எந்த உச்சிப் போதில் இரவியின் கிரணங்கள் எரியின் பொறிகள் போன்றனவோ, அந்த உச்சிப் போதில், என மேல் வரும் விசேடணங்களைச் சேர்த்து முடித்துக் கொள்ளவும்). (21)

மற்றும், இரவி, அத் தன்மைய கிரணங்களால், கடலைத் தோற்றச் செய்து கொண்டும், (கானனீர்ப் பெருக்கை யுண்டாக்கியும்) பற்பல மணிகளோடு சேர்ந்துள்ள மண்களில் கொடிய வெய்யிலால் மயிலின், தோகைகளை விரியச் செய்து கொண்டும், பெரிய இந்திர சாலஞ் செய்வோன் போலானதோ ; (22)

அன்னங்கள், கமல மலர்த் திரள்களில் நன்கு ஒடுங்கிக் கொண்டனவோ, மீன்கள், தடாகத்தின் நடுவிற் சென்றிருந்தனவோ, அத் தன்மைத்தாய உச்சிப்போதில் ; (23)

இச் சங்கரபகவற்பாதர், உச்சிப்போதைய கருமத்தை விதிப்படி செய்ய விருப்புற்றவராய், செங்கமலப் பூக்களின் தாதுக்களாற் செந்நிறமாகிய கங்கைக்குத் தமது மாணுக்கருடன் சென்றனர். (24)

## சங்கரபகவற்பாதர் விசுவநாதரைத் தரிசித்தல்

(செல்லுங்கால்) வழியில், பயங்கொடுக்கத் தக்க நான்கு நாய்களுடன் அருகிலோர் சண்டாளன் வந்தனன். அவனை நோக்கி, சண்டாள, தூரத்திற் போவாயாக. என அவனுக்குச் சொன்னர். அதைக் கேட்ட அவன், கீழ் வருமாறு மறு மொழி கூறினன் :— (25)

சண்டாள வடிவ விசுவநாதர் கூறுதல்

நூற்றுக் கணக்கான மறை முடிகள், பரமான்மாவை அத்துவிதீய மென்றும், தோடமற்றதென்றும், அசங்க சச்சிதானந்தமென்றும், அகண்டமென்றும், முறையிடுகின்றன. அப் பரமான்ம வடிவில், (வேதாந்தி, எனப் பிரசித்தியாகிய) உனக்குப் பேத கற்பனையு முண்டுகொலோ? அந்தோ! வியப்பு. (26)

தண்டமேந்தியதால் அழகிய கைகளை யுடையவர்களாயும், கமண்டலந் தாங்கியவர்களாயும், பசுமை நிறவாடையுடுத்தவர்களாயும், சொல் வன்மை யுடையவர்களாயுமுள்ள அறிவின் மணமே யிலாத சிலர், இல்லறத்தார்களை வேடமாத்திரத்தால் ஏமாற்றுகின்றார்கள். (27)

அறிஞ, "நீ தூரத்திற் போவாயாக" என்று கூறி, உடம்பினை நீக்க விரும்பினையோ? உடம்புடையானை நீக்க விரும்பினையோ? உடம்பை யெனின், அன்ன மயத்தினின்று (அன்னத்தின் பரிணாமமாகிய நினது தூல வுடம்பிலிருந்து) அன்ன மயம் (அன்னத்தின் பரிணாமமேயாகிய எனதுடம்பு) வேறதாமோ? நீத்தார்களுக்கிறைவ, உடம்புடையானை யெனின், (சீவனும் சாட்சிசைதன்யமும் உண்மையில் ஒன்றே யாதலின்), நினது சாட்சியினின்று எனது சாட்சி வேறதாமோ? (28)

இவன் அந்தணன், இவன் புலையன் என்னும் பேத வாராய்ச்சி பிரத்தியக் ஆன்மாவில் (உள்ளொளிப் பிழம்பில்) எவ்வா றுனக்கு அடுக்கும்? வான் கங்கை நீரிலும், சேறு மலிந்த சிறு கால் நீரிலும், பிரதி விம்பித்துள்ள இரவிக்குச் சிறிதேனும் வேறுபாடுண்டோ? இல்லை. (29)

முனிவர்களிற் சிறந்தோய், யான் புநிதமாகிய அந்தணன், (அழுக்குமலிந்த) சண்டாளன், நீ தூரத்திற் போவாயாக, என்னும் ஆங்காரம், என்னை கொலோ? உடம்பினுள்ளிருப்பதும், உடம்பிலாததும், ஒன்றானதும், பரிபூரணமானதும், புருடனானதும், பழமையானதும், கருதப்படாததும், வெளிப்படாததும், வரம்பிலாததும், ஆதியானதுமாகிய நிருமல வடிவத்தை அறியாமையால் மறந்துவிட்டு, யானையின் செவி அசைதலைப் போன்று நிலையாமையுள்ள இவ் வுடம்பில் நான் என்பது உனக்குத் தோன்றியதெவ்வாறு? (30, 31)

அரு முத்திக்குப் பெரு நெறியாகிய தத்துவ ஞானத்தையடைந்தும், உலகத்திற்கு இதஞ் செய்ய வேண்டும் என்னுஞ் சிறியதோ ரிச்சை ஒழியாததென்னை கொலோ? அந்தோ! பெரியோர்களும் மாயாவியிற் சிறந்தவருடைய (இந்திர சாலஞ் செய்வோர்களில் தலைவனாகிய பரமான்மாவின்) பெரியதோரிந்திர சாலத்தில் மூழ்குகின்றார்கள், என்றனர். (32)

இவ்வண்ணம் இச் சண்டாளர் கூறியபோது, வாக்குண்மையை யுடையவரும், சிறந்த சரிதமுடையவருமாகிய அச் சங்கரபகவற்பாத தேசிகர், வியப்படைந்த மனத்தராய், (இவன் சண்டாளன்றானோ? அல்லனோ? என) ஐயப்பாடடைந்து அச் சண்டாளனுக்குக் கீழ் வருமாறு மறுமொழி கூறினர். (33)

தேக முடையார்களிற் சிறந்தோய், இப்போது தங்களாற் கூறப்பட்டது உண்மையே இக்கணமே ஆன்ம ஞானியாகிய தமது திருவாக்கால் 'இவன் சண்டாளன், என்னும் புத்தியை அடியோடு ஒழித்து விடுகின்றேன். (34)

அநேகர், உபநிடதங்களை யுணர்கின்றார், (கேட்கின்றார்) இந்திரியங்களை யடக்கி, மனனமுஞ் செய்கின்றார்; நாடோறும் உள்ளத்தை ஓர் பரமான்மாவின் கண் செலுத்துகின்றார். (நிதித்தியாசனமுஞ் செய்கின்றார்) அங்ஙனமாயினும், அபேத புத்தி பண்ணுகின்றாரிலர். (ஈண்டு) ஆன்மாவை, யறிந்தோனுக்கும், அறிய விருப்புடையானுக்கும், பொதுவாயுள்ள எனது சந்நியாசத்தைக் கண்டு இவன் ஆன்ம ஞானி, என நிச்சயிக்க முடியாவிடினும், வருணாசிரம தருமபரிபாலனத்தின் பொருட்டு மாத்திரமே, "தூரத்திற் போவாயாக," என்று கூறியது கொண்டு இவ்வாறு ஆசங்கை நிகழ்ந்ததை, ஒருவாறு உடன்பட்டுக் கொண்டேன். அங்ஙனமாயினும், எல்லாமுணர்ந்த தாங்கள் எனது வார்த்தையைக் கேட்ட பின்னரேயே இவ்வாறு ஆசங்கைச் செய்ததை நோக்குமிடத்து, தங்களுடைய வாக்காலே இயல்பாகவே பேத புத்தி வெளிப்பட்டது. அஃதன்றியும், வியவகாரத்தில் பேதபுத்தி யொதுங்கிய விடத்து, ஞானி, அஞ்ஞானி, என்னு மிவரும் பொதுவானபோது வருணாசிரம தரும பரிபாலனத்தின் பொருட்டே அவ் விவகாரத்தைப் பாதுகாப்பாற்றுகின்ற எனதிடத்துச் செய்த இவ் வாசங்கை, தாங்கள் பரசிவனனது பற்றியே அழகுடையதாயிற்று; (பிறரெனில் இவ் வாசங்கையே பொருந்தாது என்பது கொள்ளக் கிடந்தமை காண்க). (35)

சங்கரபகவற்பாதர் மநீடா பஞ்சகங் கூறல்

(பிறருடைய பேச்சிருக்க உனக்குப் பேத புத்தி உண்டா? இல்லையா? என்றாசங்கித்தற் பொருட்டு மறுமொழிகூறல்) உறுதியாகிய புத்தியுடைய எவனுக்கு இவ்

வுலகில் யாவும், ஆன்மாவாகவே தோன்றுகின்றனவோ, அவன் அந்தணனே யாகுக, அல்லது புலையனே யாகுக, அவன் வணங்கற் குரியோன்,'' என்பது, எனதுள்ளத்தின் உறுதிப்பாடு. (36)

அவன் வணங்கத் தக்கான் மாத்திரனலன், மற்றும் எனது ஆசிரியனுமாவ னேனல்

"யாதொரு சைதன்யம் விட்டுணு முதலியோர்களிடத்தும் விளங்குகின்றதோ, அதுவே, கீடம் (புழு) முதலிய பிராணிகளிடத்துமிருக்கின்றது, யான் எப்போதும் அச் சைதன்யமேயாவன் காணப்படு பொருளல்லேன்'' என்னும், உறுதியாகிய புத்தியை யுடையான், புலையனேயாயினும், அவன் எமக்கு ஆசிரியனாவன் (37)

(விரிக்கிற் பயனென்னை? தத்துவ ஞானிகள் யாவரும், எமக்கு ஆசிரியர்களே யாவரெனல்) "அவ்வவ் விடயாநுபவ காலத்தில் எவ்வெவ் விடயங்களி னுணர்ச்சி தோன்றுகின்றதோ, அவ்வவ்விடயங்க ளியாவும் பொய்யாம். எஞ்சிய உணர்வு மாத்திரமே யான்'' என்னும் புத்தியுடையார்கள் யாவர்களோ, அவர்கள் எமக்கு ஆசிரியர்களே யாவர்கள் என்றனர். (ஈண்டுத் தூரத்திற் போவாயாக என்றது, உடம்பைப் பற்றியுமன்று, ஆன்மாவைப் பற்றியுமன்று, மற்றேறு? இவ் விரண்டின் அபேத முடையார்களைப் பற்றியது; அது தமக்கின்றெனில், தாங்களும் எமக்காசிரியரே யாவீர், என்று ஆசங்கையை யகற்றினமை காண்க). (38)

இவ் வண்ணம் அச் சண்டாளனுடன் பேசிக்கொண்டிருக்கும்போதே, சிவக் கூறாகிய இச் சங்கரபகவற்பாதரின் முன்பு, அச் சண்டாளனைக் காணுதவராய், மறைக ளென்

குடன் மதியணிந்த சென்னியுள்ள மாதேவனையே கண்டனர். (39)

சங்கரபகவற்பாதர், அப் பரசிவ மூர்த்தத்தைத் தரிசித்து, அச்சம், அன்பு, விநயம், விசேட வலி, களிப்பு, வியப்பு, என்னு மிவைகளுடன் கூடியவராய், கண்ணிற்கு எட்டும் அட்ட மூர்த்திகளை, ஆன்றோர்க ளேற்றுக்கொள்ளுந் தோத்திரங்களாற் கீழ் வருமாறு களிப்பித்தனர். (40)

"பரசிவ, ஆக்கையை நோக்குங்கால் யான் நினக்கு அடியனாயிருக்கின்றேன் ; சீவனை நோக்கிலோ, நினது கூறாயிருக்கின்றேன் ; முக்கண்ண, முழுதுமானோய், பரிசுத்தான்மாவை பார்க்கிலோ, நீயாகவே யிருக்கின்றேன்," என, எல்லா நூல்களாலும் என்னுடைய புத்தி உறுதிப்பாட்டையடைந்திருக்கின்றது.

இக்கருத்தையே—

தரவு கோச்சகக் கலிப்பா

தேகமார் பார்வைதன்னுற் றிருவடித் தொழும்பனுவேன்
போகமூழ் சீவநோக்காற் பொருந்துமுன் கூறதாவேன்
ஏகமாஞ் சாட்சிநோக்கா லியானுமுன் னுருவேயன்றோ
ஊகமாய் நூல்களாலே யுன்னியீ தறிந்ததாமால்

என்னும் ஆன்றோர் மொழி யானுங் காண்க. இஃது உரையிற் கண்டது. (41)

தனதொளியால், உலகை உள்ளும் புறம்பும் இருளில்லாததாகச் செய்வதும், மூவுலகத்தும் ஒளிபெறத் தேய்க்குங் கல் இல்லாததும், சுரங்கமின்றியதும், விருப்புடைய எதிகள் தனித்தோரிடத்தில் இரகசியமாய் முயலத் தக்கதுமாகிய, அருமறைமுடிகட் கெல்லாமோர் அணியாகிய சூடாமணியின் பொருட்டு யான் வணங்குகின்றேன். (42)

சாத்திரங்களோ, பெருஞ் சிறப்புடையன (அறிய வொண்ணாப் பரமான்மாவை யறிவித்தலின்). ஆசிரியருடைய அருளின்றேல்? அச் சாத்திரங்களாலும், பயன் என்னை கொலோ, (பயனற்றனவே யென்க)? ஆசிரியரது அருளைத் தேடினும், உண்மையாய்த் தத்துவ ஞானமுதிக்காதபோது அதனாலும் பயன் யாது (அதுவும் பயனற்றதாமென்க)? தத்துவ ஞானம் உண்மையா யுதித்தபோதும், அத்தன்மைய எமது பரதத்துவ மின்றெனில், அந்த ஞானத்திற்கு விஷயமாவது எது (பரதத்துவப் பொருளின்றேல், விஷயமற்றதேயாய் விடு மென்க)? ஆகையால் அதிசயமாகிய புத்தி விருத்தி வடிவ ஞானத்திற்கு விஷயமாகிய, தானே யென்னும் பரமான்மாவிற்கு வணக்கம். (43)

இவ்வாறு சிறந்த வாக்கியங்களாற் பரசிவனைத் துதிக்கின்றவரும், வணங்குகின்றவரும், ஆனந்தக் கண்ணீ ருகுக்கின்றவரும், முனிவர்களிற் சிறந்தவருமாகிய சங்கரபகவற்பாதரை நோக்கி, புலைய வேடம்பூண்ட விசுவநாதர் பெருமை பாராட்டுவதுடன் கீழ் வருமாறு திருவாய் மலர்ந்தருளினார். (44)

சங்கரருக்கு விசுவநாதர் அருளல்

பெரியார்களிற் பெருமை யுடையோய், நீவிர் எமைப் போன்றோர்களின் இனிய நிலைமையை யடைந்துள்ளீர்; உமது தவ நிலைமை (இவ் விளையாட்டால்) பரிசோதிக்கப்பட்டது; வியாச முனிவர்போல் நீரும் எமது அருளுக்கும் பாத்திரமாவீர், (எனவே விசுவநாதர் சங்கரருக்கு ஆசிமொழி கூறி, அருள் செய்தமை காண்க). (45)

ஆன்றோர்களிற் சிறந்த வேத வியாச முனிவர், பொதுவான மறைகளையுஞ் சிறப்புற வகுத்து, பின்பு கணாதமுனி

வர் மத முதலிய தீய மதங்களை அடியோடு களைந்தெறியத் தக்க பிரம சூத்திரங்களையுஞ் செய்திருக்கின்றனர். (46)

அதற்கு மூட மதி யுடையார்கள் சிலர், கலி தோஷத்தால், (மாறுபட்ட மதமுடையார்கள் தங்கள் எண்ணத்திற்குரிய) இரண்டு, மூன்று, (பூருவபக்க) மறைமொழிகளை யெடுத்துக்கொண்டு பாடியஞ் செய்திருக்கின்றார்கள். உணர்வுள்ள அத்தன்மைய பெரியார்களாற் சிறிது பழிக்கவும் பட்டிருக்கின்றது; ஆகையால், மறை முடிகளை யுணர்ந்த நீவிர் அத் தீய மதங்களை மறுத்து மறைகளியாவற்றிலும் விளங்கும் யுத்திகளையுடைய பாடிய மொன்று அப் பிரம சூத்திரங்களுக்கு இப்போது செய்வீராக. (47, 48)

தம்மாற் செய்யப்படும் அப் பாடியமே, இந்திரன் முதலிய தேவர்களாலும் ஆராதிக்கத் தக்கதாகும், என்னை? பிழையற்றதும் புகழுற்றதுமானதாலென்க. (அதனாலேயே) பிரமனது பேரவையின் கண்ணும் நன்கு பூசிக்கப் படுவதுமாகும். (49)

(பேதாபேத வாதியாகிய) பாஸ்கரர், (சாக்த மதத்தராகிய) அபிநவ குப்தர், (பேதவாத சைவராகிய) நீலகண்டர், பிரபாகரர், மண்டன மிசிரர், முதலிய கருமகாண்டிகள், என்பவர்களான பண்டிதர்களை வென்று, அத்துவித முணர்ந்தோய், உண்மையை நீர் விளக்குவீராக. அல்லது உண்மையாகிய பிரமப் பொருளை விளக்குவீராக எனினுமாம். (50)

மற்றும், அஞ்ஞான மென்னுமோர் பேரிருளை யழித்தற் குரியவர்களும், பரமான்ம தத்துவத்தில் அடைக்கலம் புகுந்தவர்களுமான, மாணாக்கர்களை, தம்மைச் சரண் புகுந்தோர்களைப் பாது காப்பாற்றுதற் பொருட்டு, அங்கங்கு

தாபித்து, பிறகு அவதாரமெடுத்த காரியங்களைச் செய்தவராய் எம்மை அடைவீராக என்பதாம். (51)

பரசிவன், இவ்வாறு, சங்கரபகவற்பாதருக்கு, அருள் செய்துவிட்டு தம்முடனிருந்த நாய் வடிவ) மறைகளுடன் மறைந்தருளினர்; சங்கரபகவற்பாதரும், தமது மாணுக்கர்களுடன் வியப்புற்ற மனத்தராய்க் கங்கைக்குச் சென்றனர். (52)

சென்று, உச்சிப் போதிற் செய்ய வேண்டிய கருமங்களை விதிப்படி செய்து முடித்துக் கொண்டு, அம்பிகா பதியையும், ஆசிரியரையுந் தியானித்தவராகிய, குணக் கடலென்னுஞ் சங்கரபகவற்பாதரின் மனம், உலகிற்கெல்லாம் நன்மையாம் பொருட்டு எல்லாப் பாடியங்களையுஞ் செய்ய (பதினுறு பாடியங்களையுஞ் செய்தற் பொருட்டு) முயற்சி மேற்கொண்டதாயிற்று. (53)

## சங்கரபகவற்பாதர் காசியினின்று புறப்படல்

அச் சங்கரபகவற்பாத தேசிகர், விசுவநாதரால் பாடியங்களுக்குக் கருத்தாரந் தன்மையைப் பெற்றுக்கொண்டு, தேனை விரும்பிய வண்டுகளின் இக்கட்டால் கமல மொக்கினின்று அன்னம் வெளியேறுமாறு பரமாஞ்சராகிய அவர், மரணத்தின் பின் மாயா விலாச சம்பந்தத்தை மாற்றுங் காசித் தலத்தினின்று வெளியேறி இன்புற்றனர். (ஈண்டுத் தேன் விரும்பிய வண்டுகளின் தொந்தரவால் தாமரை மொட்டினின்றும் வெளியேறிய அன்னம், இன்படையுமாறு, ஞானமென்னுந் தேனை விரும்பியவர்களின் உபத்திரவத்தால் காசியினின்றும் வெளியேறிச் சங்கரபகவற்பாதர் சுகமடைந்தனர். எனவே அற்பநேரமேனும் விடு

தலையின்றிப் பல்லாயிரம் பேர்களுக்கு ஞானோபதேசமே செய்துகொண்டிருந்தனர் என்பது பெற்றும்). (54)

## சங்கரபகவற்பாதர் வதரிகாச்ரமத்திற் கேகல்

அத்துவித நூல்களுணர்ந்தார்களிற் சக்கரவர்த்தியாகிய இச் சங்கரபகவற்பாத தேசிகர், மண்ணிடத்துச் செல்கின்றாரென வெண்ணி, சந்திரன், தனது பிரதிவிம்ப வடிவக் கவிகையை அத்தமன கிரியிலிருந்து கொண்டு தாங்கவும், அழகுடன் முன்பு பிரகாசிக்கும் வடிவத்தால், திக்குக்களென்னும் மாதர்கள் சாமரம் வீசுகின்றார்கள் போலும். (ஈண்டுத் திக் முகத்தாலெனப் பாடங் கொள்ளின், கீழ்த் திக்கை முகமாக வுடைய இரவி கொள்ளற்பாலது, கொள்ளவே, உதய சூரியனும், சாமரம் வீசுவான் போன்றானே (என்பது கற்பனை யணி) ? (55)

இச் சங்கரபகவற்பாத தேசிகருக்கு, ("வானோரும் மண்ணோருஞ் சாந்தமடையுந் திக்கு வடக்கே," என மறை கூறியவாங்கு வட திசையைத் தவிர்த்து), வேறு திக்கு, நேரே பிரியப்படவில்லை ; ஆதலின், ஆண்டுள்ள தீர்த்தங்களையும் (க்ஷேத்திரங்களையும்) வழிபட்டுக் கொண்ட, அச் சங்கரபகவற்பாதர், முறையாய் வதரிகாசிரமஞ் செல்வான் மனத்துட் கொண்டனர். (56)

பின்பு, மூடரின் மனத்தைப்போல், சிலவிடத்தில் வெப்பமுள்ளதும், சிலவிடத்திற் குளிருடையதும், சிலவிடத்தில் நேருள்ளதும் ; சில விடத்தில் கோணியதும் ; சில விடத்தில் மேலெழுந்து நிற்கின்ற முட்களை யுடையதும் (இராகாதிகளை யுடையதும்) சில விடத்து இராகாதிகளற்றதுமாகிய நிலை யற்றதோர் மார்க்கம் (வதரிகாசிரமஞ் செல்ல)

அம் மகானாகிய சங்கரபகவற்பாதரால் தொடரப்பட்டது. (இத் தன்மைய வழியிற் செல்லத் தொடங்கினர் என்பது கருத்து). (57)

(செல்லுங்கால், சங்கரபகவற்பாதர்) கிரியை யிலாததும், கேடிலாததுமாகிய தமது ஆன்மாவை யுணர்ந்தவரா யிருந்தும், உலக முறையைப்பற்றி, வழிச் செல்வோர்களுடன், நடப்பவராயும் மதுரமான கனிகளை யுட்கொள்பவராயும், உறங்குபவராயும், விழிப்பவராயு மிருந்தனர். (58)

## வதரிகாசிரமத்தை விதத்தல்

(இவ்வாறு சென்ற) அச் சங்கரபகவற்பாதரால் நெடுந்தூர வழி கடக்கப்பட்டது; மற்றும், வதரிகாசிரமத்தையே முக்கியமாகக் கொண்ட வனமென்னும் புண்ணிய பூமியு மடையப்பட்டது; (அப்பூமி எத் தன்மையதெனின்?) இமயகிரியிலிருந்தொழுகும் மெதுவாகிய நீர்ப் பெருக்கை யுடையதும், தேவ கன்னியர் விளையாடுங் குகைகள் விளங்கப்படுவதுமாம் (ஈண்டு வியாசமுனிவரின் ஆசிரம முதலியன விருத்தலின் புண்ணிய பூமியாம்). (59)

அச் சங்கரபகவற்பாதர், வதரிகாசிரமத்தில், ஆறினும் (பசி, தாகம், சோகம், மோகம், மூப்பு, மரணம், என்பவைகளாலும்) ஏழாலும் (தோல், இரத்தம், தசை, எலும்பு, நரம்பு, மூளை, சுக்கிலம் என்பவைகளாலும்) ஒன்பதாலும், (ஞானேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு என்பவைகளாலும்) அல்லது ஞானேந்திரியம் ஐந்து, பிராணன் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, குணத்துடன் கூடின பூதங்களைந்து, தன்மாத்திரை யைந்து, மகதத்துவம், அகங்கார தத்துவம் புத்தி தத்துவம் என்னும்

பிரகிருதிகள் எட்டு, அவித்தை, காமம், கருமம், வாசனை, என்னும் ஒன்பதாலும், அல்லது ஒன்பது துவாரங்களாலும், (அதாவது இவைகளையே ஆன்மாவெனக் கொண்டவர்களாலும்) துன்புற்றவர்களும் நிட்டையிலொருப் பட்டவர்களுமான பிரம இருடிகளுடன் உபநிடதங்களைப் பல வகையாய் ஆராய்ந்து (அவைகளுக்கு) மங்கலம், ஆழம், மதுரம், என்பவைகளையுடைய அத்துவித பாடியத்தைப் பன்னிரண்டாவது வயதில் இயற்றி யருளினர்.

ஈண்டு, ஆறினாலும் (சாருவாகம், ஆருகதம், சௌத்திராந்திகம், வைநாசிகம், வைபாடிகம், யோகாசாரம் என்னும் நாத்திக மதங்களாறினாலும்), ஏழாலும் (கௌதம, கணாத, கபில, பாதஞ்சல, சைமினி, சாங்கியத்திலொரு வகையாகிய சாக்தம், மீமாஞ்சையிலொரு பிரிவாகிய பாஸ்கரம் என்னப்படும் ஏழ ஆத்திக மதங்களாலும்), ஒன்பதாலும் (சீவேசுரர்களின் பேதம், ஈசுர உலகங்களின் பேதம், சீவர்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதம், உலகத்தி லொன்றொன்றிற்குள்ள பேதம், அவித்தை, காம, கரும, வாசனை என்னும் ஒன்பதாலும்) மறுக்கப்பட்டதாற் கிலேச மடைந்த பிரம இருடிகளுடன், எனினுமமையும். (60)

அத்துவித பரமான்ம தத்துவத்தைக் கையிற் காட்டுவதும், அஞ்ஞானியாயுள்ள கேடிலாப் பெரு மோகத்தைக் கெடுப்பதும், கூறிப் போந்த நற்குணக்கூட்டங்க ளெதிக்கப் பெற்றதுமான பன்னிரண்டு உபநிடத பாடியங்களைச் செய்தனர். (61)

பின்னர், அச் சங்கரபகவற்பாதர், மா பாரதத்தின் சார வடிவாகிய பகவற்கீதைக்கும் பாடிய மொன்றியற்றி

னர் ; அப் பாரதத்திலுள்ள சநத்சுசாதீயத்திற்கு மோர் பாடிய மியற்றினர் ; நரசிம்ம பூர்வதாபநீய வுபநிடதத்திற்கு மொருபாடிய மியற்றினர். (62)

பிறகு, அறிஞர்களாற் பூசிக்கப்பட்ட சங்கர பகவற் பாத தேசிகர், உபதேச சகத்திரி, முதலிய கணக்கிலா நூல்களையுஞ் செய்தனர். (இந்நூல்கள் எத்தன்மையன வெனின் ?) இந் நூல்களின் பொருளைக் கேட்ட வைராக் கியமுள்ள துறவிகள், அஞ்ஞான பாசப் பற்றுக்களிலிருந்து விடுபட்டோர்களாய், முத்தர்களே யாகின்றார்கள் என் பதாம். (63)

இவ்வண்ணம், சங்கரபகவற்பாதரென்னுஞ் சூரியன், உதித்து (பாடியங்களென்னுங் கிரணங்களால்) பிரகாசிக் கும்போது, தீயவாதிகளெனத் திகழும் (களங்க) மதியின் காந்தியுடன் கூடின தீய மதத்தர்களாற் செய்யப்பட்ட, உரைகளென்னு மிருள்கள் முழுதுமொழிந்தன. (64)

பின்னர், பிறருடைய தருக்கங்களென்னுஞ் சூரிய கிர ணங்களாற் காய்ந்து போகாத கடலைப் போன்ற தமது பாடி யங்களை, ஆற்றுவார்களுக்கோர் அழகிய மதி போன்ற அச் சங்கரபகவற்பாதர் தமது மாணுக்கர்களுக்கு ஓதி வைத்த னர். (65)

ஆசிரியர்களிற் சிறந்தவரும், மாணுக்கர்களின் இருதய கமலங்களுக்கோர் இரவிபோன்றவருமாகிய சங்கரபகவற் பாதருடைய மாணுக்கர் கழகத்தில், சனந்தனர் முதலா ேனார் சிலர் முக்கியமாய் (அப்பாடியங்களை) அப்பியா சித்து வந்தனர். (66)

அப் பத்மபாதர் தமது மறையின் சாகையின் பொருளை (சாத்திரப் பொருளை) நன்குணர்ந்தவராயிருந்தும், ஏனைய மாணுக்கர்களினும் ஆச்சரியமாகிய, அபேதமாய்ச் செய்யுஞ் சிவத் தியானத்தை யடைந்தோராயும், இரகசியப் பொருள் களை யுணர விருப்புற்றோராயும், மேன் மேலுங் கற்க வேண்டுமென்னு மிச்சை யுடையவராயுமிருந்தனர். (67)

தமது திருவடிக் கமலங்களில் இராகத்துவேடங்களி லாது பெரும் பக்தியையுடைய இச் சனந்தனருக்குப் பெருந் தயை பண்ணுந் திருவுள்ளமுடைய முனீந்திரராகிய சங்கர பகவற்பாதர், அரு மறைகளின் இரகசியப் பொருள்களை வைக்கப்பட்ட பெட்டகமாகிய தமது நூல்களனைத்தையும், மும்முறை யோதுவித்தனர். (68)

## சனந்தனர் கங்கையைக் கடத்தல்

ஒருபோது, மறைமுடிவை யுபதேசிப்பதில், ஆசிரியர்களுக்குள் தலைவராகிய சங்கரபகவற்பாத தேசிகர், (சனந்தனரைக் கண்டு) பொறாமை மிகுந்த மனதுடைய மற்றைய மாணுக்கர்களின் பொறாமையை யடக்குதற்கும், சனந்தனரின் ஒப்பற்ற பக்தியை வெளிப்படுத்துவதற்பொருட்டும், வான் நதியின் அக் கரைக்கண்ணிருந்த இச் சனந்தனரைத் தம தருகிற்கு வருமாறு அழைத்தனர். (64)

சனந்தனர், எல்லை யற்ற பவக்கடலை நன்கு கடக்கச் செய்யும், ஆசிரியரின் திருவடியிற் செலுத்தும் பக்தி ஒரு நதியை யேனுங் கடக்கச் செய்யாது கொலோ? என்றுராய்ந்து, (ஒரு தலையாகவே கடத்தும் என உறுதியடைந்து) உடனே வான் கங்கையிலிறங்கினர்; (இறங்கிச் செல்லுங்

கால்) அவ் வன்பருடைய ஒவ்வொரு பாதத்தின் கீழும் ஒவ்வொரு கமல மலர்களைக் கங்கை தோற்றுவித்தது. (70)

அக் கமலமலர்களில், பாதத்தை முறையாக வைத்துத் தமதருகிற் சேர்ந்த ஒப்பிலாப் பக்தியுள்ள இச் சனந்தனரைச் சங்கரபகவற்பாதர், களிப்பும் வியப்பும், நிறைந்தவராய்க் கட்டி யணைத்து, (இவன் பத்மத்திற் பாதம் வைத்து நடந்து வந்தமையின் இன்று தொட்டு இவன் "பத்மபாதன்" எனப்படுகின்றான் என), அத் திருநாமத்தை விரியச் செய்தனர். (71)

சங்கரபகவற்பாதரைப் பாசுபத மதத்தர் சங்கித்தல்

ஒரு தோஷமுமற்ற ஆன்ம வித்தையை யுபதேசித்துக் கொண்டிருந்த சங்கரபகவற்பாதரை விவேகமென்னுந் தருக்களின் மேல், காட்டுத் தீப் போன்றவரும், தீய பாசுபத மத அபிமானமுடையவரும், மெய்யறிவு உள்ளார்களின் கழகத்தில், பொய்க் கருவத்தை யுடையவருமான சிலர் ஆசங்கித்தனர்.

(ஈண்டு, மக தத்துவ முதலிய காரியம், பிரகிருதியென்னுங் காரணம், சமாதி யோகம், முக்காலமும் நீராடன் முதலிய விதி, துக்கமிறுதியாகிய முத்தி என்னுமிவ் வைந்து பொருள்களும், முத்தியின் பொருட்டுப் பரசிவனால் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன ; குடத்திற்கு மண் காரணமாவது போன்று, உலகிற்கு உபாதான காரணம் பிரகிருதியாம் ; குயவனைப் போல நிமித்த காரணம் பரசிவனவன்; பிரமமே உலகிற்கு உபாதான காரணமென்னிலோ? பிரளயத்தில் பிரமத்துடன் கலப்புற்றமையின், காரணம், காரியத்தின் தோஷங்களை யுடையதுமாகும். என்பது முத

வியபல தோஷங்களாலும், உலகிற்குக் காரணங் கூறும் மறை மொழிகள், பரசிவனையே கேவலம் நிமித்த காரண மெனக் கூறுகின்றன, எனவே கொள்ளல் வேண்டும் என்பது ஆசங்கை). (72)

## சங்கரபகவற்பாதர் பாசுபதரை மறுத்தல்

சங்கரபகவற்பாதர், அவ் வாசங்கையை, மறை மொழி யெடுத்துக் காட்டுக்களால் மறுத்து, ஆணவஞ் சிறிது குறைந்த புறச் சமயர்களான இவர்களுடைய தந்திர நூல் களையுங் கடைந்து விட்டனர் (கலங்கச் செய்தனர்).

(ஈண்டு, "யாதொன்றைக் கேட்டதால் கேளாதன வுங் கேட்கப்பட்டனவோ," யாதொன்றைச் சிந்தித்தலால் எல்லாஞ் சிந்திக்கப்பட்டனவோ, "யாதொன்றை யுணர்ந்த தால் யாவு முணர்ந்ததாமோ," என்னும் துணிபுரைக் கும் மறை மொழிகள், பிரமத்தையே உலகிற்கு உபா தான காரணமாய்க் கொள்ளாக்கால், விரோதப்படுகின்றன. என்னை? காரியத்தினும் வேருகிய நிமித்த காரணத்தைக் கேட்டதால் அனைத்துமே கேட்கப்பட்டனவாகா; அதைச் சிந்தித்தலானும், எல்லாஞ் சிந்திக்கப்பட்டனவாகா; அதை யறிந்ததால் யாவுமறிந்தனவாகா; அவ்வாறே காணப்படுத லின், மற்றும், எடுத்துக் காட்டினும், "மண் பிண்டமொன் றை யுணர்ந்ததால், மட் பாண்டங்கள் யாவும் மண் மய மென்றே யுணரப்பட்டதாயின," "வாயாற் சொல்வதே விகாரமென்னும் பெயராம்," என்றற்ருெடக்கத்து மறை மொழிகளும், பிரமம் உபாதானமென்பது பற்றியே கூறு கின்றன. அஃதன்றியும், "அஃதெண்ணிற்று அனைத் துயிர்களாக," என்றற்ருெடக்கத்து மறை மொழிகளும் பரப் பிரமத்திற்கே உபாதான காரணத் தன்மையைக் கூறு

கின்றன. உபாதான காரணத்துடன் காரியம் முழுது மொப்பாக இருத்தல் வேண்டும் என்பதில்லை, சாணத்தி லுண்டாகுந் தேளிலும், உடம்பிலுண்டாகும் உரோமத்தி லும், அவ்வாறு காணப்படாமையின், பிரளயத்தில் மாத் திரம் காரியம், காரணத்துடன் ஒன்று படும் என்பதில்லை; மற்றோ? "இவ்வனைத்தும் பிரமமே" என்பது முத லிய சுருதிகளால் கால மூன்றிலுங் காரணமாகிய பிரமத் துடன் ஒன்றுபட்டிருப்பினும், கானனீர் போல் ஒரு பொழுதும் பற்றுவதின்று, என்பன முதலிய எடுத்துக் காட்டாயுள்ள சுருதி யுக்திகளால் மறுத்தனர் என்று கொள்க. மற்றும், பிரகிருதி புருடர்களுக்கு அதிட்டான மாகிய பசுபதீசுர், கீழ், நடு, மேல், என்னுந் தன்மை யால் பிராணிகளை வேறுபாடாகத் தோற்றுவிக்கின்றாராத லின் அவர் இராகத் துவேஷமுடையவர் என்பதும் வரும். இது பற்றியே இவ்வணங்கூறும் ஆகமமும் பொருத்த முடையதன்று. பசுபதீசுரர், எல்லாவடிவா யிருத்தலா னும், நிரவயவமாயிருத்தலானும், அவர்க்கு பிரகிருதி புருடர்களோடு, பற்றுக்கோடாதல், பற்றி நிற்றல், என் னுந் தன்மை யில்லாததானும், சம்யோக சம்பந்தமாவது அல்லது, சமய வாய சம்பந்தமாவது பொருந்தாது, என் பது முதலிய யுத்திகளால் ஆகமங்களையும் மறுத்தனர். இஃது உரையிற் கண்டது. (73)

## பாசுபத மத முத்தியை மறுத்தல்

ஈற்றில், அத்துவிதீயமே யாகும், ஈசனுக்குச் சம மாத லென்னு முத்தி, உண்மையிற் பேதமே யாகுமிடத்து எவ்வாறு பொருந்தும்? ஈசுரனைத் தியானித்தலா லுண் டாவதெனிலோ? அம் முத்தி அழியாததாகுமோ? என்னை? பாவகாரியங்கள் யாவும் நித்தியமாகாமையின், என்க. (74)

அஃதன்றியும், ஈசனுடைய குணங்கள், சீவர்களான பசுக்களிடத்து முத்தி யடையும்போது கலந்து போகின்றன, எனக் கொள்கின்றீர்களன்றோ? அது நலமுடையதன்று; என்னை? அவயவம் (உறுப்புக்கள்) அற்ற குணங்களுக்குக் கலத்தலாந் தன்மையே பொருந்தாமையினென்க. (75)

(அற்றேலஃதாகுக) மணத்தைக் கொண்டேகுங் காற்றுடன், கமல மலரின் மணங் கலப்பது போன்று, ஈசனுடைய குணங்களும் இச் சீவனிடத்திற் கலந்திருப்பனவாகுக என்னிலோ? அற்றன்று, மணத்தைச் சமவாய சம்பந்தமாகவுடைய மரை மலரே, நுண்ணிய இரேணுக்கள் வடிவமாய்க் காற்றிற் சம்பந்தப்பட்டு "இக் காற்று மணமுடையது," என்னுந் தோற்றத்தை யுண்டாக்குகின்றது (இவ்வாறாய வழி கமல மலரின் இரேணுக்களில் மணமிருக்கின்றதே யன்றி, காற்றின்கண் இல்லை யென்பது பெற்றாம்). (76)

[அருகிலுள்ள நூற்றுக்கணக்கான ஆடைகளிலும், சரீபத் தன்மை ஏற்றங், குறைவு, ஆனது போன்று, மணமும் ஏற்றக் குறைவாந்தன்மை காணப்படுதலால், மணத்திற்குங் கலப்புத் தன்மையுள்ளதெனப் பெறப்படுதலின், மணங் கலப்புள்ளதென்றது கூடும் ஆதலின், முற்கூறிய தோஷமேயாம், என்றாசங்கித்து மறித்தோர் வகையாலும் மறுக்கின்றார்] :—

அவ்வாறாயினும், முதல்வனது குணங்கள், முத்தியடைந்த ஆன்மாக்களிடத்து, முழுதுமே கலக்கின்றனவா? அல்லது ஒரு பகுதியாற் கலக்கின்றனவா? முழுதுங் கலக்கின்றன என்னிலோ, ஈசன் அஞ்ஞான முள்ளான், என்

பது முதலான தோடங்களும் ஈசனிடத்துப் பொருந்துவன வாம், (ஈசனுடைய எல்லாமுணர்தற்றன்மை முதலியன முழுதும் ஆன்மாக்களிடத்துச் சேர்ந்து விட்டன வாதலின்) ஒரு பகுதியாற் கலக்கின்றன வென்னிலோ, (நிரவயவத் திற்குக் கலப்புத் தன்மை கூடாதென்னும்) முற்கூறிய தோஷமே வரும். (77)

இவ்வண்ணம், வச்சிரம் போன்று உறுதியாயுள்ள சங்கரபகவற்பாதரது தருக்கத்தால், தாங்கள் கொண்ட பொருள்கள் பிளக்கப்பட்ட விடத்து, அப் பாசுபத மதத் தார்கள், மிக்க வேகத்துடன் கருடனுடைய சிறகுகளாற் படத் தில் அடிபட்ட பாம்புகள், விடத்தின் சுவாலையை விடுவன போன்று, தாங்கள் கொண்ட அதிசயமான கொள்கைகளைக் கைவிட்டார்கள். (78)

## அறிஞர்கள் சங்கரபகவற்பாதரைத் துதித்தல்

சங்கரபகவற்பாதர், விரித்துக் கூறுவதில் மேம்பாடாக விளங்கும் வல்லுநத் தன்மையால் வியாகரண மா பாடியஞ் செய்த ஆதிசேட பகவானுக்கும் நாணத்தை யுண்டாக்கிக் கொண்டும், எண்ணிலாத மாணுக்கர்களின் இருதய கமல மென்னும் வனத்திற்கு இரவியாந் தன்மையை யடைந்து கொண்டும், எழு கடற் கரையையுங் கடந்து செல்லும், தமது புகழென்னும் புட்பங்களால் உலகை யணிபெறச் செய்து கொண்டும், வாதிக ளென்னும் மான் கூட்டங்களுக்குச் சார்த்தூல விக்கிரீடிதஞ் செய்துகொண்டும், (வேங்கை விளை யாட்டு) மிக்க விளங்குகின்றார் (ஈண்டு வட மொழியிலுள்ள இச் சுலோகத்திற்கு சார்த்தூல விக்கிரீடிதம் என்னுமொரு யாப்பின் பெயராம்; அதையே ஓர் முத்திரையாக வைத்துப் பாடி யிருத்தல் காண்க). (79)

வேதாந்த ஆரணியத்தில், திரிவதும், கூரிய யுத்திக ளென்னும் நகங்களையும், பற்களையுமுடையதும், வாதிக ளென்னும் மத கரிகளுக்கு அச்சங் கொடுக்கத் தக்கதுமாகிய மகரிஷி யென்னும் (சங்கரபகவற்பாதரென்னும்) சிம்மம் மிக்க விளங்குகின்றது. (80)

## சங்கரபகவற்பாதரைக் காசியிலுள்ளார் புகழல்

நீத்தார்க்கிறைவாகிய அச் சங்கரபகவற் பாதருடைய தெய்விகமாகிய பாலப் பருவத்தின் மாகான்மியத்தைக் கண்ட, காசி வாசிகள் பெரு வியப்படைந்த உள்ளத்தராய், அவரைக் கீழ் வருமாறு புகழ்ந்தார்கள். (81)

மீண்டும், மீண்டும், சாத்திரங்களனைத்தையும் நன்கு விளக்கிக் காட்டப்பட்ட இச் சங்கரபகவற்பாதரால், பாஸ்கரர், அபிநவகுப்தர், முராரிமிசிரர், வித்தியேந்திரர், பிரபாகரர், என்னு மிவர்களை முக்கியமாகக் கொண்ட நீலகண்ட பாசுபதர் முதலியோர்கள் இச்சங்கரபகவற்பாதரால் உள்ளக்கமலக் கலக்கத்தை யடைந்தவர்களாய்த் தோல்வி யடைந்தார்கள். (82)

இச் சங்கரபகவற்பாதருடைய ஆன்ம நிட்டையின் அதிசயத்தாற் களிப்புற்ற காமாந்தகனாகிய பரசிவன், இவர் முன் தோன்றி "வேதாந்த சாரீரகப் பிரம சூத்திரத்திற்கு உண்மையாக ஓர் பாடியமியற்றுவாயாக," என ஏவி யருளினன். (83)

தீய நோக்குடையார்களின் அஞ்ஞானத்தால் நிகழும் தீய மதங்களாகிய சேற்றிற் சுருதி யென்னுங் கிழப்பசு பதியப்பட்டுக்கிடந்தது, முன்பு பராச முனிவரின் புதல்வராகிய பேரறிஞரால் (வியாச முனிவரால்) நீண்ட கால

மாய் அது தூக்கி விடப்பட்டுள்ளது, அம்ம! அம்ம! தோடமற்ற பாடிய மென்னும் அமிருதத்தால் அதனைச் சுகமடையச் செய்த சங்கரபகவற்பாதர் அன்போடு அதன் சேற்றையுங் கழுவினர். (84)

கரும பலன் என்னுந் தனது பாலை மூவுலகத்தவர் களுக்கும் இனிதாய் அருத்து விப்பதும், மிகப் பண்டைக் காலத்திய வேள்வி யாற்று மந்தணன் வீட்டில் வசிப்பதும், கெட்ட யுத்திகளென்னுஞ் சேறு மிகுந்த படு குழியில் கொடிய துட்டர்களாற் றள்ளிவிடப்பட்டது மாகிய வேத மென்னும் ஒரு பசுவை, பாடியங்களென்னுமோர் கடலின், வாக்கியங்களென்னும் அமிருதங்களாற் சுத்தப்படுத்தி, அச் சங்கரபகவற்பாதர் சேறிலாது செய்தனர். (85)

உபநிடதம், உள்ளவாறு பொய் கூறுகின்றதென, சிலரால் (நாத்திகரால்) தொலை தூரத்தில் தள்ளி வைக்கப்பட்டதும், வேதத்தில், அல்லது கருமத்தில் சேரத் தக்க இச் சீவனைத் துதித்தற் குரியது என அன்னி யர்களால் (கரும காண்டிகளால்) பீடிக்கப்பட்டதும், போலிப் பொருளைக் கொண்டவர்களால் (தத்துவமசி என்னும் வாக்கியம், அதனுடைய நீயா யிருக்கின்றாய், அல்லது அதன் பொருட்டு நீ யாயிருக்கின்றாய், அல்லது அதினின் றும் நீயாயிருக்கின்றாய், என்பது முதலிய ஆபாசப்பொரு ளைக் கைக்கொண்ட தார்க்கிகர் முதலியோர்களால்) அதுவே நீயாயிருக்கின்றாய் என்னும் அபேதப் பொருளாகிய மறை பொருள் பற்றி மிக்க ஈளினமாகிய ஆபாசப் பொருளால் வஞ்சிக்கப்பட்டது மாகியது; இவ் வண்ணஞ் சரணகதி யற்று நீண்ட நாளாய்க் கிடந்த, இவ் வுபநிடதம், இப் போது சங்கரபகவற்பாதரைச் சரண் புகுந்து பெருங் களிப்பைப் பெற்றது. (86)

ஆன்மா என்னுமோர் பசுவைக் கொல்வதற்கு (தேகத்திற்கன்னியமாய் இல்லை யென்பதற்கு) பௌத்தர்கள் ஓடினார்கள் (துணிந்தார்கள்); பின்பு, கணாதர், கௌதமர், எல்வாற்றாலோ வொருவகையாய் (தேகத்தினும் வேறாய் ஆன்மா வுள்ளதென்று உறுதிப்படுத்தலால்) இறவாது உயிர் வாழ்தலென்னும் ஊதியமடையச் செய்தனர்; அதன் பின்னர், பட்டபாதர் முதலியோர் (கருமநெறியிற் செல்லுந் தன்மை கூறலால்) அது காலெடுத்து வைத்து நடப்பதற்கு மாத்திரம் வழிகாட்டினர்; பின்னர், சாங்கியர்கள், அதனுடைய துன்பத்தை மாத்திரம் நீக்கினர்; (தாமரையிலைத் தண்ணீர் போல் ஆன்மா துன்பம் முதலிய குணங்களைப் பற்றுவதில்லை என, உறுதிப்படுத்தி வருத்தமே நீக்கப்பட்டதாம் என்க) பின்னர், மற்றையோர் (பதஞ்சலி முனிவர் முதலியோர்கள்) பிராணனை அடக்கல் முதலியவைகளால் போற்றப்படுந் தன்மையதாய்ச் செய்தனர்; இவ்வண்ணங் கிலேசமடைந்த அவ் வான்மாவை, சங்கரபகவற்பாதர் கருணையால் (சீவப் பிரமங்களுக்கு அபேதத்தை யுறுதிப்படுத்தி) பரசிவனாகவே செய்தனர். (87)

பூதங்களால் (பேய்களால், பஞ்ச பூதங்களால்) பிடிக்கப்பட்ட ஆன்மா வென்னும் ஒரு தேவதையைச் சிலர் (சாருவாகர் முதலிய நாத்திகர் பூதங்களின் கூட்டமே ஆன்மாவென்றலின்) காணாதவரேயாயினர்; மற்றுஞ் சிலரோ, (யோகாசாரர் முதலிய நாத்திகர்) அதனைக் கண்டவராயினும், (அவ்வான்மா கணப்போதிருப்பதாய்க் கொள்ளலின்) தைரிய மடையாதவராயினர்; மற்றுஞ் சிலரோ. (தார்க்கிகர், மீமாஞ்சகர் முதலியோர்களோ, பஞ்ச பூதங்களினும், வேறாய், ஓர் ஆன்மா உண்டு என்றலால்) பூதங்களிலிருந்து விடுவித்தார்கள்; மற்றுஞ் சிலரோ; (சாங

கியர் முதலானவர்கள்), பூதங்கள், பூத குணங்கள், என்று மனைத்திலிருந்தும் விடுவித்தார்கள்; ஆனால், பூத முதலியவைகளை உண்மையில் இன்றென, அப் பூதங்களை யடியோடு தொலைத்திலர்; ஆகையால் இவ்வான்ம தேவதை அப் பூதங்களினின்று பயமொழியாததேபோன்றதாம்; பரசிவக் கூறேயாகிய இச் சங்கரபகவற்பாதரோ, (உலகம் முக்காலத்திலும் மித்தையாமென முடிவு செய்ததால்) அப்பூத முதலியவைகளின் இருப்பை அடியோடழித்து ஆன்ம தேவதையைச் சிறிதும் பயமடையாதவாறு செய்தனர். (88)

அவ் வான்மாவென்னும் புருடன், சாருவாகமதத்தர்களால் (நாத்திகர்களால்) மறுக்கப்பட்டான். (உருவமற்றோனாகச் செய்யப்பட்டான்) பின்பு, வலிய தார்க்கிக மதத்தர்களால், பொய் யுருவத்தைப் பெற்று (கருத்தனுந் தன்மை, ஞானமுதலிய குணங்களை யுடையதாந் தன்மையாகிய வடிவம்) பாதுகாப்பாற்றப்பட்டான், மற்றும், அந்தோ! வலிமிகுந்த பட்டபாதர் முதலியோர்களால் ("சுவர்க்க வேட்கையன் சோதிட்டோம வேள்வியால் வேட்க" என்பது முதலிய விதிகளால்) வற்புறுத்தி யிழுக்கப்பட்டு அடியவன் போலாக்கப்பட்டான்; சாங்கியர் அப் புருடனைப் பிடித்திழுத்து பரிசுத்தப்படுத்தினர்; அங்ஙனஞ் செய்தும் அவனைப் பிருகிருதி வசத்தனாகவே செய்தனர்; அவ்வான்ம புருடனை, சிவாவதாரமாகிய சங்கரபகவற்பாதர் வலித்துச் சருவேசனாகவே செய்தருளினர். (89)

மிக்க வழகானவைகளும், சிறந்தவைகளுமான, சங்கரபகவற்பாதருடைய பாடியத்திலுள்ள வாக்கியங்கள், உற்று நோக்குவோர்களுக்கு அநேக புட்பக் கூட்டங்கள் நிறைந்துள்ள கற்பகக் கொடிகளாகின்றன; ஆகையால்,

பொய்த் தோற்றங்களை யுடையவைகளும், வருந்தி அந்து வயஞ் செய்யத் தக்கவைகளும், குணங்களின்றியவைகளும், கமல யோனியின் மனைவி (சரசுவதி) துர்ப்பாக்கியத் தாற் கருவில் வைக்கப்பட்டிருந்தவைகளுமான ஏனைய போலிப் பாடியங்கள் அவர்களுக்கு எவ்வாறுப் பிரியமுடையனவாம் (சங்கரபகவற்பாதரது பாடியத்தை நன்கு உற்று நோக்குவோர்களுக்குப் பிற பாடியங்கள் பிரியப்படாவென்க) ? (90)

இச்சித்தவாறே, காமன் என்னும் வேடனது வில்லாகிய கொடியிலிருந்து முறையாக வேனும், அல்லது ஒருங்காக வேனும், எழுந்த நாராசமென்னும் பாணக் கூட்டங்களால் மன வலிமை பிளக்கப்பட்ட புத்தியாற் கற்பித்தவைகளும், சுவையற்றவைகளும் பந்தத்தை நீக்குவதில் ஆற்றலின்றியவைகளுமான, ஏனைய நூல்களை, சங்கரபகவற்பாதரது திருமுகத்தினின்றெழுந்த எல்லா நூல்களின் முடிவுகளால் (சித்தாந்தங்களால்) தெளிந்த மனமுடையார்கள் எவ்வாறு கைப்பற்றுவார்கள் (எவ்வாற்றானு மேற்றுக்கொள்ளார்கள் என்க) ? (91)

அவ்வண்ணமாயினும், அமிருதப் பெருக்கின் ஆணவத்தை வெல்லுஞ் சங்கரபகவற்பாதராலியற்றப்பட்ட நூல்களுக்குச், சமமும் பிரியமுமுடைய நூல்களைச் சிலர் செய்வரேல், அவர் உட்கிராமத்திலோடுஞ் சிறிய கால்வாய், நான்கு வழிகளாய்ச் செல்லுஞ் சிவன் முடியிலுள்ள கங்கை நதியின் அலைகளை யுண்டாக்க நியமமாய் முயல்வதை யொக்கும், என்பதாகிய ஆசங்கையை யுண்டாக்குகின்றவர்களே யாவர் (சங்கரபகவற்பாதருடைய நூல்களைப்போல நூல் செய்ய வேண்டுமென ஒருவர் செய்தல், சிறியதோர் கால்வாய்,

கங்கா நதியின் பெருக்கை யுண்டாக்கச் செய்யும் முயற்சி எவ்வாற்றானும் முடியாதவாறேயாய் நகைத்தற்கிடமாம் என்பது கருத்து). (92)

எளியார் வசப்பட்டதோர் பொன் நெல்லிக்கனியை பெரு மழையாய்ப் பெய்வித்ததும், பரசிவனது தருண மாதின் (பார்வதியின்) அழகின் பெருக்கை வெளிப் படுத்தியதும், உருத்திரனுடைய புசங்கங், கேட்கின்றவர்களின் பயத்தை நீக்குவதுமாகிய சங்கரபகவற்பாதரின் வாக்கின் பெருக்கு, கவிகளெவர்க்குத் தான் களிப்பை யுண்டாக்காது (யாவருக்கும் இன்பளிக்குமென்க? தீனத் தன்மையை யடைந்ததோர் முதியாளுக்குப் பொன் நெல்லிக் கனிகளை மழையாகப் பெய்வித்ததென்பதும், சௌந்தரிய லகரி யென்னும் நூல் செய்ததென்பதும், புசங்கப் பிரயாதம் என்னும் யாப்பால், சிவ புசங்கத் தோத்திரஞ் செய்ததென்பதுங் கூறப்பட்டது). (93)

சங்கரபகவற்பாதரது திரு வாக்கின்முறை, கற்பகத் தருவின் புட்பமுறைகளாக விருக்கின்றது; அதன் பொருள் முறைமையோ, சிந்தாமணி யென்னும் மாதின் ஒளியாகிய மயிர் முடியின் நடன வடிவமாயுள்ளது; கேடற்ற வியஞ்சன விருத்தியின் கூட்டமோ (அமிருதம் மிக்க நலமானது, என்புழி, அமிருதம் உண்ணற்பாலது எனக் கொள்ளுமாறு கவிகளின் கருத்தைக் காட்டும்; பொருட்குஞ், சத்தத்திற்குமுள்ள ஓர்வகைச் சம்பந்தம் வியஞ்சன விருத்தி), காம தேனின் பாலினுண்டாகும் அலைகளுக் கொப்பானதாம்; ஆதலின், சங்கரபகவற்பாதர், தாம் அருளிய அழகிய காவிய வடிவங்களால் அறிஞர்களுக்குச் சுவர்க்கத்தையே யுண்டாக்கினர். (94)

சங்கரபகவற்பாதரின் வாக்கியங்கள், மலைக் கனிகளைப் போன்றனவாம்; அவைகளின் பொருள்களோ: களிப்பைத் தணிப்பதில் பேராற்றலுடையனவாம்; அவைகளின் குறிப்புக்களோ, உண்மையில் இன்னதென் றுரைக்க முடியாத பேரழகுடையனவாம்; முறைகளோ, அமுதம் போற் சுவைகளை யுடையனவாம்; இத் தன்மைய நீத்தார்க்ளுக்கிறைவரின் (சங்கரபகவற்பாதரின்) இனிய காவியங்களென்னும் ஆவின் பால் பெருஞ் சிறப்புடையனவே என எண்ணுகின்றோம்; ஆதலின், அக்காவியங்களிலுள்ள ஒவ்வொரு விருத்தமும், புகழ் மலிந்த கவிகளுக்குக் களிப்புண்டாக்குங் காரணமேயாம். (95)

சங்கரபகவற்பாதரின், அரும் பொருள்களடங்கிய காவிய முறைகள், கோரைப் புற்களின் புதிய கிழங்கின் ஒளியையுடையதும், அறிஞரின் களிப்பிற்குக் காரணமுமான, வாக்கின் தொடர்புகளாலும், கமல மலர்க் கூட்டத்தின் துவாரங்களிலிருந்து ஒழுகுந் தேன்போற் றிகழும் பொருட் கூட்டங்களாலும், கற்பகத் தருவின் விரிந்த பூக்களின் நறு மணத்தைக் கருவிற் கொண்ட குறிப்பு விருத்திகளாலும், எவர்களுக்குத் தான் களிப்பைத் தர மாட்டாதனவாம் (யாவருக்குமே களிப்பைத் தருவன என்பதாம்). (96)

நீத்தார்களுக் கரசராகிய சங்கரபகவற்பாதரால் வெளியிடப்பட்ட உபநிடத பாடியங்களின் இத்தகைய கீர்த்தியைக் கேட்டுக் கங்கைக் கரையின்பாலுள்ள அறிஞருள், அக்கபாதர் மதத்தைத் தழுவியவர்களும், அநுமானத்தையே சிறந்த கண்ணாக வுடையவர்களும் ஆற்றலில்லாதவர்களுமான சிலர், பொறாமையுடன் மூடத் தன்மையால் மேல்

வருவதை யுணராது, அழகிய தீயிற் குழுமியே விழும் விட்டில்கள் போன்று அப் பாடியங்களை மறுக்க முயன்றனர். (97)

தேய்த்தல், அராவுதல், காய்ச்சல், முதலியவைகளாற் பொன்னின் மாற்றுக்கள் மிகுமாறு, சங்கரபகவற் பாதரின் பாடியங்கள், விவாதம் முதலியவைகளால் நன்கு கடைந்தெடுக்கப்பட்டதாய் மிக விளங்கின. (98)

அப் பாடிய மென்னுஞ் சந்திரன், சங்கரபகவற்பாதரென்னும் பாற்கடலினின்றெழுந்து, அமரர்களுக்கு அமுதத்தை யுண்டாக்கியும், வாக்கென்னுங் கிரணத்தால் தீய மதங்களென்னும் இருளை நீக்கியும், அந்தணரின் மனங்களென்னுஞ் சகோரப் புட்களைக் களிப்படையச் செய்தது. (ஈண்டு விபுதர்கள்=தேவர்கள் அல்லது பேரறிவாளர்கள்). (99)

அநாதியான மறை வாக்குக்களென்னுங் கடலைக் கடைந்ததாலெழுந்த, எதிகளுக்கோர் சந்திரராகிய சங்கரபகவற்பாதரின், பாடிய மென்னும் அமுதம், தீய பகைஞர்களைத் (இராகத் துவேஷ முதலியவைகளை, அல்லது, தீய மத வாதிகளை) தாழ்த்திய புதர்களால் (அறிஞர்களால், அல்லது, தேவர்களால்) அருந்தற் பாலதாம், மூப்பிறப்புக்களை முழுது மொழிப்பதாய் அழகுற்று விளங்குகின்றதாகலின் என்க. (100)

எதிகளிற் சிறந்த சங்கரபகவற்பாதர் என்னுஞ் சூரியனின், பாடியங்களான கிரணங்கள் நல்லவர்களின் உள்ளக் கமலங்களை மலரச் செய்கின்றன; அஞ்ஞான மென்னும் பேரிருளை அடியோடு தொலைக்கின்றன; பிரதி வாதிக

ளென்னுங் கூகைகளை அழச் செய்கின்றனவுமாகி விளங்குகின்றன. (101)

வியாசபகவான் விளம்பிய கூரிய யுத்திகளென்னும் மேருகிரியால், சுருதிகளென்னுங் கடலிற் கடைந்தெடுக்கப்பட்ட பாடிய மென்னும் புத்தமுதம், விபுதர்களுக்கு (தேவர்களுக்கு அல்லது அறிஞர்களுக்கு) கேட்டல் மாத்திரத்தானே முத்தியைக் கொடுப்பது மிகவியப்பாம். (இப்பிறப்பிலேயே மூப்பிறப்புக்களை நீக்குதலின் அமுதத்தினுஞ் சிறந்த தென்பது பொருள்). (102)

பழைய கங்கை பத்மநாபரின் பாதத்திலிருந்து வந்துள்ளது; பாடிய மென்னும் புதிய கங்கையோ, சங்கரபகவற்பாதருடைய திருமுகத்தினின்று வந்திருக்கின்றது; மற்றும், அக் கங்கையோ, சனங்களை தன்னிடத்து மூழ்கச் செய்கின்றதாய்த் தோற்று கின்றது; பாடியமாகிய இக்கங்கையோ, மூழ்கியவர்களைக் கரையேறச் செய்கின்றது; இதுவே இவ்விரண்டிற்கு முள்ள வேறு பாடாம். (103)

வியாச பகவான், பிரம சூத்திரமென்னும் நூலால், (கோக்கப்பட்ட) யுத்திகளென்னும் மணிக்கூட்டங்கள் நெருங்கிய, இரத்தின மாலையைக் காட்டினர்; அம்மாலையோ, பொருட்கிடைக்காமையால் நெடுநாளாய் புத்திமான்கள் எவராலேனும் வாங்கப்படாமலே கிடந்தது; இப்போது, சங்கரபகவற் பாதரிடத்திலிருந்து எளிதாய்ப் பெற்றுக் கொண்ட பொருள்களால் அப் புத்திமான்களியாவரும், அவ்விரத்தின மாலையை வாங்கி அணிந்து கொண்டனர். வியாச முனிவருங் கிருதார்த்தராயினர், அம்ம! நீத்தார்க்கரசரின் (சங்கரபகவற்பாதரின்) வள்ளற்றன்மை பெருவியப்பைக் கொடுக்கின்றது. (104)

அறிஞர்ப் பொதுவின் தவப் பயனானதும், மறையென்னும் மாதின் மயிர் முடியிற் சுற்றிய மல்லிகை மாலையானதும், வியாச சூத்திரமென்னும் நகரத்திற்கு அளவற்ற புண்ணியத்தாலுண்டாகிய இனிய உண் பொருளானதும், கலைமகளுக்கு, நெடுநாள் நுகரத் தக்கனவும்,சிறந்தவைகளுமான பொருள்கள் நிறைத்துவைக்குங் களஞ்சியமுமாகிய, சங்கரபகவற்பாதரின் பாடியத்தை மறித்தும் பிறப்பற்றவரே உள்ளவாறு உணர்ந்தனுபவிக்கின்றனர். இஃதோர் பெரு வியப்பாம். (105)

மறைகள் என்னும் ஒரு மா கடற்கு, மேருகிரியின் பாரத்தைத் தாங்கும், எதிச் சக்கரவர்த்தியின் (சங்கரபகவற்பாதரின்) பாடிய வாக்கியங்கள், பராபரத்தை யறிந்தவர்களுக்கு, இன்பப் பெருக்கை யீந்தும், மிக விளங்குந் தருக்கங்களென்னும் இரவியின் கிரணங்களால், தீய மதங்களென்னும் பேரிருளால் மறைக்கப்பட்ட கண்ணுடையாருக்கு, நல்வழியை இனிது தெரிவித்துக் கொண்டும், யாண்டும் பிரசித்தியாய் விளங்குகின்றன. (106)

சேதைக் கட்டியதால் கடல் நீரை துவித முத்திரை வைத்த (இரண்டாய்ப்பிரித்த) இராமேசுர சமுத்திரம் வரையும், பரசிவன் வில்லாய் வளைத்திழுத்ததால் வளைபட்டதும், தேவபோகம் நிறைந்த உச்சியை யுடையதுமாகிய மேருமலை வரையும், உதயகிரி யுச்சிவரையும், அத்தமனகிரிவரையும், எதிச் சக்கரவர்த்தியாகிய சங்கரபகவற்பாதரால் நிலை நாட்டிய, நித்திய முத்தி ஆளுகையை யுடைய அத்துவிதப் பிரமவித்தை விளங்குகின்றது. (107)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கர திக்குவிசயச் சருக்கத்தில் பிரம வித்தையின்
நிலை நாட்டலைக் கூறும் ஆறுஞ்சருக்கம்
முற்றும்.

---

# ஏழாவது சருக்கம்.

## சங்கரர் வியாச முனிவரைக் காணல்

ஒரு போது, சங்கரபகவற்பாதர், காசிக் கங்கையி னருகில், தாமியற்றிய பிரம சூத்திர பாடியத்தை, இரவி யுச்சியிலேறும் வரை, தமது மாணுக்கர் குழாங்களுக்கு ஐயப்பாடகல அன்புடன் ஓது வித்துக் கொண்டிருக்குங் கால், கற்ற மாணுக்கர் களைப்போ டிருக்கும்போதும், ஓது வித்த சங்கரபகவற்பாதர் எழுந்த தருணத்திலும், இரு பிறப்பாளராகிய மூத்தாரொருவர் மெல்ல வந்து, நீவிர் யாவர்? யாது படிக்கின்றீர்? என வினவினர். (1, 2)

அதற்குச் சங்கரபகவற்பாதரின் மாணுக்கர், "இப்பக வான், எங்களுக்கு ஆசிரியர்; இவர் உபநிடதங்களிற் சுதந்தி ரர்; இவரால் பேத வாதங் கழிந்த பிரமசூத்திர பாடியஞ் செய்யப்பட்டிருக்கின்றது," என, மறுமொழி கூறினர். (3)

அதைக் கேட்ட அவ் வந்தணப் பெரியாரும் சங்கர பகவற்பாதரை நோக்கி, "உன்னை, பாடியமியற்றிய பக வன் என, உனது மாணுக்கர் கூறுகின்றார். இப் பெரு வியப்பு இருக்க; நீ பொருளுடன் அச் சூத்திரங் களை யுணர்வையேல், மகரிஷி செய்த சூத்திரமொன்றைக் கூறி, அதன் பொருளையுங் கூறுவாயாக," என வினவி னர். (4)

## வியாசர், சங்கரரின் விவாதம்

அதற்குப் பாடியத்தின் கருத்தராகிய சங்கரபகவற் பாதர், சூத்திரப் பொருளுணர்ந்த பேராசிரியரை வணங்கிக்

கொண்டு, "யான் சூத்திரப் பொருளுணர்ந்தவன் என்னும் ஆணவ முடையேனல்லேன், என்றாலும், நீர் எதை வினவினும் அஃதுரைப்பேன்," என அரு மொழி கூறினர். (5)

அதைக் கேட்ட அவ் வந்தணப் பெரியார், பிரமசூத்திர மூன்றாமத்தியாயத் தொடக்கத்திலுள்ள—

("அவன் வே றுடைவி லவைகளால் மூட,
கேட்டல் சொலலாற் கிட்டுவனன்றே,"

என்னும்) சூத்திரப் பொருளைச் சிறிது உணர்ந்திருப்பை யேல், கூறுவாயாக, என, துறந்தோர்களுக்கு இறைவராகிய சங்கரபகவற்பாதரை வினவினர். (6)

அதற்குச் சங்கரபகவற்பாதர், "இறக்குங்கால் சீவன் நுண்ணிய பூதங்களாற் கட்டுப்பட்டு வேறோர் உடம்பைப் பெறுகின்றான்," என்னும் இப்பொருள், தாண்டிச் சுருதியில், கௌதம சைவலீயர்களின் கடாவிடைகளாற் கண்டது என்றனர். (7)

இவ்வாறு சங்கரபகவற்பாதராற் கூறப்பட்ட பொருளை, அவ் வந்தணப் பெரியார் கேட்டு, யானைகள் போன்ற அறிஞர்களின் அவையின் கண், பெரும் வியப்புண்டாக நூற்றுக் கணக்கான வகைகளால் விகற்பித்து மறுத்தனர். (8)

பின்னர், நூலியற்றிய சங்கரபகவற்பாதரும், அவ் வந்தணப் பெரியார் கூறிய பொருளை யெடுத்து, ஆயிரக் கணக்கான விதங்களால் விகற்பித்து மறுத்தனர். இவ்வண்ணம், பிருகற்பதி, ஆதிசேடன், என்பவர்களைப் போன்ற வாக்கு வல்லுநர்களான அவ்விருவரின் வாக்கு விவாதம் எட்டு நாள் விரிவாய் நடந்தது. (9)

இவ்வாறாகவே, துறந்தார்க்கு வேந்தர், மறையோர்க்கு அண்ணல், என்னு மிருவரும் விவாதமிடுவதை, மருங்கிருந்த பத்மபாதர் முதலிய மாணாக்கர் நோக்கி, "இவ்வந்தணப் பெரியாரோ, வேத முடிவின் இரகசிய முணர்ந்த வியாசரே யாவர்; தேவரீரோ, நேரே பரசிவனாவீர்; வியாசரோ, உண்மையில் நாராயணரே யாவார்; இவ்விருவருக்கும் விவாதந் தொடர்ந்த விடத்து, தொண்டராகிய எம்மால் இப்போது செய்யற்பாலது யாது," என தமது ஆசிரியர்க்குரைத்தனர். (10, 11)

அவ் வியப்புரையைக் கேட்ட பாடியக்காரரும், சூத்திர மியற்றியவரையே நேராய்க் காண மிக்க வேட்கை யுற்றவரு மாகிய சங்கரபகவற்பாதர், உறுதி கொண்டு கை கூப்பி வணங்கி, இனிய தோத்திர வடிவாகுந் தொடர்புகளாற் கீழ் வருமாறு துதித்தனர்:— (12)

## சங்கரர் வியாசரைத் துதித்தல்

"மின்னலொத்த அழகிய சடைகளை யுடையவரும், முதல் மழை பெய்யும் முகிலின் நிறமுடையவரும், மிக்க வெள்ளிய பூணுநூலை யுடையவரும், கரிய மான்தோலை யுடையவருமாகிய தாங்கள் கலியுக தோடத்தைப் போக்குங் கண்ணபிரானே யாவீர். (13)

தங்களுடைய சூத்திரங்கள் கூறுவது போலவே எனது பாடியமும், அத்துவித பராபரப்பொருளையே கூறி யுள்ள தென்பது, தமக்கு உடன்பாடாகில், என் பிழையெலாம் பொறுத்து விரைவில் தமியேன் முன்பு உண்மையாய்த் தோன்றி யருள்வீராக," எனத் துதித்தனர். (14)

இவ்வாறு, சங்கரபகவற்பாதர் தோத்திரம் பண்ணிய போது, பொன் மயக் கொடிகளொத்த அழகிய விரிந்த வேணி யுடையவரும், மின்னலாகிய கொடியால் வளையமாய்ச் சுற்றப்பட்ட மேக நிறமுடையவரும், வேண்டிய பொருளைக் கொடுக்கும் சின் முத்திரையை யுடையவரும், (15)

இன்ப வேட்கையுடைய இரவால் இனிது தழுவிய இளவேனிற் காலச் சந்திர விம்பத்தைப் பழிப்புடையதாய்ச் செய்பவரும், நீல நிறப் பூங்கொத்துக்களின் நிறம் போன்ற தேக வொளி தழைத்தவரும், சந்திர காந்தக் கல்லாற் செய்தது போன்று ஒளி மலிந்த கமண்டலமுடையவரும், (16)

ஒளி மிகுந்த துளைகளுடைய இருபத்தேழு முத்துக்களாற் கோக்கப்பட்ட அக்க மாலை யணிந்த சத்திய மூர்த்தி யெனப்படுபவரும், அத்தகைய சந்திர குலத்தைத் தழைக்கச் செய்வதன் முன்னரே யான் தங்களுடைய குலத்தையும் வளர்ப்பேன், என, அபிநயங் காட்டல் போல உடுக்கணங்களை யுற்றனர், எனப்படுபவரும், (சத்தியவதியின் கட்டளையால் வியாச பகவானே சந்திர வம்சத்தைத் தழைக்கச் செய்தனர் என்பது மாபாரதத்திற் கூறியுள்ளது). (17)

புலித் தோலைப் போர்த்ததாலும், நீற்றை யணிந்தாலும், விரிந்த சடையை யுடையதாலும், சிவனது பாதியில் வீற்றிருக்கும், தோழி யென்பதற்கிடமானவரும், (18)

அத்துவித வித்தை யென்னுங் கூரிய அங்குசத் தொடர்பால் ஆணவமென்னும் மத கரியை யடக்கியவரும், தமது சாத்திரங்களென்னும் பசுக்கட்டுந் தறியிலிருந்து வெளிப்பட்டுப் புலப்படாத ஆயிரக் கணக்கான மறை யென்னும்

பசுக்களை, சூத்திரமாகிய (பிரம சூத்திரமென்னும்) கயிற்றாற் கட்டியவரும், (19)

மிக்க வொளி வீசும் அத்தன்மைய மாணாக்கர் குழாங்களால் தமது மருங்கை யணியுறச் செய்தவரும், திருக்கடைக் கண்ணுலெழும் அமுதப் பெருக்கால் அனைவரின் அநுதாபத்தையும் போக்குபவருமாகிய கண்ணபிரானைச் சிறிது தூரத்திற் கண்டனர். (20)

அத்தகைய, ஆற்றுவார்களுக்கு அண்ணலானவரும், எண்ணுமலே தரிசனந் தந்தவரும், குரவர்களுக் கெல்லாங் குருவானவருமாகிய வியாசபகவானை, மாணாக்கருடன் அச் சங்கரபகவற்பாதருந் தரிசித்துக் களிப்புற்றவராய் எழுந்து நின்றனர். (21)

அவ்வாறு எழுந்தவரும், மாணாக்கர் குழாங்களுடன் கூடியவரும், துறந்தாரில் மேம்பட்டாரும், வினயமுடையவருமாகிய சங்கரபகவற்பாதர், அன்புமிக்குடையராய் வியாசமுனிவரின் திருவடிகளிரண்டையும் வணங்கி, சத்தியவதியின் புதல்வராகிய அவ் வியாச முனிவருக்குக் கீழ் வருமாறு கூறினர் :— (22)

"வியாசபகவ, தமது வரவு நலமாகுக ; தங்களைத் தரிசித்து யான் அடையற்பாலனவான பொருளனைத்தையுமடைந்தேன் ; தாங்கள் எப்பொழுதும் பரோபகார விரதத்திற் தீட்சை பெற்றுள்ள்வராதலின், (பரோபகாரமே செய்ய வேண்டும் என்னும் விரதத்தையே கங்கணமாகக் கட்டிக் கொண்டவராதலின்) எல்லாப் பொருளையும் எளிதில் வழங்குந் தன்மை தமக்குப் பொருந்தும். (23)

வியாசமுனிவ, தங்களால், மறையின் பொருளை நேரே கருவில் வைத்துள்ளனவும், செய்வதற்கு மிக்க அரியனவு மான பதினெண் புராணங்கள் செய்யப்பட்டன; அவற் றில் இரண்டொரு விருத்தமேனும் (சுலோகமேனும்) நல்ல பொருளமைவுடன் செய்யவல்லார் யாவர்? (24)

ஒன்றாகிய மறையென்னுமோர் கடலை நீவிர் நான் காய்ப் பிரித்தீர்; கலியிற்றோன்றும் அந்தணர் மதிகுறைந் தோராதலின், மறையைக் கொள்வதிற் சோம்பலுள்ளவ ராவர் என மதித்து அம் மறைகளையே சாகைகள் பற்றி யும் வகுத்தீர். (25)

வருங் காலத்தனவும், நிகழ் காலத்தனவும், இறந்த காலத்தனவுமான எல்லாப் பொருள்களையும், உணர்வீர்; தம்மாலுணராததோ, இல்லை. இவ்வணமன்றெனிலோ, இறந்தகால நிகழ்கால வருங்கால சரித்திர நூல்களை அறி யாது சொல்வதெங்ஙனம்? (26)

பாற்கடலென்னுந் தம்மிடத்திலிருந்து எழுந்த, மாபா ரதமாகிய சந்திரன், உட் பொருளின் உறுப்புக்களையும், தூலம், சூக்குமம், என்னும், வெளிப் பொருள்களையும், விளக்குவதுடன், இருளென்பதையும் நீக்கியதால் புதிய தோர் பூரண மதி யெனப்பட்டது. (27)

வேதங்கள், ஆறங்கங்கள், சாத்திரங்கள், கடல் போன்ற மாபாரதம், புராணங்கள், என்னும், இவ்வனைத்தும் தங்க ளிடத்திலிருந்தே தோன்றின; இவையெல்லாம் உண்மை யாய்த் தங்களுடைய திரு வாக்கின் பெருக்கேயாம். (28)

உண்மையாகிய பேரொளிப் பிழம்பென்னும் பிரமமே, ஒரு துவீபத்தில் (இரு மருங்கும் நீர் சூழ்ந்த நடுப் பூமி

யில்) முனிவருக்கெல்லாந் திலகமாகிய வியாச முனிவர் என்னுமோர் தரு நன்கு முளைத்தெழுந்து, ஆயிரங் கிளைக ளுள்ளதும், கிளியாற் றழுவப்பட்டதுமாகித் தமது திரு வடியை யடைந்த நல்ல நோக்குடையாருக்கு மேலான பயன் களைக் கொடுத்துக் கொண்டிருக்கின்றது. (விளக்கிக்கொண் டிருக்கின்றது என்பதுமது) அம்ம! அம்ம! (29)

அதிசயமாகிய கண்ணபிரானே, நீர் நல்லார்களின் துன்பை நீக்குதற் பொருட்டு, கிரீசனை (பரசிவனை அல் லது கோவர்த்தன கிரியை) எக்காலும் மனத்திற்றாங்கு கின்றீர்; (கண்ணபிரானே, கோக்களின் துன்பைப் போக்க ஏழு தினமே கையாற்றாங்கினர்), வேதங்களென்னும் ஆக் களை நீர் முகத்தில் பாது காக்கின்றீர்; (கண்ணபிரானே கோக்களை வனத்திற்பாது காத்தனர்; நீர் தயையோடு இள கிய பார்வையால் நரகை முழுதுந் தொலைக்கின்றீர், அக் கண்ணபிரானே, உயுத்தத்தால் நரகாசுரனைத் தொலைத் தார்); ஆகையால் இத்தகைய வியப்புள்ள கண்ணனே யாகிய தம்முடைய குணங்களை விசேடித்துக் கூறுவதில் வல்லுநருமுளரோ? (30)

மறைகள், உள்ளதெனவும், இல்லதெனவும், உள்ளென வும், வெளியென்வும், முழங்கும், பரம் பொருளென்னுஞ் சச்சிதானந்தப் பிழம்பாகிய பரமான்மாவே, பரம புருட னுவன்; அந் நாராயணனே நீர்.'' (31)

## சங்கரபகவற்பாதருக்கு வியாச முனிவரருளல்

சங்கரபகவற்பாதர் இவ்வாறு துதித்து விதி மரபு பற்றி வியாசபகவானுக்கு ஆசனமளிக்க, அதில் ஆன்ம நிட்டராகிய அவர் அமர்ந்து, உடம்பு தரை தோயப்பணிந்த

சங்கரபகவற்பாதராகிய துறந்தார்களுக்கு அரசரை நோக்கிக் கீழ் வருமாறு திருவாய் மலர்ந்தருளினர் :— (32)

"சங்கர, நீ எமைப் போன்றார்களின் நிலைமையை யடைந்துள்ளாய்; நினது கரையிலாக் கல்வியை யாம் உணர்ந்தோம்; அறிஞ, சுகமுனிவரைப் போன்று அன்பு செலுத்துவோனுனாய்; எம்மிடத்து முன் போல் மாணாக்கருடன் (வாதமிடுவோனென) மதி மயங்காதே. (33)

மதி யணி முடியோனுடைய அவையின் கண்ணுள்ள சித்தனொருவன், நின்னாற் பாடிய மியற்றப்பட்டதெனச் சொல்லக் கேட்டு, களிப்பு மிகுந்த மனத்தனாய் நின்னைக் காணும் வேட்கையால் உனது கட் புலப்படத் தோன்றினேன்." (34)

முனிவர்களுக்கு இந்திரராகிய வியாசபகவான் இவ்வாறு திரு வாய் மலர்ந்தருளியதைக் கேட்க, அதிலுண்டாகிய மனக் களிப்பு மயிர்க் கூச்செறிதல் வாயிலாக வெளிப்பட்டு வருவதை யடக்கிக்கொண்டு, சுகமுனிவர் போற்றும், மிகவும் பெரிய கடலுக்கோர் மகிழ் மதியராயும், மேக வண்ணராயும், பேராற்றலுடையராயுமுள்ள அவ்வியாச முனிவரை நோக்கிச் சங்கரபகவற்பாதர் கீழ் வருமாறு கூறியருளினர் :— (35)

"சுமந்த, பைலவ, முதலிய மகான்களான முனீந்திரர்களையுஞ் சீடராகக் கொண்ட தேவரீரிடத்து, துரும்பினுஞ் சிறிய தொழும்பனாகிய யான் என்னுவன்? அவ்வண்ணமாயினும் ஏழையாகிய என்னிடத்துக் காருண்யத்தைக் காட்டி யருள் செய்தீர். (36)

பெரிய இருடிகளாலும் மதிக்கப்படுவோய், அத்தன் மைய யான், பொருளெலாம் விளக்கும் அருணனென்னும், தமது சூத்திரங்களுக்கு, எனது பாடிய மென்னும் விளக்கால் தீபாராதனையே செய்தும் பெரிதும் நாணமுற்றிலேன், (37)

என்னே! எனதறிவையே கொண்டு எளிதாகிய ஒரு பாடியஞ் செய்தேன்; ஆதலின், தமது மரபிலுள்ள மாணுக்கர்களில் என்னையுமொருவனுகக் கொண்டு அப் பாடியத்தி லுள்ள நல்ல யுத்தி தீய யுத்திகளை ஆராய்ந்து, தயை மிக்கோய், ஒற்றுமைப் படுத்துவதற்கு உரியவர் தாமாகவே யிருக்கின்றீர்'' (38)

என்று கூறினர்; அவ்வாறு கூறிய சங்கரபகவற்பாதரின் திருக் கரத்திருந்த பாடியத்தை அன்புடன் இரண்டு திருக்கரங்களாலும் வாங்கி, அருள் செய்தல் என்னுமோர் பெருந் தன்மையாகிய குணத்திற் களிப்புள்ள வியாச முனிவர் அப்பாடியம் முற்றும் இனிது நோக்கி யருளினர். (39)

பார்த்து, அப்பாடியம், சூத்திரம் போன்ற எளிய பதங்களாற் பொருளை யுணர்த்துவதும், தனது பதங்களாற் பூருவ பக்கத்தை மறுப்பதும், சித்தாந்த யுத்திகளைப் புகுத்தியது பற்றி சித்தாந்த வடிவுமாமெனக் கண்டு, களித்து, ஆனந்தத்தில் மூழ்கியவராய்க் கீழ் வருமாறு கூறி யருளினர் :— (40)

மைந்த, குருவாற் கொண்டுவரப்பட்ட தாங்கள் செய்த சூத்திர பாடியமோ, எளிதல்ல? மற்றோ அதிலுள்ள நல்ல யுத்தி, கெட்ட யுத்திகள் ஆராயத்தக்கன, என்னு மிவ் வார்த்தையே மிக்க எளியதாமென்றெண்ணுகின்றேன். (41)

அரிய பாடியமா மென்பதிற் காரணங்கூறல்

தாங்கள், கரும காண்டிகளின் முக்கியப் பொருளையு முணர்ந்திருக்கின்றீர்; இலக்கணங்களையு மினிது உணர்ந் துள்ளீர்; அறிஞ, கோவிந்த பகவற்பாதரின் மாணாக்கராகிய தம்மிடத்து இன்னுச் சொல் லெழுவது எங்ஙனம் ? (42)

தாங்களோ, பிராகிருத புருடரல்லர் ; மற்று, எல்லா முணர்ந்த ஒரு மகத்துவமுள்ளவரா யிருக்கின்றீர்; இரவி, இருளைப் போக்கு மாறு பிரமசரியத்திலிருந்தே அச்சு விடயங்களை யொதுக்கித் துறவியாயினீர். (43)

அஃதன்றியும், அநேக பொருளை கருவிற்கொண்டவை களும், இரகசியக் கருத்துள்ளவைகளுமாக, யாம் இயற்றிய சூத்திரங்களை விரித்துரைக்க வல்லார் யாவர் ? (44)

பெரும் பிரயாசையுடன் அறியத்தக்க எமது சூத் திரங்களின் உண்மைப் பொருளுணர்பவரும் உள்ளார் கொலோ? (அற்றுகலினன்றே) போறிவாளர்களும் (தேவர் களும்) பிரம சூத்திரங்களை யியற்றியவருக்கு எத்துணைப் பிரயாசையுண்டோ, அத்துணைப்பிரயாசையே பாடியஞ் செய்தவருக்கும் உண்டாயிருத்தல் வேண்டும், எனப்பேசு கின்றனர். (45)

எல்லா ஐசுவரியமு முள்ள கருத்தனே யாயினும், எமது கருத்தை யுள்ளவாறுணர்ந்து சூத்திரங்களுக்கு இவ் வாறு பாடிய மியற்ற வல்லனுகான் ; மற்றும், சாங்கியர் முதலியோர்களால் மாறு பட்டுள்ள மறை முடி வழியைச் சீர்ப்படுத்த பரசிவக் கூறுடையாரே யன்றி வல்லுநர் மற் றெவர் உள்ளார் கொலோ ? (46)

தாங்கள் அற்புத சிவமாவீர், முனிவென்பது சிறிதளவுமே பற்முது விடுத்தவரும், (உருத்திரனாகிய சிவனே, பெரு முனிவுடையான்) கலைகளனைத்தையுங் கருத்திற் கொண்டவரும், (சிவனே, மதியின் கலைகளில் ஒரு கலையையே முடியிற் சூடினன்) கிரிசா என்னும் வேதாந்த வாக்கியத்தால், முழுதுமாந் தன்மையாலுண்டாகிய பிரம ஞானமென்னும் பார்வதியுடன் கூடிய வடிவுள்ளவரும் (சிவனே, பார்வதியைப் பாதி யுடம்பிலுள்ளவன்) நீரே யாதலின் தம்மை யெடுத்து விதந்து சொல்வதற்கு யாவர் வல்லார்? (47)

முன்னும், அச் சூத்திரங்களுக்கு அளவிலாப் புலவரால் விருத்தியுரை கூறப்பட்டன; மேலும் உரை கூறுவாருஞ் சிலருளர்; முழுது முணர்ந்தோய், அவர்கள், மிகச் சிறந்த எமது உள்ளக் கருத்தை அறிவரோ? (48)

மற்றும், உபநிட வித்தையை உள்ளவாறே வெளியாக்குவீராக; பேதவாதம் மிகக் கற்றார்களை முழுதும் வென்று, அநுபந்தமுள்ள நூல்களை மண்ணிடத்து நிலைநாட்டுவீராக; விரும்பியவாறே யான் செல்கின்றேன் என்றனர். (49)

சங்கரபகவற்பாதர், இவ்வணங் கூறிய வியாசபகவானை நோக்கி, பகவ, அத்தன்மைய பாடியங்களுஞ் செய்யப்பட்டன; தீய மதங்களும் வலியால் முழுதும் போக்கப் பட்டன; மேல் என்னாற் செய்யற்பாலது யாது? (50)

நல்லாருக்குப்பிரிய, ஒருமுகூர்த்தப் போது மாத்திரம், மணி கர்ணிகைக் கருகில் நிற்பீரேல், நீண்ட ஆயுளை யுடைய தம்க்கெதிரிலேயே, எனதாயுள் முடிவுற்ற போது விடத்

தக்க எனதுடலை விட்டுவிடுவேன், அத்துணைப் போதிற் குள்ளே உடல் போமாறு செய்வேன், என்றனர். (51)

வியாசபகவான், இத்தகைய வார்த்தையைக் கேட்டு நன்கு யூகித்து, இத்தரையின்பாலுள்ள சில அறிஞர் (கல்வி வல்லுநர்) தம்மால் வெல்லப்பட்டிலர், ஆதலின், இங்ஙனஞ் செயற் பாலதன்று, எனச் சங்கரபகவற்பாதருக்குத் திரு வாய் மலர்ந்தருளினர். (52)

அவர்களை வெல்லுதற் பொருட்டுச் சில ஆண்டுகள் நிலைத்த மதியுடைய தாங்கள் வாழ்ந்திருக்கக் கடவீராக, அங்ஙன மின்றேல், இளம் பருவத்திலேயே அன்னையாரை யிழந்த குழந்தை நிலைத்திராதது போன்று முத்தி விருப்பு நிலையாததாகியே ஒழியும். (53)

அஃதன்றியும், ஆன்மாவை யுணர்ந்த இருடிகளிற் சிறந்தோய், தங்களாலியற்றப்பட்ட தோடமற்ற பெருந் தன்மை வாய்ந்த நூல்களைப் பார்த்ததாலெழுந்த பெருங் களிப்பு, தமக்கு வரமீயுமாறு எம்மை மிகமகிழ் விக்கின் றது. (54)

## சங்கரபகவற்பாதருக்கு வியாசபகவான் ஆயுளைக் கொடுத்தல்

மைந்த, தமக்குப் பிரமனாற் கொடுக்கப்பட்ட வயதோ, எட்டாண்டாம்; மற்றும், நல்ல மதியுடன் தங்களாலே தேடிக் கொண்டதோ, எட்டாண்டாம்; மற்றும் இறை வன் கட்டளையால் தமக்கு பதினாறு வயதுண்டாகுக; அஃதன்றியும் இப் பாடியமும், இரவி, மதி, வான் மீன், உள்ளவரை இனிது வாழ்க. (55)

இவ் வாழ்நாளைக் கொண்டே விரோதமான வாதிகளின் ஆணவ முளையை அடியோடு களைவதில் கவனத்தோடுள்ள வாக்கியங்களால், அத்துவிதீய வித்தைக்கு இடையூறாக வுள்ள பேதவாதிகளென்னும் பிரமதத்தர்களை, பேத புத்தி யற வொழித்தவர்களாகச் செய்வீராக. (56)

என மங்கல மொழி கூறி யருளினர் வியாசபகவான். அவ் வியாசமுனிவரை நோக்கி உலகைப் புநிதஞ் செய்யுஞ் சங்கரபகவற்பாதர், அறிவு மிக்கோய், தமது மங்கல மொழியைக் கொண்டே எனது பாடியம் மண்ணுலகில் தழைத்தோங்குக என்றனர். (57)

என்று கூறி, எதிகளுக்கெல்லாம் முனிவராயும், முழுது முணர்ந்தோராயுமுள்ள அவ் வியாசபகவானுடைய திருவடி யிணைகளை வணங்கினர்; முனிவர்களுக்கு அரசராகிய அவ் வியாசமுனிவரும், ஒரு தலையாகவுண்டாகும் இவ் வரத்தைக் கொடுத்து விட்டு வெளிவடிவாயினர். மறைந்தன ரெனினுமது. (58)

## வியாசரின் பிரிவாற்றாமை

இவ்வண்ணம் வரங்கொடுத்த இருடிகளிற் சிறந்த வியாசமுனிவர் மறைந்த போது, விவேக மென்னுமோர் நிதியை உள்ளில் உடையாரேனும், பெருங் கவலை யுற்றனர்; உள்ளத்தின் தாபத்தை யொழிக்கும் அத் தன்மையரின் பிரிவாற்றாமையும் அந்தோ! எவ்வாறு அடக்கிக் கொள்ளற் பாலதாம்? (59)

பின்னர், எதிகளுக்குச் சக்கரவர்த்தியாகிய சங்கரபகவற்பாதரும், அவ் வியாசமுனிவரின் திரு வடி யிணையை,

தமது உள்ளமாங் கமலத்தின்கண் நோக்கி ஒருவாறுகப் பிரிவாற்றுமையை அடக்கிக் கொண்டு வியாசமுனிவரின் கட்டளையால் திக்கு விசயம் ஒருதலையாகச் செயற்பாலது என, மனத்துட் கொண்டனர். (60)

சங்கரபகவற்பாதர் பிரயாகையை யடைதல்

பின்னர், முனீந்திரராகிய சங்கரபகவற்பாதரும், குமாரில பட்டரைக் கண்டு தமது பாடியத்திற்கு அன்போடு அவரால் ஒரு வார்த்திகஞ் செய்வித்தற் பொருட்டு, விந்திய பருவதக் குகைகளைப் பயனற்றதாகச் செய்த (விந்திய பருவதக் குகையை விட்டு நீங்கிய) குறு முனி யுலாவும் தென்றிசைக்குப் பிரயாணப்பட்டனர். (61)

பிரயாணப்பட்டு, வேதாந்த இரகசிய முணர்ந்தவரும் உடன்பாடிலாத மதங்களை எளிதாக மறுப்பவருமாகிய சங்கரபகவற்பாதர், மறை சொல்லுங் கருமங்களை தரையின் கண் நிறுவிய குமாரிலபட்டரை (பட்டபாதரை) வெல்லும் வேட்கையராய் முதலிற் பிரயாகையை யடைந்தனர். (62)

அடைந்து, நீராடினோரின் தேகத்தைக் கறுப்பும், வெண்மையுமாகச் செய்தற் பொருட்டு, (கார் முகில் வண்ணன் போன்றும், கருப்பூர நிறத்தன் போன்றுஞ் செய்ய = அரியரர்களைப் போலப் பண்ண) கலிந்த கிரியின் புதல்வி யென்னும் யமுனை யுடன் கலந்ததும், பாவத்தைப் போக்குவதும், சனன் புதல்வியாகிய சானவி என்பதுமாகிய கங்கையில் நீராடுவதற்கு முனிவர்களின் புருடார்த்த நெறியாகிய மத்தியப் பிரயாகையை யடைந்தனர். (63)

பிரயாகையை விதத்தல்

(அப் பிரயாகை எவ் வண்ணத்ததெனிலோ) ஒருத்தி, புதிய நட்புள்ள மற்றொருத்தியால் நாணி நின்று விடுகின்று

என்றோ? அது போல, கங்கைநதிப் பெருக்கால் தடையுண்டு வேகங் குறைந்து நின்ற வியப்பாகிய நீருள்ள யமுனை நதி அங்கே அதிகமாய்க் காணப்படுவதாம். (64)

மற்றும், மருங்கு வாழ்கின்ற மாணுக்கரென்னும் மயில், அன்னங்களால், மரபு பற்றியே வந்த நிருமலத் தன்மையை யடையப் புகலிடமாய்க் கொள்ளப்பட்ட நீரையுடையதும், இரவிலுள்ள கலவி யின்பத்தைத் தேடுவதற்குச் சக்கரவாகப் புட்களிரண்டாற்றொடரப்பட்டதும், (65)

நீராடினோர், தேவ தேகம்பெற்று, வியாதியென்னுஞ் சொல்லை யுணராதவராய், சந்திரனும், நட்சத்திரமும் உள்ளவரை சுவர்க்க விடயங்களை நுகர்வோராகச் செய்வதும். (இஃதெங்கே கண்டதெனின்?) இப்பொருளை, "வெண்மை கறுப்பு நதிகள் கூடுமிடத்தில் நீராடினோர் வானுட்டை யடைவர்," என்னுமறை மொழியே நேரிற் கூறுகின்றது. (66)

மறையும், வெண்மை கருமைகளின் வியவகாரம் எத்தன்மைய தென்று உணராதிருந்து, கங்கை யமுனைகளின் சங்கமத்தைக் கண்டு இவையே வெண்மை கருமைகளெனக் கூறும், யமுனை நதியால் வழிபடுகின்ற கங்கையிலிறங்கிக் களிப்புற்றுச் சங்கரபகவற்பாதர் கீழ் வருமாறு போற்றினர் :— (67)

"கங்கையே, முப்புரங்களுக்கும் பகைவரின் (பரசிவனின்) சடைகளாற் கட்டுப்பட்டேனென்னுங் கோபத்தால், அவரைப் போன்று நூற்றுக் கணக்கான சடையுடையார்களை யுண்டாக்குகின்றாய் என்னை கொலோ? (கங்கை நீராடினோர் செஞ் சடையுடைய சிவன் போன்றே யாகின்றார்கள் என்பதாம்) இவர்களுடைய (கங்கை நீராடிப் பரசிவன் போன்றார்களின்) சடைகளாற் கட்டுப்படமாட்

டாரோ (ஒருதலையாகக் கட்டுப்படுவா யென்க)? இவ்வாறு செய்வது நினக்குரியதே, என்னை? சலப் பிரகிருதிகள் (சடப் பிர கிருதிகள்) மேல் வரும் பந்தத்தை யுணரார்கள், (ஆதலின் என்க). (68)

தேவ மாதே, நீ உண்மை நெறியில் அழுத்தமுடைய வளா யிருந்தும், சுத்தமற்ற எலும்புகளைச் சேர்த்து வைத்துக்கொள்கின்றாய் கொலோ அஃதென்னை? அம்மையே, நினது கருத்துப் பெரும் பான்மையுந் தெரியவந்தது (அஃதென்னையோ வெனின்?); நின்பால் நீராடின (சிவத்திற் கொப்பான) நல்லார்களுக்குப் பல்லாற்றானும் அலங்கரித் தற் பொருட்டே போலும் (ஈண்டு இறந்தாரின் என்பு கங்கையிற் சேர்க்கில் அச்சீவன் துறக்கத்தை யடைவன் என்பதும் அவ்வாறே அளவற்ற என்புகள் கங்கையிற் சேர்ந்துள்ளன, என்பதும், அவைகள் கங்கை நீராடின வர்கள் பரசிவனுக் கொப்பாவராதலின் அவர்களும் பரசிவன் போல் என்மணிதற் பொருட்டே எனவுங் கற் பித்தமை காண்க). (69)

சுவாப வசத்தால் (நித்திரையால்) சடத்தன்மை மிகுந் துள்ள மனிதரை, சுவாப வசத்தால் தனது நீரால்) சடத் தன்மை நீங்கினவர்களாகச் செய்கின்றாய்; சுவப்ன மற்ற வர்களா (தேவர்களா)ய்ச் செய்கின்றாய்; மற்றும், விடய இச்சை நீங்கிய மனதுடையாரையும் மிக விரைவில் (தன் பால் நீராடலால்) தூர்த்த சிரோமணியாயச் செய்கின்றாய். (தூர்த்தமென்னும் ஊமத்தம் பூவை யுச்சியிற் சூடிய சிவ னுக்குச் சமானராய்ச் செய்கின்றாய்) தேவியே, இஃதென்ன நீதி? (70)

தவ முடையாருக்கு இறைவராகிய சங்கரபகவற்பாதர், இவ்வாறு திரிவேணியைத் துதித்து, இரண்டு திருக் கரங்க

ளாலும் வேணு தண்டத்தை மேலே தூக்கிக் கொண்டவரும், ஆடையால் இடையை நன்கு மறைத்தவரும், பாவ நிவிருத்தி யின் பொருட்டு நீராடு மனத்தவருமாகி, தாம் செயற்பால தெல்லாஞ் செய்து முடித்தவராயிருப்பினும், உலகிற்கு உபகாரஞ் செய்யும் இச்சை கொண்டவராய், தமது மாணாக் கர்களுடன் நீராடினர்; அங்கே உடலிற்றுங்கி, வளர்த்து, மற்றும், பல துன்பங்களையும் பொறுத்துக் கொண்ட தமது அன்னையாரையும் எண்ணிக் கொண்டனர். (71, 72)

## சங்கரர், பட்டபாதர் தீப்புகுதலைக் கேள்விப்படல்

அத் திரிவேணியில், அநுட்டித்த கருமங்களை முடித் துக் கொண்டு, நீலோற்பலப் பூக்களை யளைந்த தண்ணிய காற்றால் வழி பட்டோராய் கரிய தருக்களடர்ந்த கங்கைக் கரையிற் களைப்பாறினர். அதற்கிடையில், சில உலக வதந்தியைக் கேள்வி யுற்றனர். (73)

(அஃதென்னையோ வெனின்?) முன்னர், மலையி லிருந்து கீழ் விழுங்கால், "உண்மையுள்ளாருக்கு வேதப் பிரமாண்யமே சரண்," என்று சொன்னவரும், தமது அநுக் கிரகத்தால், தேவர்களும் பண்டைய வேள்வியின் பாகத்தை அடையுமாறு செய்தவருமாகிய அப் பட்டபாதர், தமது ஆசிரியரை (ஆசிரியரின் மதத்தை) மறுத்ததால் வந்த பெருந் தோடத்தைப் போக்கும் வேட்கையராய், மறையின் பொருளெலாமுணர்ந்த அத் தீரர் ஆத்திகத் தன்மையால் (உறுதிப்பாட்டால்) உமித் தீயிலிறங்கினராம். (74, 75)

அவரோ, மறை யோத்துக்களை, முழுதுமோதினவர்; பெருகிய ஆற்றைப் போல அளவிலாச் சாத்திரத்தை யறிந்த வர்; ஒவ்வாத மதத்தை முழுதுமொழித்தவர்; தமது

புகழாகிய சக்கரத்தை மூவுலகிலுஞ் சுழலச் செய்தவரு மாவராம். (76)

## சங்கரபகவற்பாதர் பட்டபாதருடன் பேசல்

என்னும் உலக வதந்தியைச் சங்கரபகவற்பாதர் கேட்டு, விரைவில் அங்குச் சென்று அழுத கண்ணீர் நிறைந்த முக முடையவரான பெரும் புகழ் வாய்ந்த பிரபாகரர் முதலான மாணக்கர் குழாங்களாற் சூழப்பட்டவரும், உமிக் குவியலின் மீது கிடப்பவரும், புகை யெழும்பும் உமித் தீயால் உடம்பு முழுதும் வெந்தும், நீராவி சூழ்ந்த சீராருங் கமல மலர் போன்ற அழகிய திரு முகமுடையவருமாகிய பட்டபாதரைக் கண்டனர். (77, 78)

பகைவரை வென்றவரும், வேதநெறியைப் பாதுகாத்தவரும், தீ போன்ற ஒளியுடையவருமாகிய பட்டபாதரும், தூரத்திலேயே திருக் கடைக்கண் அசைவால் பாவத்தைப் போக்கியவரும், கட் புலப்பட்டவருமாகிய சங்கரபகவற்பாதரைத் தரிசித்தனர். (79)

பட்டபாதர், தாம் முன்பு காணுதவரும், முன்பு கேட்டவருமாகிய சங்கரபகவற்பாதரைத் தரிசித்து, மிக்கக் களிப் புற்றோராய் தமது மாணக்கர் குழாங்களால் அவருக்கு ஆராதனைச் செய்வித்தனர்; ஆசிரியருக்கும் அண்ணலாகிய சங்கரபகவற்பாதர், அவ்வாராதனையை அன்போடேற் றருளினர். (80)

சங்கரபகவற்பாதரும், பிட்சை பண்ணிக் கொண்டு, களிப்புற்ற மனத்தராய், அப் பட்டபாதருக்குத் தமது பாடியத்தைக் காண்பித்தனர்; உலகில் நூல்கள் யாவும் தோட்டமற்றனவேயாயினும், ஆன்றோருடைய திருக் கண் நோக்குறில், தழைத்தோங்குவனவாம் ஆதலின் என்க. (81)

### பட்டபாதர் சங்கரபாடியத்தை வியத்தல்

பட்டபாதர், அப் பாடியத்தை நோக்கிக் களிப்புற்ற மனத்தராய், ஆசிரியர்களிற் சிறந்த சங்கரபகவற்பகவற் பாதருக்குக் கீழ் வருமாறு கூறினர் :—உலகில், கீழ் மக்கள் மிக்கப் பொறாமையை யடைவர் ; முழுதுமுணர்ந்தோரோ, தாழ்மையை யேற்றுக் கொள்ளார். (82)

ஆதலின், அறிஞ, இம் முதலாவது பாடியத்திற்கு (அத்தியாச பாடியத்திற்கு) எண்ணாயிரம் வார்த்திகங்கள் (விருத்த வடிவாய்க் கூறுமுறை இயற்றலாமென) காணப் படுகின்றன. யான் தீக்கை யேற்காது வாழ்ந்திருப்பேனேல்? உண்மையாக இதற்கு அரியதோர் நூலியற்றுவேன். (83)

இத் தருணத்தில், தங்களுக்கொப்பானவரின் சிறந்த தரிசனமே உலகிற் கிடைத்தற் கரியதாம் ; ஒரு வகையால் யான் முன் தேடிய புண்ணிய மிகுதிப்பாட்டால் இப்பொழுது தங்களைத் தரிசிக்கப் பெற்றேன். (84)

சுவை யொழிந்த குடும்பக் கடலில் மூழ்கியவருக்கு, உண்மையாகிய சிறந்த ஒழுக்கங்களால் தம்மைப்போன்றாரின் நல்லாரிணக்கமே தேடற்பாலது ; என்னை? அக் குடும்பமாங் கடலினின்று கரை யேறுவதற்கு உபாயம் வேறின்றாமாதலின் என்க. (85)

யான் நெடுநாளாய் இத் தன்மைய தமது தரிசனத்தை விரும்பி யிருந்தேன்; இன்றே எனக்கு, தாங்கள் கண் குளிரக் காணக் கிடைத்தீர் ; இவ் வில்லற வழியில் விரும்பியவாறே வேட்கைப் பொருள் கிடைப்ப தில்லை. (86)

ஒரு பொழுது, ஒருவனை; விரும்பிய பொருளை யடையுமாறு காலமே செய்விக்கின்றது ; மற்றோர் போதோ, மாறு

பட்ட தாழ்ந்த பொருளே யடையுமாறு பண்ணுகின்றது; இவ்வாறே இக்காலம், கூட்டவும் பிரிக்கவுஞ் செய்கின்றது; ஆகையால் இன்ப துன்பங்க ளிரண்டுங் காலத்தா லுண்டாக்கப்படுவதெனக் கண்டேன். (87)

யான் நாஸ்தியற்றினேன்; வைதிக நெறியையும் உறுதி செய்தேன்; தார்க்கீகரது யுத்திகளனைத்தையுமே மறுத்தேன்; அவ்வாறே விடயத்தால் தோன்றியதையு மநுபவித்தேன்; இக் காலத்தைக் கடக்கவோ வலியற்றவனானேன். (88)

### பட்டபாதர் சங்கருக்குத்தமது செய்திகூறல்

வேதம், இயற்கைப் பிரமாணமாமென்பதை யெடுத்துக் கொண்டு, உலகாலும், மறையாலும், உறுதிப்பட்ட ஈசன் இல்லையென மறுத்தேன்; ஆனல், அறிஞ, இவ்வுலகம் எவனின்றி இன்பத்திற்கிடமாகாதோ, அத் தகைய பரேசனை ஓர் போதும் மறுத்திலேன். (89)

அவ் வைதிக மார்க்கம், புத்த மதத்தர்களாற் கைக்கொள்ளப்பட்டுக் கேடுற்றதை, உற்று நோக்கி யுணர்ந்து, பழமையாகிய வைதிக நெறியை நன்கு பாது காப்பாற்ற வேண்டுமென்னும் மனத்தனய், அப் புத்தர்களே வெல்ல முயன்றேன். (90)

### புத்தர்களின் செய்கை

மாணுக்கர் குழாங்களுடன் கூடின அப் புத்தாசிரியர்கள், அரசன் முதலானோர்களைத் தங்கள் வசமாய்த்திருப்ப, அரண் மனைக்கே செல்கின்றார்கள்; சென்று, இவ்வரசனும் எமைச் சேர்ந்தோனே; இத்தேசமும் எம்முடையதே, ஆகையால் நீவிர், அப் புத்தமதத்தையே வழி படுவீராக; வேத வழியைத் தழுவாது ஒழிப்பீராக; வேதம், அநேக பிர

மாணங்களால் கண்டிக்கப்படுவதாலும், ஒன்றற்கொன்று மாறுபட்ட வாக்கியங்களை யுடையதாமாதலானும், பிரமாணமல்ல எனச் சொல்லிக் கொண்டு உலகில் திரிகின்றார்கள். இவர்களுக்குப் பொருத்தமானதோ, யாதொன்று மில்லை. (91, 92)

யான் வேதத்தை மறுப்பதில் வல்லுநரான அப் புத்தர்களுடன் வாதமுஞ் செய்தேன்; ஆனால், அம் மதத்தி லுள்ள இரகசிய முடிவாமென்னுங் கடலைக் காணாத யான் அவர்களை வெல்ல வலியற்றவனானேன்; என்னை? நீக்கற்குரிய உணர்வினாலே நீக்கத் தக்க அது கேடுறும் ஆதலின் என்க. (ஈண்டு ஓர் மதத்தை மறுப்பதற்கு அம்மதத்தின் முடிவுகளை நன்குணர வேண்டுமென்பது கருத்து). (93)

(அது பற்றியே) யான் மன வெழிற்சி யில்லாதவனாகவே அப் புத்த மதத்தைத் தழுவி அதன் முடிபுகளைக் கேட்டுணர்ந்தேன்; அவ்வாறு கேட்கும்போது ஓர் சமயம் கூரிய மதியுள்ள அப் புத்தர்கள் வேத நெறி முழுதையுமே பழித்தனர்; அக்கால் இயல்பாகவே எனது கண்ணிலிருந்து நீர்த்துளி விழுந்தது; அருகிலுள்ள மற்றையோர் அதைக் கண்டனர்; அது தொட்டே அவர்களுக்கு என்னிடத்தில் உண்மை யுரைப்பதொழித்ததோடு ஐயப்பாடுமுண்டாகியது. (94, 95)

(பின்னர் அவர்கள்) இவன் மாறுபாடாகப் படிக்கின்றான்; வலியுடையவன்; இரு பிறப்பாளன்; எமது புத்த நூல்களை மறுப்பான்; எவ்வித வுபாயத்தாலேனும், இவனை கிளப்பிவிடத் தக்கான்; இவனை யிங்கிருத்துவது தக்கதன்று என, அவரும், கொல்லாமையை வாய் மாத்திரத்தாற்

கூறுஞ் சீலமுடைய பிறரும், நன்கு உறுதி செய்து, கீழ் வீழ் வதிற் பயமடைபவனும், கலக்கங் கொள்பவனுமாகிய என்னை மிக்க வுயர்ந்ததோர் வீட்டின் உப்பரிகையிலிருந்து கீழே தள்ளிவிட்டனர். (96, 97)

அவ் வுப்பரிகையிலிருந்து, வீழ்ந்து, வீழ்ந்து, மேல் ஏறி, ஏறி, "வேதம் பிரமாணமாகுமேல், சமமிலாத இவ் விடத்தில் வீழ்ந்த யான் பிழைத்துக் கொள்வேனாக எனது வாழ்வில் வேதப் பிரமாண்ய மென்னு மதுவே சரண்" (எனக் கீழ் வீழ்ந்து விட்டேன்). (98)

ஈண்டு, "பிரமாணமாகுமேல்," என ஐயந் தரு மொழி கூறியதாலும், வஞ்சகத்தால் புத்த நூல் கேட்ட காரணத் தாலும், கீழ் வீழ்ந்த எனது கண்ணொன்று கெட்டது; அங் ஙனமாயினும் அது தெய்வ கற்பனையே. (99)

ஒரு எழுத்தறிவித்தவர் இறைவரே யாவர், சாத்திரங் களை ஓதுவித்தவரைப் பற்றிக் கூறற்பாலதென்னை கொ லோ? பௌத்தாசிரியர்பால் அவர் மரபு நூலையே கற்று, அக் கல்வியால், (என திடத்துள்ள வைதிக மத வுறுதி) சிறி தேனு மசையாமையையே அவருக்கு மறித்தோர் அருப்பண மாகச் செய்தேன். (100)

முன்னர், இவ்வண்ணம் பௌத்த நூலைக் கற்றுக் கொண்டு அக் குலத்தையே அடியோடு தொலைத்தேன்; அதுபோன்றே முன்பு அறிவைக் கொடுத்த சைமினி முனி வரின் கரும காண்ட நூலில் மிகப் புகுந்த மனத்தனாய் பர மேசுரனையும் இல்லை யெனச் சாதித்தேன். (101)

இப்போது அவ் விரண்டு தோடத்தையும் போக்கும் வேட்கையனாய் விதியைத் தழுவிக் கூறிய தீப்புகல் என்

னும் பிராயச்சித்தத்தைக் கைக்கொண்டேன்; (பாவநி விருத்தி வடிவ) தமது திருவடித் தரிசனத்தால் கூறிய பிராயச்சித்தமே (பரிகாரமே) மறித்து மாயிற்று. (102)

யோக முடையோய், தங்களாற் பாடியஞ் செய்யப்பட் டிருக்கின்றதெனக் கேள்வி யுற்று, முன்னர், அதற்கு மொரு விருத்தியுரை செய்து புகழுடைய வேண்டு மென் னும் விருப்பிருந்தது; இப்போது அதைக் கூறலாற் பய னென்னை கொலோ? (103)

ஆன்றோர்களான மேன்மக்களுக்குப் புருடார்த்தங் களைக் கொடுப்பவரும், அத்துவிதத்தைக் காப்பாற்றுவதன் பொருட்டே அவதரித்தவருமாகிய தங்களை யானறிந்தேன்; முன்பே தாங்கள் எனது கண்களைப் பயனுடையனவாகச் செய்திருப்பீரேல், பாவ நிவிருத்தியின் பொருட்டு (இப் பரிகாரத்தை) அநுட்டித்திருக்கமாட்டேன். (104)

இப்போது, அவ்விரு தோடத்தாலுண்டாகிய பாவ நிவிருத்தியின் பொருட்டு, பெரும் பான்மை தீட்சை பெற் றோனாய் உமித் தீயிலிறங்கிவிட்டேன் ஆகையால் சைமினி சூத்திரத்திற்குச் சபர முனிவரியற்றிய சாபர பாடியத்திற்கு வார்த்திக மியற்றியது போன்று, தமது பாடியத்திற்கும் அரிய வொரு சிற்றுரை யெழுதிப் புகழுடைய எனக்குப் பாக்கியமில்லை என்றனர். (105)

இவ்வண்ணங் கூறியவரும், சிறிது குழம்பிய பேச்சுள்ள கமல மலர் போன்ற முகமுடையவருமாகிய அப் பட்ட பாதரைச் சங்கரபகவற்பாதர் நோக்கி, மறைப் பொருளான கருமங்களினின்றும் மாறுபாடுடைய பௌத்தரைக்கெடுக்க முருகக் கடவுளவதாரமாய்த் தோன்றிய தங்களை யான் மாத்திரமறிவேன். (106)

குமாரில பட்டரே, தங்களுக்குப் பாதகமென்னும் அவ்வெண்ணமும் அல்ல; மற்றே? நல்லோர்களுக்கு நன்னெறியைத் தெரிவித்தற் பொருட்டே இவ்வுண்மை விரதத்தை அநுட்டிக்கின்றீர்; இப்போது தம்மை எனது கமண்டல நீர்த்துளி கொண்டு பிழைப்பிக்கின்றேன்; பிழைத்தெழுந்து எனது பாடியத்திற்குமோர் இனிய வார்த்திகமியற்றுவீராக எனக் கூறினர். (107)

கல்வி, பொருள், தருமம், ஞானம் என்பவைகளையுடைய அப் பட்டபாதர் அவ் வார்த்தையைக் கேட்டு பேரறிவாளரிற் பெரியாரும், பிரம ஞானிகளிலரியாரும் துறந்தார்களில் முதன்மையானவரும், கூறிப் போந்தவாறு கூறியவருமாகிய சங்கரபகவற்பாதரை நோக்கி, வணக்கமாய்க் கீழ் வருமாறு இன் சொற் கூறினர். (108)

போற்றத்தக்கோய், இனியதே யாயினும், உலகிற்கு மாறாகிய காரியத்தைச் செய்தற்குரியேனல்லேன்; என்பால், தாங்கள் இத்தகைய பெருமை மொழி பேசியது, தமக்குரியதே யாம்; என்னை? மிக்க அறிந்த பெரியோர்களோ, சூரர் வில்லிற் குணத் தொனி செய்வது போன்று, முழுதுங் கோணின மக்களிடத்தும், குணத்தையே கொள்கின்றார்கள். (109)

சங்கரபகவ, தேவரீர், நெடு நாளுக்கு முன் இறந்தாரையும், தயை யென்னும் அலை மலிந்த திருக் கண்ணேக்காகிய அமுதத்தால் பிழைப்பிக்கும் ஆற்றலுடையீர். இப்போது ஆகமங் கூறிய இவ் விரதத்தைத் தொடங்கி, விட்டு விடுவனேல்? ஆன்றோர்களாற் பழிக்கப்படாதவனாகேன். (110)

பகவ, யான் தங்களுடைய புகழை யறிவேன்; நீவிர் சீவான்மாக்களை யொடுக்கி, மறித்து முன்னுள்ளவாறே

உண்டாக்க வல்லீர்; அத் தன்மையராகிய தாங்கள் ஈண்டு என்னை உயிர் பிழைத் தெழுப்புவீரேல்; இதில் வியப் பென்னை கொலோ? (111)

அவ்வண்ணமாயின். துறந்தார்களுக்கரச, எண்ணித் துணிந்த இக் கருமத்தை விடுவதற்கு மனவெழிற்சியுடையே னல்லேன்; ஆகையால், ஆசிரியரிற் சிறந்தோய், எனக்கு இப்போது அப் பிரம தாரகத்தை யுபதேசித்து, செய்த கருமத்தின் பயனைச் சேருமாறு செய்வீராக. (112)

பட்டபாதர் மண்டனரை வெல்லுமாறு
சங்கரர்க்குக் கூறல்

இவ் வத்துவித மார்க்கத்தை விளக்குபவர், தமக்கு வேண்டு மெனின், திக்கின் எல்லையை முட்டிய புகழுடைய வரும், அறிவு மிக்கார்களுக்கு அண்ணலுமாகிய மண்டன மிசிரர் என்பவரைத் தாங்கள் வெல்லுதல் வேண்டும், அவ ரொருவரை மாத்திரம் வெற்றி கொள்வீரேல், உலகனைத் தும் வென்றதாகும். (113)

விசுவரூபர், என்னும் அம் மண்டன மிசிரர், எப்போ தும், கரும யோகத்தை நியாயத்தோடு உபதேசித்துக் கொண்டு மண்ணிடத்து இனிது விளங்குகின்றவர்; பெரிய இல்லறத்தார், வைதிக கருமத்தையே மேற்கொண்டவர்; கரும காண்ட நூல்களிற் பெரு வேட்கை யுடையார்; கருமத் தையே தலைமையாகக் கொண்டவர்; நிவிருத்தி நூலில் (ஞான நூலில்) இயல்பாகவே அன்பிலாதவருமாவர்; அவர் எவ்வாற்றாலேனும், தம்மால் வசப்படுத்தற் குரியார்; அவர் வசப்படுவரேல், தமது மனவேட்கை முடிவாகும்; ஆத லின் அவர்பால் தாமதஞ் செய்யாமற் செல்வீராக என் றனர். (114, 115)

உலகத்தாரால், 'உம்வேக' என வழங்கப்பட்ட அம் மண்டன பண்டிதருக்கு, ஒரு நிமித்தத்தால் முனிவடைந்த துருவாச முனிவராற் சரசுவதி தேவியாற் சாபமேற்று இவ் வுலகிற்றோன்றி, அவருடைய உறவினரால் 'ரும்வா' என வழங்கப்பட்ட உபய பாரதி என்னும் அத் தேவியே அவருடைய மனைவியர் ஆவர். (116)

சாத்திரத்தின் மரபுக்களனைத்திலும், அவ் விசுவரூபரென்பவர் என்னிலுஞ் சிறந்தவரே யாவார்; எனது மாணாக்கருள் அவரே எனக்கு மிக்கப்பிரியர்; துறவியிற் சிறந்தோய், அவரது மனைவியாரையே சாட்சியாக வைத்துக் கொண்டு விவாதஞ்செய்து அதில் அவரை நன்கு வென்று வசப்படுத்துவீராக. (117)

துறந்தாரிற் பெரியோய், தமது நூலிற்கு அவரைக் கொண்டே வார்த்திகமும் (விருத்தியுரை) செய்விப்பீராக, போது போக்குதல் தவிர்மின்; தாங்கள் மரண காலத்தில் விசுவநாதர் போன்று எழுந்தருளினீர்; அத் தாரக மந்திரத்தை யுபதேசித்து என்னைக் கிருதார்த்தனுக்குவீராக. (118)

## சங்கரர் பட்டபாதருக்கருள் செய்தல்

நிமித்தமற்ற நிறைந்த கருணை யுடையோய், ஒரு முகூர்த்தப் போதளவு தேவரீர் இங்கு விளங்குவீராக; அத் துணைப்போதில் யோகீந்திரரின் உள்ளக் கமலத்தின் பாக்கியமாகிய தமது திரு வுருவத்தை நோக்குபவனாய் உயிர் துறப்பேன். (119)

எனக்கூறிய பட்டபாதருக்குப் பேரொளியாகிய சுயம் பிரகாசப் பிரமத்தை யுபதேசித்து, உள்ளும்புறம்புமுள்ள மோகத்தைப் போக்கி, தயாநிதியாகிய அச் சங்கரபக

வற்பாதர் விரைவில் விண் வழியாகவே மண்டனபண்டிதரின் மனைக்குச் செல்ல விரும்பினர். (120)

பின்னர், அப் பட்டபாதர் அன்போடு அவ் வுபதேசத்தை யகத்திற் கொண்டு, எதிகட்கிறைவராகிய சங்கர பகவற்பாதரால் அத்துவித தத்துவம் போதிக்கப்பட்டவராயும், ஆணவத்தை யறவே தொலைத்தவராயுமிருந்து, அப் பிரகாசத்தினாலேயே அத் தருணத்திலே பற்றனைத்தையு மறவிடுத்தவராய் வியாபக சின்மாத்திர சொரூபத்தை (முத்தியை) எய்தினர். (121)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கர திக்குவிசயச் சருக்கத்தில், சங்கரபகவற்பாதர்
வியாச முனிவரைத் தரிசித்த வியப்பை விதக்கும்
ஏழாஞ்சருக்கம்
முற்றும்.

லேறும்போது, மண்டன பண்டிதர் மனையை நோக்கிச் செல்லுங்கால், வழியில் அவரது பாங்கிமார்களைக் கண்டனர். (4)

அங்கு, நீரெடுக்கச் செல்கின்ற அப் பாங்கிகளை நோக்கி, பாங்கிமார்காள், மண்டனபண்டிதரின் வீடு இருக்கின்றதெங்கே ? என இத்துணையே வினவினர் ; அவர்களும் அவ் வற்புதராகிய சங்கரபகவற்பாதரை நோக்கிக் களிப்புற்றவராய், கீழ் வருமாறு விடை கூறினர் :— (5)

(மறைமொழி) தன்னுற் பிரமாணமோ? அல்லது, பிறிதொன்ருற் பிரமாணமோ ? என்னும் ஆராய்ச்சி வடிவ வாக்கியத்தை, கூண்டிலடைத்து வாசலிற்ருெங்குவனவாய இனிய பெண் கிளிகளும் யாண்டுப் பேசுகின்றனவோ, அதுவே மண்டன பண்டிதரின் மனை யென்றுணர்வீராக. (6)

மற்றும், பண்ணிய கருமமே பயன் கொடுக்கின்றதா ? அல்லது பரசிவன் கொடுக்கின்றனரா ? என்னும் வாக்கியத்தை, கூண்டிலடைத்துள்ள பெண் கிள்ளைகள் யாண்டு வார்த்தை யாடுகின்றனவோ, அதுவே மண்டன பண்டிதரின் மனை யென்றுணர்வீராக. (7)

(மற்றும்) இவ் வுலகு நிலைத்ததா? அல்லது, நிலையாமையதா ? என்னும் வாக்கியத்தை கூண்டிலடைத்து வாசலிற் ருெங்கவைத்துள்ள தத்தைகளும், யாண்டு ஒத்துரையாடுகின்றனவோ, அதுவே மண்டன பண்டிதரின் மனை யென்றுணர்வீராக. (8)

என, அப் பாங்கிமார்கள் கூறினவைகளை (வாக்கமுதை)ச் செவித் துளையாலருந்தி, பின்னர், அம் மண்டன

பண்டிதரின் மனைக்கு வெளிப்பக்கஞ் சென்று நோக்க (உள்ளில்) கபாடமடைத்திருப்பதைக் கண்டு, உள்ளே புகுதல் தமக்கு வருத்தமாமென்றெண்ணி, யோக வலியால் விண் வழி கொண்டேகி, (அவ் வீட்டின்) நடு முற்றத்திலிறங்கினார். (9)

இறங்கி, சங்கரபகவற்பாதர், இந்திரன் மாளிகை போன்றதும், காற்றுலசைந்து விளங்குங் கவின் கொடிகட்டியது மாகிய உலகிற்கோரணி யென்னும் மண்டன பண்டிதரின் மனை யனைத்தையுங் கண்டனர். (10)

## சங்கரபகவற்பாதர் மண்டன பண்டிதரைக் காணல்

(உள்ளிலும் மண்டனரிடஞ் செல்ல வழியின்மையின்) வீட்டின் உப்பரிகையின் நிழலால் மறைத்துள்ள சிற்றிட முள்ளதோர் சிறு மனையிற் புகுந்து, மண்டன பண்டிதரின் மருங்கிற் சென்று, கல்விப் பெருக்காலெழுந்த பல்வகைப் புகழ்களால் விளங்குகின்றவரும், கமல மலரிற் பிறந்தவனுக்கு ஒப்பாகியவரும், தவப் பெருக்கால் சைமினி முனிவருடன், சத்தியவதியின் புதல்வராகிய தபோநிதியையும் (வியாச பகவானையும்) விதிப்படியே, தென் புலத்தாருக்குப் பிண்டமிடுங் கருமத்தில் அழைத்து அவர்களது திருவடிக் கமலங்களை விளக்கிக் கொண்டிருந்தவருமாகிய மண்டன பண்டிதரைக் கண்டார். (11, 12)

அங்கு, யோகியிற் சிறந்த இச் சங்கரபகவற்பாதர், ஆகாயத்திலிருந்து இறங்கியவுடனே, ஆராதிக்கத் தக்க, வியாச முனிவர், சைமினி முனிவர், என்பவர்பால் அன்போடு சென்று வணங்கி அவர்களால் மகிழ்விக்கப்பட்டவராயினர். (13)

பின்பு, வான் வழியால் இறங்கியவரும், மாமுனிவர்களின் மருங்கிலிருந்தவரும், தத்துவ ஞானத்தையே, பூணூல், சிகை, என்பவைகளாகக் கொண்டவருமாகிய அச் சங்

கரபகவற்பாதரை நோக்கி, அவர் ஒரு துறவி யென்றுணர்ந்து, (தென் புலத்தார்க்குச் செய்யுங் கருமத்தில் முனிவு தோன்றலாகாதென்னும்) கரும காண்ட நூலைக் கைக் கொண்டவராயிருந்தும், அம் மண்டன பண்டிதர் முனிவுற்றனர். (14)

## சங்கரபகவற்பாதர் மண்டன பண்டிதரின் வாக்குவாதம்

அப்போது, எல்லை யற்ற முனிவு கொண்ட இல்லறத்திற்கீசனாகிய மண்டன பண்டிதருக்கும் தொல்லை யற்ற மனவெழுச்சி மிக்குள்ள துறவறத்திற்கீசராகிய சங்கரபகவற்பாதருக்கும், கீழ் வருமாறு முறையாக மேன்மேலும் கடாவிடைகள் நிகழ்ந்தன. (15)

மண்டன பண்டிதர் வினா :—எங்கிருந்து மொட்டை—(மொட்டையாயுள்ள துறவியே, நீ எம் மார்க்கத்திலிருந்து வந்தாய்)?

சங்கரபகவற்பாதர் விடை :—கழுத்திலிருந்து தலை மழிக்கப்பட்டது (கழுத்திற்கு மேலிருந்தே தலை மொட்டையா யிருக்கின்றது).

ம. ப. வினா :—எம்மால் நின்னை மார்க்கம் வினவப்பட்டது (நீ வந்தவழி யாதென வினவினேன்).

ச. ப. விடை.—மார்க்கம் என்ன சொல்லிற்று?

ம. ப. விடை :— மார்க்கம் உனது தாய் முண்டை என்கின்றது (நீ வழியையே வினவியதால் நின்க்கு அவ்வழியே, நினது தாய் முண்டையென்றது).

ச. ப. விடை.—மண்டன பண்டித, நீ வழியை யன்றோ வினவினாய்? அவ்வழி நினது தாய் முண்டையென விடை கூறிற்றோ? அங்ஙனமேயாம்; யான் வழியை வினவாமையால் வழி இம் மறு மொழியை எனக்குக் கூறுங் கொல்லோ (கூறாது)? (16)

ம. ப. வின :—அங்தோ! கள் பீதமோ (நின்னல் கள் குடிக்கப்பட்டதோ) ?

ச. ப. விடை :—கள், பீதமன்று (கள்ளோ, பசுமை நிறமுடையதன்று, வெண்மைய தாதலின்) நினைத்துப் பார்ப்பாயாக.

ம. ப. வின :—அதனுடைய வண்ணத்தை நீ யறிவை யோ (கள்ளினுடைய நிறம் நினக்குத் தெரியுமோ) ?

ச. ப. விடை :—ஆம், யான் வண்ணம், தாங்கள் சுவை (யானே, நிறத்தை மாத்திரம் அறிவேன் தாங்களோ, கள்ளின் சுவையையுமறிவீர்).

ம. ப. கூறல் :—மத்த: ஆனன் கலஞ்சமுண்போன் மாறிப் பேசுகின்றனன். (இவன் வெறியனுனன் ; விலங்கின் ஊன் தின்பவன் ; மாறுபாடாய்க் கூறுகின்றான்). மத்த :, என்றது வட மொழியில், உன்மத்தன் எனவும், என்னி லிருந்து, எனவும் பொருள் படும்.

ச. ப. கூறல்: —மத்த : என்னிலிருந்து கலஞ்ச முண் பவன் உண்டானன். எனவே, நின்னிலிருந்து கலஞ்சமுண் பவன் தோன்றினன், எனப்பட்டது ; இஃதுனக்கு ஒக்கு மென்க. (கலஞ்சம்=விடங்கலந்த வில்லால் அடிக்கப்பட் டிறந்த விலங்கின் ஊன்). (17, 18)

ம ப. வின :—பழுதாய மதியோய், கழுதையாலுஞ் சுமக்க முடியாத கந்தையைச் சுமக்கின்றனையன்றே ? உனக்கு முப்புரி நூலாலும், தப்பறு குடுமியாலும், (உண் டாகிய) பாரம் யாது ?

ச. ப. விடை :—தீ மதியோய், உனது அப்பனுலுஞ் சுமக்கலாற்றாத கந்தையை யான் சுமக்கின்றேன் ; முப்புரி நூலும், குடுமியும், ஒப்பறு வேத சுருதிக்குப் பாரமாயின.

(ஈண்டு, "எப் பகலில் ஆசை யொழிந்ததோ அப் பகலிலேயே வெளிச் செல்க," என்னும் மறை மொழியே துறவை விதித்திருத்தலின் இலிங்க சந்நியாசத்தையு மடைந்துள்ளேன் என்பது உட்கிடை). (19, 20)

ம. ப. கூறல் :—காப்பாற்ற வலி யின்மையால் கைப் பிடித்த மனைவியையும் விட்டு, சீடனையும், புத்தகச் சுமைகளையும் விரும்பியவனது பிரம நிட்டை வெளியாயிற்று.

ச. ப. கூறல் :—ஆசிரியன் தொண்டில் ஆலசியத்தாற் குரு குலத்தினின்று ஓடி வந்து, சிற்றிடையாளுக்குக் குற்றேவல் செய்பவனுடைய கரும நிட்டை வெளிப்பட்டது. (21, 22)

ம. ப. கூறல் :—நீ வனிதையர் வயிற்றிலிருந்து வந்தனை ; வனிதையராலே வளர்ந்தனை; அவர்களையே பழிக்கின்றாய், அந்தோ ! நினது செய் நன்றி கொன்ற தன்மை (யிருந்தவாறென்னே) !

ச. ப. கூறல் :—பெருமூட, எவளுடைய முலைப்பால் நின்னாற் குடிக்கப்பட்டதோ, எவளுடைய யோனியிலிருந்து நீ உண்டாயினையோ, அப் பெண்ணின், முலைகளைப் பிடித்தும், பகத்தில் இலிங்கத்தை நுழைத்தும், விலங்கைப் போன்று நலமுறுகின்றாயன்றோ ? அஃதெவ்வாறு ? (23, 24)

ம. ப. கூறல் :—சங்கர, நீ, அக்கினி காரியங்களை, முயன்றொழித்தோனாதலின் வீரனைக் கொன்ற தோடமுள்ளாய் (ஈண்டுத் தீக் காரியஞ் செய்யாது ஒழித்தோன் வீரன் என்னும் இந்திரனைக் கொன்றவனே யாகின்றான் என்பது சுருதி சம்மதமென்பதுணர்க).

ச. ப. கூறல் :—மண்டன பண்டித, நீ, பரமான்மாவை யுணராதோன் ஆதலின் ஆன்மாவைக் கொன்ற தோடமுடையவனாயிருக்கின்றாய் ( இதுவும் வேத முடிவின் சம்மதமாமென்பதுணர்க) (25, 26)

ம. ப. வினு :—சங்கர, நீ, வாயில் காப்பாளரை வஞ்சித்து விட்டு, கள்ளனைப் போன்று, உள்ளே வந்தனையே, அஃதெவ்வாறு?

ச. ப. கூறல் :—மண்டன, நீ, அதிதிகளுக்கு அன்ன மிடாது கள்ளன் போல் உண்கின்றனையே, அஃதெவ்வாறு? (27)

ம. ப. கூறல் :—கருமஞ் செய்யும்போது மூடனுடன் பேசே நான் இத்தருணம்.

ச. ப. கூறல் :— அந்தோ! எதி பங்கமாய்ப் பேசும் நின்னால் நினது அறிவு வெளியாக்கப்பட்டது (ஈண்டு எதி, என்றது உயிரீற்றுப் புணர்ச்சியாகிய ஒரு தளையின் முடிவு. அது, இங்கே, பேசே நான் என்றதில் புணராதொழிந்தமை காண்க. எனவே புணர்ச்சி யொழிந்த வாக்கியங் கூறலே, எதி பங்கமாம் ஆதலின் வழூஉச் சொற் கூறலால் அறியாமை வெளிப்பட்டதென்பது கருத்து). (28)

ம. ப. கூறல் :—எதி பங்கஞ் செய்ய முயன்ற எனக்கு, எதி பங்கமோர் தோடமாகாது.

ச. ப. கூறல் :—அற்றேல், எதி பங்கம், என்பதை, எதியினின்று பங்கப்பட, தோல்வியடைய என்னும் பொருட்டும் ஐந்தாம் வேற்றுமையை விரித்துரைத்துக் கொள்க. (29)

ம. ப. கூறல் :—சங்கர, பரப்பிரமம், எங்கே? தீய மதியினன் எங்கே? சந்நியாசம் எங்கே? கலியுகமெங்கே? நல்லுணவின் வேட்கையால் யோகிகள் தாங்கும் இவ் வேடத்தை யேற்றுக் கொண்டாய். (30)

ச. ப. கூறல் :—சுவர்க்கம் எங்கே? தீய வொழுக்க முள்ளான் எங்கே? தீ வேள்வி யெங்கே? கலியுக மெங்கே? புணர்ச்சி விருப்பால் கரும யோகிகளின் வேடத்தைக் கைக் கொண்டனை, எனக் கருதுகின்றேன், என்பதாம். (31)

## வியாசமுனிவர் மண்டனர்க்கு அறிவுறுத்தல்

முனிவுடனும், ஆணவத்தோடும், மண்டன பண்டிதர் இவ்வண்ணம் பேசுவதுடன் இன்னுமநேக வார்த்தைகளை யும் பேசும்போது, மன வெழிற்சியோடும், அழகுடனும், அதற்கதற்குச் சங்கரபகவற்பாதர் அரிய மறுமொழிகளைக் கூறுமிடத்து, அங்குள்ள சைமினி முனிவரோ, வியப்புடன் பேசாது பார்த்திருந்தனர் வியாசமுனிவரோ, மண்டன ரை நோக்கி, மைந்த, பயனற்ற தீய வார்த்தைகளைப் பேசு கின்றாய், ஈடணை யொழித்த ஆன்ம ஞானியாகிய துறவியை இவ்வாறு பேசல் ஆன்றோர்களுக்கு ஒழுக்கமன்று என் றனர். (32, 33)

மற்றும், வியாசமுனிவர், அவ் வார்த்தையைக் கேட்டு அடங்கியவரும், விதியை யறிந்தவரும், புகழ் மிகுந்தவரு மாகிய மண்டன பண்டிதரை நோக்கி “மண்டன, நீ, திருமாலே ஒரு அதிதியாய் வந்தனர் என வெண்ணி, விரைவில் இத் துறவியை விருந்தின் பொருட்டு அழைப்பா யாக,” என்று அறிவுறுத்தினர். (34)

பின்னர், சிறிது அடக்கமுடையராய், பயத்துடன், சாத்திரமறிந்த அம் மண்டன பண்டிதரும், ஆசமனஞ் செய்து கொண்டு வியாசமுனிவரின் ஏவலாற் சங்கரபகவற் பாத மகரிஷியை, “பகவ, இன்று எனது இல்லில் ஐய மேற்றுக்கொள்வீராக”, என விருந்துக் கழைத்தனர். (35)

## சங்கரபகவற்பாதர் மண்டனரை விவாதமாகிய பிட்சை யிரத்தல்

அதற்குச் சங்கரமுனிவரும் நன்மனத்த, யான், தம் பால் விவாதமென்னும் பிட்சையை விரும்பியே வந்தேன்;

அதுவும், ஒருவருக்கொருவர் மாணுக்கராதல் வேண்டும் என்னும் ஒட்டம் வைத்துத் தரல்வேண்டும் ; பொதுவான அன்பர்களிடம் பிட்சையில் விருப்பில்லை என்றனர். (36)

மற்றும், மறைமுடி மார்க்கத்தை மன்னுலகில் விரிப்பதைத் தவிர்த்து, எமக்கு மற்றது சிறிதும் பிரியப்படாது ; குடும்ப வெப்பிற்குக் குளிர் மதி போன்ற அது, வேள்விகளில் ஒருப்பட்ட தங்களால் முழுதுந் தள்ளப்பட்டது. அவ் வத்துவிதத்தையே, இப்போது புற மத வாதிகளெல்லோரையும் கீழே தள்ளிவிட்டு எவற்றினும் உயர்த்துகின்றேன் ; நீயும் அவ் வுத்தம மதத்தையே கைக் கொள்வாயாக ; அல்லது விவாதஞ் செய்வாயாக ; அல்லது, தோற்று விட்டேன் எனக் கூறுவாயாக என்றனர். (37, 38)

எதிகளில் மிக்கச் சிறந்த சங்கரபகவற்பாதர், பெரும் பொருளடங்கிய அருஞ்சிறு வார்த்தையைக் கூறவும், பெரும் புகழ் வாய்ந்த மண்டன பண்டிதர் அதைக் கேட்டு இஃது ஒரு புதிய அவமதிப்பா யிருந்தமையின் வியப்படைந்து, தமது கௌரவத்தின்மீதே யிருந்துகொண்டு, “ ஆயிரமுகங்களையுடைய ஆதிசேடனே வரினும், ஓர் காலும் இம் மண்டன பண்டிதன், “தோல்வி யடைந்தேன்,” எனச் சொல்லான். வேத சம்மதமாகிய கரும காண்டத்தை விட்டு, வியாச முனிவரும், நீயுங் கற்பித்த அத்துவித மதத்தில் விழவுமாட்டான் என்றனர். (39, 40)

ஓர் காலத்திலேனும், எம்மோடு வாதமிடும் பண்டிதருந் தோற்றுவரோ ? தருக்க மென்னுஞ் சுவை மலிந்த விவாதமாகிய கதையும் (கடா விடைகளால், மறுத்தல், நிறுவல், என்பவைகளை மேற்கொண்ட பல புலவர்களின் வார்த்தைப் பொது) ஓர் போதேனும் உண்டாதலுமாமோ ? என்று

இடை யறாது பெரு மகிழ்வோடிருந்த எமக்கு, அம்ம! இவ் வெற்றிப் பெரு விழா, தானாகவே வந்தது (யானே, வெல் வேன் என்பது கருத்து). (41)

இப்போதே, நம்மிருவருக்கும் விவாதமாங் கதை யுண் டாகுக; எமது சாத்திரப் பழக்கஞ் செய்ததாலுண்டாகிய பெரு வருத்தம் பயனை யடைக; மண்ணிடத்துள்ளவர், புத்த மிருதந் தானாகவே வந்து கிடைக்கின் கைக் கொள்ளாமலு மொழிவரோ? (42)

மதி மண்டலம் போற்றிகழுந் திரு மேனியோய், யான் கால காலனையும் இயல்பாகவே அடக்குவேன் (கரும காண்டத்தில் ஈசுரனை மறுத்துள்ளேனாதலின்); அத் தன்மையாகிய என்னிடத்தில் அன்னத்தின் இன்னிசைக் கூறுகளை யுடைய தமது வார்த்தைகள் (மிக்க இன் சுவை யின்மையின்) கலகத்தையே பெருக்குகின்றன. (43)

அங்ஙனமாயினும், அடாத மதியோரின் ஆணவக் காட்டைத் துணிக்கும் உறுதியாகிய கோடரி போன்றதும், சாத்திரங்களனைத்தையும் தன்னுளடக்கிக் கொண்டது மாகிய ஆற்றல் மலிந்த எமது வாக்கோ, உமது செவிக் கரு கிலும் செல்லாதென்பது உண்மையாகும். (44)

முனிவ, "விவாதமளிக்க உனக்கு விருப்புளதேல், ஐய மருந்துகின்றேன்," எனத் தம்மாற் கூறப்பட்டதன்றோ? அது மிக்கச் சிறியதாம்; என்னை? 'விவாதம், என்னுஞ் சொல்லைக் கேட்டன் மாத்திரத்தானே இரக்காமலே வாத மிடும் முயல்வுடையேனாதலின், இவ் வார்த்தை நெடு நாளாய் விரும்பப்பட்டதேயாம்; வாதமிடுவார் எவருமேயிலர். (45)

யான் விவாதஞ் செய்வேன்; இதிற் சிறிதும் ஐயப்படேன்; நம்மிருவரின் வெற்றி தோல்விகளைக் கண்டுரைப்பாரொருவருமிலர்; (அவரின்றெனிலோ ?) ஒருவரை யொருவர் வெல்ல வேண்டுமெனெ வாதமிடும் நம்மிருவருக்கும் நெஞ்சம் உலருதலே பயனென நேரும்; அஃதில்லாதொழிக. (46)

வாதமிடிலோ ? வாதி, பிரதி வாதிகளென்னும் நம்மிருவரின், பர பக்க, சுவ பக்கங்களை வரை யறுப்பவர் யாவர்? இருவரின் பிரதிக்ஞை யாது ? இருவரின் பிரதிக்ஞைகளுக்கும் பிரமாணம் எது ? உட்கருத்து யாது ? நடு நிலைமையர் யார் ? என்பவைகளைக் கூறுவீராக. யானோ ? இல்லறத்தில், மிக்கச் சிறந்தோன் ; தாமோ, பிச்சை யேற்பாருக்குப் பெரியோர் ; ஆகையால், நம்மிருவரின் வெற்றி தோல்விகளில், ஓட்டம் வைக்கற்பாலது ; பின்னர் நாமிருவரும் களிப்புடன் விவாதஞ் செய்வோம். (47)

சங்கரபகவற்பூச்சியபாதர் என்னோடு விவாதம் விரும்பினாராதலின், யான் இன்றே பெருந் தன்யனானேன்; விவாதமோ நாளை நடை பெறும்; இப்போது உச்சிக் காலத்திற் செய்யத் தக்கக் கருமத்தைச் செய்கின்றேன் என்று மண்டன பண்டிதர் கூறினர். அதைக் கேட்டுக் களிப்புற்ற சங்கரபகவற்பாதரும் அவ்வாறேயாகுக ; என நன்கு கூறிய போது, மண்டன பண்டிதர், வியாச முனிவரையும், சைமினி முனிவரையும் நோக்கி, "முனிவர்காள், நாளையே விவாதம் நடக்குமாதலின் தாங்களிருவரும், அதற்கு நடு நிலைமையராவீர்களாக," என வேண்டிக் கொண்டனர். (48, 49)

அதற்கு, மண்டன பண்டிதரின் மனைவியார், சரசுவதியவதாரமென வுணர்ந்த அவ் விரண்டு முனிவரும், மண்டன

பண்டிதரை நோக்கி, "கூரிய புத்தி யுடையார்களுக்குத் தலைவ, பண்டிதையாகிய நினது மனையாளையே நடு நிலைமைய ளாய் வைத்துக் கொண்டு விவாதத்தை நடத்துவாயாக" என்றார்கள். (50)

அதைக் கேட்டு, எடுத்துக் கொண்ட கருமத்தை யினிது செய்து முடிக்க வேண்டுமென்னும் வேட்கை யுடைய அம் மண்டன பண்டிதர் அவ் விரண்டு முனிவர் களாலுங் கூறியதை யேற்றுக் கொண்டு, முத் தீயைப் போன்று தெய்வ கதியால் வந்த சிறந்த அம்மூன்று முனிவர் களையும் ஆராதித்துப் பிட்சை பண்ணி வைத்தனர். (51)

பின்னர், ஐயமருந்தி அமர்ந்திருந்த அம் மூன்று முனிவர்களின், உண்ட களைப்புத் தீர, மண்டன மிசிரரின் மாணுக்கர்களான பிரமசாரிகளிருவர் அம் முனிவரின் மருங்கி னின்று வெண் சாமரம் வீசினர்கள். (52)

பின்னர், அங்கு கருமம் நடக்குமிடத்தில் அமர்ந் திருந்த நான்மறை முடியின் பொருளுணர்ந்த மூன்று முனிவர்களும் களிப்புற்றவர்களாகி, தம்மு ளொருவருக் கொருவர், இனிது சம்மதித்துக் கொண்டு, மண்டன பண்டி தரின் மனையினின்று வெளிச் சென்றார்கள்; வெளிப் போந்த, அம் மூவருள் இருவர் மறைந்தனர்; மூன்றா மவரோ, (சங்கரபகவற்பாதரோ,) களிப்பைத் தருங் கதம்ப, சால, தருக்களடர்ந்த இரேவா நதிக் கரையிலுள்ளதோர் தேவாலயத்தில் தங்கி யிருந்தனர். (53, 54)

இவ் வண்ணம், தத்துவ ஞானியாகிய சங்கரபகவற் பாதர், ஏனையோர்களுக்கு எளிதிற் கிடைக்காத அப் பரமா சிரியர்களின் தரிசனத்தைத் தெய்வ கதியாற் பெற்றுக் களித்

தவராய், அவர்கள் கூறின அமுதமொத்த அரிய வசனங்களைத் தமது மாணுக்கருக்குச் சொல்லிக் கொண்டு அன்றிரவை யங்குக் கழித்தனர். (55)

தியானிக்கத் தக்க பொருளைத் தெரிந்த முனிவரும், பெரியோருமாகிய அச் சங்கரபகற்பாதர், விடியற் போதில், செங் கமலப் பூவிற்குச் செழுங் கிளையாகிய இரவி வானிலெழுந்த விடத்து, செயற் பாலதான கருமங்களை நியமமாய்ச் செய்து கொண்டு, தமது மாணுக்கருடன், அணி பெற்ற மண்டன பண்டிதரின் மனையை யடைந்து விவாதஞ் செய்வதற்குப் புலவர் அவைக்களத்துட் புகுந்தனர். (56)

## உபய பாரதியார் விவாதத்திற்கு நடு நிலைமை யேற்றல்

சங்கரபகவற்பாதர் விவாதக் கழகத்திற்கு வந்த பின்னர், இல்லறக் கிழத்தியரும், கலைகளெல்லாவற்றிலுங் கவித்திறமை வாய்ந்தவரும், பிரசித்தி பெற்ற உபய பாரதியாரென்பவருமாகிய, தமது மனைவியாரை விவாதக் கழகத்திற்கு நடு நிலைமை வகிப்பவாராக ஏற்பாடு செய்து, விவாதமிட முன்னிற்கின்றவராயினர். (57)

கணவனையே கடவுளாகக் கொண்டவரும் கொழுநனுற் செலுத்தப் பட்டவருமாகிய அவ் வுபயபாரதி யம்மையார், அவ் விருவரின் ஏற்றத் தாழ்வை யூகித்துணர நேரே சரசுவதி தேவியாரே வந்தாற் போன்று புன்னகையுடன் நடு நிலைமையிலிருந்து விளங்கினர். (58)

## விவாதந் தொடங்கல்

அம் மண்டன பண்டிதர் விவாதமிட முன்னின்றதைக் கண்ட பேரறிவாளரும், பெரும் புகழுடையவரும், துறந்தாருக்கிறைவரும், பராபரத்தை யுணர்ந்தவருமாகிய சங்

கரபகவற்பாதர், சிவப்பிரமங்களின் அபேதத்தை மேற் கொண்ட தமது பிரதிக்ஞையை முன்னர், கீழ் வருமாறு செய்தனர் :— (59)

## சங்கரபகவற்பாதரின் துணிபுரை

உண்மை, யறிவு, ஆனந்த வடிவப் பிரமம் ஒன்றே, கிளிஞ்சில் வெள்ளியாகித் (வேறு வடிவமாகி) தோற்றுவது போல, தன்னைப்பற்றிய அஞ்ஞானத்தால் முழுதுமறைக்கப் பட்டு உலக வடிவாய்க் காணப்படுகின்றது ; அந்த, பிரம ஞானத்தால் உலகனைத்தும் மூலத்தோடுமொடுக்கப்பட்ட தனது ஆன்ம நிலையே, பிறப்பைப் போக்கக் கொள்ளுகின்ற பெரு முத்தியாம். இதில் பிரமாணமோ, மறை முடியே, என்பதாம். (60)

மண்டன, ஒருதலையாக யானே வெல்லுவேன், ஒரு வாறு யான் தோல்வி யடைவனேல், காவியாடை யுடன் கடுந் துறவையும் விடுத்து, வெள்ளாடை யுடுப்பேன் ; இவ் விவா தத்தில் வெற்றி தோல்விகளை இவ் வுபயபாரதியார் விளக்கு பவராவாராக. (61)

எதிகளிற் சிறந்த சங்கரபகவற்பாதர் இவ்வாறு பெருமை வாய்ந்த தமது பிரதிக்ஞையைச் செய்தனர்.

## மண்டன பண்டிதரின் துணிபுரை

இல்லறத்தாரிற் சிறந்த அவ் விசுவ ரூபரென்னும் மண்டன பண்டிதரும், தமது மதத்தை நிலைநாட்டுதற்குரிய பிரதிக்ஞையைக் கீழ்வருமாறு செய்தனர் :— (62)

சைதன்ய வடிவப் பரமான்மாவில் உபநிடதங்கள் (ஞானபாகங்கள்) பிரமாணங்களாகா ; அதில் (அதை

விளக்க) ஆற்றலிலாமையால், வாக்கியங்களாலறியப்பட்ட காரியப் பொருள்களனைத்திலும் வேதத்தின் முதற் பாகமே (கருமகாண்டமே) பிரமாணமாம்; (வேட்க. செல்க, செய்க, என்பன முதலிய) பிரசித்தமான பதங்களுக்குக் காரிய மாத்திரத்தின் கண்ணேயே சத்தியாமென நன்கு அறியப் படுதலின், கருமங்களாலே முத்தியாம்; அம் முத்தியும் ஈண்டு உயிர்களுடைய ஆயுளின் முடிவிலேயாம் என்பது எமது கொள்கை. (63)

இவ் வாதஞ் செய்வதில் யான் தோல்வி யடைவனேல், நீ கூறிய ஒட்டத்திற்கு மாறுபாடாகிய நிலையை யடைவேன் (வெள்ளாடை யுடன் இல்லறத்தையுமொழித்துக் காவியாடையை யுடுத்திக் கொள்வேன் என்பதாம்), நீ ஏற் படுத்திய எமது மனைவி (ஏற்றத் தாழ்வை) அறிவளேல், இது முடிவுறும். (64)

இவ்வண்ணம், சங்கரபகவற்பாதரும், மண்டன மிசிரரும், ஒருவருக்கொருவர் தோற்றவர், வென்றவரின் ஆசிரமதருமத்தை யடைவாராக என்னும் ஒட்டம் வைத்துக் கொண்டு நடு நிலைமை யறிவு மிகுந்த அவ் வுபயபாரதியாரை நடு நிலைமையிலிருக்க முடி சூட்டிவைத்து, வெற்றி நோக்குள்ள அவ்விருவரும் சல்பம் (பிற மதங் களைந்து தன்மதம் நிறுவல்) என்னும் விவாதந் தொடங்கினர். (65)

தொடங்கி, முழுதுமுணர்ந்த அவ்விருவரும் நாடோறும் முக்கியமாய்ச் செய்யத் தக்கக் கருமங்களை முடித்துக் கொண்டு ஒருவருக்கொருவர் பெரு விவாதஞ் செய்தனர்; இவ்வாறு, வெல்லல் வேண்டும் என்னும் மனத்தராய் விவாதத்திலமர்ந்துள்ள அவ்விருவருடைய கழுத்துகளில்,

அவ் வுபயபாரதி யம்மையார் மலர் மாலை ஒவ்வொன்றை யிட்டு, எவரது கழுத்தின் மலர் மாலை எக்கால் வாடி யதோ, அவர் தோல்வி யடைந்தார் என உறுதிப்படுவர், என்றுரைத்து வீட்டிலுள்ள காரியங்களில் விழைவுடைய அவ் வம்மையார் இல்லறத்தாருக்கும் (மண்டனருக்கும்) துறந்தாருக்கும் (சங்கரபகவற்பாதருக்கும்) உணவும், ஐய மும், உன்னிச் செய்ய, தமதில்லிற்குச் சென்றனர். (66, 67)

இங்ஙனம், அவ் விருவரும், அரிய வெற்றியிற் பெரிய இச்சையராய் மிகுந்த விவாதஞ் செய்யுங் கால், அவ்வாதத் தால் உறுதிப் படுவதைக் கேட்பதற் பொருட்டு தேவரிற் சிறந்தவர்களும் வாகனத்தமர்ந்தவர்களுமான பிரமன் முத லானோர்களும், அம் மண்டன பண்டிதரின் மனைக்குமேல் விண்ணில் நின்றார்கள். (68)

பின்னர், அவைக்கண்ணுள்ளார்களால் மங்கல மொழி கூறப் பட்டதும், தமது பக்கத்திற்கு மறைமுழுதும் பிர மாணமாகவுடையதும், இருவருக்கும் தம்முள் களிப்பைக் கொடுப்பதும், நாளுக்கு நாள் பேரின்பத்தை யளிப்பதும், அறிஞர் குழாங்களால் நெருங்குற்றதும், ஒருவரை யொரு வர் தோல்வி யுண்டாக்கும் மன வெழிற்சியைத் தருவதும், அங்ஙனமாயினும், போராடும் முனிவு நீங்கியதுமாகிய பெருவிவாதம் அவ்விருவருக்கு முண்டானது. (69, 70)

(இவ்வாறு நடந்து வருங்கால்) அவ் வுபயபாரதியார் நாடோறும் நடுப் பகலிற் சென்று, தமது கணவனுக்கு உண்ணுங் காலத்தையும், அதிதியாருக்கு ஐயமருந்தும் பொழுதையும் அறைவார்; இங்ஙனமாக ஐந்தாறு பகல் கழிந்தன. (71)

மற்றும், அவ்விருவரும், ஆதனத்தில் நிலைத்திருந்து கொண்டு, புன்னகையால் விரிந்த தாமரை மலர் போன்ற முகமுடையராயும், ஒருவருக்கொருவர் மிக்க வுறுதியான மறுமொழிகளை மறுப்பவராயும், வியர்வை, நடுக்கம், மேல் நோக்கல், இல்லாதவராயும், மறுமொழி கூறமாட்டாமையால் முனிவோடு இனிமையற்ற மொழி பேசாதவராயும் இருந்து, விவாதஞ் செய்தனர். (72)

பின்னர், துறவி வேந்தராகிய சங்கரபகவற்பாதர், மறுமொழி யென்னுஞ் சிறு பொடிகளைத் தேடிப் பார்க்கும் மண்டன பண்டிதரின் வலியை நோக்கி, அவர், தனது பக்கமனைத்துங் கலங்கப் பெற்றவரும், அறிஞராகிய சங்கர பகவற்பாதர் முன்னிலையில் மேலே செய்ய வேண்டிய ஆசங்கை தோற்றப்படாதவருமானாரென்பதறிந்து, மண்டனரை மேன் மேலும், ஆசங்கித்தனர். (73)

அதன் பின், தமது முடிபை நிறுவுதற்கு ஆற்றலற்ற அம் மண்டனர், மறை முடியின் வாக்கியங்களால மிக்கப் பிரசித்தியாகிய அத்துவிதீய முடிபை மறுக்கும் வேட்கையுடையராய், சங்கரபகவற்பாதரை நோக்கி, "துறவி வேந்தரே, தம்மால் நிருமலமான சீவப் பிரமங்களின் அபேதத் தன்மை கொள்ளப் படுகின்றதன்றோ? அவ்வாறாய பிரமாணம் அதில் யான் கண்டிலேன்" என்று, ஆசங்கித்தனர். (74, 75)

சங்கரபகவற்பாதர் :—உபநிடதங்களில் உத்தாலகர் முதலான பெரியார்கள், சுவேத கேது முதலிய மாணாக்கருக்கு, பரமான்மாவையே தமது ஆன்மாவாக உபதேசித்திருக்கின்றாரன்றோ? அதுவே பிரமாணம் என்றனர். (76)

மண்டனர் :—உபநிடதங்களிலுள்ள, தத்துவமசி, என்பது முதலான வாக்கியங்கள், சங்கரபகவற்பாத, வேதத்திலுள்ள, 'ஹூம்பட்', என்பது முதலிய வாக்கியங்களைப் போன்றே, செபிக்கில் பாவம் போக்கும் வாக்கியங்களேயாதலின், அவைகள் ஒரு பொருளையுங் கூறுவனவாகா என்றனர். (77)

சங்கரபகவற்பாதர் :—பேரறிஞ, 'ஹூம்பட்' என்பது முதலான வாக்கியங்களுக்கு, உண்மையாகவே ஒரு பொருளுமே காணப்படாமையின், பின்னர், இது செபிப்பதற்குதவும், எனக் கூறியுள்ளார் ; தத்துவமசி முதலான வாக்கியங்களுக்கு அபேதமாகிய பொருள் பிரசித்தியாகவே தோன்றுமிடத்து, செபத்திற்குதவு மென்றல் எவ்வாறு பொருந்தும் ? (78)

மண்டனர்:—துறவிகளுக்கிறைவ, உபாதிகளைத் தள்ளுவதினின்று, தத்துவமசி மா வாக்கியத்தால் சீவ, ஈசர், இருவருக்கும் அபேதந் தோன்றுமாயினும், வேள்வித் தலைவனை விதத்தல் வாயிலாக அவ் வாக்கியம் வேள்வி விதிக்கு அங்கமே யாகும். (79)

சங்கரபகவற்பாதர் :—வேள்விக்கு அங்கமாகிய, கடாக் கட்டுந்தறி முதலானவற்றை இரவி முதலான தேவதைகளாகத் துதித்து, கிரியைப் பிரகரணத்திலுள்ள, 'இரவி யூபம்' என்றற் றொடக்கத்து வாக்கியக் கூட்டம், அவ் விதிக்கு அங்கமாகின்றன ; அங்ஙனமாயினும், ஞானப் பிரகரணத்திலுள்ள தத்துவமசி முதலான வாக்கியங்கள் வேள்வி விதிக்கு எவ்வண்ணம் அங்கங்களாம் ? (80)

மண்டனர் :—ஆராதிக்கத் தக்கோய், மனம், அன்னம், கதிரவன், காற்று, என்பவைகளை, பிரமமாக உபாசித்தல்

வேண்டும் என்னும் வாக்கியங்கள், பிரமத்தின் வேறான வற்றில் பிரமமென்னும் புத்தியை விதிப்பன போன்று, தத்துவமசி முதலானவாக்கியங்களும், கருமங்கள் மிக்கப் பயனுடையனவாதற் பொருட்டுச் சீவான்மாவில் பரமான்மா வென்னும் புத்தியை விதிப்பனவாகற்பாலன. (81)

சங்கரபகவற்பாதர் :—நுண்மதியோய், உபாசிக்க, செய்க வேட்க, பார்க்க, என்பன முதலிய வாக்கியங்களில் க என்னும் வியங்கோள் வினைமுற்று விகுதி முதலியன, பிரம பாவனையை விதிப்பனவாக இருக்கின்றன; அவ்வாறு, தத்துவமசி, என்பதில் வியங்கோள் வினை விகுதியாகிய ககாரம், கேட்கப்படாமையின் அவ் வாக்கியம் விதி யென்பது (ஏவுதலென்பது) எவ்வாறு பொருந்தும்? (82)

மண்டனர்.—துறவிகளிற் சிறந்தோய், இராத்திரி சத்திர வேள்வியில், கீர்த்தியாகிய பயன் காணப் படுதலின் விதி, கற்பிக்கப்படுகின்ற தன்றோ? அதுபோன்று, "பிரமத்தை யுணர்ந்தோன் பிரமமே யாகின்றான்," என, முத்தியாகி பயன் பிரசித்தியாகவே காணப்படுதலின் "(பிரமத்தை விரும்பினோர் பிரமத்தையுணர்வாராக," என) விதி யொன்றைக் கற்பித்தல் வேண்டும், என்னை? தத்துவமசி முதலான வாக்கியங்களிலும் பிரமமாதல் வடிவ பலத்தைக் கூறும் சுருதியிருத்தலின் விதி கற்பிக்கற் பாலது என்பதே பொருத்தம். (83)

சங்கரபகவற்பாதர் :—அற்றேல், அந்தோ! சுவர்க்க முதலியன போன்று, பர முத்தியும் கருமத்தாற் றோன்றிய தாமதலின், அநித்தியமாகாதோ (ஞானமும் மனத்தின் கிரியை யாமெனிலோ, அங்ஙனமாயினும், ஞானம் பொருள் வசத்ததாமாதலால், அவ் வண்ணமாகா)? உபாசனையோ,

மனத்தின் தொழிலேயாமாதலின், செய்யவும், வேறோ ராற்றாற் செய்யவும், செய்யாதொழிக்கவுந் தக்கதேயாம் என்க. (84)

மண்டனர் :—நல்லாரின் மிக்கோய், அற்றேல், தமது பிரியமே போன்று தத்துவமசி வாக்கியம் உபாசனை விதியா மென்பது அமையாதொழிக; அங்ஙனமாயினும், சீவனுக் குப் பரமான்மாவுடன் ஒப்பாந் தன்மையைப் போதிப்ப தாகுக. (85)

சங்கரபகவற்பாதர் :—அவ் வண்ணமாயின், சைதன்ய மாந்தன்மையால் ஒப்பாந் தன்மையை யுணர்த்துகின்றதோ? அல்லது எல்லாமுணர்தற் றன்மை, எல்லாமாந் தன்மை முதலான குணத் தன்மையாலோ? முதலாவது பக்கமா மெனிலோ, அது பிரசித்தியேயாம் ஆதலின் உண்மையில் உணர்த்தற் குரியதே யன்றாம் (உணர்த்தலே பயனற்ற தென்க). இரண்டாவது பக்கமாமெனிலோ (அதுவே சீவப் பிரம அபேதமாமாதலின் அஃதமையாதென்னும்), தமது சித்தாந்தத்திற்கு மாறுபாடாந் தன்மை வரும். (86)

மண்டனர்.—முனிவரிற் சிறந்தோய், நித்தியமாந் தன்மை யொன்று பற்றியே ஒப்பாந் தன்மை கூறுகின்ற தாகுக; மற்றைய, அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட, ஆனந்தம், ஞானம், முதலான குணங்களால் ஒப்பாந் தன் மையைக் கூறுவதின்று; ஆகையால் இதில் முற் கூறிய தோடங்களில்லை (87)

சங்கரபகவற்பாதர் :—அறிஞ, இவ்வாறு, (ஒப்பாந் தன்மையைக் கூறுதல் பரமான்ம பரத்துவமே யாதலின்) பிரம பரத்துவத்தை யுணர்த்துக; அதில் எமக்குப் பொல் லாங்கென்னை? (சீவான்மா பரமான்மாவாக) தோற்றுத

தென்னேயோ வென்னும் ஆசங்கை, "அஞ்ஞான மறைப் பினல்," எனத் தம்மாலேயே நீக்கப்பட்டதாமாதலின் என்க. (88)

மண்டனர் :—சங்கரதேசிக, சைதன்யமாந் தன்மை யால் உலக காரணமாகிய பரமாவிற்குச் சீவனோடு அபே தங் கூறுக ; அங்ஙனமேல், சைதன்யத்திலிருந்து உலகந் தோன்றியதாமாதலின், (உலகிற்குக் காரணமாக) பிற மதத்திற் கூறப்பட்ட அணுக்கள், பிரகிருதி, முதலியன நீக்கப்பட்டனவாமன்றோ ? (89)

சங்கரபகவற்பாதர் :—அந்தோ ? இங்ஙனமாயின் (தத் துவமசி மா வாக்கியம் அபேதங் கூருதொழித்து ஒப்புத் தன்மையே கூறின்) உலகிற்குக் காரணமாந் தன்மை உனக் கொப்பாக இருக்கின்றது எனக் கூறியதாகும் ; அது நீ யாஞய் என்பது நின் மதத்தில் இல்லாததாய் விடும் ; மற்றும், உலகிற்குக் காரணத்தைக் கூறும் உபநிடத வாக்கி யத்தில், "அது எண்ணிற்று," எனக் கூறப்பட்டிருத்த லால் (சேதனத்திற்கே எண்ணுதலென்பது பொருந்து மாற்ருல்) சடத்தன்மை (சடங்காரணமா மென்னும் ஆசங்கை) முழுதுமொழிதலின் மறித்தும் ஆசங்கிப்ப தற்கே யிடமில்லை. (90)

மண்டனர் :—அற்றேல், அவ்வாருயினும், இத்தத் துவமசி, என்னும் வாக்கியத்திற்கு அபேதத்தை யுணர்த் துந் தன்மை, முதன்மைய தென்னும் பிரத்தியட்ச மாகிய உண்மை யுணர்வால், (நான் ஈசனல்லேன் என்னுங் காண்டலளவையாற்றேன்றும் ஞானத்தால்) கேடைத லின், அபேதத்தை யறிவுறுத்துந் தன்மை அமையாதா

மாதலின், "தான் ஓதுவது ஓதற்பாலது," என்னும் ஓதும் விதியைத் தழுவி தத்துவமசி வாக்கியம் செபித்தற்கு உரியதாமெனவே கொள்ளற்பாலது. (91)

சங்கரபகவற்பாதர் :—இந்திரியத்தால் அப்பேத வுணர்வு தோன்றுமேல், அபேதங் கூறுஞ் சுருதி வாக்கியத்தைக் கெடுக்கும் பேதத்துடன் இந்திரிய சம்பந்தமே யின்மையின் பேத வுணர்வு இந்திரியத்தாற்றோன்றாமையால் விரோதமென்பது யாண்டையதாம் ? (92)

மண்டனர் :—கூரிய மதியோய், "ஈசனில் யான் அன்னியன்," எனத் தோற்றலின் பேதம் சீவனுக்கு விசேடணமானதால், பேதத்திற்கும் இந்திரியத்திற்குஞ் சம்பந்தம் இன்றெனினும் சீவனுடன் இந்திரியத்திற்குச் சம்பந்த முண்டாகுக (கடாபாவமுடைய பூதலம் என்புழி, விசேடண வுணர்ச்சிக்கு, விசேடியத்தின் சம்பந்தமே காரணமாதலைப் போன்றதாமெனக் காண்க). (93)

சங்கரபகவற்பாதர் :—கேவலம் விசேடணத்திற்குச் சம்பந்தங் கூறிலோ, (சுவரால் மறைக்கப்பட்ட குடாபாவமும் பூதலத்திற்கு விசேடண மாதலின் பிரதியட்சமாதல் வேண்டும் என்னும்) அதி வியாப்தித் தோடம் வருதலின், அஃது உடன்பாடில்லை ; மற்றோ ? (விசேடணத்தையுடையதின் சம்பந்தமென்றே கொள்ளல் வேண்டும் ; கொள்ளுங்கால்) விசேடணமாகிய பேதாசிரயத்தில் (சீவான்மாவினிடத்தில்) இந்திரிய சம்பந்தம் உள்ளதாகக் கொள்ளல் வேண்டும், அவ்வாறு கொள்ளிலோ, ஆன்மாவிற்கே சம்பந்த முடைய தன்மை ஈண்டில்லை, (உண்மையாய் நோக்கிலோ, அதிகரணத்திற்கும், இந்திரியத்திற்கும், உள்ள சம்யோக சம்பந்தம் விசேடண ஞானத்திற்குக் காரணமேயர்கா ;

என்னை? செவித் துளையை ஆகாயமென, பிறர் கொள்ளலின், ஆண்டுத் தனக்குத் தன்னுடைய சம்பந்தமென்பதே பொருந்தாமையின் ஒலியினபாவம், செவியாற் கேட்கப்படாமை வரும் என்பது காண்க). (94)

மண்டனர் :—பேதத்திற்கு ஆசிரயமாகிய ஆன்மாவிற்கும், இந்திரியத்திற்கும், சம்பந்தம் பொருந்ாதெனச் சாற்றியதுமொரு சாமர்த்தியமாமோ? என்னை? ஆன்மாவும், மனதும், திரவியமாடாதலின் (ஒரு பொருளாமாதலின்) அவைகளுக்குச் சம்பந்தத்தை யுடையதாந் தன்மை உள்ளதேயாம். (95)

சங்கரபகவற்பாதர் :—புணர்ச்சி யுடையோய், ஆன்மா, மகத்தாயிருக்கினும், அல்லது அணுவாயிருக்கினும், இவ்விருவகை பற்றியுஞ் சம்பந்த முடையது என்பது பொருந்தாது, என்னை? அவயவமுடைய பொருளுக்கே அவயவமுடைய பொருளுடன் சம்யோக முடையதென்பது உலகிற் காணப்படுதலின் என்க (ஈண்டுப் புணர்ச்சியுடையோய், என, விளித்தலால் மனைவி முதலியவைகளில் நுகர்ந்திருக்கின்றாய், ஆதலின் இது தள்ள முடியாதெனக் குறிப்பித்தமை காண்க). (96)

சங்கரபகவற்பாதர் :—இதுகாறும், மனதை இந்திரியமென்பது கொண்டு, பேதத்துடன் இந்திரியத்திற்குச் சம்பந்தமில்லை யென மறுத்தோம்; ("இந்திரியங்களினும் விடயம் மேம்பட்டது, விடயங்களினும், மனது மேம்பட்டது," என்றற்றொடக்கத்து வாக்கியங்களை நோக்கில்) உண்மையாய், மனம், இந்திரியமே யன்று, கண் முதலியவைகளுக்கு அநுகூலமாயிருத்தலின், விளக்கு முதலியன

போல (ஈண்டு இவ் வநுமானத்தால் மனம் இந்திரியமன்றென உறுதிப் படுத்தியது காண்க). (97)

மண்டனர் :—பேத வுணர்ச்சி, இந்திரியத்தாற் றோன்றிய தென்பது ஒழிக; அங்ஙனமாயினும், யோகின், அது சாட்சி வடிவமேயாம்; அதனுடன் விரோதமாதலின் தத்துவமசி வாக்கியம், சீவப்பிரம அபேதத்தைக் கூறுவதில் எவ்வாறு பிரமாணமாம்? (98)

சங்கரபகவர்பாதர் :—சாட்சியோ, அவித்தையுடன் கூடிய ஆன்மாவிற்கும், மாயையுடன் கூடிய மகேசனுக்குமுண்டாகும் (நான் ஈசனலன், என்னும்) வேறுபாட்டை விளக்குகின்றது; சுருதியோ, அவ்விரண்டின் (சீவேசர்களின்) சுத்தங்களுக்கு அபேதத்தைப் போதிக்கின்றது. பேதம் ஒரு விடத்திலிருக்கின்றது, அபேதம் ஒரு விடத்திலிருக்கின்றது, ஆதலின் விரோதமின்று. (99)

அல்லது, விரோதமுளதாகுக; ஆயினும், முதலாவது முயன்றவலிவின்றிய காண்டலளவையே, ஈற்றில் முயன்றவலியுள்ள ஆகமப் பிரமாணத்தாற் கேடுறும்; என்னை? உலகில் பிரசித்தியாதல் பற்றியும், வைதிகத்தில், அவியைத் தாங்குதல் நழுவியதற்குப் பரிகாரம் வகுத்திருக்கின்ற நியாயத்தாலுமா மென்க. (100)

(இனி, உலகிற் பிரசித்தி யென்றதோ, முன்னருண்டாகிய இது வெள்ளி, என்னு முணர்வு, பின்னர்த்தோன்றிய இது கிளிஞ்சில், என்னுமுணர்ச்சியாற் கேட்டைதலேயாம்; வைதிக நியாயமோ, சாம மறை பாடுவோனாகிய வேள்வி யாற்றுவானொருவன், வழுவடையில், தட்சணையேயில்லாமல் மற்றொரு வேள்வி செய்வித்தல் வேண்டும், என்

பது விதி; பிரதி கர்த்தன் என்னும் வேள்வி செய்விப்போன் மற்றொருவன் வழுவடையின், தானே அவன் தட்சணை யனைத்துங் கொடுத்து மற்றொரு வேள்வி செய்வித்தல் வேண்டும் என்பதும் விதியாம். இதில் இவ்விருவருமே நழுவுவரேல் செயற்பாலது யாது என, ஆசங்கை நிகழ்ந்துழி, முதலாவது விதி விதிக்குங் கால், இரண்டாவதாகிய விரோத விதி உதிக்காமையானும், இரண்டாவது விதி தோன்றியபோது முதல் விதியாகிய விரோதி தோன்றினமையாலும், பின்னருண்டாகிய வலிவுடைய விதியே, முன்னர்த் தோன்றிய வலியற்ற விதியைப் பாதித்தது; ஆகையால் இரண்டாவதாகிய பிராயச்சித்த விதியே அநுட்டிக்கற் பாலதாம் என உறுதிப்படுத்தலாம்). (101)

மண்டனர்:—துறந்தார்க்கிறைவ, இவ்வான்மா, பிரமத்தின் பேதத்துடன் கூடியது, முழுது முணர்தற்றன்மையில்லாததால், குட முதலியன போன்று, என்னும் அநுமானத்தால் அபேதங் கூறுஞ் சுருதி பாதிக்கப் படுகின்றது. (102)

சங்கரபகவற்பாதர்:—ஈண்டு உறுதிப்படுத்தும் பேதம், உண்மையான்தா? அல்லது, பொய்மையதா? முதலாவதாமெனிலோ, திட்டாந்தங் கேடுறும்; (சத்தியமாகிய பேதம் குட முதலியவைகளில் இன்மையால்) அறிஞ, இரண்டாவதாமெனிலோ, எம்மாலுங் கொள்ளப்பட்டதே; ஆகையால் அது துணியப்படுவதன்றாகும்; துணியப்பட்டதையே துணிவுறுத்துவதென்னுந் தோடம் இவ் வநுமானத்திலிருந்தமை காண்க. (103)

மண்டனர்:—யோகின், தனது ஞானத்தால் (பிரம ஞானத்தால்) பாதிக்கப்படாத (கெடாகாத) பேதத்தோடு

கூடியது என்பது துணிபொருளாம் (சாத்தியமாம்) குட முதலிய திட்டாந்தங்களிலோ, அஃதிருக்கின்றது; நின்றல், பிரம ஞானத்தாற் பாதிக்கப்படாத பேதமொன்று உண்டெனக் கொள்ளப்படாமையின், இஃதிலோர் தோடமுமின்றும் (ஈண்டு, பிரமம், தனது ஞானத்தாற் பாதிக்கப் படாத பேதத்தை யுடையது; பொருளானதால், குடம் போல், என்பது அநுமானமாதல் காண்க, இவ்வாறாய வழி பிரமம், சீவனது பேதத்திற்கு இடமாம் என்பது பெறப் பட்டது; பெற்றுழி, சீவனுக்கும் பிரமத்திற்கும் பேதம் பெறப்பட்டமை காண்க). (104)

சங்கரபகவற்பாதர் :—அற்றேலஃதாகுக. இவ்வநுமானத்தில், 'தனது' என்றதால், சுக முதலியவைகளோடு கூடிய ஆன்மா கொள்ளப்படுகின்றதா? அல்லது, சுக முதலியவைகளின்றிய ஆன்மா கொள்ளப்படுகின்றதா? முதலாவது பட்சமெனிலோ, எமக்கும் அதுவே உடன்பாடாம் (சகுணப் பிரம ஞானத்தாற் பேதம் நீங்காமையினென்க.) இரண்டாவது பட்சமெனிலோ? மறித்தும் உனக்கு திட்டாந்தக்கேடாகும்; (நிர்க்குணப் பிரம ஞானத்தாற் பேதமனைத்துமே நீங்கலின் குடத்தில் பேதமுள்ளதென்றல் அமையாமையின்). (105)

மண்டனர் :—ஈண்டு முற் கூறிய அநுமானத்தில், தனது ஞானத்தாற் பாதிக்கப்படாதென்பதற்கோ? உபாதியில்லாத பேத முடைமையே சாத்தியமாம் என்பது கருத்து; சீவேசுரரின் பேதமோ, உபாதியாலானதென்பது நினக்குப் பிரியம்; குடம், ஈசுரன், என்னுமிரண்டின் பேதம் நிருபாதிகமேயாம் (இனி மண்டனர் மதத்தில், குடம், ஆடை, என்பவைகளின் பேதமும், சீவேசுரரின்

பேதமும், நிருபாதிகமே யாம் ஆன்மஞானத்தாற் பாதிக்கக் கூடாமையின் என்ப துணர்க). (106)

சங்கரபகவற்பாதர் :—குடத்திற்கும் ஈசுரனுக்குமுள்ள பேதத்திலும் அவித்தையே உபாதியாம். அஃதொழிந் தும், உனது அநுமானத்தில் சடத்தன்மை உபாதியாம்; மற்றும், ஆன்மா, பிரமத்தினும், அபேதமாம், சைதன்ய மானதால், பரமான்மாவைப் போல, என்னும் அநுமான மும் ஈண்டுள்ளதால், நின்னுடைய அநுமானத்திலுள்ள ஏது, சற்பிரதிபக்க ஏதுவாம்; (விரோதியாகிய மற்றொரு ஏதுவை யுடையதாம்; ஈண்டு உபாதியென்றது, துணி பொரு ளுடன் வியாபித்து ஏதுவில் வியாபியாததுவாம்). (107)

மண்டனர் :—தருமியினுடைய பிரத்தியட்ச ஞானத் தால் ("நான் சீவனுயிருக்கின்றேன்," என்னுந் தருமி யாகிய சீவனது காண்டலளவை யுணர்ச்சியால்) பாதிக்கப் படாத பேதம், பிரமத்தின் கண் சாதிக்க வேண்டு மென் பது எமது விருப்பம்; பிரமஞானத்தாற் சீவ பேதம் கெடு கின்றதென, உன்னுற் கொள்ளற்படுகின்றது; குட முத லிய தருமி ஞானத்தாலோ, அது பாதிக்கப்படாததேயாம்; (ஈண்டுப் பந்தம் நீங்கிய விடத்து, பிரமம், சீவனைப் பிரதி யோகியாக உடையதும், தருமி ஞானத்தாற் பாதிக்கப்படா ததுமாகிய பேதமுடையது, பந்தமின்மையால், குட முத லியன போல, என்பது அநுமானமாதலுங் காண்க; குட முதலிய தருமி ஞானத்தால், பேதம் பாத்தியமாகாதென் பது நினக்குஞ் சம்மதமேயாம் என்பது மண்டனர் கருத் தாம்). (108)

சங்கரபகவற்பாதர் :—(ஆண்டுத் தருமி ஞானத்தாற் பாதிக்கப் படாததென்றது) எல்லாத் தருமிஞானத்தி

னும் பாதிக்கப்படாமையா? அல்லது, யாதானுமோர் தருமி ஞானத்தாற் பாதிக்கப் படாமையா? குட முதலியவை களிலும், பிரமத்தின் கண்ணும் இருக்கும் பேதம் ஒன்றே யாமாதலின் முற் கூறிய தோடம் உறுதிப் பட்டதாயிற்று (இனி குடத்தின் கண்ணுள்ள சீவபேதமும், தனது தருமி யாகிய பிரம ஞானத்தாற் பாதிக்கப் படுமென்பது உடன் பாடாமாதலின், எல்லாத் தருமி ஞானத்தாலும் பாதிக்கப் படாததென்பது, முழுதும் பொருந்தாததேயாம். பேதம், வடிவினும் வேறென்போர் மதத்தில், குட முதலியவைகளி லும், பிரமத்தின் கண்ணும், ஆன்மாவின் பேதம் ஒன் றேயாமாதலின், தருமியாகிய குட ஞானத்தாற் பாதிக்கப் படாத சீவ பேதம், பிரமத்தின் கண் உளதாமென்பது எமது உடன்பாடாதலின் என்க. தருமி, என்பதால், பிர மம், சீவன், குடம் முதலியன கொள்ளக்கிடந்தமை காண்க). (109)

அங்ஙனமாயினும், ஆண்டுத் தருமி, என்னும் பதத்தால், நிர்க் குணத்தைக் கூறல் வேண்டு மென்னும் விருப்பமா? அல்லது சகுணத்தைக் கூறவேண்டு மென்னும் விருப்பமா? இரண்டாவது பட்சமா மெனிலோ? அஃதமையாது; என்னை? அதன் ஞானத்தால் பேதம் பாதிக்கப்படா தென் பதே எமக்கும் சம்மதமாமாதலின்; முதலாவது பட்சமா மெனிலோ, அந்த நிர்க்குணப் பொருள் அறியப்படாத தாகவே, 'பட்சமாம்' (துணி பொருட்கிடம்) எனக் கொள் ளிலோ, ஆசிரயாசித்தி (பற்றுக் கோடு பெறாமை) என் னுந் தோடமாம் (விண் மலர் நாற்றமுடைத்து என்பது போன்றே, அறிவுக்கெட்டாத சுத்த சைதன்யத்தில் பேதத் தைச் சாதித்தலால் என்பது காண்க); அஃதறியப்பட்டதே யாமெனிலோ, சீவனுக்குப் பரமான்மாவுடன் சுருதியில்

அபேதம் பெறப்படுதலின், தருமி யுணர்ச்சியைத் தோற்று விக்கும் தத்துவமசி முதலிய பிரமாணங்களின் விரோதம் வரும். (110)

மண்டனர் :—சுவாமின், அற்றேலஃதாகுக, "இரண்டு புள் இனிது கூடிக் கொண்டிருக்கின்றன," என்றற்றொடக்கத்துச் சுருதி, கரும பயனை நுகர்தல், நுகராமையை யுடைய அச் சீவேசருக்குப் பேதங் கூறுதலால், அது அபேதங் கூறுஞ் சுருதியைப் பாதிப்பதாகுக. (111)

சங்கரபகவற்பாதர் :—அறிஞ, கரும காண்ட முணர்ந்தோய், காண்டலளவையாற் பெறப்பட்ட மாறுகிய பயனைக் கொடுக்கும் (துன்பந் தரும்) சீவேசர் பேதத்தில், பேதங் கூறுஞ் சுருதி பிரமாணமாகா; பிற என்னையேல்? அருத்த வாதம், தன்னாற் கூறப்பட்ட பொருளில், பரத்துவமில்லாத (சிறப்பெனக் கூறுங் கருத்தில்லாத) தாம் அவ்வருத்த வாதங்களனைத்தும், தாங் கூறுகின்ற பொருளிலும் பிரமாணங்களாமென்பதும் வரும் (அருத்த வாத வாக்கியங்களைப் போன்றே, பேதத்தைக் கூறுஞ் சுருதி வாக்கியங்களுக்கும், பேதத்தில் பிரமாணமாந் தன்மை யில்லை; மற்றென்? அபேதத்தைத் துதித்தல், அல்லது பேதத்தைப் பழித்தல் கருத்தாம் என்பது இரகசியம்). (112)

மண்டனர் :—மிருதியிற் பிரசித்தமாகிய அபேதப் பொருளைக் கூறும் வாக்கியத்தை, மிருதி வாக்கியத்திற்கு மூலமாகக் கொண்டமையால் எவ்வாறு பிரமாணமாமெனக் கொள்ளப் படுகின்றதோ, அவ்வாறே பிரத்தியட்சத்தாற் பெறப்பட்ட பேதத்தைக் கூறும் வாக்கியங்களும், பேதத்திற்கு மூலமாந் தன்மையால் பிரமாணமேயாம். (ஈண்டுக் கீதையில், "தேகமனைத்திலுமுள்ள தேகிகளும் யானே

யென் றுணருதி'' எனக் கூறியுள்ள வாக்கியத்தைத் தழுவிய தத்துவமசி மா வாக்கியம் பிரமாணமாதல் போன்று பிரத்தியட்சத்தைத் தழுவிய பேதத்தைக் கூறுஞ் சுருதியும் பிரமாணமாமென்பது கருத்தெனல் காண்க). (113)

சங்கரபகவற்பாதர் :—மிருதி கூறும் பொருளில் அதற்கு மூலமாகுந் தன்மையால், சுருதி பிரமாணமாமெனச் சுருதியுணர்ந்தவர்களாற் கொள்ளப்படவில்லை. மற்றே? (அறியாத பொருளை யறிவித்தலாற் பிரமாணமெனக் கொள்ளப் படுகின்றது) ஆகையால் சுருதிப் பொருளை யுணராத அறிவிலிகளால் அறியப்பட்ட சீவேச பேதத்தில் அது பிரமாணமா மென்பதெங்ஙனம்? (114)

அஃதன்றியும், இதுகாறும், அப் பேத சுருதி, சீவர், ஈசர், என்னுமிருவரையுமெடுத்துக் கூறுகின்றதெனை உடன்பட்டு மறு மொழி கூறினோம். உண்மையிலோ, அச் சுருதி, புத்தியினின்றும் புருடனை வேறு படுத்தி இப் புருடனுக்குப் பந்தங்கள் யாவும் எந்த நாளுமிலையென்றே போதிக்கின்றது (பேதத்தைப் போதிக்கின்றதில்லை). (115)

மண்டனர் :—ஆராதிக்கத் தக்கோய், இச் சுருதி ("இரண்டு புள் ளினிது கூடிக்கொண்டிருக்கின்றன," என்றற்றொடக்கத்துச் சுருதி) சீவர், ஈசர், என்பவர்களைக் கூறாது விடுத்து, புத்தி, சீவன், என்னுமிரண்டையுங் கூறுமிடத்து (புத்தியாகிய) சடத்திற்கு நுகர்வோன் தன்மை பகர்ந்ததாகும்; அங்ஙனமாயினோ, புசிப்போன் என சடத்தைக்கூறியது மாறு பொருளாமாதலின்) அது பிரமாணமாவதெங்ஙனம்? (116)

சங்கரபகவற்பாதர் :—இவ் விஷயத்தில், யாம், உன்னால் வினவுவதற்கு உரியேமல்லேம்; என்னை? அந்தப் பைங்

கிரச இரகசிய மந்திரமே, "புத்தியே போகத்தைப் புசிக்கின்றதென்றும், புருடன் நோக்கிக் கொண்டிருக்கின்றான்" என்றும் விரித்துரைக்கின்றது என்க (ஈண்டு "அவ் விது சத்துவம் எதனாற் பார்க்கப்படுகின்றது" எனவும், "இவன் உடம்பின் பாங்கரிலிருந்து உற்று நோக்குபவன்; இவன் உடம்பை யுணர்வோன்; இவ் விருவரும், சத்துவம் க்ஷேத்திரக்ஞன், என்பவர்கள்" என்பது பைங்கிரச இரகசிய மந்திரமாமென்பதுணர்க). (117, 118)

மண்டனர் :—பைங்கிரச இரகசிய மந்திரத்தில், சத்துவம், என்றது சீவன்; க்ஷேத்திரக்ஞன் என்றது ஈசன்; ஆகையால், பைங்கிரச இரகசியங்கூறிய வாற்றாலும், இம் மந்திரத்திற்கு வேறு பொருளை மேற்கொள்ளுந் தன்மையோ, கிடையாது. (119)

சங்கரபகவற்பாதர் :—அறிஞ, "அவ் விது" என்றற் றொடக்கத்து வாக்கியத்தால், சத்துவம், என்னும் பதத்திற்கு, புத்தியில், சத்தி விருத்தி நன்கு தெரிவிக்கப்பட்டிருக்கின்றது; க்ஷேத்திரக்ஞன் என்னும் பதத்திற்கும், தேகியாகிய திருஷ்டாவினிடத்தில், சத்தி விருத்தி காட்டப் பட்டுள்ளது. (120)

மண்டனர் :—யோகின், அம் மந்திரத்தில், எதனால், என்பதனால், கனவைக் காணுஞ் செய்கைக்குக் கருத்தன் சொல்லப்படுகின்றான்; அவனே, சீவனேயாவன்; க்ஷேத்திரக்ஞன், என்பதாற் கூறப் படுபவனோ? கனவைக் காணும் எல்லாமுணர்வோனாகிய பரசிவனே யாவன். (121)

சங்கரபகவற்பாதர் :—கூரிய மதியுடையோய், உடம்பை யுணர்வோன், என்னும் வினைமுற்றாகிய அன் விகுதியாற்

கருத்தன் கூறப்பட்டான் ; எதனால், என்பதிலுள்ள மூன்றாம் வேற்றுமை காரணத்தின் கண்ணே உடன்படற்பாலது. மற்றும், நோக்குவோனை, தேகி என, விசேடித்துக் கூறலால், அவன் எவ்வாறு ஈசனாவான் ? (122)

மண்டனர் :—யோகின், தேகி என்பதை, தேகத்திலுள்ளான் என விரித்துக் கொள்ளக் கிடத்தலின், 'தேகி,' என்னும் பதத்திற்கு, எல்லாத் தேகங்களிலும் இருப்பவன் என்னும் பொருள் கொள்ளுங்கால், எங்கும் நிறைந்துள்ள ஈசன், தேகி என்னும் பதத்திற்குப் பொருளாகான் என்பதெவ்வாறு ? (123)

சங்கரபகவற்பாதர் :—விண் எங்கும் நிறைந்திருக்கின்றது ; அது போன்றே தேகத்திலும் இருப்பதாம் ; அத்துணையே கொண்டு, வானை, தேகி, எனக் கூறுவார் ஒருவருமிலர் ; அங்ஙனமே, ஈசனும் எங்கும் நிறைந்துள்ளான் ஆகையால், தேகத்திலு மிருக்கின்றான். தேகத்திற்குப் புறம்பிலு முள்ளான்; அத்துணை பற்றியே அவனை, தேகி, என்னும் பதத்திற்குப் பொருளாவன் என்பதெவ்வணம் ? (124)

மண்டனர் :—[117-வது சுலோகத்திற் கூறியதையே ஈண்டும் எண்ணுகின்றார்.] இம்மந்திரம், சீவர், ஈசர், என்பவர்களைக் கூறாது விடுத்து, புத்தியையும், புருடரையுங் கூறுமாகில், நுகர்கின்றது, என்பதாற் பெறும் போக்தாவாந் தன்மையைப் புத்தியாகிய சடத்திற்குப் புகன்றதேயாகும் ; அவ்வண்ணமாயினோ, (மாறுபட்ட பொருளைக் கூறுவதால்) அவ் வாக்கியம் எவ்வணம் பிரமாணமாகும் ? (125)

சங்கரபகவற்பாதர் :—சூடற்ற இரும்பிற்குத் தீயுடன் சேர்தலால் சுடுந் தன்மை காணப் படுகின்றதன்றோ? அவ்வண்ணமே, சடமாகிய புத்திக்கும், சைதன்யம் பிரதிபிம்ப வடிவமாய்ப் பிரவேசித்தலாற் புசிப்போனுந் தன்மை பொருந்தும். (126)

மண்டனர் :—"பருதியும், பிரதி பிம்பமும், மிக்க வேறுபட்டிருப்பது போன்று, சீவன், ஈசன், என்பவர்களும் மிக்க வேறுபாடுடையவர்களே யாவர்," என்றற்றொடக்கத்து கடோப நிடதச் சுருதி வாக்கியம் அபேதம் போதிக்குஞ் சுருதி வாக்கியத்தைப் பாதிப்பதாகும். (127)

சங்கரபகவற்பாதர் :—வியவகாரத்தாற் பெறப்பட்ட பேதத்தை யெடுத்துக் கூறும் அச் சுருதி வாக்கியம், பாரமார்த்திகமாக அபேதத்தை மேற்கொண்ட சுருதியைப் பாதிக்கமாட்டாது; இவ் வபேதத்தைக் கூறுஞ் சுருதியோ, அறியப்படாத பொருளை யெடுத்துக் கூறுவதால் ஆற்றல் மிக்குடையது; ஆகையால், இதுவே, நீ கொண்டதற்கு மாறாக (அறியப்பட்ட பேதத்தை யெடுத்துக் கூறும்) பேத சுருதியையே பாதிக்கும். (128)

மண்டனர் :—துறந்தார்களுக்கிறைவ, பிரத்தியட்ச முதலிய வேறு பிரமாணங்களை நெருங்கிய ஆற்றலாகக் கொண்ட பேத சுருதியே ஆற்றலுடையதாமாதலின் அதுவே, வேறு பிரமாணங்களாற் பாதித்தற்குரிய அபேதப் பொருளைக் கூறும் சுருதி வாக்கியத்தைப் பாதிக்குமாற்றலுடையதாகும். (129)

சங்கரபகவற்பாதர் :—பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களைா, பேதத்தைக் கூறுஞ் சுருதிக்கு வலியுடையதாங்

தன்மையைத் தேடுவனவாகா; மற்றோ, அறிவிற் சிறந்தோய், பெறப்பட்ட பொருளையே கொடுப்பதாந் தன்மையால் அவைகளுக்கு ஆற்றலின்மையையே தேடுகின்றன. (130)

வாக்குக்களுக்குப் பற்றுக்கோடாகிய கலைமகளால் அநுமதிக்கப்பட்டதும், அத்தன்மைய மண்டன பண்டிதரின் வேகங்களைப் பிடித்துக் கையாற் கசக்கி இரசத்தைப் பிழிவதும், கணவனது இனி வரும் துறவால் இலக்கியம் வழுவிய எளிதாகிய வாக்கைத் தோற்றுவித்த உபய பாரதியாரின் சாட்சித் தன்மையாற் காப்பாற்றப்பட்டதும், அற்புதமாகிய பூமாரியால் நறு மணத்தைப் பருகுவதுமான சங்கரபகவற்பாதருடைய உறுதியான இவை முதலான யுத்திகள் மிக விளங்கின. (131)

இவ்வாறு, உபய பாரதியார் துறவிகளுக்கிறைவராகிய சங்கரபகவற்பாதரின் அரிய யுத்திகளை யநுமோதிப்பதுடன் (யுத்திகளைக் கண்டு களித்து) மண்டன பண்டிதரின் கண்டத்திலிருந்த மலர்மாலை வாடியதையும் நோக்கி, அவ்விருவரையும் (மண்டன பண்டிதரை உணவருந்தவும், சங்கர பகவற்பாதரை ஐயமருந்தவும் எழுந்து வருமாறு முன்போல அழைப்பது தவிர்த்து) பொதுவாக "ஐயமுண்ண எழுந்திருப்பீர்களாக," என்றழைத்தனர். (இதனால், மண்டன பண்டிதரும் துணிபுரைத்து ஒட்டம் வைத்தபடியே துறவியே யாதல் வேண்டும் எனக் குறிப்பிட்டமை காண்க) இதன்றியும் அவ் வுபய பாரதியார் எதிகளுக் கரசராகிய சங்கரபகவற்பாதருக்குக் கீழ் வருமாறு கூறினர்:— (132)

துறவிகளில் வீரரே, யான், கோபமிக்குற்ற துருவாச முனிவரால் முன்னர்ச் சாபமடைந்தேன்; அச் சாபத்தின் முடிவாகவே தமக்கு வெற்றியுமுண்டானது; ஆகையால், சாபம் நீங்கப் பெற்ற யான் வந்த விடத்திற்கே செல்கின்றேன் என்பதாம்.

இவ்வண்ணங் கூறிவிட்டு, சத்திய வுலகாகிய தன திடத்திற்குச் செல்லும் அவ் வுபயபாரதியாரை வெற்றிகொள்ள வேண்டுமென்று மனத்துட் கொண்ட சங்கரபகவற்பாதர், வனதுர்க்கை மந்திரத்தால் அவ் வம்மையாரை உறுதியாய்க் கட்டினர்; அவ் வுபயபாரதியாரை வெற்றி பெறுவதோ, சருவக்ஞத் தன்மையைப் பெற்று, தமக்குப் புகழ் உண்டாவதற்கன்று (மற்றெதற்கெனிலோ,) தமது அத்துவித மதம் ஒன்றுவதற்காம். (தாங் கொண்டது உபய பாரதியாருக்கும் உடன்பாடாமெனல் யாவருக்குந் தெரிவித்தற் பொருட்டென்பது யூகித்துணர்க). (133, 134)

(அவ் வம்மையாரை மந்திரத்தாற் பிணித்துச் சங்கர பகவற்பாதர் அவ்வம்மையாரை நோக்கி யாது கூறினரோ வெனின்?), அன்னையீர், தம்மை, பிரமனது மனைவியாரெனவும், முப்புரங் காய்ந்தோனுடைய உடன்பிறந்தாரெனவும், இலக்குமி முதலியோரென வியப்பாகிய வடிவங் கொண்டவரெனவும் உலகைப் பாதுகாத்தற் பொருட்டு அவதரித்த சரசுவதி தேவியாரெனவும் யான் உணர்வேன். அன்பிற் சிறந்த யான், தம்மை, "தமதிடத்திற்குச் செல்வீராக என அநுமதி கொடுக்குங்கால் நீவிர் உமதிடத்திற்கு எழுந்தருள்வீராக," என்றனர். பின்னர், சங்கரபகவற்பாதர், தாம் கூறிய வேண்டுகோளை உபய பாரதியார் ஏற்றுக் கொண்டவிடத்து, மண்டனரின் உட் கருத்தை யுணரும் வேட்கை யுடையராய்க் களிப்புற்றனர். (135, 136)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கரதிக்கு விசயச்சுருக்கத்தில் சங்கர, மண்டன,
சம்வாதத்தை மேற்கோண்ட
எட்டாவது சருக்கம்
முற்றும்.

---

# ஒன்பதாவது சருக்கம்

## சங்கரபகவற்பாதருக்கும், மண்டனருக்கும் சைமினி முனிவரின் மதம் பற்றிய விவாதம்

அதன் பின்னர், மறைப் பொருளை யுறுதிப்படுத்துவதும், நியாயத்தோடு கூடியதுமாகிய, துறவிகட்கு வேந்தரென்னுஞ் சங்கரபகவற்பாதரின் திருவாக்கியங்களால், மண்டன பண்டிதர், ஆணவமடங்கியவராயிருந்தும், கருமத்தாற் சடராதலின், அக்கணத்திலேயே மறித்தும் ஐயமடைந்தோராய்க் கூறுகின்றார்:— (1)

மண்டனர்:—துறவிகளுக்கிறைவ, ஓர் காலும் எனக்கு வாராத தோல்வி இப்போது வந்ததேயென யான் கிலேசிக்கிலேன்; மற்றோ? அந்தோ! அந்தோ! சைமினி பகவானுடைய வாக்கியங்களும் மறுக்கப்பட்டனவே எனப் பெருந் துன்புறுகின்றேன். (2)

சைமினி மகாமுனிவரோ, சென்றதையும், வருவதையுஞ் சீரா யுணர்ந்தவர்; உலகனைத்திற்கும் இனியதே செய்பவர்; தரும மறையை வளர்ப்பதில் தலையிட்டவர்; தவங்களுக்கோர் நிதியைப் போன்றவர்; ஆகையால் அத்தன்மையராகிய அவர், பயனிலாத கரும காண்ட சூத்திரங்களை எவ்வாறு இயற்றி யருளினர்? (3)

சங்கரபகவற்பாதர்:—சைமினி முனிவரிடத்தில் நியாயமிலாமை யென்பது அணுத்துணையேனுமில்லை; மற்றோ? நாம் அறியாமையால் அவருடைய கருத்தை உள்ளவாறு உணராதவர்களானோம் என, இவ்வணம் ஐயமடைந்த மண்டன பண்டிதருக்குக் கூறினர். (4)

மண்டனர்:—சங்கரபகவற்பாத தேசிக, அறிஞரா லுணரப்படாதமைதென்று ஒரு கருத்து சைமினி முனிவருக் கிருக்குமேல், எனக்கு முன் அதைக் கூறுவீராக; தம்மாற் கூறப்பட்டது பொருத்த முளதெனின், யாமும் ஆணவத்தை யறவிடுத்து அக்கருத்தையே உள்ளத்திற் கொள்வோமென்றனர். (5)

## சங்கரபகவற்பாதர் மண்டனருக்குச் சைமினி முனிவரின் கருத்தைக் கூறல்

அச் சைமினி முனிவர், பரமான்மாவில் கருத்துடையராயிருந்தும், விடயத்திலமிழ்ந்த மதியுடையாருக்கு, (பிரம ஞானத்தில் அதிகாரமில்லாதவருக்கு) அருள் செய்ய வேண்டுமென்னும் விருப்பால், அப் பிரம ஞானத்தைப் பெறுவதற்கு, புண்ணிய கருமங்களனைத்துஞ் சாதனமாந் தன்மைபற்றி அவைகளையே எடுத்துக் கூறினர், (பரமான்மாவைக் கூறிலர்). (6)

"இப் பரமான்மாவை அறிவுடையார் மறைமொழியாலும், வேள்வியாலும், தானத்தாலும், கெடாத தவத்தாலும், உணர்கின்றனர்," என்னும் உபநிடத வாக்கியம், தத்துவ ஞானமுண்டாவதற்குத் தருமங்கள் யாவுஞ் சாதனமென விதிக்கின்றது; சைமினி முனிவரும், முத்தியையே மேற்கொண்ட இவ்வாக்கியத்தைக் கருதியே முத்தியை மேற்கொண்ட தருமங்களையும் உறுதிப்படுத்தி யுள்ளார்; மற்றொரு வகையும் இல்லை யென்பதையே யாம் கருதுகின்றோம். (7)

மண்டனர்:—"மறையின் பயன் கருமமாதலின் கருமத்தைக் கூறாத மறை மொழிகள் பயனற்றன" எனச்

சூத்திரமு மியற்றிவிட்டு, பின்னர் அவ்வேத வாக்கியங்கள் பெறப்பட்ட பொருளையே மேற்கொண்டனவென அச் சைமினி முனிவர் எவ்வாறு உடன்பட்டுக்கொண்டனர். (8)

சங்கரபகவற்பாதர் :—சுருதி முழுதும் அத்துவிதத்தையே மேற்கொண்டுள்ளதாமாயினும், விடய நோக்கமுடையார்களிடத்துள்ள திருக்கடைக்கண் நோக்கால், ஆன்ம ஞானத்தை பரம்பரைப் பயனாகக் கொண்ட கருமங்களையும், அக் கருமப் பிரகரணத்திலுள்ள மறை மொழிகளை, காரியத்தையே மேற்கொண்டனவாக்கி அவ்வண்ணஞ் சூத்திரஞ் செய்துள்ளார். (9)

மண்டனர்:—அற்றேலஃதாகுக, சைமினி முனிவருக்கு, வேதங்கள் முழுதுமே உண்மை யறிவானந்த ஒரு பரமான்மாவையே மேற்கொண்டதாமெனக் கருத்துளதேல், சடமாகிய கருமத்திற்கே பயனளிக்குந் தன்மையைக் கூறி அச் சைமினி முனிவர் பரமேசுரனே யிலன் என மறுத்தாரன்றோ? அஃதெவ்வாறும்? (10)

சங்கரபகவற்பாதர் :—(மண்டன பண்டித, நீ ஆசங்கித்தது உண்மையே அதன் கருத்தைக் கூறுவாம் கேட்பாயாக):—கணாத முனிவரோ, இவ்வுலகு, ஒரு கருத்தனையுடையது, காரியமாதலின், குடம்போல் என்னும் அநுமானமும், மறை மொழிகளை வேண்டாமலே பரமேசுரன் உளன் என உறுதிப்படுத்துகின்றது; பரமேசுரனைக் கூறுஞ் சுருதி வாக்கியங்களோ, அநுமானத்தாற் பெறப்பட்ட ஈசுரனை அநுவதித்துக் கூறன் மாத்திரத்தனவே என்கின்றார். (11)

உபநிடதமொன்றினாலேயே யுணரப்படும் பரமான்மா மற்றெவ்வகையாலேனு முணரப்படுங் கொல்லோ? என்னை?

"மறை யுணராதார் அந்த மாபெரும் பொருளை யுணரார்" என்னும் மறை மொழி, வேத முணராதோருக்கு அப்பொருள் விடயமாகாதென்க் கூறுகின்றதாகலின், கணாதவரின் அநுமானம் அப்பொருளை யறிவுறுத்துவ தெவ்வாறு? (12)

என்னு மிக் கருத்தை உள்ளில் வைத்துக்கொண்டு அச் சைமினி முனிவர் நுண்ணிய நூற்றுக் கணக்கான யுக்திகளால் ஈசுரனை யுறுதிப்படுத்தும் அவ்வநுமானத்தை மறுத்துள்ளார்; அதைத் தழுவியே ஈசுரனிலிருந்து உலகம் தோன்றி யொடுங்குகின்றதென்பதையும், கரும பலன் ஈசுரனிடத்திலிருந்தே அடையப்படுகின்றதென்பதையும், மறுத்திருக்கின்றனர். (ஈண்டு உலகந் தோன்றி யொடுங்கல்களைக் கொண்டமையின் உபலக்கணமாய் நிலைத்தலையுங் கொள்ளல் வேண்டும். (13)

ஆகையால், இச் சைமினி முனிவர் வாக்கியம் யாங் கூறிய இரகசியத்திற்கு அணுத்துணையேனும் விரோதமின்று, அறிஞரும் இவ்வாறுள்ள இரகசியக் கருத்தை யுணராது அச் சைமினி முனிவரை "ஈசுரன் இல்லை யென்பவர்" என்கின்றார். (14)

ஆன்ம ஞானிகளில் மேம்பாடுடைய அச் சைமினி முனிவர் (தார்க்கிகர் கூறும் ஈசுரனை யுறுதிப்படுத்தும் அநுமானத்தை மறுத்த) அத்துணையானே ஈசுரனை யில்லை யென்பவராவர் கொலோ? இரவில் நடமாடுங் கூகை பகலிற் சம்பாதித்த இருளால், இரவியின் வெளிச்சங் குன்றுவதும் யாண்டுமுண்டோ? (15)

இவ்வண்ணம், துறவிகளிற் சிம்மம் போன்ற சங்கர பகவற்பாதரால் கூறப்பட்ட சைமினி முனிவரின் கருத்தை

யுட்கொண்ட திருவாக்கியத்தைக் கேட்ட, கவிகளின் வேந்தராகிய மண்டன பண்டிதர் உள்ளிற் பேருவகை யுற்றனர், உபய பாரதியாருடன் அங்குள்ள அவைத் தலைவரும் பெருங் களிப்பெய்தினர். (16)

## மண்டன பண்டிதர் சைமினி முனிவரைத் தியானித்தல்

மண்டன பண்டிதர், (மேற் கூறியவாற்றால்) சைமினி முனிவரின் கருத்தை யுணர்ந்தாரேனும், மறித்துஞ் சிறிது ஐயந்தோன்றியவராய்ச் சைமினி முனிவரை உள்ளத்தில் தியானித்தனர்; மீண்டும், அச் சைமினி முனிவரின் திருவாக்காலும் இக்கருத்தை யறிதற்பொருட்டுத் தியானிக்கப்பட்ட அச் சைமினி முனிவரும் மண்டன பண்டிதற்கு முன் தோன்றி யருளினர். (17)

## சைமினி முனிவர் தமது கருத்தை வெளியிடல்

அச் சைமினி முனிவர் தோன்றி, மண்டனரை நோக்கி, மண்டன, பிரம சூத்திர பாடியஞ் செய்த சங்கரபகவற்பாதரின் அரிய பெரிய சம்மதத்திலுள்ள ஐயப்பாட்டை நீ அறவொழிப்பாயாக; கரும காண்ட சூத்திரங்களியற்றிய எமது கருத்தெதுவோ, அதுவே அவருடைய கருத்தாம்; வேறன்று, யான் சொல்வதைக் கேட்பாயாக என்றனர். (18)

அஃதன்றியும், துறவிகளுக்கரசராகிய அவர் எமது கருத்தை மாத்திரம் உணர்ந்தவரல்லர், மற்றே, வேதங்களின் கருத்தையும், சாத்திரங்களனைத்தின் கருத்தையுமுணர்ந்தவர், அத்துணையே யுணர்ந்தவரெனிலோ, அன்று, சென்ற காலம், நிகழ் காலம், வருங் காலம், என்னும் முக்காலங்களையும் உணர்ந்தவருமாவார், இவ்வண்ணமுணர்ந்தவர் மற்றையரிலர். (19)

37

பேராசிரியராகிய வியாசரால் மறை முடியின் வாக்கியங்கள் அத்துவிதீய சைதன்யத்தையே மேற்கொண்டதென உறுதி பண்ணப்பட்டிருக்கின்றன; ஆகையால், அவர்பால் கற்றுணர்ந்த அவரது மாணாக்கராகிய யான் அவருக்கு உடன்பாடில்லாத ஒரு சூத்திரத்தையேனுங் கூறுவன் கொலோ (என்றதால் சைமினி முனிவரின் சூத்திரங்களனைத்தும் அத்துவிதீய பரமான்மாவையே மேற்கொண்டன என்பதே கருத்தாமென்றுணர்க) ? (20)

பெரும் புகழை யுடைய மண்டன, ஐயம் நீக்குதி; யானோர் இரகசியஞ் சொல்கின்றேன் அதைக் கேட்பாயாக; குடும்பத்திலமிழ்ந்த மாந்தர்களைக் கரை யேற்றுதற் பொருட்டே, மாயையினால் ஒரு அருட்டிருமேனி கொண்ட பரம்பொருளே இச் சங்கரபகவற்பாதரென் றுணர்வாயாக என்பதாம். (21)

முதலாவதாகிய கிருத யுகத்தில் சத்துவ குணத்தையே மேற்கொண்ட கபில மாமுனிவர், நல்லார்களுக்கு ஞானத்தை யுபதேசிக்கின்றார்; இரண்டாவதாகிய திரேதா யுகத்திலோ, தத்தாத்திரேயர்; மூன்றாவதாகிய துவாபர யுகத்திலோ ? நுண்ணறி வாளராகிய வியாச முனிவர்; இக் கலியுகத்திலோ, இச் சங்கரபகவற்பாதரே; (ஞானத்தை யுபதேசிக்கின்றார் என்பதை மற்றைய மூன்றிடத்துஞ் சேர்த்துக் கொள்க) இவ் வண்ணம் இச் சங்கரபகவற்பாதருடைய மகிமை சைவ புராணத்தில் மிக்க விளக்கமாய்க் கூறப்பட்டிருத்தலின், நன் மதியோய், நீயும் அவருடைய அத்துவிதீய மதத்திலிறங்கி பவக் கடலைக் கடப்பாயாக என்று மண்டன பண்டிதருக்குப் போதித்த சைமினி முனிவர், துறவிகளிற் சிறந்த சங்கரபகவற்பாதரை மனதினுலேயே தழுவிக்

கொண்டு மறைந்தனர்; வேட்போர் கழகத்திற்கு மேம்பட்டவராகிய அம் மண்டன பண்டிதரும், சங்கரபகவற்பாதரை இனிது வணங்கிக் கீழ் வருமாறு போற்றினர். (22, 23)

## மண்டன பண்டிதர் சங்கரபகவற்பாதரைத் துதித்தல்

சங்கரபகவற்பாத, தாங்கள், உலக காரணராகிய பரமேசுரர் எனவும், தம்மிற் சமமாகியவரும், சிறந்தவரும் இன்றூரெனவும், சைதன்ய மாத்திர வடிவரெனவும், அறிஞர்களைக் கரை யேற்றுதற் பொருட்டு அருட்டிருமேனி கொண்டவரெனவும், இப்போது என்னு லறியப் பட்டீர். (24)

துறந்தாரிற் சிறந்தோய், மூன்று மறைகளின் முடிவாற் கூறப்பட்ட அத்துவிதீய பதவியை தத்துவமசியென்னும் ஆயுதத்தைக் கொண்ட தேவரீர் இனிமேல் பாதுகாப்பாற்றத் தக்கவராயிருக்கின்றீர்; அவ்வாறல்லீரேல், புருடார்த்தங்களிலிருந்து நழுவின நாத்திகர் கூறும் வீண் பேச்சென்னும் இருட் கிணற்றில் வீழ்ந்த மாந்தரனைவரும் இச் சமயம் பெருங் கேட்டை யடையார்கள் கொல்லோ? (25)

சில மூடர், கனவுற்றுத் தூங்கி விழித்து, கனவினின்றும் விழித்துக் கொண்டேன் என்னு முணர்வுடையராய், (அத் துயினீக்கத்தையும்) மற்றுமொரு கனவென மதிக்கின்றனரோ, அவ்வாறே, ஈண்டுச் சில மதத்தர் மோகத்திற்குட்பட்டோராய் (வைகுண்ட முதலான) பிற வுலகைப் பெறுதலே பெரு முத்தியெனக் கொள்கின்றனர்; அவர்களை நோக்கி, அறியாமையை அற வொதுக்கின தமது திருத் தொண்டர்கள் நகைக்கின்றூர்கள். (26)

பேதவாதியரின் மனம் போனவாறு கொண்ட முத்திநிலை மிகப் பழிப்புற்றது ; பழிப்புற்றது என்னை ? அம் முத்தி யுண்டாகியும் கருத்தனுந் தன்மையாகிய தீயை முன் கொண்ட சுவையொழிந்த பந்தம் அடங்காமையின், தாங்கள் திருவாய் மலர்ந்தருளிய மிக்க நிலை பெற்ற முத்தியிலோ, அறிஞர் எப்போதுமே இன்புற்றிருக்கின்றனர் ; என்னை ? இம் முத்தி துன்பமெலாந் தொலைந்த எல்லையற்ற சைதன்யச் சுகப் பெருக்காமாதலின் என்க (27)

தேவரீர் அஞ்ஞானமென்னும் அரக்க மாதரால் விழுங்கப்பட்ட அகில நாயகனை (பரமான்மாவை இராமபிரானை) அவளுடைய வயிற்றைப் பிளந்து அவளுடைய வயிற்றிலிருந்து உள்ளவாறே வெளியிற் கொண்டுவந்தவராயிருக்கின்றீர் ; அநுமாரோ, தருணிகளான அரக்க மங்கையர்களாற் சூழப்பட்ட அகில நாயகராகிய இராமபிரானது அன்பார்ந்த மனைவியாரை (சீதையை)ப்பார்த்து வந்த அநுமாரிலும் மேலாகிய, உலகம் போற்றும் சிறந்த பேராசிரியராகிய தங்களுடைய மகிமை எத்துணையாமோ (எல்லை கடந்ததென்க) ? (ஈண்டு அநுமார், அகில நாயகராகிய இராமபிரானுடைய மனைவியாரை (நேரே இராமபிரானையன்று) அவ்வம்மையாரும் அரக்க மங்கையரால் விழுங்கப் பட்டவரன்று; மற்றோ ? அம் மங்கையராற் சூழப்பட்டவர் அதிலும் அம்மங்கையரைக் கொன்று, கொண்டுவந்தாரலர் ; மற்றோ ? அம் மங்கையரை ஒதுக்கிப் பார்த்து விட்டு வந்தனர்; தேவரீரோ, அஞ்ஞானத்தால் விழுங்கப்பட்ட பரமான்மாவை, அவ்வஞ்ஞானத்தைக் கொன்று, வெளிக் கொண்டு வந்தீர் ஆதலின் தாங்களே அற்புதராகிய அநுமாராவீர் ; தமது புகழுக்கு வரம்பில்லை என்பது கொள்ளக் கிடந்தமை காண்க). (28)

உலகத்துன்பைப் போக்கும், எண்ணுதற்குரிய தங்களுடைய இத்தன்மைய மகிமையை முன்னமே யான் அறியாது தங்களுக்கெதிரில் முறை யின்றி மொழிந்தவை யனைத்தையும், கருணையங் கடலே, தேவரீர் பொறுத் தருள்வீராக. (29)

மற்றைய, கபிலர், கௌதமர், கணாதர், முதலானோர் பேரறிஞராயிருந்தும், மறைகளின் கருத்தை உறுதிப்பாடு செய்யுமிடத்தில் மோகமடைந்தார்கள். அவ் விஷயத்தில் நேரே பரசிவனுடைய கூறுளாரன்றி ஆற்றலுடையோர்களாவரோ ? (30)

அஃதல்லாமலும், அமுதமொழுகுந் தங்களுடைய திரு முகமென்னும் ஒரு கலை மதியினின்றெழும் வாக்கியங்களான அமுத கிரணக் கூட்டங்கள், மிக்க வெற்றி பெற்று விளங்குங்கால், பெரு மறைப்பால் உள்ளத்திற்கு அழுக்கையுதவத் தக்க, கபிலர், கணாதர், கௌதமர், முதலானவர்களின் வாக்கியங்களைக் கொள்ளினும் பயன் என்னைகொலோ (பயன் சிறிதுமில்லை யென்க) ? (31)

தெய்வங்களின் திரு வுருவத்தை யுடைப்பவரும், திரு மறையென்னும் பசுவைக் கொல்வதற்கு மனவெழுச்சி மிக்குடையவருமான மத வாதிகளென்னும் யவனர்களால் இத்தரை நிறையப்பட்டது ; இவர்களை யடைந்து ஒழுகி வருபவருக்கு யாண்டும், எக்காலும், முத்தியுண்டாமென்ப தெவ்வாறும் ? அங்ஙனமாயினும், சத்தியமாகிய துறந் தாருக் கரசரைச் சரணடைந்தவர்களும், கலியுக தோடங்களைக் கடந்தவர்களும், மனதை வசப் படுத்தியவர்களும், பேரறிவாளர்களுமான, தமது மாணாக்கர்கள் திக்குக்களின் நாற் புறங்களிலும், வெளிப் பட்டிருக்கின்றார்கள்

ஆதலின் அதை யெண்ணுவதாலென்னை (அதனாற் கவலையே யில்லை யென்க)? (32)

குறைந்த மதியுடைய மதவாதிகளின், விரிந்தவுரைக ளுடைய அநுக்கிரகமென்னும் பெரியதோர் அரவங் கடித்த தாற் புண்ணான சுருதிகளை, தாங்கள் தமது வேதாந்த பாடியத்தின் வாக்கியாமுதந் தெளித்து நன்னிலையை யடை யச் செய்யாவிடின் அச் சுருதிகள் இவ்வாறு உயிர் பெற்று வாழ்ந்து விளையாடிக் கொண்டிருப்ப தெவ்வாறு (சுருதிக ளொழிந்து விடு மென்க)? (33)

சங்கரபகவ, தங்களுடைய அருமைத் திரு வாக்குக்க ளென்னும் அமுதமொழுகும் அம்புலியின் நிலவெறிக்கா விடின், மிக்கக் கொடியதும், பொறுக்க முடியாததுமாகிய பவமென்னும் பருதியின் மிகுந்த வெய்யிலால் தோன்றிய இவ் வெப்பத்தைப் பொறுத்துக் கொள்வாருமுளரோ? (34)

அந்தோ! கருமமாகிய சக்கரத்திலேறி, தவம், வேள்வி, வீடு, மனைவி, மக்கள், ஏவலாளர், தனம், என்னுமிவைக ளாற் பேராணவத்தைப் பெற்ற யான், குடும்பமென்னு மோர் கூபத்தில் விழுந்து கிடக்கின்றேன்; தாங்கள் என்னை அதினின்றுங் கரை யேற்றிவிடல் வேண்டும். (35)

யான், முற்பிறப்பில் உறுதியான அநேக தவங்களியற்றி யுள்ளேன்; என்னை? இன்றெனிலோ, சருவேசனென்னுங் கருணா நிதியாகிய தங்களோடு விவாதஞ் செய்தல் எனக்குக் கிடைப்பதெவ்வாறு கூடும்? (36)

மனச் சாந்தமே ஓர் வடிவாய்ப் பரிணமித்த முற்பிறப் பிற்செய்த புண்ணியத்தால் முளைத்தனவும், இந்திரியங்களை

யடக்கல் என்னும் இலைகளை யுடையனவும், வைராக்கிய மான மொக்குக்களை யுடையனவும், சகித்தல் என்னும், கொடி, பூக்களை யுடையனவும், ஏகாந்தமான இனியதேன்க ளொழுகுவனவும், சிரத்தை யென்னும் நன்கு பழுத்த கனிகளை யுடையனவுமான, அரிய பெரிய ஆசிரியரின் திரு வாக்கின் பெருக்குக்களை, யான் அளவிலாப் புண்ணியத்தா லடைந்தேன். (37)

பொன்னுலகத்தாருக்குப் புருடார்த்தங்களைக் கொடுப் பதும், மாயா பந்தத்தில் மூழ்கிய மண்ணுலகத்தாருக்கு முத்தியைக் கொடுப்பதுமாகிய, தமது திருக்கடைக் கண்ணி னின்றெழுகின்ற கருணைப் பெருக்கில், பெரும் பாக்கிய முடையார்களே உண்மையாக நீராடுவார்கள். (38)

சிமிட்டுங் கண்களையுடைய சிற்றிடையார்களின் அழ கிய கொங்கையில் நழுகிய சேலையைக் கண்டு, தொடல், விரைந்து தழுவல், முதலான அவர்களுக்கொத்த விளை யாடல்களில் திரிகின்ற மனமுடையார் சிலர், அத்தன்மைய ராகவே யிருந்து வாழ்வார்களாக. தங்களைச் சரணகக் கொண்ட இவ் வறிஞர்களோ, அளவிலாப் புகழ்களுக்கோர் பெட்டகமும், தகுதியுமாகிய சங்கரபகவற்பாதரின் திரு வாக்கிலிருந்தெழுந்த அமுதக்கடலின் அலைகளான ஊஞ் சல்களில் உண்மையாகவே விளையாடு வார்களாக (39)

ஒளிவிடும் வெண்மை நிறத்தால் இருளை உடனே போக்குவதும், ஆராய்ச்சி யென்னும் நூலால் கோக்கப் பட்டதும், புது வகையுமாகிய தங்களுடைய அரிய பெரிய திரு வாக்குக்களென்னும் முத்து மாலையை யணிந்தவர்க ளும், கலகமிலாதவர்களும், ஆன்றோர்களுமான தங்க ளுடைய மாணக்கர்கள் களிப்புற்றோராயிருக்கின்றார்கள் ;

துறந்தார்களிற் சிறந்தோய் அறிஞர்களுக்கு இதைத் தவிர்த்து பிற அணிகளுமுண்டோ? அது பற்றியே, கல்வி யென்னு மொரு கன்னிகையும், இந்திரன் முதலானோரையும் மணம் புரிந்துகொள்ளாதொழித்து, இவர்களையே மணந்து கொண்டனள். (40)

சுருதி போதகமாகியதும் அழகு மிக்கதும், கீர்த்தி யுடையதுமாகிய தங்கள் திருவாக்கால் அறிஞர்கள் பேரின் பத்தை யடைவார்களாக; இரவியினொளியிற் கூகை போன்ற மூடர்கள் யாவரும், அந்தோ! மோகத்தால் துன்பத்தை யடைவாராக; மிக்கத் தீரராகிய சங்கரபகவற்பாதரின் வணக் கத்தினுடைய பரிணாம விசேடத்தால் கெடுத்தற்கரிய மன விருளை மாற்றினவர்களாய், மிகப் பெருகிய ஆன்மானந்தக் கடலில் யாம் மூழ்கிக் கிடக்கின்றோம். (41)

சங்கரபகவ, தங்களைத் தியானித்தலாகிய கற்பகத் தரு வையும், தமது திருவடிகளின் வணக்கத்தையே நந்தன வனமாயும், உள்ளத்தின்கண் நினைப்பதையே கற்பகக் கொடியாகவும், நற் குணங்களைத் துதிப்பதாகிய கங்கையை யும் உடைய, தமது திரு வடித் தொண்டே கட்புலப்படுஞ் சுவர்க்கமாமென்றாராய்ந்து தமது மாணாக்கர் என்னும் அறிஞர்கள் ஏற்றுக் கொள்ளுகின்றார்கள். மற்றும், இதி னின்று அன்னியமாகிய துறக்கத்தையும் துரும்பெனவே கருதுகின்றார்கள். (42)

ஆகையால், யான், மனைவி, மக்கள், மனை, தனம், இல் லறத்திற்கு விதித்துள்ள கருமம், என்னுமனைத்தையும் விடுத்து, தங்களுடைய திரு வடிக் கமலங்களையே சர ணடைகின்றேன்; அருளோடு இத்தொண்டனுக்கு அநு மதி கொடுத்தருள்வீராக. (43)

## உபய பாரதியார் சங்கரபகவற்பாதருக்குத் தமது வரலாறு கூறல்

இவ்வாறு, மண்டன பண்டிதரின் இன் சொற்களால் விதந்தோதிய அழகிய குணங்களையுடைய சங்கரபகவற்பாதர் அவருக்கு அருள் செய்யவேண்டுமென்னும் விருப்புடையராய் அவருடைய மனைவியை நோக்கியருளினர்; அத் திரு நோக்கின் கருத்துணர்ந்த அவ் வுபயபாரதியார் சங்கர முனிவருக்குக் கீழ் வருமாறு கூறினர். (44)

"துறந்தாருட் சிங்கத்தைப் போன்றோய். தமது திருவுளத்தை யான் யுணர்ந்தேன். என்னை? முன்னமே ஒரு தவத்தோரால், எனது வருங்காலத்தின் செய்திகள் யாவும் யான் அறிந்துள்ளேன். அதைச் சொல்கின்றேன், அவையிலுள்ளார்களுடன் தாங்களுங் கேட்பீராக. (45)

"யான் முன்னொரு காலத்தில் எனது அன்னையாருக்குத் திருத் தொண்டு செய்து கொண்டிருக்குங்கால், மின்னொளி யெழுந்தாற் போன்ற சடையுடையவரும், வெண்ணீற்றை மேனி முழுதுமணிந்தவருமாகிய ஒரு தவ வடிவுடையார், மற்றோர் இரவி யெழுந்து வந்தாற் போன்று அங்குவந்தனர். (46)

திருவடி விளக்கல் முதலியவைகளால் அவரை, எனதன்னையார் ஆராதித்தனர்; அப்போது, ஆராதனை யேற்றுக் கொண்ட அத் தவத்தாரை நோக்கி, எனதம்மையார், (47)

"பகவ, எனது புதல்வியின் வருங் காலத்தின் செய்திகளை இன்னதென்று யானறியேன்; தாங்களோ, தவ வலியால் அதை யுணர்வீர்; தம்மைப் போன்ற நுண் மதியோர், வணங்கிக் கேட்கு மாந்தருக்கு அரிய பெரிய இரகசியத்தை

யுங் கூறுகின்றனர். ஆகையால் (எனது புதல்வியின் வருங்காலச் செய்தியை) கிருபையுடன் கூறி யருள்வீ ராக. (48)

எனது புதல்வியின் வயது எத்தனை? எத்தன்மைய கொழுநனை யடைவள்? அவளுக்கு மக்களெத்தனைபேர்? மிகுந்த தன, தான்யாதிகளை யுடையவளாய் வேள்விகளை யும் வேட்பாளோ?" என்று வினவினர். (49)

இவ்வாறு எனது அன்னையாரால் வருங்காலச் செய் தியை வினவப்பட்ட அத் தவசி, கணப்போது கண்மூடி யிருந்து, முறையாக அவ் வினாக்களுக்கு உத்தரம் கூறி யருளினர். அவை யன்றி மிக்க இரகசியங்களையுங் கூறி னார். (50)

(அஃதென்னையோ வெனின்?) "மிக்க வலி வுற்ற அளவிலாத புறச் சமயங்களால் இம் மண்ணிடத்து மறை யின் மார்க்கம் அறவே யொழிந்த விடத்து, பிரமன், மறித் துஞ் சீர்ப்படுத்துவதின் பொருட்டு மண்டன பண்டிதர் என்னுங் கவீந்திரர் வடிவாய் அவதரித்து நன்கு விளங்கு வன். (51)

நினது புதல்வி, மலைமகள், கலைமதி வேணியனைக் கைப் பிடித்தது போன்று, தன்னைப் போன்ற குணமுள் ளவராகிய அம் மண்டன பண்டித கவிஞரைக் கணவனா கப் பெற்று வேள்விகளை யாற்றி விழுமிய மக்களுடன் நெடு நாள் இன்புற்று வாழ்ந்திருப்பள். (52)

அதன் பின்னர், மறை முடிகளின் துணி பொருள், வலி மிகுந்த புறச்சமயங்களால் குறைவை யடையும்போது, மண்ணிடத்து மறித்தும் அதை நிறுவுதற்கு, பரசிவன் ஒரு

அரிய மானிட திரு மேனி தாங்கியவராய் (சங்கரபகவற் பாதராய்) அவதரிப்பர்; அவர்; இப் பூமியை தமது திரு வடிக் கமலங்களால் நன்கு அணிபெறச் செய்வர். (53)

இப் புதல்வியின், கொழுநர், அச் சிவாவதாரருடன் பெரு விவாதஞ் செய்து, பின்னர் அவராலே வெற்றி கொள்ளப்பட்டு உலகிற்கோர் சரணராகிய அவரையே, இவர் இல்லறத்தை விட்டோராய்ச் சரணடைவர்.'' (54)

எனக் கூறிவிட்டு அத் தவப்பெரியார் மறைந்தனர்; எனக்கு அவர் கூறியவனைத்தும் உண்மையே யாயின; இம் மண்டனர், தமக்கு மாணாக்கராவர் என, அம் முனிவர் கூறியது மாத்திரம் பொய்யாகுங் கொலோ? (பொய்யாகாது)? (55)

சங்கரபகவற்பாதரே, தம்மால், கீர்த்தி யுடையாரிற் சிறந்த எனது கொழுநர் முழுதும் வெல்லப்பட்டவராகார்; என்னை? அவருடைய உடம்பில் யான் பாதியள் ஆதலின்; அறிஞ, என்னையும் வெற்றி பெற்று இவரை தமக்கு மாணாக்க ராக்கிக்கொள்வீராக. (56)

அஃதன்றியும், நீவிர், உலக காரணரும், முழுது முணர்ந்தவரும், உண்மையாகிய பரம புருடருமானதால் தம் முடன் விவாதஞ் செய்வதில் எனதுள்ளம் பெருங் களிப்பை யடைகின்றது, இதனுணு மாமென்க. (57)

## சங்கரபகவற்பாதர் உபயபாரதியாருடன் விவாதஞ் செய்தல்

இவ் வண்ணம், வேள்வியாற்றுவாரின் (மண்டன பண்டிதரின்) மனைவியார் (உபய பாரதியார்) கூறிய, பெரும்

பொருளை யடக்கியதும், பழிப்பிலாததும், இன் சுவை யுடையது மாகிய வார்த்தையை, துறந்தாரிற் சிறந்த சங்கர பகவற்பாதர் கேட்டு, உண்மையாகவே பெருங் களிப்புற்று, கீழ் வருமாறு கூறினர்.' (58)

"அம்மையாரே, நீவிர், தம்முடன் விவாதமிட என் மனம் பெருங் களிப்புற்றது," எனக்கூறியது மரபன்று; என்னை? பெரும் புகழுடையார் மடவாருடன் விவாதஞ் செய்யாராதலின் என்க. (59)

பகவ, தங்கள் மதத்தை மிக வேருக நிலை நாட்ட முயல் பவர், மடவரலாகுக, அல்லது திட மகனுகுக; உண்மையாய் அவர்களை வெற்றி கொள்ளல் வேண்டு மென்பதில் தங் கள் பட்சத்தைப் பாது காக்க வேண்டும் என்பதையே மேற் கொண்டவராய் முயற்சிக்கப் பாலார். (60)

அது பற்றியன்றே, 'கார்க்கி, என்னுமோர் மடந்தைய ருடன் யாக்ஞவல்கியர் என்னுமொரு முனிவர்களுக்கரசர் விவாதஞ் செய்தனர்; அவ் வண்ணமே, சுலபை, என்னும் மடமகளுடன், சனகர் விவாதஞ் செய்தனர்; இவர்கள் புகழ் மிக்குடையார்களல்லரோ? (61)

இவ் வண்ணங் கூறின யுத்தி மொழிகளைக் கேட்டறிந்து அருமறைச் சுருதிகளென்னும் நதிகளால் நிறைந்துள்ள அணையிலாக் கடல் போன்ற அச் சங்கரபகவற்பாதர், உள் ளங் களிப்புற்றவராய், தெள்ளிய வாக்கின் சிரதிட்டான தேவதையாகிய அவ் வுபயபாரதியாருடன் சங்கரபகவற்பா தர் அறிஞரவையின் கண்ணேயே விவாதஞ் செய்யத் தொடங்கினர். (62)

தொடங்கிய பின்னர், வெற்றி கொள்ள வேண்டுமென்னும் வேட்கையரும், அவ் விவாதத்தைக் கேட்போர்களை வியப்புறச் செய்யும் வல்லுநருமான அவ் விருவருக்கும் ஒருவருக் கொருவர் மதிவலியாற் கற்பிக்கப்பட்ட பேச்சுப் பெருக்காகிய விவாதம் நடந்தது. (63)

இவ் விருவருடைய வியப்பாகிய, பெயர்ச் சொல் விகுதியேற்ற பதங்களாலும், நல்ல யுத்திக் கூட்டங்களாலும் நிறையப் பெற்ற அவ்வரிய விவாதஞ் செய்யும் பேச்சின் பெருக்கைக் கேட்டு, இவருக்கு, ஆதி சேடனையும் ஒப்பிட்டுக் கூற முடியாது ; மற்றும், சூரியன், பிருகற்பதி, சுக்கிரன், என்பவர்களையும், சமமாகச் சொல்லவொண்ணாது ; உலகிலுள்ள பிறர் என்னுவார் ? (64)

இவ்வாறே, நியமித்த காலந்தவிர்த்து, பகலிலேனும், அல்லது, இரவிலேனும் ஓய்தலின்றி, சல்பம் (பிறர் மதம் மறுத்துத் தன் மதம் நிறுவுதல்) என்னும் விவாதத்தையே மேற்கொண்ட இப் பேரறிவாளர் இருவருக்கும் பதினேழு தினம் விவாதம் நடைபெற்றது. (65)

### உபயபாரதியார் சங்கரபகவற்பாதரை காம கலை வினவுதல்

அதன் பின்னர், உபயபாரதியார், மறை முதலான எல்லாச் சாத்திரங்களின் இயல்களிலுஞ் சிறந்த சங்கரபகவற்பாதரை வெல்வது அரிதெனமனதிலெண்ணி, விரைவிலே மற்றுமோர் கருத்துக்கொண்டு, இவரோ, இளமையிலேயே துறந்தவர்; காம நூற் கலையில் வல்லுநரலர்; ஆகையால் யான் அந் நூலைக் கொண்டு வெல்வேன், எனக் கருதி மறித்தும் இவருடன் விவாதஞ் செய்ய வுறுதிபண்

ணிக்கொண்டு, விவாதக் கழகத்தின் கண் பேசுவதி னின்று அவ் வுபயபாரதியார் புலன்களை வென்ற சங்கர பகவற்பாதரை, காம நூற் கருத்தில் கீழ் வருமாறு வினவினர். (66, 67, 68)

" சங்கரபகவற்பாதரே, கருப்பு வில்லானுக்குக் கலை கள் எத்தனை? அக் கலைகளின் வடிவம் யாது? அவைகள் தங்கியிருக்கும் இடம் எது? சுக்கில பட்சத்திலும், கிருஷ்ணபட்சத்திலும் அவைகளின் நிலைமைகளும், மாறு நிலைமைகளும், எவை? தருணி, தருணர்களிடத்தில் அவை எவ் வாறுள? கூறுவீராக, என்பதாம். (69)

இவ்வாறு உபய பாரதியார் வினவிய போது வல்லுநராகிய சங்கரபகவற்பாதர், அவ் வினக்களுக்கு விடை கூறும் விஷயத்தில் கீழ் வருமாறு ஆலோசித்தனர்:— யான் இவ்வினக்களுக்கு மறுமொழி கூறுதொழிவனேல்; சிறிதுணர்ந்தவனே யாவேன்; மறு மொழி கூறுவனேல் எனது தருமங்கெடும், என நீண்டநேரம் ஆராய்ச்சி செய்து கொண்டு ஒன்றும் பேசாதிருந்தனர் என்ப தாம். (70)

## உபய பாரதியாருக்குச் சங்கரபகவற்பாதர் மறு மொழி கூறல்

சங்கரபகவற்பாதர் காம நூலுணர்ந்தவராயிருந்தும், விரைவாக மனதில் இவ்வாறு ஆராய்ச்சிசெய்து, காம நூற் கல்லாமை முதலான விரதங்களையுடைய, துறவி களின் நியமத்தை, உலகில் பாதுகாக்க வேண்டுமென்னும் விருப்புடையோராய், காம நூற் கல்லாதவரே போன்று, காமனுடைய கலைகள் முதலானவற்றைக் கூறும் விஷயத்

தில் ஒரு திங்கள் மாத்திரம் எல்லை வைத்தல் வேண்டும், வாதமிடுவோர் நாள் மிகுதலையும் உடன்படுகின்றாராத லின், புன்னகையுடைய உபயபாரதியாரே, நீவிர், அவ் வெல்லைப்போது கழிந்தபின்னர், "யாம் காம நூற் கலையில் வல்லோம்," என்னும் உமது காம நூற் கலையின் வல்லுநத் தன்மையையும் இழந்து விடுவீர், என்றனர். (71, 72)

அதைக்கேட்ட அவ் வுபய பாரதியாரும் அவ்வாறே யாகுக என்று உடன்பட்டபோதே, யோகிகளுக் கிறைவ ராகிய சங்கரபகவற்பாதர் வானிற் சென்றனர்; சென்று, அப் புகழ்த் திருமேனியாளர், சிறந்த தமது மாணுக்கர்களு டன் வானில் உலாவிக் கொண்டிருக்குங் கால். (73)

ஓரிடத்தில், உயிர் நீத்தும், சுவர்க்கத்திலிருந்து நழு விய தேவரைப் போன்றவரும், அழுது கொண்டிருக்கின்ற மங்கையர்களாற் சூழப்பட்டவரும், அரந்தை யுற்ற அமைச் சர் முதலானோர் பாங்கரிலிருக்கப் பெற்றவருமாகிய அரச ரொருவரைத் தரையின்கண் கண்டனர். (74)

பின்னர், துறந்தார்களுக் கரசர், இரவில் வேட்டை யாடியதால் மூர்ச்சித்து விருட்சத்தினடியில் வீழ்ந்து உயிர் துறந்த அவரை, இவர், அமருக (மருப்பூமியற்ற இராச் சியமுடைய, அல்லது தேவர்களிற் சிறந்த சுகமுடைய) அரசர் எனத் தெரிந்து கீழ் வருமாறு சங்கரபகவற்பாதர் பத்மபாதருக்குக் கூறினர். (75)

பத்மபாதரை நோக்கி, "பத்மபாத, இளமைக்கும் அழகிற்கும், எல்லையாகவுள்ள மங்கையர்களையுடைய அம ருகன் என்னும் இவ் வரசர், களைப்பால் உயிர் துறந்து கடுந் தரையிற் கிடக்கின்றனர். (76)

யான், யோகவலியால் உயிர் நீங்கிய இவ் வரசருடலிற் புகுந்து இவருடைய குமாரனைச் சிம்மாசனத்திலிருத்தி இராச்சியத்தை யாளச் செய்துவிட்டு மீண்டும் வரலாமென எனது மனம் எண்ணுகின்றது. (77)

(உபயபாரதியாரால் வினவப்பட்ட) யான், இவ்வரசரின் பெருந் துன்புற்றுள்ள பலவகையான மனைவிமார்களை, எமது முற்று முணர்தற்றன்மைப் பொறுப்பின் பொருட்டு அநுபவித்து, காமக் கலைகளை நேரே பார்க்கவும் விரும்புகின்றேன். (78)

## சங்கரபகவற்பாதருக்குப் பத்மபாதர் இனிதுரைத்தல்

பத்மபாதர், இவ்வாறு கூறிய எதிகளிற் சிறந்த சங்கரபகவற்பாதரை நோக்கி, முற்றுமுணர்ந்தோய், தங்கட்குத் தெரியாதது ஒன்றுமில்லை, அவ் வண்ணமாயினும், தங்களுடைய பக்தியானது எனக்குச் சொல்லாற்றலைப் பெருக்குகின்றது; என, இனிய சுவை மலிந்த வாக்கியங்களைக் கீழ் வருவாறு கூறினர். (79)

முன்னொரு காலத்தில் மச்சேந்திரர் என்னுமொரு பெரியார், தமது தூல வுடம்பை, கோரக்க நாதரிடத்தில் பாது காத்து வரும்படி வைத்து விட்டு, உயிர் துறந்த ஒரு அரசருடலிற் புகுந்து அவ்வரசரின் நகரத்தை யடைந்து அவரது சிம்மாசனத்தின் மீது, யோகிகளிற் சிறந்த அவர் வீற்றிருக்கும்போது, அங்குள்ள பிரசைகளுக்கு இடையறாது இன்பமே யுண்டானது; தருணத்தில் மேகம் தண் மழையைப் பொழிந்தது; இச்சித்தவாறே பயிர்கள் விளைந்தன. (80, 81)

அதைக்கண்ட, நுண்ணறிவாளரான அமைச்சர்கள், நமது அரசருடலில், தெய்வத் தன்மையுடைய சித்தரொருவர் புகுந்துள்ளார் எனத் தெரிந்து, அவ் வரசரின் மனைவிகளிடத்தில், பெருமாட்டிகாள், நீவிர் "அப்பெரியாரை எவ்வகையாலேனும் வசப்படுத்துவீர்களாக," என்று சொல்லி வைத்தனர். (82)

அதன் பின்னர், அம் மச்சேந்திர முனிவர், அவ்வரசரின் மனையாள்களின், ஆடல், பாடல், அபிநயஞ் செய்தல், முதலான லீலைகளில் மூழ்கிய மனத்தராய் நிட்டையை மறந்து கெட்ட பாமரன் போலாயினர். (83)

கோரக்க நாதர், அவருடைய வுடம்பை பல வகையாலுங் காப்பாற்றிக் கொண்டிருந்தும் வாராமையைக் கண்டு, பின் தமது ஆசிரியராகிய அவருடைய செய்திகளை யுணர்ந்து, மன்னன் தேவிகளின் இல்லத்தில் அவர்களுக்கு நாட்டியங் கற்பிப்பவராய்ச் சென்று அவருக்கு அண்மை நண்பராயினர். (84)

அங்கு, ஒருபோது கோரக்கர் தமது ஆசிரியராகிய மச்சேந்திரரைத் தத்துவோபதேசத்தால் மையல் நீங்கியவராக்கி யோக முறைகளையுந் தெரிவித்து முன்னிருந்த தேகத்தையே அடையுமாறு செய்தனர். (85)

அந்தோ! இவ்விடய விருப்பு இத்தன்மையதேயாம்; அஃதொழிந்தும், சுக்கிலங் கலிக்காமையாகிய விரதத்தை யழிப்பதால் பாவமுண்டாகாதோ? தமது தோஷச் செய்கையை யூகித்துணர தாங்களே வல்லுநராவீர் (யான் சொல்வதென்னை?) (86)

ஒப்பிலாத நமது பெருவிரதமெங்கே? பெரும் பழிப் புடைய சிறிய காம நூலெங்கே? அவ்வாறிருந்தும் தங்க ளாலே அது விரும்பப்படின், இப்போதே உலகம் நிலை யற்றதாகாதோ? (87)

இத் தரையின் கண், கேடுற்ற துறவிகளின் ஒழுக்கங் களை நன்கு தெரிவித்தற் பொருட்டே கங்கணங் கட்டிக் கொண்ட தங்களுக்கு, அறியாததொன்றுண்டோ? பகவ, இத்துணையும் அன்பின் பெருக்காற் கூறினேன் என் றனர். (88)

## சங்கரபகவற்பாதர் பத்மபாதருக்குச் சமாதானங் கூறல்

பிருகற்பதி போன்ற பேரறிவுடைய சங்கரபகவற் பாதர், அந்த தாமரை மலர்த்தாளார் கூறியதைக் கேட்டு, தம்மாற் கூறப்பட்டதோ, தோடமற்ற மரபேயாம்; ஆயி னும், அதினுண்மையைக் கூறுகின்றேன் கேட்பாயாக என, கீழ் வருமாறு அவருக்குத் திரு வாய் மலர்ந்தருளினர். (89)

(சங்கரபகவற்பாதர் பத்மபாதரை நோக்கி) மைந்த இச்சையிலாதவருக்குக் காமமுண்டாவ தெங்ஙனம்? ஆயர் குலப் பெண்களை நேயமுள்ளவராய்ச் செய்து கொண்ட கண்ணபிரானைப் போல, (என்பதுணர்வாயாக). யோகங்க ளுண்டாவதற் கோரிடமாகிய வச்சிரோலி, (ஆண் குறி யாய் சுக்கிலத்தை மேலிழுத்தல்) என்னும் அந்த யோகம், நமக்குச் சுக்கிலங் கலிக்காமற் செய்வதும், விரதங் கெடாமற் றடுப்பதுமாம். (90)

சங்கற்பமே சருவ காமத்திற்குங் காரணம், அச் சங் கற்பமோ, கண்ணபிரான் போன்று எமக்கில்லை; குடும்ப

நோடத்தைக் குறியாக நோக்குவோருக்கும், ஞானத்தின் மூலம் (சங்கல்பம்) கெடடைதலால் எக்காலும் குடும்ப பந்தம் நாசமேயாம். (91)

ஆராய்ச்சியின்றி உடம்பு முதலானவைகளை யேநான் என, உறுதியாய் அபிமானிக்கும், மூடரென்னும் ஆன்ம யுணர்ச்சியில்லாதோரை மேற்கொண்டு, விதி, நிடேத நூல்கள் யாவும் பயனுடையனவாகின்றன. (ஆன்ம ஞானிக்கு விதி, நிடேதங்களை நூல்கள் கூறவில்லை யென்பது உட்கிடை). (92)

ஆன்ம ஞானமுடையவனே, ஆசிரமம், வருணம், சாதி, என்பவைகளற்றதும், சைதன்ய மாத்திரமாயுள்ளதும், பிறப்பொழிந்ததும், ஒரே தன்மைத்தாயதுமாகிய பரமான்மாவைத் தானகவே யறிந்து வேத முடியின்கண் வீற்றிருப்போனதலின் விதிகளுக்கு ஏவலாள் ஆகான். (ஆன்ம ஞானியிடத்தில் விதி செல்லாதென்பது குறிப்பு). (93)

மண்ணிலுதித்த குட முதலியன மண்ணைத் தவிர்த்து வேறிலாதவாறு, பரமான்மாவிலுதித்த இவ் வுலகம் பரமான்மாவைத் தவிர்த்து உண்மையாக முக்காலத்துமில்லை. (94)

இவ் வுலகம் பொய்யே யென்று மனதில் உறுதியுடையவர் கரும பயனுடன் கலப்பரென்பதெவ்வாறு? கனக்காலத்திற் செய்த புண்ணிய முதலியவைகள் ஓர் காலும் பயனைக் கொடுக்கா, அவைகள், பொய்யே யென்னும் புத்தியாற் கேடடைந்ததாலென்க. (95)

இவ் வான்மஞானி, நூற்றுக் கணக்கான அசுவமேத யாகங்களைச் செய்யினும், அல்லது அளவிலாத அந்தணர்களைக் கொல்லினும், பாவ புண்ணியங்களைப் பற்றான், கருத்தனுந்தன்மை யிலாததாலென்க. (96)

"இந்திரன் முனிவுற்று, விச்சுவகன்மாவைக் கொன்றனன்; மற்றும், நூற்றுக் கணக்கான துறவிகளை யறுத்துச் செந்நாய்க் கூட்டங்களுக்குதவினன், அம்ம! அவ்வணஞ் செய்ததால் அவனுடைய உரோமம் ஒன்றேனும் அசையவில்லை," என்பது இருக்கு வேதத்தின் வாக்காம். (இது பாவம் பற்றாமைக்குவமை). (97)

சனகர் மிகுந்த தட்சணைகளுடன் வேள்விகளால் விண்ணோரை யிறைஞ்சினார்; அளவிலாத் தனங்களால் அவர்களுக்குத் திருப்தியையுங் கொடுத்தனர்; அங்ஙனமாயினும் அவர் பயமிலாத பரமுத்தியையே யடைந்தனர்; புண்ணிய பயனை நுகரப் பிறப்புற்றிலர், என்பது காண்வ சுருதியின் வாக்காம், (இது புண்ணியம் பற்றாமைக்குவமை). (98)

ஆகையால், ஆன்ம ஞானி, இந்திரன் போன்று பாவத்தால் ஒரு கேட்டையுமடையான், சனகர் போன்று புண்ணியத்தால் நன்மையையுமடையான் என்னை? அவன், அந்தோ! யான் பாவஞ் செய்தேன், அந்தோ! யான் புண்ணியஞ் செய்திலேன் எனத் துன்புறான் ஆதலின் என்க. (99)

ஆகையால், நன் மதியோய், இவ் வுடம்புடனே காம நூலைக் கற்றாலும் தோடமொன்றுமில்லை; யானோ, ஆன்றோர் மரபைப் பாதுகாப்பாற்றுதற் பொருட்டு வேறோருடம்பு கொண்டே அதையுங் கற்க முயல்கின்றேன், என, (100)

பெரும் புகழுடைய அச்சங்கரபகவற்பாதர், இவ்வாறு, பவ பயத்தை அடியோடு தொலைக்கும் உண்மைச் சரிதங்களைக் கூறிவிட்டு, காலால் நடப்போர்களால் அடைதற்கரிய ஒரு கிரியினுச்சியை யடைந்து மறித்தும், கீழ் வருமாறு திருவாய் மலர்ந்தருளினார். (101)

சங்கரபகவற்பாதர் மாணுக்கர்களை நோக்கி, சீடர்காள், முன் பக்கத்தில், சமவிடமாயும், விசாலமாயுமுள்ள கல்லுடைய குகை யொன்று தோற்றுகின்றது; அதை நோக்குவீர்களாக; அக் குகையின் உட் பூமியில், கனிகளின் பாரத்தால் வளைந்த தருக்கள் சூழ்ந்த அழகிய கரையுள்ளதும், தெளிந்த நீருடையதுமாகிய தடாகமொன்று காணப்படுகின்றது; அதையும் நீவிர் பார்ப்பீர்களாக. (102)

தோடமின்றிய குணமுடையோர்களே, நீவிர், இக் குகையின் கண் வசிப்பீர்களாக; யான் என்னுடைய உடம்பை இங்கு வைத்து விட்டு காம கலை யறிதற்குரிய தேகமொன்றை யடைந்து அதிலிருந்தே மாறுபாடாக காம கலையை அநுபவிக்கச் செல்கின்றேன், இங்கு வசிக்கின்ற உம்மால் என்னுடம்பு கவனத்தோடு காப்பாற்றத் தக்கது." (103)

என, மிகுந்த யோகவலியுடைய துறந்தாரிற் சிறந்த சங்கரபகவற்பாதர், தமது மாணுக்கருக்கு அநுமதி கொடுத்துவிட்டு, அக் குகையின் கண் தமது திருமேனியை இருத்திவிட்டு சூட்சும உடம்புடன் அவ் வமருக அரசனது உடலை யடைந்தனர். (104)

பின்னர், அவ் வுடம்பின் காலின் பெரு விரற்றொடங்கி பிராணனை மேலே வாங்கி பிரமரந்திரத்தால் வெளிச் சென்று யோக முணர்ந்த அவர், அவ் வரசனுடைய உடலில் பிரமரந்திர மார்க்கமாய்ப் புகுந்து காலின் நுனி வரையில் வியாபித்தனர். (105)

### இறந்து கிடந்த அமருக வேந்தன் உயிர் பெற்றேழல்

உயிர் துறந்து கிடந்த அவ் வேந்தன் உடம்பில், மெதுவாக இதயந் துடித்தது ; பின்னர் கண்கள் திறந்தன ; இம் முறையாகவே (அங்கங்களசைவுடையனவாகி) அவ் வேந்தன் முன் போலவே உயிர்த்தெழுந்தான். (106)

உடனே, உயிர் பெற்றெழுந்த தங்களுடைய கொழுநனைக் கண்ட அவனது மனைவிமார்கள், அருணன் உதித்ததால் விரிந்த கமல மலர்களையுடையதும், அன்னப் புள்ளின் ஒலிகளையுடையது மாகிய புட்கரணி விளங்குவது போல, களிப்பினுலெழும் இன்னொலி யுடையவர்களாகவும், அழகிய கமல மலர் போன்ற முகமுடையவர்களாகவும் விளங்கினுர்கள். (107)

அவ் வரசனது, சிறந்த அமைச்சர்களும், மன்னன் மனைவிமார்களும் மட்டுக்கடங்காத மகிழ்ச்சி யுற்றதையும், அரசன் உயிர் பெற்றெழுந்ததையுங் கண்டு, ஆனந்த மேலிட்டவராய், சங்கம், தம்மட்டம், இரண பேரிகை முதலான வாத்தியங்களை முழக்கினுர்கள் ; அவ் வாத்தியங்களினிருந்து உண்டாகிய பேரொலி மண்ணையும், விண்ணையுஞ் செவிடாக்கியது. (108)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கரதிக்கு விசயச் சுருக்கத்தில் முற்றுணர்விற்கு
உபாயந் தேடலை மேற்கொண்ட
ஒன்பதாவது சருக்கம்

முற்றும்.

---

# பத்தாவது சருக்கம்

## உயிர் பெற்ற அமருகவேந்தன் இராச்சிய மாளல்

அதன் பின்னர், (அரசன் உயிர் துறந்து பிழைத்ததைப்பற்றி அந்தணப் பெரியாரால் பரிகாரஞ் செய்வித்தார்கள்) அவ்வாறு பரிகாரஞ்செய்துவைத்த அமைச்சர், புரோகிதர் முதலானவர்களால், அவ்வரசன், பொருந்துமாறு அலங்கரிக்கப்பட்டு, நல்ல யானையின்மீது நகர்வலம் வந்தனன். (1)

பின்னர், பெருமித குணங்கள் நிறைந்த அச்சங்கர பகவற்பாதர், அந் நகரத்திலுள்ள பிரசைகளால் உபசார வார்த்தைகள் கூறப்பட்டவராயும், முன்னிருந்த அரசனைப் போன்றே ஆணைசெலுத்துகின்றவ ராயுமிருந்து, மனத்திற் கிசைந்த மந்திரிகளுடன், வாசவன் வானுலகை யாள்வதுபோல் இராச்சியத்தை ஆண்டு வந்தனர். (2)

## அமைச்சர்கள், தம்முள் ஆலோசித்தல்

இவ்வாறு, துறந்தார்களுக்கு அரசராகிய சங்கரபகவற்பாதர், சிறந்த மாந்தர்களுக்கு இறைவராந் தன்மையைப் பெற்று தரையை ஆண்டு வருங் காலத்தில், கூரிய மதியுடைய சீரிய அமைச்சர்கள் ஐய மிக்குடையாராய், கீழ்வருமாறு தம்முட்பேசிக் கொண்டனர். (3)

“ இவ் வேந்தர், இறந்துபோய் மீண்டு மெழுந்தனர்; அங்ஙனமாகிலும், மந்திரி முதலான பிரசைகளின் பாக்கிய வசத்தால் தோன்றின திவ்ய குணங்களனைத்தையு முடைய இவர் முன்போல் காணப்பட்டிலர். (4)

இவர், இரப்போருக்கு யயாதி அரசன் போன்று இருந்தன மளிக்கின்றார், பெரும்பொருளுணர்ந்த இவர், பிருகற்பதிபோற் பேசுகின்றார், வேற்றரசர்களை அருச்சுனனைப் போல வெல்கின்றார் ; உமாபதிபோன்று எல்லாவற்றையு முணர்கின்றார். (5)

ஈகை, பராக்கிரமங்கள், நிறைந்த படைக்கலப் பயிற்சி, பெரும் ஆபத்திலும் அறிவு கலங்காமை, முதலான பிறரடைதற்கரிய பெருங் குணங்களால் இவ்வேந்தர் எப்போதும் ஆதியாகிய பரமான்மாவைப் போலவே விளங்குகின்றார். (6)

இள வேனிற் காலமல்லாத காலத்தும், தருக்கள் அருமலர்களைப் பூக்கின்றன ; எருமைகளும், கோக்களும், நிறையப் பால் தருகின்றன, தரை தருவன மழையால் தண் பயிர்களை வளர்க்கின்றது, பிரசைகளனைவரும் தமக்குக் கட்டளையிட்ட கருமங்களில் ஒருப்பட்டவர்களா யிருக்கின்றார்கள். (7)

கலியுகம், தோடங்களனைத்தையுங் கொடுப்பதாயிருப்பினும், இவருடைய பிரபாவத்தால் இக்காலம் திரேதா யுகத்தினுஞ் சிறந்ததாயிற்று; ஆகையால் திருவாளர் யாரோ ஒருவர் நமது அரசருடலிற் புகுந்து அம்புவியை ஆள்கின்றனர். (8)

ஆகையால், குணக்கடலாகிய இவர், முன்னுள்ள தமது தேகத்தை யடையாத வகையை நாம் செய்வோம் ; என அம்மந்திரிகள் தம்முள் நிச்சயித்துக்கொண்டு, பூமியின் கண் மநுடதேகம் ஏதாகினும் இறந்துகிடக்கின், ஆலோசிக்காமல், விரைவில் அதைச் சுட்டு விடுவீர்களாக என, அம்மந்திரிகள் இரகசியமாய் தொழிலாளர்களை யனுப்பினர். (9, 10)

## சங்கரபகவற்பாதர் விடயபோகந் துய்த்தல்

அதன் பின்னர், அவ்வேந்தர், இராச்சிய பாரத்தை, மிகுந்த உண்மையோரான மந்திரிகளிடத்தில் ஒப்புவித்து விட்டு, அம் மன்னன் றேவிகளுடன், வேற்றரசர்களுக் கெட்டாத வியப்பான போகங்களைத் துய்த்தனர். (11)

வெண்மைக் கிரணங்களையுடைய படிகக் கல்லாலமைத்த அழகு மலிந்த அறைகளுள்ள உப்பரிகையில், மன்னரும், மன்னரது தேவிமார்களும், ஒருவரை யொருவர் வெற்றி கொள்ளில், அதரஞ்சுவைத்தல், கட்டியணைத்தல், பெரிய நெய்த மலராலடித்தல், மாறுய்ப்புணர்தல், என்பவைகளை அவ்வரசர் ஒட்டம் வைத்து, அத்தருணிகளுடன் சொக்கட்டாடினர். (12)

மதியின் நிழல் படலால் சுத்தமானதும், இதழிலூறும் அமுதத்தோடு கலந்ததால் மிகுந்த இன்சுவை யுடையதும், வாயினின்று கிளம்புங்காற்று எதிரிட்டடித்தலின் நறு மண முள்ளதும், பெண்களின் கைகளாற் கொடுக்கப் பட்டமையின் மிகப்பிரிய மானதும், வெறியைக் கொடுப்பதுமாகிய மதுவை, விரும்பியவாறே பிரியமாய்ப் பொற் பாத்திரத்தில் வார்த்துக் குடித்து அவ்வரசர் மனைவிமார்களுடன் திருப்தியடைந்தார். (13)

மது மயக்கத்தால் எழுத்துக்கள் குறைவுபட்டதும், குறு வேர்வையை யுடையதுமாகிய பேச்சுடையதும், மயிர்க்கூச் செறிதலை யுடையதும், உச், உச், என்னுமொரு ஒலியையுடையனவும், கமலமலரின் நறுமணங் கமழ்வனவும், சிறிது திறந்த கண்களையுடையனவும், அவிழ்ந்த கூந்தலை யுடையனவும், காமப்பெருக்கை யுடையனவும், சிறிது நாண முடையனவுமான அம் மங்கையர்களின் முகங்களை

முத்தமிட்டு அதரபானமும் பண்ணி அவ்வரசர் கிருத கிருத்தியரானார். (14)

தொடையைத் தோற்றுவித்திருத்தல், அதரத்தை மடித்தல், கொங்கைகள் குலுங்கல், உற்சாகமுறல், மணிமேகலை யசைதல், மாறுகிய தொழிற்படல், தேகமாடல், வேறெண்ணங் கொண்டு பேசல், என்னு மிவைகளால் அவ்வரசருக்குச் சொல்ல முடியாத காமவின்பந் தோன்றியது. (15)

காம நூற் கற்றவரும், மனதிற்கிசைந்த சேட்டையைச் செய்பவரும், விடயங்கள் யாவற்றிலும் இந்திரியங்களைச் செலுத்தியவரும், இடையறுது நல்லார்களைத் தழுவியவரும் குருவாகிய கொங்கை யுபாசனையால் மனத்தை ஒரு வழிப்படுத்திய வருமாகிய, அவ்வரசர் புணர்ச்சி மிகுந்த பிரமானந்தத்தைத் தடையிலாது நுகர்ந்தனர். (குருவாகிய கொங்கை=பெருத்த கொங்கை). (16)

வாச்சியாயன முனிவரியற்றிய காமநூலுணர்ந்த கவிகளுடன் கலந்து ஆராய்ந்து கொண்டு அவ் வமருக வேந்தன், முன்னர் விடயங்களை யநுபவித்ததுபோன்று, அக் காமநூல்களைத் தாமும் பார்த்து அநுபவித்தனர். (17)

அன்றியும், வாச்சியாயன முனிவரியற்றின காமசூத்திரங்களையும், பாடியங்களையும், நன்காராய்ந்து, அமருக வேடங் கொண்ட தாமும், புதிதான பொருள்களடங்கிய 'அமருகம்' என்னும் பெயருள்ள ஒருகாமநூலையு மியற்றினர், (ஈண்டுத்; " திரிவர்க்கப் பிரதிபத்தி, " என்பது முதலாக, 'பிரணய கலகம்' என்பதீறுய இருபத்தொரு காம நூல்களும் ஏனைய பாடியங்களும், வாச்சியாயன முனிவரியற்றின காமநூல்க ளென்பதுணர்க). (18)

## சங்கரபகவற்பாதரின் மாணாக்கர் வருந்தல்

துறந்தார்களுக்கரசராகிய சங்கரபகவற்பாதர், அமருக னுடலிற் புகுந்து அம் மன்னரது தேவிமார்களுடன் கிரீடித்துக் கொண்டிருக்குங்கால், மலைக் குகையின் கண் அவருடைய திருமேனியைப் பாதுகாத்துக் கொண்டிருந்த மாணாக்கர் சங்கரபகவற்பாதர், முன்னர்க் குறிப்பித்த காலங் கடந்து போனது கண்டு, கீழ் வருமாறு தம்முட் பேசிக் கொண்டனர். (19)

நமது ஆசிரியரால் ஒரு திங்களே எல்லை வைக்கப்பட்டது; அதுவோ கழிந்தது; மேலும் ஐந்தாறு தினங்களாயின; இப்போதேனும் தமது தேகத்தையடைந்து எங்களை ஒரு நாதருடையவர்களாகச் செய்ய அவருடைய திருவுளத்தில் தயையுண்டாக வில்லைபோலும் (யாங்கள் அநாதராயிருக்கின்றோம், எமது நாதர் எப்போது வருவாரோ என்றிரங்கல்). (20)

யாங்கள் என் செய்வோம்? எங்குத் தேடுவோம்? யாண்டுச் செல்வோம்? எமது நாதர் இங்கே யிருக்கின்றார் என தெரிந்து சொல்பவர் யார்? கடலெல்லை யுற்ற தரை யிடங்களில் எங்கு தேடினும், வேறோர் உடம்பில் மறைந்திருக்கின்ற அவரைத் தெரிந்து கொள்ள எவ்வண்ணஞ் சமர்த்தராவோம்? (21)

கருணாநிதியாகிய அக் குருநாதர் இப்போது எம்முன் தோற்றாரேல், எங்களிடத்துள்ள கருணையையே விட்டவராயினர், ஆகையால் அவரைச் சரணடைந்தவர்களும், துன்பத்தைத் தொலைக்கும் இவ்வான்ம நிலையை விட்டவர்களுமான, நமக்கு உலகில் எங்கே கதி? (22)

இந்திரியங்களினத்தின் சடத் தன்மையை நீக்குகின்ற புதிய களிப்பை அடிக்கடி பெருக்கச் செய்வதும் எப்பொழுதும் இரசோகுணமென்னுந் தூசுக்கள் படியாத திருவடிக் கமலங்களைப் பற்றியதாற் சிறந்ததும், தடையின்றித் தோன்றும் பாவங்களைப் போக்குவதுமாகிய, எல்லையிலா வாசனையை மனத்திற் கொண்டே பாவித்துக் கொண்டிருக்கின்றோம். (ஆசிரியரின் அடிக் கமலத்தின் பாவனு வாசனையே பிழைக்குஞ் சாதனமா மென்றிரங்கல்). (23)

சத்துவ குணமென்னுங் கற்பகத் தருவிற் கனிகளிருப்பன போன்றும், யோக சம்பத்துக்கள் பரிணமித்தன போன்றும், தத்துவ உறுதிப்பாட்டில் உடம்புடையார் போன்றும், ஆன்ம வூதியத்தில் தனமுடையார் போன்றும், உபசாந்தமாகிய காந்தையின்கண் குடும்பமுடையார் போன்றும், எல்லாப் பிரதாபங்களாலும் அன்னியமின்றி யாங்கள் (அவருடைமைகளாகவே விளங்குகின்ற யாங்கள்) உண்மையாக ஓர் காலத்திலேனும் அவருடைய அநுக்கிரகத்தைப் பெறுவோம். (24, 25)

தீயோர்களின் நுண்ணறிவிலாமையைத் தேய்த்தும், நல்லோர்களுடைய குடும்ப வெப்பத்திலுள்ள புத்தியின் வேகத்தைத் தடுத்தும், ஞானிகளினும், யோகிகளினுஞ் சிறந்து உலகில் விளங்கும் சங்கரபகவற்பாத தேசிகர் எனக்குக் கதி கொடுப்பார். (26)

மோகமென்னும் அஞ்ஞான இருளொழிந்த எவரைச் சரணடைந்து எதிர்கள் (முயற்சி யுள்ளார்) மாயா காரியங்களை விட்டவர்களாகின்றனரோ, அத்தன்மைய சங்கர

பகவற்பாத தேசிகருடைய அமுதமியும் அருட் கண் நோக்க மார்க்கத்தில் யாங்கள் அகப்படுவோமாகின், அக்கணமே துன்பக் கடலைக் கடந்தவர்களாவோம். (27)

புண்ணிய பாவங்களை வேறுபடுத்தும், ஒளியுள்ள நோக்கைப் பிழிந்து இரசமெடுப்பதும், மதமென்னும் இராக்கால இருளிற் செல்லும் மத வாதிகளான வழி நடப்போரின் பேச்சின் இடம்பத்தை வாயிற் போட்டுக்கொள்வதும், அநாதி யவித்தை யென்னுமிருளை யற வொழித்துப் பேதத்தைப் போக்குவதுமாகிய அத்துவிதீய நிலையை விளக்குகின்ற (உபதேசம் புரியும்) நீ மீண்டும் எப்போது கிடைப்பாயோ ? (28)

ஆசிரிய, நினது, தொண்டனுந் தன்மை யென்னும் முத்தியைக் கொடுக்கும் நின்னுடைய திருவாக்கால், திருவடிகளைப் போற்றுபவர்களின், மன வழுக்கை மாற்றும் நீ விரைவில் வராதிருப்பையேல், நினது தொண்டர்கள் அறிவுடையார்களாற் பழிக்கப் பட்டோர்களாய்த் துன்பத்தை விட்டவராகார் என்னுமிதை மறித்தும் உணர்வாயாக. என்னை நீ கொல்லாதே. (29)

பத்மபாதர் தைரியங் கூறல்.

இவ் வண்ணமாக தமது நண்பர்கள் வருந்துமிடத்து, துறந்தாருக்கரசராகிய சங்கரபகவற்பாதரின் மாகான்மியத்தை யறிந்த பத்மபாதர் பெரும் பொருள் அடங்கிய வாக்கியங்களால் அவர்களுடைய வருத்தங்களை சாந்தப் படுத்தி அவர்களுக்குக் கீழ் வருமாறு கூறினர். (30)

நண்பர்காள், நாம், அதைரியப்பட்டது போதும், உற்சாகத்துடன் அச் சங்கரபகவற்பாதர் மறையப்பட்டவரா

யிருக்கின்றாராதலின், தரையனைத்தையும், பாதாளத்தையும், சுவர்க்கத்தையும், மாந்தர் முதலியோர்களிடத்தும், மறைந்திருக்கின்ற மகாதேவரை (பரசிவனை)த் தேடுவது போன்று தேடிப் பார்ப்போம். (31)

வெறுப்பற்ற மனமுடையார், பெருமுயற்சி செய்து அடைதற்கரிய பொருளையும் ஒருதலையாக அடைவார்கள், எண்ணிலாத் தடைகளால் கேடுற்ற தேவர்கள் வெறுப்பற்றவர்களா யிருந்தன்றோ, அமுதத்தையுமடைந்தார்கள். (32)

நமது ஆசிரியர் வேறோருடலில் மறைந்திருப்பவர் ஆதலின் தேடுதற்கரியரே யாவர்; ஆயினும், இராகுவால் மறைக்கப்பட்ட இந்துவைப் போன்று, அவருடைய விளக்கமான குணங்களால் அவர் அறிதற்குரியரே யாவர். (33)

தீ போன்ற தேசுடையவரும், மையலொழிந்தோர்களில் மணி போன்றோருமாகிய, இந்திரியத்தை வென்ற சங்கரபகவற்பாத தேசிகர், கரும்பு வில்லானின் கலையுணரும் விருப்பால் வெளிப்பட்டுள்ளார் ஆதலின், சுழலுகின்ற மான் கண்ணார்களுக்கிட மாகியதும், காமநூலுணர்தற் குரியதுமாகிய ஒரு அரசனுடம்பையே அடைந்திருப்பர். (34)

எப்போதும் நிறைந்த மனமுடையார்களிற் சிறந்தார் (சங்கரபகவற்பாதர்) வசித்துக் கொண்டிருக்குமிடத்தில் உயிர்கள் இன்புற்றிருப்பார்கள்; அவர்கள் வியாதி முதலிய பீடைகளைக் காணவே மாட்டார்கள்; கள்ளர் பயங் கனவிலுமொழிந்தவராவர்; தங்களுடைய தருமங்களில் இன்புறுவார்கள்; இந்திரன் நந்தலின்றி மழையைப் பெய்விப்பான். விளை நிலம் விளைந்ததைக் கொடுக்கும். (35)

ஆகையால் நாம் கரையிலாத பவக் கடலுக்கு அணையான ஆசிரியரின் திருவடிக் கமலங்களை, சோம்பலொழித்துத் தேடுதற்குச் செல்வோம். இங்கே வீண் போது போக்கல் வேண்டாம். (36)

## சங்கரபகவற்பாதரை அவரது மாணுக்கர்கள் தேடுதல்

இவ்வாறு, பத்மபாதர் கூறின வார்த்தைகளை, மற்றையோர் யாவருங் கேட்டு (இவர் மாத்திரம் மிக்கப் பெரியாரோ ?) என்னுங் கருவத்தை விட்டவர்களாய் அவர் வார்த்தைகளைத் தங்கள் மனங்களில் ஊன்றிச் சங்கரபகவற்பாதரின் சிறந்த அவ் வுடலைப் பாதுகாப்பதற்குத் தங்களுள் ஒருவரை மாத்திரம் அங்கே யிருத்தி விட்டு வெளிக் கிளம்பினார்கள். (37)

கிளம்பிய அவர்கள் மலைகளினின்று மலைகள் தோறும் தேசங்களிலிருந்து தேசங்கள் தோறுஞ் சென்று கடல் சூழ்ந்த பூமிகள், என்னும் இடங்களெங்குந் தேடிச் சலித்தவர்களாய், பண்ணவரின் இல்லங்களையும் பழிக்கத் தக்க (மாளிகைகள் மலிந்த) அழகிய அமருக வேந்தனுடைய தேசத்தை யடைந்தார்கள். (38)

பின்னர், அவர்கள், அத் தேசத்தில், "திலீபனென்னுமொரு அரசனைப் போன்று சிறப்புடைய இத் தேசத்து அரசர் இறந்துபோய் மீண்டும் உயிர் பெற்றெழுந்தனர்," என்னும் உலக வதந்தியைக் கேட்டு, ஆசிரியரைப் பிரிந்ததாலுண்டாகிய பெரிய ஏழ்மைத் தன்மை நீங்கியவர்களாய் அவர் ஒருதலையாக நமது ஆசிரியரே யென எண்ணி, தைரியத்தை யடைந்தார்கள். (39)

மற்றும், அவர்கள், அமருக வேந்தன் பாடலிற் பிரியன், மங்கையர்பால் மையல் மிக்கான், என வுணர்ந்து, அதினின்று அங்குள்ள விசேடங்களனைத்தையும் தெரிந்து கொண்டவர்களாய், பாடகர் வேடந் தரித்துக்கொண்டு அவ் வரசனது நகரத்திற் புகுந்தனர். (40)

அங்கு, அவர்கள் அவ் வேந்தரைக் கைக் கொள்ளல் வேண்டும் என்னும் அரிய யுத்திகளை யுடையவராய் அவர்பால் தங்களுடைய பாடுந் திறமைகளைக் காட்டி நட்சத்திரங்களாற் சூழப்பட்ட சந்திரன் போன்று நூற்றுக் கணக்கான தமது மனைவியர்களின் நடுவிலிருப்பவரும், அழகான வெண் சாமரங்களைக் கையிற் கொண்ட தருண மாதர்களின் கைகளி லணிந்துள்ள கங்கணங்களால் அழகு வாய்ந்ததும், இரம்மியமானதுமாகிய பின் பக்கத்தை யுடையவரும், சங்கீத நிலைமைகளை யுணர்ந்தாரின் செவிக்கின்பம் விளைவிக்கும் இசைச் சுரங்களின் பேத முறைகளால் நன்கு விளங்கப்பட்ட முன் பக்கத்தை யுடையவரும். (41, 42)

பொன் தடியை யுடைய வெள்ளைக் கவிகையைத் தாங்கியதால் அழகு வாய்ந்த இரத்தினக் கிரீடத்தை யணிந்தவரும், மன்மதனே ஒரு வடிவெடுத்தாற் போன்றவரும், மன்னன் தேவிகள் வாழ்கின்ற மாளிகையுடன் மண்ணிடத்தை யடைந்த இந்திரனைப் போன்றவருமாகிய அமருக வேந்தரைக் கண்டார்கள். (43)

### பத்மபாதர் முதலான மாணுக்கர் அமருக வேந்தராயிருக்கும் சங்கரபகவற்பாதருக்கு அறிவுறுத்தல்

அழகான வேடமுள்ள அவர்கள் அவ் வரசரது அவையையடைந்து அவ் வரசர் தமது கண் சாடையாலளிக்கப் பட்ட ஆசனங்களிலிருந்த பின்னர், வேந்தரது அநுமதி

கொண்டு எழுவகைச் சுவரங்களின் ஏற்றல், இறக்கல், கூட்டல், முதலானவைகளை நன்குணர்ந்தவர்களும், பாடகர் வேடந் தாங்கினவர்களுமான பத்மபாதர் முதலானவர்கள் அவ்வரச சபை மயங்குமாறு செய்பவர்களாய் இன்னிசைக் கீதத்தைக் கீழ் வரும் பொருள் விளங்குமாறு பாடினார்கள். (44)

வண்டே, (சுருதி, சூத்திரங்களென்னும் அரிய பூந்தேனை யுண்போய்) நீ, உனது மாணுக்கர் சங்கத்தை யொழித்து தருக்களடர்ந்த மலையினுச்சியில் நினது திருமேனியைக் கிடத்தி விட்டு, அதைக் காக்கும் பொருட்டு அங்கு நிறுத்தின நினது மாணுக்கர்கள் உன்னைப் பிரிந்ததால் மன வருத்தமுடையராய்ப் பெருந் துன்புற்றார்கள். (45)

காமனது கலையைக் கண்டுணருதற் பொருட்டு, முன்னுள்ள ஒரு உடம்பைக் கழற்றி வைத்து விட்டு இங்கு ஒரு வுலகத்தையே கற்பித்துக் கொண்டாய்; மாந்தரிற் சிறந்தோய், மாதேவனையுமே போற்றாமல் நின்னையே ஒரு கதியென நினைத்திருந்தோம் ஆதலின், நீ எங்களை வஞ்சித்தாய். (46)

மதியொத்த முகத்தோய், அடக்க முதலிய முன்னுள்ள நற் குணங்களை நீக்கி, பெருங் கருவங் கொண்டு இப்பொருள் என்னுடையது என எண்ணுவதென்னை ? முன்னிலைமையை நீ நினைப்பாயாக. மையலொழிந்தோய், இனியாவது எனது பேச்சால் உனது வடிவத்தை நினைத்துப் பார்ப்பாயாக. (47)

இதுவன்று, இதுவன்று என்றற் றொடக்கத்து வாக்கியங்களால் உருவப் பொருள் அருவப் பொருளெல்லாவற்

றையுமொதுக்கி, தள்ளப்படாததும் அனைத்தையுந் தள்ளு வதுமாகிய எப்பொருளை அறிஞர் தாமாகவே யறிகின்றார் களோ, அந்தத் தத்துவமசி யென்னுந் தத்துவப் பொருளே நீ யாகின்றாய். (48)

வான் முதலான உலகை யுண்டாக்கி, அதிலுள்ள அன்னமயமுதலான, உமி மூடல்களில் பிரதி விம்ப வடிவாய் மறைந்திருந்ததை யுத்திகளென்னும் நெற் குத்தல்களால் வேறாக்கி அரிசி போன்று விளங்குகின்ற எப் பொருளை அறி ஞர்கள் தாமாயுணர்கின்றார்களோ, அந்த தத்துவமசி யென் னுந் தத்துவப் பொருளே நீ யாகின்றாய். (49)

விடயங்களின் ஒப்புரவற்ற தீய மார்க்கத்திற் செல்லும் இந்திரியங்களென்னுங் குதிரைகளை, தோட நோக்காகிய சவுக்கடியாற் றிருப்பி ஒருமைப்பட்ட மனோ விருத்தியாகிய கயிற்றால் எப் பொருளில் கட்டுகின்றார்களோ, அந்த தத் துவமசி யென்னுந் தத்துவப் பொருள் நீ யாகின்றாய். (50)

நனவு முதலான ஒவ்வொரு அவத்தைகளிலும் மாலை யில் நார் போல, அறிவாய்த் தொடர்ந்து நிற்பதெனை வுணர்ந்து அதை அவைகளினின்று வேறு பிரித்து மூன்று உபாதிகளினும் வேறாந் தன்மையால் எப்பொருளை அறிஞர் கள் தாமாகவே யறிகின்றார்களோ, அந்த தத்துவமசி யென்னுந் தத்துவப்பொருள் நீ யாகின்றாய். (51)

"இவ்வனைத்தும் புருடனே யாவன்" என்றற்றொடக் கத்து மறை மொழிகள், முடி முதலான பணிகளில் தன்மய மாகிய பொன்னது போல், எல்லாவற்றிற்குங் காரணமாந் தன்மையால் எல்லாமாமென எப்பொருளைக் கூறுகின்றன

வோ, அறிஞர்கள் தானுணரும் அந்த, தத்துவமசி யென்னுந் தத்துவப் பொருளே நீயாகின்றாய். (52)

வேத முணர்ந்த அறிஞர்கள், இத் தேகத்தில் நான் என அபிமானிப்பதுவே இரவிமண்டலத்திலிருப்பதாகும். இரவி மண்டலத்திலிருப்பதுவே இத் தேகத்திலுள்ள நான் என்பதாம் என, மாற்றி மாற்றி அறிஞர்கள் எதைச் சிந்திக்கின்றார்களோ, அந்த, தத்துவமசி யென்னுந் தத்துவப் பொருளே நீயாகின்றாய். (53)

மறை மொழியாலும், தான தருமங்களாலும், நற் கருமங்களாலும், அழுக்கற்ற மனத்தாலும், பக்குவர்களான, அறிஞர்கள் எதை அறிய விரும்புகின்றார்களோ, அந்த தத்துவமசி யென்னுந் தத்துவப் பொருளே நீ யாகின்றாய். (54)

ஆற்றலுள்ளார், சம, தம, முதலான சாதனங்களால் புத்தியாலாராய்ந்து தன்னைச் சச்சிதானந்தமென்றறிந்து செயற்பாலன செய்தவர்களாய், இன்ப துன்பங்களையும், ஒழிக்கின்றார்களோ, அந்த தத்துவமசி யென்னுந் தத்துவப்பொருள் நீயாகின்றாய். (55)

இவ்வாறு, பரமான்ம தத்துவத்தை விதந்து கூறும் பாடல்களை இன்னிசையுடன் அவர்கள் பாடியதை அவ் வமருக அரசன் கேட்டு · இனிமேல் யாம் செய்வதென்னென்று அறியாதவராய் அவர்களை மனத் திருப்தியுடன் அனுப்பி விட்டனன். (56)

## சங்கரபகவற்பாதர் தனது தேகமடைதல்

பின்னர் அவையின்கண் பத்மபாதர் முதலியோர்களால் அறிவுறுத்தப்பட்ட அவ் வாசிரியேந்திராகிய சங்கரபகவற்

பாதர், திடீரென மூர்ச்சித்து அவ் வமருக வேந்தனுடலி னின்று வெளிச் சென்று முற்கூறிய முறையாகவே தமது தேகத்தை யடைந்தனர். அடைந்தவுடன் முன் போன்றே அச் சங்கரபகவற்பாதர் நன்றுமெழுந்தனர். (57)

இவ்வாறெழுந்து, அமருக வேந்தனுடைய உடம்பி லிருந்து சங்கரபகவற்பாதர் வெளிப் போந்தபின்னர், முன்பு மந்திரிகளாலேவப்பட்ட தொழிலாளிகள், அவருடைய திரு மேனி வைத்திருந்த மலைக் குகையை யடைந்து (அங்கு அவ் வுடலைப் பாதுகாத்திருந்த அவரது மாணுக்கர் நிட்டையி லிருக்குங் காலம் நோக்கி அவ் வுடலில் தீ மூட்டினார்கள்) மூட்டிய தீயால் தமதுடம்பு வேகின்றதைக் கண்டு யோகத் தில் வல்லுநராகிய அச் சங்கரபகவற்பாதர் விரைவாகத் தமதுடலிற் கலந்து கொண்டனர். (58)

உடனே ஆன்ம ஞானிகளிற் சிறந்த அச் சங்கரபகவற் பாதர் தமது உடலிற் பற்றிய, தீ, அடங்குதற் பொருட்டு, சரண் புகத் தக்கதும், கீழ் நோக்கான கண்களை யுடையது மாகிய நரசிம்ம மூர்த்தியை எளிய பதங்களைத் தொடுத்த துதிகளால் கீழ் வருமாறு துதித்தனர். (59)

## சங்கரபகவற்பாதர்
## நரசிம்ம மூர்த்தியைத் துதித்தல்

(1) பாற்கடலிற் பள்ளி கொள்வோய், சக்கரந் தாங் கினேய், ஆதிசேடனது மணிகளால் அணியுற்ற புண்ணிய மூர்த்தியே, யோகீந்திரனே, நித்தியோய், சரண் புகத்தக் கோய், பவக்கடற்குப்புணையோய், இலக்குமி நரசிம்ம, எனக்கு நீ கை கொடுப்பாயாக.

(2) பிரமன், இந்திரன், உருத்திரன், மருத்து, சூரியன், என்பவர்களின் முடிகளால் உராயப்பட்ட திருவடிகளிலுள்ள கமலமலர்க் காந்தியுடையோய், இலக்குமியின் அழகிய கொங்கை யென்னுங் கமலமலருக்குச் சிறந்த அன்னமே, நரசிம்ம மூர்த்தியே, எனக்கு நீ கை கொடுப்பாயாக.

(3) முரன் என்னும் அசுரனைக்கடிந்தோய், பந்தமென்னும் கொடிய வனத்தில் திரிகின்றவனும், காமமிருகமென்னும் அச்சந் தரும் மிருகத்தாற் பீடிக்கப்பட்டவனும், துன்புற்றோனும், மச்சரமென்னும் முதுவேனிற் கால வெய்யிலால் வருத்தப்பட்டோனுமாகிய எனக்கு நரசிம்ம மூர்த்தியே, நீ கை கொடுப்பாயாக.

(4) கொடிய வெப்பத்திற்குக் காரணமாகிய பந்தமென்னுங் கிணற்றில் வீழ்ந்து நூற்றுக் கணக்கான துன்பங்களை யடைந்தவனும், எளியோனும், பெரிய ஆபத்தை யடைந்தோனுமாகிய எனக்கு, தேவ, இலக்குமி நரசிம்ம மூர்த்தியே, நீ கை கொடுப்பாயாக.

(5) பவக் கடலில், பெரிய பற்களை யுடைய காலன் என்னும் முதலையாற் பிடித்து விழுங்க, அதனாற் புண் பட்ட உருவத்தை யுடையவனும், சோகமுற்றவனும், இச்சையென்னும் அலைகளால் அலைக்கப்பட்டவனுமாகிய எனக்கு இலக்குமி நரசிம்ம மூர்த்தியே நீ கை கொடுப்பாயாக.

(6) பாவத்திற்கு மூலமானதும், கருமங்களென்னும் அநேக கிளைகளை யுடையதும், இந்திரியங்களென்னும் இலைகளை யுடையதும், காமமென்னும் மலரை யுடையதும், துன்பமாகிய கனியை யுடையதுமாகிய சம்சாரமென்னும் மரத்திலேறி கீழ் விழுந்த எனக்கு தயாளுவே, இலக்குமி நரசிம்ம மூர்த்தியே நீ கை கொடுப்பாயாக.

(7) பெரிய வாயையும், பயந்தருவதும், உக்கிரமாகியதும், கூரியதும், வளைந்ததும், விஷமுடையது மாகிய பற்களையுமுடைய சம்சாரமென்னும் அரவத்தாற் கடித்துக் கெட்டடைந்த உருவமுள்ள எனக்கு, கெருட வாகன, பாற் கடலில் வாழ்வோய், வாசுதேவ இலக்குமி நரசிம்ம மூர்த்தியே நீ கை கொடுப்பாயாக.

(8) சம்சாரமென்னுங் காட்டுத் தீயின் சுவாலைகளாற் சுடப்பட்ட தேகமுடையனும், நினது திருவடிக் கமலங்களென்னுந் தடாகத்தை யடைந்த எனக்கு, இலக்குமி நரசிம்ம, நீ கை கொடுப்பாயாக.

(9) இந்திரிய விடயங்களனைத்திலும் விருப்புற்றவனும் சம்சாரமாகிய வலைக்குள் சிக்கியவனும், மிகுந்த நாவெழுச்சியுடைய சிரசுள்ள மீனைப்போன்றவனுமாகிய எனக்குச் சகந்நிவாச, இலக்குமி நரசிம்ம, நீ கை கொடுப்பாயாக.

(10) சம்சாரமாகிய வலிய யானையால் அடி பட்ட மருமத்தானங்களை யுடைய தேகமுடையவனும், பிறப்பிறப்புத் துன்பங்களால் நிறையப்பட்டவனுமாகிய எனக்குப் பீடைகளனைத்தையும் போக்குவாய். இலக்குமி நரசிம்ம, நீ கை கொடுப்பாயாக.

(11) வலி மிக்க இந்திரியங்களென்னும் கள்ளரால் விவேகமென்னும் பெருந்தனங் கொள்ளையிடப்பட்டு மோகமென்னும் இருட் கிணற்றில் வீழ்ந்து கிடக்கும் குருடனாகிய எனக்கு இலக்குமி நரசிம்ம, நீ கை கொடுப்பாயாக.

(12) இலக்குமி கொழுந, உந்திக் கமலத்த, தேவர்களுக் கிறைவ, வைகுண்டவாச, கிருஷ்ண, மதுசூதன, கமலக்கண்ண, பிரமத்தன்மைய, கேசவ, சனார்த்தன, வாசுதேவ, தேவேசனாகிய விஷ்ணுவே, உலுத்தனாகிய எனக்கு நீ கை கொடுப்பாயாக.

சங்கரபகவற்பாதர், இவ்வாறு துதித்த பின்னர் அந்த நரசிம்ம மூர்த்தியின் அருளால், கொழுந்து விட்டெரிந்த தீ அடங்கிய போது அவ் வுடலிற் புகுந்த அவர், இராகுவின் வாயினின்று இந்து வெளி வருவதுபோல், பெரிய அம் மலைக் குகையிலிருந்து வெளிவந்தனர். (60)

## சங்கரபகவற்பாதர் மண்டன பண்டிதரின் மனைக்குச் செல்லல்

அதன் பின், சமமென்னுந் தனமுடைய துறவி வேந்த ராகிய சங்கரபகவற்பாதர், நெடு நாட் பிரிந்தமையால் பெருந் துன்புற்ற மாணுக்கருடன், சனந்தனர் முதலியோர்களாற் சூழப்பட்ட சனகர் போன்று, மண்டன பண்டிதர் வீட் டிற்குப் போதல் வேண்டு மென்னும் வேட்கை கொண் டனர். (61)

உடனே, அவர், வான்வழியால் முன்கண்ட மண்ட னர் வீட்டையடைந்து, வேள்வி முதலான கருமங்களைச் செய்வோன் யான் என்னும் அபிமான மடங்கியவரும், விடயங்களென்னும் விடத்தில் வேட்கை யொழிந்தவரு மாகிய மண்டனர்பால் வானிலிருந்தபடியே திருக் கண் சாத்தி யருளினர். (62)

மண்டன பண்டிதரும், வானிலிருந்து இறங்கும், சங் கரபகவற்பாத தேசிகரை இனிதுநோக்கி, கைகுவித்து, தலை வணங்கினவராய் உரிய ஆராதனையாலிறைஞ்சி இமை மூடாத கண்களால் அவரை யுண்பவர் போன்று நின்று பார்த்தனர். (63)

பின் மனையின்பா லிறங்கி அவர் அமரவும், சத்தியமே கூறும் அம் மண்டனபண்டிதர், அந்தோ! எனது தேசிகரே என்னுடைய மனை, உடல், வேறுமுள்ள பொருள் யாவும்

தம்முடையனவே எனக் கூறிக்கொண்டு, துறந்தார்க் கரசரின் துணை மலரடியில் சாஷ்டாங்கமாய் பணிந்தனர்; அது கண்டு மகானாகிய சங்கரபகவற்பாதருங் களிப்புற்றனர். (64)

## உபயபாரதியார் யானுந் தோற்றுவிட்டேன் எனக் குறிப்பிட்டுக் கூறல்

பேரன்புடன் தமது கொழுநரால் முன்னரே ஆசனமளிக்கப் பெற்றவரும், அளித்த அவ் வாசனத்தில் அறிஞர்களுடன் அமர்ந்திருப்பவருமாகிய சங்கரபகவற்பாதரை, உபயபாரதியார் நோக்கிக் கீழ் வருமாறு கூறினர். (65)

ஆதியாங்குருவே, கல்விக்கெல்லாந் தலைவரும், ஆன்மாக்களுக்கெல்லாம் ஆதியாங் கடவுளும், பிரமனுக்கு இறைவனுமாகிய சதாசிவ மூர்த்தி நேராய்த் தாங்களேயாவீர். (66)

கருப்பு வில்லானுக்குக் காலரே, கழகத்தில் தாங்கள் காம கலையைப்பற்றி என்னை வெல்லாததும், அங்ஙனமே அக் கலைகளை யுணர முயன்றதும், ஈண்டு மானிட வுடல் பற்றிய கொள்கையேயாம். (இதில் என்னையும் வெல்லத்தக்க சிவ வடிவாயிருந்தும் இவ்வாறு செய்தது நடித்தல் மாத்திரமாம்; மற்றும், யானும், எனது, கொழுநரும் தோல்வியடைந்தோம் என உடன்பட்டுக் கொண்டமை குறிப்பாலுணர்த்தப்பட்டமை காண்க). (67)

மற்றும், பரமான்மாவே, தங்களால் நாங்களிருவரும் தோல்வியடைந்தது பழிப்பாகாது, என்னை? ஆராதிக்கத் தக்கோய், கதிரவனால், கலைமதி முதலானோர்களுக்கு உண்டாகிய தோல்வி உண்மையில் நிந்தைக்குக் காரணமாகாதது போன்றதால் என்க. (68)

## சங்கரபகவற்பாதர் உபயபாரதியாரை வேண்டிக் கோள்ளல்

உபயபாரதியார், சங்கரபகவற்பாதரை நோக்கி, "ஆராதிக்கத் தக்கோய், யான் முன்னிருந்த நிருமலமாகிய எனதிடத்திற்கே ஒருதலையாகப் போதல் வேண்டுமாதலின் அநுமதி தருவீராக," என அவரிடம் அநுமதி பெற்றுக் கொண்டு யோக வலியால் அந்தர்த்தானமாகிய (விண்ணில் மறைந்த) அவ் வம்மையாரை நோக்கி பாடியகாரர் கீழ் வருமாறு கூறினர். (69)

அம்மையாரே, தம்மை, இரணியகருப்பனது மனைவியாரெனவும், அட்ட மங்கல மூர்த்தியாகிய பரசிவனது சகோதரி யெனவும், ஆதியாகிய வாக்குத் தேவதை யெனவும், சைதன்ய மாத்திர வடிவுடையரா யிருந்தும், இவ் வுலகைப் பாதுகாக்க இலக்குமி முதலிய இனிய திரு வுருவத்தைக் கொண்டவரெனவும், யானறிவேன். (70)

ஆகையால், எம்மால் ஏற்படுத்தப்படும் சிருங்ககிரி முதலிய தமது இடங்களில் சாரதா தேவி என ஆராதிக்கப் படுபவரும், விரும்பிய பொருளைக் கொடுப்பவரும், தாமாக வே யிருந்து, அந்தத் தலங்களில் தம்மைச் சரணடைந்த நல்லார்களுக்குச் சாநித்தியராய் அருள் செய்து வருவீராக. (71)

## உபயபாரதியார் பிரமலோகத்திற்குச் சேல்லல்

அதைக் கேட்ட அவ் வுபயபாரதியாரும் அவ்வணமே யாகுக, என உடன்பட்டுக்கொண்டு தாம் விரும்பிய பிரம லோகத்திற்குச் சென்றனர்; அதைக் கண்டு அங்குள்ளாரனைவரும் உபயபாரதியார் காரணமொன்றுமின்றி மறைந்தமை பற்றி பெரு வியப்புற்றனர். (72)

மண்டனபண்டிதரும், துறந்தார்களுக் கரசராகிய சங்கரபகவற்பாதரால், தோல்வி யடைந்த தமது கொழுநர் துறவியாவர் என்பதால் (பதியை யிழந்த தன்மையால்) தரையை மிதிக்காத அவ் வம்மையார் வானில் மறந்ததைக் கண்டு களித்தனர். துறவி வேந்தரும் அதை நன்கு நோக்கி இன்புற்றனர். (73)

மண்டனர் சங்கரபகவற்பாதருக்கு மாணுக்கராதல்

மண்டனர், தமது தனங்களனைத்தையும், (பிரஜாபத்தியமென்னும் வேள்வியில்) தானம் பண்ணிவிட்டு, தமது ஆன்மாவின் கண்ணேயே அக்கினியைப் பாவனை பண்ணிக் கொண்டு ஈடணைகளற்றவராய்ச் சங்கரபகவற்பாதரை வழிபட்டு வந்தனர். (74)

சங்கரபகவற்பாதரும், துறவு விதி கூறும் கிருகிய சூத்திரப்படி விரைவாக (அறுகடன் முடித்தல் முதலான) கருமங்களை, அறிஞராகிய இம் மண்டனருக்குச் செய்து வைத்து குடும்ப துன்பங்களெல்லாமொழிவதற்கோர் குறியாயிருக்கின்ற தத்துவமசி என்னும் மகா வாக்கியத்தை அவரது செவியில் ஒருவாறாய் உபதேசித்தருளினர். (75)

மண்டனரும், விதிப்படி துறவைப் பெற்று ஐயமேற்றுண்டனர். பின்னர், ஆசிரியரிற் சிறந்த சங்கரபகவற்பாதர் அவருக்கு ஆன்ம தத்துவத்தை யுபதேசித்தருளினர். மற்றும், மறை முடியின் மீது மன்னுகின்ற தத்துவமசி என்பது முதலான மகா வாக்கியப் பொருளைக் கீழ் வருமாறு விரிவாய் உபதேசித்தனர். (76)

மண்டன, இவ் வுடம்பு நீயல்ல; இது, குடம் போன்று அநாத்மாவாம்; உருவ முதலியவைகளையும், சாதியையும்,

உடையதா மாதலாலானும், எனது உடம்பு, என, தனக்கு வேறாகப் பேதமாதல் வெளிப்படையாமாதலானும், (உடம்பே நான் என்னும்) அபேத வுணர்வோ, மயக்கத்தாலுண்டாகின்றது. (77)

கருமமான குட முதலானவைகள், (செயப்படு பொருள்கள்) அதினின்று வேறாகிய ஒரு கருத்தனை யுடையன; (எழுவாயை யுடையன) என்பது உறுதியாய்க் காணப்படுகின்றது. அத் தன்மைத்தாகிய இவ்வுடம்பும் காணப்படுகின்றதால், என்னும் ஏதுவால் உன்னைப் பார்க்கிலும் வேறாகப் பெறப்பட்டதாமாதலின் இவ் வுடம்பில் ஆன்மா என்னும் புத்தி எவ்வாறு பொருந்தும் (ஈண்டுக் காணப்படு பொருள், தனக்கு வேறாகிய காண்பானையுடையது, கட் புலப்படும் பொருளாதலின், குடம் போல் எனவரும் அநுமானமும், எது, எது, செயப்படு பொருளோ, அது, அது, தனக்கு வேறாகிய எழுவாயை யுடையது; குடத்தைப் போல், என்னும், அவிநாபாவ சம்பந்தமும், கொள்ளக்கிடந்தமை காண்க). (78)

இந்திரியங்களும் நீயன்று, உண்மையாகவோ, அவைகள் சாதனங்களே யாம். (கருவிகளே யாம்) கோடரி முதலானவைகள் போன்று ஆதலின் இவைகளிடத்து உனக்கு ஆன்மபாவம் எவ்வாறாம்? எனது, கண்கள் என, தனக்கு வேறுமென்னும் உணர்ச்சி தோன்றுவதாலும், இவைகள், கனவு முதலான அவத்தைகளில் இல்லாமையானும், குட முதலியன போன்றே இவைகளும் அநான்மாக்களே யாம். (79)

மற்றும், இந்திரியங்களின் கூட்டமே ஆன்மாவாமெனிலோ, அது பொருந்ாது ; என்னை ? அவைகளுள் ஒரு இந்

திரியங்கெடின், (கூட்டமுங் கேடுறுமாதலின்) அதில் ஆன்மா என்னும் புத்தியே இல்லாதொழிதல் வேண்டும். ஒவ்வோரிந்திரியமும் தனித்தனியே ஆன்மாவாமெனினும் இவ் வுடம்பு அநேக கருத்தர்களை யுடையதா மாதலின் கேடடையும். (80)

அன்றியும், கண் முதலியவைகளில் ஒவ்வொன்றும் ஆன்மாவாமென்பதிலோ, கண்ணொன்று கெடுங்கால், ஸ்மரித்தலென்பதே தோன்றாதொழியும். மற்றும், அநுபவமும், ஸ்மரணமும், ஒரு விடயத்தைப் பற்றியே நிற்பதாமாதலின், கண்ட அப்பொருளையே கேட்டேன் என்னும் ஸ்மரித்த பொருளின் பிரத்தியட்சமும், அதுவே இப்பொருள் என்னும், பிரத்திய பிஞ்ஞா பிரத்தியட்சமும் தோன்றுமலொழியும். (81)

மனதும் ஆன்மாவன்று, கருவியாமென்னும் ஏதுவாலும், மற்றும், எனது மனம் வேறோரிடத்திற் சென்றது என, தனக்கு வேறுமென்பது தோன்றலானும், சுழுத்தியவத்தையில் மனம் இல்லாமையானும், சைதன்யத்திற்கும் மனத்திற்கும், வேறுபாடிருக்கின்றது. (82)

இவ்வாற்றானே ஆன்மாவின் வேறாய்த் தள்ளப்பட்ட புத்தியும், பிரசித்தமாகிய ஆன்மாவன்று; என்னை? எனது புத்தி என, வேறுமென்னும் உணர்ச்சி காணப்படுதலானும், கரண முதலானவை போல, சுழுத்தியில் இல்லாததானும், மண்டன, இதில் நீ, ஆன்மா வென்னும் புத்தி வைக்காதே. (83)

அகங்காரமும், ஆன்மாவன்று; அகங்காரம் என்னும் பதத்தின் ஈற்றில், கார - செய்தல், என்னும் வினைச் சொற்

கூறப்படுதலின் (அகங்காரமென்பதோர் செய்கையாமாதலின் ஆன்மா அல்லவென்று முடித்துக் கொள்க). காரணமனைத்துமொடுங்கிய சுழுத்தியின்கண் இருத்தலால் ஆன்மாவெனக் கற்பித்தற்குரிய பிராணனும், எனது பிராணன் என உலகில் (தன்னில் வேறாய்) வழங்கி வருதலின் ஆன்மாவாகாது. (84)

இவ்வாறு (ஆன்மா தேகமுதலானவைகளினும் வேறானது என்பது காண்பாயாக) இம் மகா வாக்கியத்திலுள்ள துவம் (நீ) என்னும் பதத்தாற் கூறப்படும் பொருளோ, உடம்பு முதலானவைகளுடன் கூடிய ஆன்மாவாம். தத் (அது) என்னும் பதத்தாற் கூறப்படும் பொருளோ, உலகிற்குக் காரணமாகிய மாயையுடன் கூடிய பிரமம் ; இவ்வாறு இரண்டு பதங்களானும் கூறப்பட்ட பொருள்களுக்கு அசி, என்னும் பதத்தால் அபேதம் கொள்ளற்பாலதாம். (85)

மாணவர் வினா :—ஆசிரிய, முற்றுமுணர்தற் றன்மை மூடத் தன்மையுடையன என்னும் நிலைமையிலுள்ள அவ்விருவருக்கும், தத்துவமசி என்னும் வாக்கியம் ஒன்றாந்தன்மை கூறல் எவ்வாறாம்? இருளும், ஒளியும், அபேதமாதல் முன் கண்டதுமில்லை. இனிமேல் காணப்படுவதுமில்லை. (86)

(ஆசிரியர் விடை :—மைந்த, நீ வினவியது உண்மையே) அங்ஙனமாயினும் வாச்சியமென்னும் பதப்பொருள்களுக்கு விரோதமாந் தன்மையுண்டு, ஆயினும், 'அவனே யிவன்," என்பது போல் இத் தத்துவமசி யென்னும் வாக்கியத்திலும், உபாதிகளென்னும் விரோதக் கூறுகளை விலக்கி, அது நீ, என்னும் இரண்டு பதங்களின் அவிரோதமான கூறைக் கொண்டு இலக்கணா விருத்தியால் இலக்கியங்களுக்கு அபே

தம் போதிப்பதையே இவ் வாக்கியம் மேற் கொண்டதாமெனின், விரோதமென்பது எங்கே? (87)

நீண்ட காலமாய்த் தேடப்பட்டதும், கருமிகளான மூடர்களால் அடியோடு நீக்கமுடியாததுமாகிய, தேகத்திலுள்ள நான் என்னும் புத்தியை ஒழிப்பாயாக; ஆன்ம பாவனையால் முத்தியாமாதலின் நன்மதியுடன் இடையறாது பரமான்மாவையே சிந்திப்பாயாக. (88)

காக்கை, நரி, கனல், முதலானவைகளுக்கும் பொதுவாயுள்ள இத்தேகத்தில், துன்பத்திற்குக் காரணமாகிய எனது தேகம் என்னும் புத்தியை விடுவாயாக. அறிஞ, இவ்வாறாகவே; வெளிப் பொருள்களிலும் எனது என்னும் புத்தியை ஒழிப்பாயாக; பரமான்மாவில் தொடர்ந்த விருத்தியெழுமாறு மனத்தை நிறுத்துவாயாக. (89)

மீன், ஒரு குளக்கரையினின்று மற்றொரு கரைக்குத் திரிந்து கொண்டிருந்தும், அம் மீன் அக்கரையினும் வேறேயாம்; கரையுடன் சம்பந்தப்படுகிறதேயில்லை; அவ்வாறே நனவு முதலான அவத்தைகளில் திரிந்துகொண்டிருப்பவனாகிய சீவனும், அவ் வவத்தைகளினும் வேறாவன்; அவைகளின் தருமங்களுடன் பற்றமாட்டான். (90)

நனவு, கனவு, துயில், என்னும் வடிவத்தால் வேறுபட்ட மூன்றவத்தைகளும், சைதன்ய வடிவமாய் அம் மூன்றிலுந் தொடர்ந்து நிற்கும் உன்னிடத்தில் ஒன்றற்கொன்று பிறழ்ந்ததாயிருக்கின்றன. புத்தியென்னும் பெயர்பூண்ட அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்படும் பழுதையிலுள்ள, இது, என்னுங் கூறு, தரையின் துளை, தண்டம், மாலை, என்பன முதலாகத் தோற்றப் படுபவைகளில், தொடர்ந்திருத்தல்

போன்று, (எனமேற்கூட்டுக) இவ்வாற்றால், நீ, துரியத்திற் விளங்கும் பயமின்றிய பிரம்மமாகவே யிருக்கின்றாய். முன் போல் பிராந்தியை யடையாதே. (91)

பிரத்தியக் சைதன்யமேயாகிய சிறந்த முத்தி நிலைமை அறிஞர்களுக்கோ, அவர்கட் கருகிலிருக்கின்றது; அறியாமை நிறைந்த மூடருக்கோ, அதுவே தொலை தூரத்திலிருக்கின்றது. உள்ளும் புறம்புஞ் சைதன்யமே யிருக்கின்றது; மற்றெதுவுமில்லை; மலினமுடையார் சிலர் வெளியில் தேடித்தேடியும் அதை யுணர்ந்திலர்; பரமான்மாவினது மாயையின் மாகான்மியம் அந்தோ! (92)

தண்ணீர்ப் பந்தரில் பல்லோர் ஒருகணப் போதில் ஒன்றுகூடி இரண்டாங் கணப்போதில் வெவ்வேறு வழியிற் செல்கின்றார்களன்றோ, அது போன்று, நினது வீட்டிலும் வெவ்வேறு பெயர் கொண்டவர்கள் ஒன்று கூடி யிருக்கின்றார்கள். அந்திய காலத்திலோ ஒருவருமிருக்கமாட்டார். (93)

இன்பம் வேண்டுமென்று ஒருவர் இரவுபகல் முழுதுஞ் செய்யுந் தொழிலனைத்தும், அணுத் துணையு மின்பமாகாது; துன்பமேயாம். காரணமின்றிச் சுகமுண்டாதலோ, காணப்படவில்லை; காரணமும் மற்றுமோர் காரணங் கூடியபோதே காரணமாகின்றது. (94)

மிகப் பக்குவமாகிய மனத்தவருக்குச் சுருதிவாக்கியம் ஒருகாற் கேட்டன் மாத்திரத்தானே ஆன்ம ஞானத்தை யுண்டாக்குகின்றது. தடையுள்ள மனத்தாருக்கு தேசிகரது திருவடிக் கமலங்களின் திருத் தொண்டு முதலானவைகளால் மெல்ல மெல்ல ஆன்ம ஞானத்தை யுண்டாக்குகின்றது. (95)

பக்குவமிலாதார் ஓங்காரத்தின் செபத்தைப் பழகுதல் முதலாகக் கூறப்பட்ட கருமங்களைச் செய்தலானும், ஆசிரியருக்குச் செய்யுந் திருப் பணியானும், மனத்தின் கண்ணுள்ள அழுக்கு நீங்கி, பின்னர் உபதேசித்த தத்துவப் பொருளை யேற்றுக்கொள்ள உரியாராகின்றார். (96)

அல்லும் பகலும் ஆசிரியர் பால் மனத்தைச் செலுத்தல் வேண்டும்; தத்துவமுணர்ந்த ஆசிரியர் நேராய்ச் சிவமேயாதலின், தமக்குச் செய்த திருப் பணியால் பெருங்களிப்புற்ற அவ்வாசிரியர் மாணாக்கனுடைய முகத்தை தயையுடன் நோக்குவார். (97)

ஆசிரியரின் ஆணை, கற்பகக் கொடி போன்று வேண்டும் பொருளென்னும் பயனைத்தருகின்றது ; அவ் வாணையால் செய்ய முடியாததுமொன்றுண்டோ ? ஆகையால் ஆசிரியரின் ஆணை சீடனாற் பாதுகாக்கத் தக்கது ; மற்றும் அது களிப்புடன் செய்யற்பாலதாம். (98)

ஆசிரியரால் உபதேசித்த தனது இஷ்டதேவதை முனிவடையினோ, அப்போது பாதுகாப்பவர் ஆசிரியராவர் ; ஆசிரியர் முனிவு கொள்ளுங் காலோ, பாதுகாப்பவர் யாருமிலர் ; ஆதலின் ஆசிரியருக்குக் கோபமுண்டாக்காதிருப்பாயாக. (99)

ஒருவன் விதித்தைச் செய்தும், விலக்கியதைச் செய்யாதொழித்தும், புருடார்த்தத்தை யடைகின்றான்; அங்ஙனமாயினும், ஆசிரியர், விதியையும் விலக்கையும், அறிவுறுத்துகின்றாராதலின் வேண்டியது வருதலும், வேண்டாதது ஒழிதலும், ஆசிரியராலே என்க. (100)

ஆராதித்த வழிபடு தெய்வம் விரும்பும் பொருளைக் கொடுக்கின்றது; அந்த இஷ்ட தெய்வமே ஆசிரியரா லடையப்படுகின்றது; இன்றேல், அவ் வழிபடு தெய்வம் இந்திரியங்களுக்குப் புலப்படாததாமாதலின் இவன் அதை எவ்வாறுணர்வன்? (101)

ஆசிரியரொருவர் களிப்புறினே, அகில தேவ கணங்களுங் களிப்படைகின்றார்கள்; ஆசிரியர் முனிவடையினே, அகில தேவர்களும் முனிவடைகின்றார்கள்; என்னே? இடையறாது இவ் வாசிரியர் சத்துவ குண தேவதையை ஆன்மாவாகப் பாவித்து எல்லா வடிவமும் ஆயினர் (ஆதலின் என்க). (102)

இவ்வண்ணம், சிறந்த தேசிகராகிய சங்கரபகவற்பாதரால் பரமான்ம தத்துவத்தை யறிவுறுத்தப்பட்ட மண்டனர், அவ் வாசிரியரை நோக்கி, தேசிக, தம்முடைய கருணை மலிந்த திருக் கண் பார்வை படலால் அறியாமை யொழிந்தோனாய், யான் தன்யனானேன் என, கூறிக் கொண்டு சங்கரபகவற்பாதரின் திருவடிக் கமலத்தில் தண்டம் போல் வீழ்ந்தனர். (103)

பின்னர், திக்கென்னும், தெரிவையருடன் நட்புற்ற (திக்கெலாம் வியாபித்த) சுரேசுரர், என்னும் நிலைமையைப் பெற்று, இரணிய கருப்பனது இன்பத்தையுஞ் சிறியதாய்ச் செய்த பாடியக்காரராகிய சங்கரபகவற்பாதருக்கு, அம் மண்டனர் அரிய பெரிய மாணாக்கராந் தன்மையை யடைந்தனர் (104)

பின்னர், விசுவரூபர், மறை முடிகளனைத்தின் சிந்தனையால் எல்லையின்றிய ஆன்ம சுகத்தையும் தடையிலா

தடைந்து, என தென்பதொழிந்து, களிப்பைக் கொடுக்கும் நருமதா நதிக் கரையில் நாற் புறத்துமுள்ள அம் மகத நாட்டில் பல நாள் வாழ்ந்து வந்தனர். (105)

## சங்கரபகவற்பாதர் தென் திசையை யடைதல்

இவ்வாறு, மண்டன பண்டிதரை வெற்றி கொண்டவரும், வணங்குவோர்களின் முக் கரணங்களையும், ஒரு வழிப்படுத்துபவரும், நற்குணமுடையார்களின் அற்புதக் கழகத்திற்கோர் அணியாகியவரும், புறச் சமயங்களை மறுத்தவருமாகிய அச் சங்கரபகவற்பாதர் மண்டன பண்டிதர் வாழும் மாகிஷ்மதி யென்னும் நகரத்தினின்று பிரயாணப் பட்டனர். (106)

(அதிலிருந்து புறப்பட்டு) அச் சங்கரபகவற்பாதர் பலவிதமான இலைகளிலும், பூக்களிலுமுள்ள வண்டினங்களின் இன்னொலிகளையுடைய வனங்களை நோக்கிக் கொண்டே காலனால் பாது காக்கப்பட்ட தென்றிசையை அடைந்தனர். (107)

## சங்கரபகவற்பாதர் ஸ்ரீசைலமடைதல்

பேரறிவாளராகிய சனகரைப் போன்ற அச் சங்கர பகவற்பாதர் மகாராட்டிர முதலான தேசங்கள் தோறும் வேதாந்த நூல்களைப் பரப்பிக்கொண்டு புறச் சமயத்தார் களின் ஆணவங்களை யழித்தவராய், மலர்கள் விரிந்துள்ள மல்லிகை வனத்திற் பட்டு நறு மணங்களை யேற்றுவருங் காற்றினால், அசைகின்ற கிளைகளை யுடைய தருக்களைக் கொண்டதும், எக்காலும் மதமொழுகுகின்ற யானைகளிற் சிறந்த யானையைக் கொல்வதில் வலிமை மிக்க சிம்மக்கூட்டங்களை யுடையதும், அரவம் பூண்டாருக்கு (பரசிவனுக்கு) மிகப்

பிரிய மானதும், பிரமனுக்கு மங்களகரமானதுமாகிய ஸ்ரீ சைலத்தை யடைந்தனர். (108, 109)

அடைந்து, கலியுக பாவங்களைப் போக்குவதும், மலைக் கருகிலெழும் அலைகளையுடையதும், சிறிய மலைகளைக் கீழே வீழ்த்துவதும், பாதாள கங்கையிற் சம்பந்தப்பட்டது மாகிய அந்த, ஸ்ரீசைலத்திலுள்ள கங்கை நதியில் நீராடினர். (110)

நீராடி, வணங்குவோர்களின் மாமோகத்தை மாற்றுவதும், வானை யளாவிய உச்சியையுடையதும், பாவப் பற்றை நீக்குவதும், புட்களையும், வண்டுகளையும், கூடச்செய்வதும், அங்குள்ள நதியுடன் சம்பந்தமுடையதும், களிப்புற்ற மனமுடையது (இஃதுபசாரம்) மாகிய ஸ்ரீசைலத்திலேறி, பந்தத்தின் விதையை வறுப்பதும், மோட்சத்தைக் கொடுப்பதும், பிரமராம்பாள், என்னும் அம்பிகையுடனிருப்பதும் பார்த்தனாற் பணியப்பட்டதும், மல்லிகார்ச்சுனம் என்னுந் திருநாமமுடையதுமாகிய சிவலிங்கத்தைத் தரிசித்தனர். (111, 112)

பின்னர், ஆசிரியர்களுக்கெல்லாமிறைவராகிய சங்கர. பகவற்பாதர், கரையிலுள்ள தருக்களா லிருண்டதும், வெப்பத்தைத் தணிப்பதும், இச்சையை யறுப்பதும், அழுக்கை யகற்றுவதுமாகிய அந்த நதிக் கரையில் அமர்ந்திருந்தனர். (113)

அந் நதிக் கரையின் கண், புநிதமான புகழ்களுக்கும், வியப்பாகிய நற் சரிதைகளுக்கும், நிதி போன்ற சங்கர பகவற்பாதர், அழகான பதங்களாலமைக்கப்பட்டதும், அசத்தைக் கொண்டவர்களைத் தடுப்பதுமாகிய தாம் செய்த

அத்துவிதீய பாடியத்தை நுண்ணறிவாளர்களுக்குத் தலைவரும், நற் குணங்களெல்லாம் நிறைந்தவருமாகிய மேம்பாடுடையார்களுக்கு மகான்களைக் காட்டிலும் மேன்மையாகப் படிப்பித்தனர். (114)

இவ் வண்ணம், புறச் சமய நூல்களின் புகழ்களை மாற்றிக் கொண்டு, பொய்ப் பொருள்களைத் தள்ளுவதுடன், சுருதிகளையும், வேதாந்த பாடியங்களையும் ஓதி வைத்துக்கொண்டிருக்கும் பாடியக்காரரை (சங்கரபகவற்பாதரை) ஆசங்கித்த பாசுபதர், வைணவர், வீரசைவர், மகேசுரசைவர், என்பவர்களை, சுரேசுரர் முதலான அவருடைய மாணாக்கர்களே தோல்வியடையச் செய்தார்கள். (115)

அங்குச் சில மதத்தர், தங்களுடைய மதத்தை விட்டு மச்சர முதலான தோடங்களற்றவராய், சங்கரபகவற்பாதருக்கு மாணாக்கரானார்கள். மற்றுஞ் சில மதத்தரோ, கோப மிக்குடைய மலினமடைந்த உள்ளத்தராகி, இவருடைய மரணத்தை யெதிர்பார்த்துக் கொண்டே காலங் கழித்தனர் (சங்கரபகவற்பாதர் எப்போது இறப்பாரோ என எண்ணிக் கொண்டே யிருந்தார்க ளென்பதாம்). (116)

அறிவில்லாத கீழ் மக்களின் வாக்கையே வேதாந்தமாகக் கொள்பவரும், வேதம் ஒருவனால் கற்பிக்கப்பட்டது என்பவரும், பெரும் பாவமுடையவரும், ஆன்மாவையும், வேத நெறிகளையும் அடியோடு மறுப்பவருமான தீயர், பிரம வடிவரேயாகிய சங்கரபகவற்பாதரிடத்தில் பொறாமையால், கண்ணபிரானிடத்தில் பௌண்டரன் போல் மனதைக் கட்டுப்படுத்துவரேல் அந்திய கதியை (மரணத்தை அல்லது முத்தியை) அடையமாட்டாரோ (ஒருதலையாக அடைவாரென்க?) (117)

இவ் வண்ணமாக, சங்கரபகவற்பாதரின் அரிய பெரிய திரு வாக்குக்கள், மாணுக்கரிடத்தில் பெருங் களிப்புற்று விளங்கிக்கொண்டிருக்கும்போது, கணாத முனிவரின் வாக்கோ, ஒரு கணக்கில்லாதொழிந்தது; கபில முனிவரின் வாக்கோ, கபமுடையாரின் வாக்கைப் போலானது; சைவரின் வாக்கோ, அசைவமானது; ஆருகதர் வாக்கோ, அருவருப்புடையதாயிற்று; தார்க்கை மதத்தார்களின் வாக்கோ, துர்க்கதியானது; வைணவரின் வாக்கோ, வண்மை யற்றது; மற்றும், மாறுபாடான புறச் சமயங்கள் யாவும், உள்ளவாறே பழுதடைந்தன; இவ்வாறு அனைத்தையுங் கலங்குமாறு செய்த சங்கரபகவற்பாதர் விளங்கிக்கொண்டிருக்கும்போது நாத்திக மதத்தின் கதையோ நாத்தியானது; நையாயிகளின் (தார்க்கிகர்களின்) வாக்கோ, நைந்து நைந்து நாத்திகரின் வாக்கைப் போலானது; குமாரிலபட்டரின் (பட்டபாதரின்) வாக்கோ, குமரிவார்த்தை போன்று பேச்சிலாதொழிந்தது; சபலத் தன்மையை யடைந்த கபிலர் மதமோ, பலமுடையதென்னும் புத்தி நீங்கி மலமுடையதாய் வேண்டுவாரற்றொழிந்தது. (118, 119)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கரதிக்கு விசயச் சருக்கத்தில் சங்கரபகவற்பாதர்
காம கலை யறிதலை மேற்கொண்ட
பத்தாவது சருக்கம்
முற்றும்.

---

# பதினொன்றாவது சருக்கம்

## உக்கிரபைரவரை வெற்றிகொள்வதில் சங்கரபகவற்பாதருடைய சிரசை, காபாலிகன் வேண்டல்

ஒரு போது, காம முதலியவைகளுக்கு உட்படாதவரும், இந்திரியங்களென்னுங் குதிரைகளை வசமாக்கியவருமாகிய சங்கரபகவற்பாதர், முனிவர்களாற் போற்றப்பட்ட தமது வேதாந்த பாடியத்தை மாணாக்கர்களுக்குப் படிப்பித்து விட்டு தனித்தோரிடத்திலிருந்தனர்; அச் சமயத்தில், தனது குற்றங்களை மூடிக் கொண்டவனும், இராவணன் போல் பொய்த் துறவியானவனும், தனது காரியத்திற் சிறிது குறைவு பட்டிருப்பவனும், மிக்க தோஷமுடையவனுமாகிய காபாலிகன் (கபாலிக மதத்தன்) ஒருவன் அங்குவந்து அவரைக் கண்டனன். (1, 2)

கண்ட அக் காபாலிகன், நீண்ட நாளாய் விரும்பிய தனது பிரியம் கைக்கூடியதுபோல் உறுதிபண்ணிக்கொண்டு தனக்குண்டாகிய பெரும் இலாபத்தாற்களிப்புற்றோனாய் சங்கரபகவற்பாதரிடத்தில் தனக்குள்ள காரியத்தின் குறைவு பாட்டைக் கீழ் வருமாறு வெளிப்படச் சொன்னான். (3)

அக் காபாலிகன் சங்கரபகவற்பாதரை நோக்கி, முனிவரே, தங்களுடைய முற்றுமுணர்தற்றன்மை, நல்லொழுக்கம், தயை முதலான குற்றமிலாத குணங்களைக் கேட்டு தமது பரோபகாரச் செய்கையுந் தெரிந்து மிக்க மனவெழிற்சியுடையவனாய்த் தங்களைத் தரிசிக்க வந்திருக்கின்றேன். (4)

மோகத்தையொழித்தவரும், பேதவாதியின் வாக்கியங்களனைத்தையும் மறுத்தவரும், தேகாபிமானத்தைத் தொலைத்தவருமாகிய தாங்களொருவரே சண்டப்பிரமாணங்களை யெடுத்துச் சேர்த்துவைத்தவராய்ச் சுத்தாத்துவிதியராய்க் காணப்படுகின்றீர். (சுத்தாத்துவிதியத்தில் பிரமாணங்களனைத்தையும் அந்துவயப்படுத்தியவராவீர்). (5)

மற்றும், தாங்கள் பரோபகாரத்தின் பொருட்டே திருமேனியைத் தாங்கினீர்; தமது திருக்கடைக்கண்ணோக்கால் நல்லார்களுக்கு துன்பங்கள் வாராமலொழிக்கின்றீர்; இன் சொற்களால் எல்லாவற்றையும் நிறையச் செய்து கொண்டவர். (6)

குணங்களுக்கு ஒரு விளை நிலமாதலின் உலகெலாம் ஒரு தலையாகப் போற்றப் படுபவராவீர்; முழுது முணர்ந்தோராதலின், அபிமானமற்றவர்; வெற்றி கொள்வோர்களில் மேம்பட்டோராதலின், மதவாதிகளின் கழுத்தைக் கையாற் பிடித்தவர்; ஆன்மாவை யுபதேசிப்போராதலின் விரித்துரை செய்பவராவீர். (7)

அரிய கல்யாண குணங்களுக்கெல்லாமோர் ஆலயமானவரும், பராபரத்தை யறிந்தோருமாகிய தங்களைப் போன்றவரிடத்தில் வந்து இரந்தவர், தாம் விரும்பியது அடைதற்கரிய பொருளாமாயினும் அதனை அடையாமற் போவார் யாண்டுமுளரோ? (8)

ஆகையால், முழுதுமுணர்ந்தவராகிய தம்மைக்கொண்டு இப்போது யான் தொடங்கியுள்ள பெரியதாகிய ஒரு காரியத்தை நிறைவேற்றிக்கொண்டு உக்கிர பைரவ மூர்த்தியைக் களிக்குமாறு செய்யவேண்டும்; பின்னர் எனதான்

மாவையும் செயற்பாலன செய்து முடித்ததாகச் செய்து கொள்வேன். (9)

இவ் வுடம்புடன் கைலைக்குச் செல்வதற்கும், ஈசனுட னிருந்து களிப்பதற்கும், நூறு வருட காலமுழுதும், செயற் கரிய தீ விரதங்களால் உக்கிர பைரவரை மகிழ்வித் தேன். (10)

மகிழ்வடைந்த அப் பரசிவன் வெளித் தோன்றி, "எனது பிரியத்தின் பொருட்டு முழுதுமுணர்ந்தவரது தலையேனும், அரசனது தலையேனும், தீயில் ஆகுதி செய்வை யேல், நீ விரும்பிய புருடார்த்தத்தை யடைவாய்," என்னு மித்துணை திருவாய் மலர்ந்து கூறிவிட்டு மறைந்தருளினர்; அது தொட்டே அத்தன்மைய தலை யொன்று அடைதற் பொருட்டு இச்சித்தவனாய்த் திரிந்தலைகின்றேன். இது காறும் அவ் விருவரில் எல்லாம் ஆள்பவரொருவராயி னும், அல்லது எல்லா முணர்ந்தவரொருவராகிலும் எனக் குக் கிடைத்திலர். (11, 12)

யான், இப்போது உலக நன்மையின் பொருட்டே சஞ் சரிக்கின்ற முழுதுமுணர்ந்தவராகிய தங்களொருவரையே கண்ணிற் கண்டேன்; இனிமேல் தொடங்கிய எனது காரி யம் ஒருதலையாக முடிந்து விடும்; என்னை? சனங்களுடைய பந்தம் தங்களுடைய நல்ல தரிசனத்தையே அந்தமாக வுடையதாமாதலின் என்க (தங்களுடைய தரிசனத்தால் சனங்களுடைய பந்தம் ஒருதலையாக ஒழியுமென்ப தாம்). (13)

எனது காரிய சித்திக்கு அரசரின் தலை யோடாகினும், அல்லது, முனிவர்களுக்கு வேந்தரானவரின் தலை யோடா

வது காரணமாகும்; முதலாவதோ, மனத்தாலும் எனக்குக் கிடைப்பதரிது ; இரண்டாவதோ, அதில் தாங்களொருவரே பிரமாணமாவீர். (14)

தங்களுடைய தலையைக் கொடுக்கிலோ, தங்களுக்கும் உலகில் வியப்பதற்குரிய புகழ் கிடைக்கும்; எனக்கும் காரியம் சித்தியாகும் ; உடம்பின் நிலையாமையை உற்று நோக்கி நல்லாரிற் சிறந்தவரே, தமக்கு எது பிரியமோ, அதைச் செய்வீராக. (15)

தங்களை, சிரசைத் தரவேண்டுமென்று இரக்க எனது மனம் பிரியப்படவில்லை ;, என்னை ? பிரியந்தரும் தங்கள் உடம்பை விடுவதற்கு யார் இசைவர் ? ஆதலின் என்க; அங்ஙனமாயினும் தாங்களோ, இச்சை யற்றவர்; தேகாபிமான மொழிந்தவர், பரோபகாரத்தின் பொருட்டே திருமேனியைத் தாங்கினவர் (ஆகையால் தங்கள் தலையை வேண்டுமென்றிரந்தேன் என்பதாம்). (16)

பிறருடைய துன்பவார்த்தையையே யறியாத சிலர், இரவும் பகலும் தமக்காகவே தேகம் முதலியவைகளை காரியத்திற் செலுத்துபவராகின்றார்; இந்திரன், தனது சத்துருவைக் கொல்ல, வச்சிராயுதஞ் செய்தற் பொருட்டு ததீசிமுனிவரின் எலும்பை விரும்பிப் பெற்றுக் கொண்டனன். (17)

ததீசி முனிவர் முதலானோர் மிக்க நிலையாமையாயுள்ள இவ் வுடம்பை பரோபகாரத்தின் பொருட்டே கொடுத்துவிட்டு, எங்கும் நிறைந்த நித்தியமாகிய புகழுடம்பைப் பெற்று உண்மையாகவே நிருமலமான குணங்களால் உலகிற்குக் களிப்பை யுண்டாக்குகின்றார். (18)

தயையால் நிறைந்த அடக்கமுள்ள சிலர், பிறர் பொருட்டே திருமேனியைத் தாங்குகின்றார்கள்; தமது காரியத்தையே முக்கிய பயனாகக் கொண்ட தயை சிறிதுமில்லாத எனைப்போன்றாரும் உலகிற் சிலருளர். (19)

விருப்பொழிந்த தங்களுக்குப் பரோபகாரத்தைத் தவிர்த்து வேறு பயன் அணுவுமின்று; யோகியே, எனைப் போன்ற காமத்துக்குள்ளானோர் பொருந்தல் பொருந்தாமைகளை யுணரார், அந்தோ! (20)

மேக வாகனன் தனதுயிரைக் கொடுத்தான்; ததீசி முனிவரும் அன்புடன் தமது முதுகெலும்பைக் கொடுத்தனர்; அதனால் அவர்கள், சந்திரன், சூரியன், நட்சத்திரம், உள்ளவரையும் புகழுடைவார்கள் என்பது பிரசித்தியாமன்றோ? (21)

யான் தங்களை யிரப்பதுவோ, பிராணிகளால் கொடுக்கத் தகாததே; ஆன்றோராலும் அருவருக்கத்தக்கதே; அங்ஙனமாயினும், அனைத்திலும் பற்றொழித்த ஆன்மதத்துவ ஞானிகளால் கொடுக்கத் தகாததென்பதொன்றுண்டோ? (22)

ஒழுக்கத்திற் சிறந்தார்கள், சுக்கிலங் கலிக்காதவரின் தலைக் கபாலமே இனிய சித்தியைத் தருமென்று சொல்கின்றனர்; தங்களைத் தவிர்த்து இத் தரையின்கண் அத்தன்மைய புருடர் யாவருமிலர். (23)

பகவ, தங்களுடைய தலையைக் கொடுப்பீராக; தங்களுக்கு வணக்கம், என்று கூறிக்கொண்டு சங்கரபகவற்பாதர் முன், அக்காபாலிகன் விழுந்தனன். அவர், கீழ்

வீழ்ந்த காபாலிகனை நோக்கி எப்பொருளினும் மனோ விருத்திகளை யடக்கியவரும், தயாளருமாகிய அச் சங்கரபகவற் பாதர் கீழ் வருமாறு திருவாய் மலர்ந்தருளினர். (24)

## சங்கரபகவற்பாதர் தமது சிரசை காபாலிகனுக்குக் கொடுக்க உடன் படல்

சங்கரபகவற்பாதர் காபாலிகனை நோக்கி, காபாலிக, இதுகாறும் நீ கூறியதில் பொறுமையை யான் அடையேன்; அன்புடன் எனது சிரசை உனக்குத் தருகின்றேன். ஈண்டுப் பலவித ஆபத்துக்களை யுடையது இம் மனித ஆக்கை என்றுணர்ந்த கூரிய மதி யுடையார் எவர் அதைப் பயனுடையதாகச் செய்யார்? (25)

இவ் வுடம்பு, பெரு முயல்வுடன் பாதுகாப்பினும், எமனால் ஒருதலையாக உயிர் கொண்டு போகும்போது விழுந்து விடுமாதலின், இவ் வழியால் பிறருக்குப் பயன்படுமாயின் அதுவே இறக்குந் தன்மையுடையாருக்குச் சிறந்த புருடார்த்தமாம். (26)

சித்தியை யுணர்ந்த காபாலிக, யான் தனித்தோரிடத்தில் நிட்டையிலிருக்கின்றேன்; நீ அத் தனியிடத்திற்கு வருவாயாக; அங்கு உனது பிரியப்படியே செய்கின்றேன்; வெளியாயுள்ள விடத்தில் தலையின் கபாலத்தைத் தருவதற்குப் பிரியப்படேன் ஆதலின் சனங்களில்லாத ஒரு இடத்தில் எம்மை அடைவாயாக. (27)

என்னையே சரணடைந்த எனது மாணாக்கர், நீ எண்ணிய இதை யுணர்வரேல், உனது காரிய முழுதையுமே தொலைத்து விடுவர்; தமது உடம்பை விடுவதற்கு

எவருஞ் சம்மதிப்பரோ? அவ்வாறே தமது தலைவரின் திருமேனி போவதையுஞ் சகித்துக் கொள்ளார். (28)

இவ்வாறு, சங்கரபகவற்பாதரும், காபாலிகனும். ஏற்பாடு செய்து கொண்டனர்; பின்னர், மதி மிக்க காபாலிக யோகியும் களிப்புடன் தனதிருப்பிடஞ் சென்றான்; சங்கரபவற்பாதரும், தமது இருப்பிடத்தில் ஒன்றும் பேசாதவரா யிருந்தனர்; அவர் தமது மனத்திலுள்ள இக் கருத்துக்களொன்றையும் சிறிதும் வெளிக் காட்டிலர். (29)

அச் சமயத்தில், திரி சூலமுடையவனும் திரி புண்டரந் தரித்தவனும், தலைகளை மாலையாக அணியப் பெற்ற உடம்புடையவனும், கள்ளின் வெறியாற் கலங்கிய இந்திரியமுடையவனும், முன்னும் பின்னும் பார்ப்பவனுமாகிய காபாலிக யோகி, சங்கரபகவற்பாதரின் மாணக்கர் நீராடல் முதலிய காரியங்களுக்குத் தூரத்தில் போன விடத்து அவர் மாத்திரந் தனித்திருக்கும் போது சனந்தனர் முதலானவரின் பயத்தால் தனதுடம்பை மறைத்துக் கொண்டு அவரிருக்குமிடத்திற்கு வந்தனன். (30, 31)

உடனே சங்கரபகவற்பாதர், அந்த பைரவ வடிவத்தை நோக்கி தமது தேகத்தை, தாமாகவே விடவேண்டுமென மனத்துட் கொண்டு, பிரணவத்தை யுச்சரித்து, மனதை ஒருமைப் படுத்தி, இந்திரியங்களை யடக்கி, சீவான்மாவைப் பரமான்மாவின் கண் அடக்கியுங் கொண்டனர். (32)

## பத்மபாதர் நரசிம்ம வடிவை வெளிப்படுத்தல்

உலகம் போற்றுபவரும், ஆன்ம இன்பத்தால் சுவர்க்க மாளுமின்மையுமோர் அணுத் துணையாகச் செய்தவரும்,

யோகிகளுக்கிறைவரும், நிருவிகற்ப நிட்டையை யடைந்தவரும், சனத்சுசாதர் முதலானோரினும் மேம்பட்டவரும், தோட் சந்தின் மீது கீழுதட்டின் கீழ்ப் பாகத்தை வைத்து முகத்தை விரிந்திருக்கச் செய்தவரும், தொடைகளின் மேல் இரு கைகளையும் வைத்தவரும், பாதி நோக்கால் மூக்கின் நுனியை நோக்குபவரும், சித்தாசனத்திலிருந்து உடம்பின் மேற் பாகத்தை நிமிர்ந்திருக்கப் பண்ணியவரும், சைதன்ய மாத்திரமாய் எஞ்சி நிற்பவரும், இந்திரிய வருக்கத்தைச் சின்மாத்திரத்தில் ஒருமைப்படுத்தியவரும், நிட்டையால் உலகத் தோற்றத்தை மறந்தவருமாகிய அச் சங்கரபவற் பாதரை காபாலிக பைரவன் பார்த்து, அவரைக் கொல்ல ஐயப்படாதவனும், தனது புத்தியாலே மிக்கப் பாவத்தைத் தேடியவனுமாகிய அவன், கத்தியை யெடுத்துக் கொண்டு அவரருகிற் சென்ற அவ் வளவிலே பத்மபாதர் அவனைக் கண்டனர். (33, 34, 35, 36)

அவர் கண்டு, திரிசூலத்தைக் கையிற்றூங்கி, தமது ஆசிரியரைக் கொல்ல வேண்டு மென்னும் விருப்புடைய இவன், காபாலிகன் என்று, பிரயத்தன சீலராகிய அப் பத்மபாதர் தமது ஆசிரியரிடத்தில் பேரன்புடையோராதலின் அங்கு நின்று கொண்டே மனதிலுணர்ந்து ஒளி மிக்குள்ள தீயைப் போன்று பெருங் கோபமுற்றனர். (37)

பின்னர், நினைப்பவரின் பீடைகளை நீக்குகின்றவரும், பிரகலாதனுக்கு வசப்பட்டவருமாகிய நரசிம்ம மூர்த்தியின் பேரொளி வடிவத்தை நினைத்து அப் பத்மபாதரும் மந்திர சித்தியின் வலியால் நரசிம்ம சொரூபரேயாகி அவ் வுக்கிர காபாலிகனுடைய தீய செய்கையைக் கண்டனர். (38)

கண்ட அக் கணத்திலே தமது இயற்கை கலங்கியவரும், பெருங் கோபங் கொண்டவரும், தாம் மனிதன் என்பதையே மறந்தவரும், நரசிம்மத் தன்மையை வெளிப்படுத்தியவருமாகிய அப் பத்மபாதரிடத்திலிருந்தே, தோள்களிலுள்ள மயிர்க் குச்சுக்களால் மேகக் கூட்டங் கலைத்துவிடுவதும், பேரொளியால் பூதங்களின் கூட்டங்களைப் பயப் படுத்துவதும், வேகத்தால் இவ் வுலகர்களை மூர்ச்சிக்கச் செய்வதும், தேவர்களனைவருக்கும் இஃதென்னை கொலோ? என, பெருங் கவலையை யுண்டாக்குவதுமாகிய நரசிம்ம வுருவம் வெளிப்பட்டது. (39, 40)

(அந்த மூர்த்தி வெளிப்பட்டதால்) கடல் கலங்கிற்று; எங்கும் மிக்க அச்சமுண்டானது; இராக்கதர்கள் பெருங் கூச்சலிட்டார்கள்; மலைகளின் முகடுகள் வெடித்தன; திக்குகளிலுள்ள பூமிகள் எரிந்தன; தரையுமசைந்தது; உலகிலுள்ளவர்களின் இந்திரியங்கள் சுழன்றன; அந்தரிட்சமும் உடைபட்டது. (41)

### காபாலிகன் நரசிம்மத்தால் பிளக்கப்படல்

இவ் வண்ணமாக, நரசிம்ம மூர்த்தி தோன்றி, மிக விரைவாய் அக் காபாலிகனிடத்திற்கு ஓடிப் போய் வச்சிரம் போன்ற நகங்களின் நுனிகளால், முன்னர், தேவர்களுக்குப் பகைவனாகிய இரணிய கசிபை இரு பிளப்பாகக் கிழிந்தெறிந்தது போல் திரிசூலமேந்திய அக் காபாலிகனுடைய மார்பைக் கிழித்தெறிந்து விட்டனர். (42)

அச் சமயத்தில், நகங்களையே ஆயுதங்களாகக் கொண்ட சிம்மங்களிற் சிறந்தவரும், தமது பற்களுக்கிடையில் தீச் செய்கை செய்த காபாலிகனது உடல் மாறிக் கிடக்கப் பெற்றவருமாகிய அந் நரசிம்ம மூர்த்தி, சுவர்க்கமென்னும்

மேலுள்ள தடையைக் கொண்டதோர் அட்டகாசஞ் செய்தனர். (43)

பின்னர், சங்கரபகவற்பாதருடைய மாணக்கரனை வரும், அவ் வொலியைக் கேட்டு வெளியே வந்து அவர் அருகிற் செல்ல, மனோ விருத்தி வியாகூலப் பட்டவராய், முன்னே நிற்கின்ற பைரவ மூர்த்தியையும், அவருக்கெதிரில் மாண்டு கிடக்கும் காபாலிகனையும், பின் புறத்தில் அக் காபாலிகனால் வெட்டப் படாது தப்பிப் பிழைத்து சுகமா யிருக்கும் தங்களுடைய ஆசிரியரையுங் கண்டனர். (44)

## பத்மபாதர் தாம் முன்னர் நரசிம்ம மூர்த்தியை யுபாசித்த செய்தி கூறல்

கண்டு, "பிரகலாதனுக்கு வசப்பட்ட பகவானாகிய நரசிம்ம மூர்த்தி தம்மால் எவ்வாறு களிப்புற்றனர்?" எனப் பத்மபாதரை மற்றைய நண்பர்கள் வினவ, அதற்கு அவர் கீழ் வருமாறு புன்னகையுடன் மறுமொழி கூறினர்:— (45)

யான் முன்னொரு காலத்தில், அகோபலம் என்னும் மலைக்கெதிரிலுள்ள ஒரு புண்ணிய வனத்தை யடைந்து, அங்கோர் அன்பனுக்கு முக்கியமாக வசப்பட்ட இப் பகவானாகிய நரசிம்ம மூர்த்தியை நெடு நாட் சிந்தித்து அவரை மகிழ்வித்து வந்தேன். (46)

அக் கால், கானைப் பருவனாகிய ஒரு வேடன் வந்து, என்னை நோக்கி, "யோகியே, நீர், இம் மலைப் புறரில் நெடு நாளாக ஒருவராய்த் தனித்து வசிக்கின்றீர், அஃது எதன் பொருட்டு?" என வினவினான். அதற்கு, யான் கீழ் வருமாறு விடை யளித்தேன். (47)

"வேடனே, கழுத்து வரையும் அழகிய மனித வடிவ்மும், அதற்கு மேல் சிம்ம வடிவமுமாகிய ஒரு விலங்கு இக் காட்டில் வாழ்கின்றது அதை யான் காண வேண்டுமெனத் தேடிக் கொண்டிருக்கின்றேன் ; அந்தோ ! அது ஒரு போதேனும் எனது கண்ணுக்குத் தோன்றவில்லை (என்பதாம்). (48)

இவ்வண்ணம் யான் கூறியதை அவ் வேடன் கேட்டு, உடனே வனத்தினுட் சென்று, ஒரு கணப் பொதுக்குள் அவன் அந் நரசிம்மத்தை கொடிகளால் இறுகப் பிணித்து, பெரும் புண்ணிய வசத்தால் எனக்கெதிரில் கொண்டுவந்து விட்டனன். (49)

அக்கால், அந்த நரசிம்ம மூர்த்தியை நோக்கி, "மகரிஷிகளுக்கு மனத்தாலும் அறியப்படாத நீ, இவ் வேடனுக்கு வசப்பட்டனையே அஃதெவ்வாறு?" என, வியப்புற்ற யான் வினவிய விடத்து, வியாபகராகிய அந் நரசிம்ம மூர்த்தி கீழ் வருமாறு எனக்குத் திரு வாய் மலர்ந்தருளினர் :— (50)

"அன்ப, என்னை ஒருமை மனத்தால் இவ் வேடன் தியானித்ததுபோல் பிரமன் முதலான பண்டைக் காலத்தவரும் தியானஞ் செய்திலர் ; நீ வருந்தற்க," என்று எனக்கு அருள் செய்துவிட்டு அந் நரசிம்ம மூர்த்தி மறைந்தனர் ; (என்பதாம்). (51)

இவ்வாறு பத்மபாதருடைய வாக்கைக் கேட்ட அவர்கள் யாவரும் ஆனந்தத்தில் மூழ்கியவரானூர்கள் ; பின்னர், அந் நரசிம்ம மூர்த்தி தமது பேரொளியால் அண்டமென்னு மொரு பாண்டத்தை உடைத்துக்கொண்டெழும்பி பெருங் கர்ச்சனை செய்தனர். (52)

## சங்கரபகவற்பாதர்

## நரசிம்ம மூர்த்தியைத் துதித்தல்

அதன் பின்னர், ஆன்ம ஞானத்தால் முக்கரணங்களையுங் கடந்தவர், (சங்கரபகவற்பாதர்) நரசிம்ம மூர்த்தியின் ஆரவாரத்தால் நிட்டை கலைந்தவராய்க் கண்ணைத் திறந்து, (நேரில் நின்ற) அகன்ற வாயையும், மதியின் கிரணம் போன்ற தோளின் மயிர்களையும், மூன்றும் நேத்திரத்தால் விளங்கப்பட்ட சென்னியையும், உதயத்தினுள்ள பருதியின் ஆயிரக் கணக்கான கிரணங்கள் போன்ற வொளிகளையும், பிரமாண்டங்களைப் பிளக்கத்தக்க அட்டகாசத்தையும், நகங்களின் நுனிகளால் காபாலிகன் மார்பைக் கிழித்ததாலுண்டாகிய இரத்தத்தால் வியாபிக்கப்பட்ட தேகத்தையும், ஸ்ரீ வச்சம் என்னும் இரேகை வாய்ந்த மார்பையும், ஸ்ரீ இரத்தினத்தோடும், கௌத்துப மணியோடும், பொறுமை கொண்ட காபாலிகனது குடல் மாலையை யணிந்த கண்டத்தையும், தேவர்களுக்கும், தானவர்களுக்கும் பயந் தரத்தக்க வலிவுள்ள உக்கிரவடிவத்தால் அண்ட கோசத்தைப் பிளக்கின்ற செய்கையையும், அகன்ற வாயிலிருந்தெழுந்த அக்கினிச் சுவாலைகள் போன்ற பற் கூட்டங்களால் வானிடத்தை மெல்லுகின்ற தன்மையையும், தமது உரோமங்களென்னும் கிணற்றிலிருந்தெழுந்த தீப் பொறித் திரளால் உலகை யெல்லாங் கொளுத்துகின்ற தன்மையையும், இந்திரன், (சம்பராரி) சிவன் (முப்புராரி) என்னுமிவர்களின் பிரசித்தியாகிய இடம்பத்தை அடக்கிவைப்பதற்கு எழுந்த பற்கள் என்னும் பெட்டகத்தையுமுடைய நரசிம்ம மூர்த்தியைத் தரிசித்தனர். (53, 54, 55, 56, 57)

பின்னர், பிரமன் முதலானோர்கள், அவரை நோக்கி, மகாத்மரே, தாங்கள் பிரளயமாகாத போதில் பிரளயஞ் செய்யாதீர், கோபந் தணிவீராக என, தூரத்தினின்றே பயந்தவர்களாயும், கை குவித்தவர்களாயும், இன் சொல் சொல்பவர்களாய், அவர்களால் வேண்டி துதிக்கப்பட்டவரும், மின்னல் போன்று அசைகின்ற நாவுடையவருமாகிய முன்னின்ற அந் நரசிம்ம மூர்த்தியை நோக்கி, நீத்தார்க்குக் கிறைவரும், அவருக் கருகிலிருந்தும் பயமற்றவருமாகிய சங்கரபகவற்பாதர் கீழ் வருமாறு துதித்தனர்:— (58, 59)

நரசிம்ம மூர்த்தியே, தாங்கள் கோபத்தை யடக்கிக் கொள்வீராக; தமது பகைவன் இறந்து போய் தரையின் மேற் கிடக்கின்றான்; தேவ, எனக்குப் பேரருள் செய்வீராக; தங்களுடைய கோப நோக்கால் இவ் வுலகம் அச்சப்படுகின்றது. (60)

தமது திரு மேனியே சத்துவ குணத்ததென்று கூறப்படுகின்றது; தங்களுக்கு அணுத் துணையும் கோபங் கூடாது; ஆகையால், ஈண்டுச் சுகமடைதற் பொருட்டுச் சாந்தமாவீராக; அரனுடைய குணத்தை அரியேற்றுக் கொள்வது என்னையோ? (61)

தேவர்களிற் சிறந்தோய், மாந்தர்கள், பயங்களனைத்தும் வருகின்ற விடத்தும் உம்மை நினைத்துக் கொண்டு பயமெல்லாவற்றையும் போக்கிக் கொள்கின்றார்கள்; இப்போதோ, தங்கள் தரிசனத்திற்கு யாது பயனெனச் சொல்வேன்? தங்களுடைய தரிசனங் கிடைப்பது மிகவுமரிதன்றோ? (62)

உமது திரு வடிக் கமலத்தை நினைத்துக் கொண்டு இறந்தவர்களும் முத்தியை யடைகின்றார்கள்; அற்றேல்,

உமது திருக் கரங்களாற் கிழிக்கப்பட்ட காபாலிகன் முத்தியையே யடைந்தனன்; அவன் மீண்டும் பிறவான். (63)

நற் குணமுடைய தாங்கள், துன்புற்ற இரணிய கசிபனுடைய புத்திரனை ஒருகால் காப்பாற்றினீர்; மற்றும் அவன், தமக்குக் கூறிய எல்லாமாந் தன்மை பிரசித்தியாகாததுபற்றி, அவன் முன் வெளிப்படுதற்கு இச்சை யுடையவரானீர் (எனவே தூணிலுந் தோன்றினீர் என்பது கருத்து). (64)

நீவிர், இவ் வுலகை இரசோ குணத்தைக் கொண்டு படைக்கின்றீர்; சத்துவ குணத்தைக் கொண்டு காப்பாற்றுகின்றீர்; தமோ குணத்தைக் கொண்டு உருத்திரன் என்னும் பெயருடையராய் அழிக்கின்றீர். (65)

உண்மையிலோ, தங்களுக்கு உற்பத்தியுமில்லை; குணங் களுமில்லை; தமது தோற்றம் முதலியன இவ் வுலகத்திற்கு அருளுதற் பொருட்டேயாம். தமது சொரூபமோ, வாக்கு மனத்திற்கெட்டாததுவாம்; அங்ஙனமாயினும் மறைமொழி கள் பயந்து கொண்டு தம்மை யறிவுறுத்துகின்றன. (66)

நரசிம்ம மூர்த்தியே, உமது திருநாமத்தைக் கேட்டல் மாத்திரத்தானே, பிரமத, குய்ய, முதலான தீய பைசாசுகள் நீங்குகின்றன; வியாபகரே, அசுர நாயகரும் தமக்கு முன்னிற்கத் தக்காராகார். (67)

நரசிம்ம மூர்த்தியே, இவ் வுலகைப் படைப்பதற்கும், காப்பதற்கும் தாமே காரணமாவீர். எல்லாவற்றையும் ஆள்பவருந் தாமே யாவீர்; தெளிந்த வுள்ளத்தாரால் தியா

னிக்கப்படுபவருந் தாமே யாவீர்; சின்மாத்திரராகிய தம்மையே யான் சரணடைந்தேன். (68)

வராகம் ஒழிந்தமையின் கோபத்தை யடக்குவீராக; ஆன்மானந்தரே, உலகிற்கு அபயத்தை யளிப்பீராக; இந்தத் தேவர்களும் (58-சுலோகத்தில் கூறிய பிரமன் முதலானோர்கள்) சாந்தத்தையே விரும்புகின்றூர்கள்; இப்போது அனைவரு தம்மைக் கண்டு பயமுடையவர்களாய் வருந்துகின்றனர். (69)

உமது கிருபையைப் பெறுத மனிதர்களால் உமது திருவுருவங் காணத் தக்கதன்று. ஆன்ம ரூபரே, ஆகையால் கோடிக் கணக்கான மின்னலொளிகளையும் அற்பமாக்கும் இவ் வுருவத்தை அடக்கிக் கொள்வீராக; அளவிலாப் பயமடைந்த இம் மூவுலகையும் பாதுகாத்தருள்வீராக. (70)

கற்பாந்தத்திலெழும்பிய, பிரமத முதலான கணங்கள் சூழ்ந்த உருத்திரனது சிரசின்கண் ணுண்டாகும் பேரழலின் சுவாலையில் மூழ்கிய மூன்றுலகத்தினின்று கிளம்பும், சட, சட என்னும் ஒலியை யுடையதும், பிரமாண்டமாகிய பாண்டத்தின் வயிற்றின் நடுத் துளையில் நியதமற்று இருத்தற்கரிய (பிறப்பிறப்பு முதலான) அவத்தைகளுக்கு அழற் பிழம்பானதுமாகிய இந்த நரசிம்மமூர்த்தியின் அட்டகாசம் எனது பாவத்தைப் போக்குவதாகுக. (71)

காற்றை யுண்ணுா் வாசுகி யென்னுங் கயிற்றால் நடுவில் உறுதியாய்ப் பிணிக்கப்பட்டுள்ள மந்திராசலத்தைக் கொண்டு கடைவதால் மேலேயெழும் பாற் கடலின் அலைகள் ஒன்றற்கொன்று மோதிக்கொள்ளுமொலியினும் மிக்க கோரமாகியதும், கற்பாந்த காலத்தில் தூயமின்றிய உருத்

திரனது துடியினின்றெழும் பேரொலியாற் கட்டுப்பட்ட பொருமை யுடையதுமாகிய, இந்நரசிம்ம மூர்த்தியின் பேரொலி எனது பாவங்களனைத்தையுமொழிப்பதாகுக. (72)

கற்பாந்த காலத்தில் எழும் மேகக்கூட்டத்தாலுண்டான பெரும் இடிகளனைத்தையுமொத்த பேரொலியின் பேராணவத்தை விரைவிற் பொடியாக்குவதும், ஆடலின் பொருட்டே வராக வேந்தனது நாசியினின்றெழும் வேகமுள்ள, குர், குர் என்னும் ஒலியின் இயல்பு வாய்ந்த நரசிம்ம மூர்த்தியாகிய தமது அட்டகாசம், எனது பாவத்தை நீக்குவதாகுக. (73)

இவ்வண்ணம் சிறப்புடைய தோத்திரங்களால் நரசிம்ம மூர்த்தி சாந்தரானவிடத்து, இப் பத்மபாதரும் தமது சுபாவத்தை யடைந்து சாந்தராயினர். பின்னர், அடங்கிய மனத்தராய் கனவிற் கண்டதுபோல தமதான்மாவை நினைத்துக் கொண்டு தமது ஆசிரியரை வணங்கினர். (74)

புனிதமாய் ஒருமை மனதுடன் பயனுள்ள இச் சரிதத்தை முப்போதும் அன்புடன், படிப்பவரும், கேட்பவரும், அவமிருத்துவைக் கடந்தவராய்ப் பக்தியையும் பெற்று போகங்களையும் நுகர்ந்து முத்தியையும் அடைவார். (75)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கரதிக்கு விசயச் சுருக்கத்தில் காபாலிகன்
மரணுந்தத் தோல்வியை மேற்கொண்ட
பதின்மூன்றாவது சருக்கம்
முற்றும்.

———

## பன்னிரண்டாவது சருக்கம்

### அத்தாமலகர் சீடனுதல்
### சங்கரபகவற்பாதர் கோகர்ணமடைதல்

பின்னர், ஒருபோது துறந்தார்களுக்குச் சக்கரவர்த்தியாகிய சங்கரபகவற்பாதர், மாணுக்கருடன் தலங்களையும், தீர்த்தங்களையுஞ் சேவித்துக் கொண்டு, தீய கலியுகத்தினின்று தருமத்தைப் பாதுகாப்பதும், மிக்க அருகிலே வேகமுள்ள கடலை யுடையதுமாகிய கோகர்ணமென்னுந் தலத்தை யடைந்தனர். (1)

அங்கு, பிரமனுலும், விட்டுணுவினுலுஞ் சேவிக்கப்பட்டவரும், உலகமாகிய நாடகத்திற்கு வியப்புடைய ஒரு சூத்திரதாரியும், (நாடகத்திற்கு ஆசிரியராயும்) உடம்பின் பாதியில் (இடது பாகத்தில்) பெண்மையை யுடையவரும், தீய காம முதலியவைகளின் பற்றிலாதவருமாகிய மகா பலேசுரரை வணங்கித் துதித்தனர். (2)

வலது பாகத்தில், மேகத்தால் அத்துவிதத்தைப் பாடும் அழகுடையதும், இடது பாகத்தில் மேகத்துடன் ஒன்று கூடியிருக்கும் மின்னலாற் சம்பாதிக்கப்பட்ட சம்பிரதாய ஆசிரியரைக் காட்டுவதுமாகிய காம தகனனுடைய உருவை நினைக்கின்றேன். (3)

மற்றும், இடப்பாக மென்னும் வயல்களிலிருந்து எழுகின்ற காந்திகளான புல்லின் புதர்களிற்றிரிகின்ற மானல் விளங்கப்பட்ட இடத் திருக் கரத்தையும், வலப் பாகத்திலிருந்து எழுகின்ற காந்திகளென்னும் பயிர்களின் நுனிப்

பாகங்களை அருந்த வேட்கையுடைய கிளியாலழகு பொருந்திய வலத் திருக் கரத்தையுமுடைய பரசிவன் யானாயிருக்கின்றேன். பரசிவனது திருக் கரத்தில் மானும், பார்வதியின் திருக் கரத்தில் கிளியும் இருக்கின்றதென்றுணர்க. (4)

அன்றியும், மங்கல சூத்திரம் மலைமகளின் கண்டத்தில் சம்பந்தமுடையதாயினும், ஆலகால விடத்தால் எவருடைய திருக் கழுத்தில் குன்றிய வலியுடையதானதோ, அப் பரமான்மாவே அபேதாநுபவத்தால் யானாயிருக்கின்றேன். (5)

இவ்வண்ணம் முக்குணங் கடந்த தன்மையால் நன்கு பாவிக்கத் தக்க திருக் கோகர்ணேசுரரை (மகாபலேசரை) வாக்கால் ஆராதித்துக் கொண்டு அச் சங்கரபகவற்பாதர், மூன்றுலகத்தினும் புனிதமாகிய கோகர்ணத்தில் களிப்புடன் மூன்றிரவைக் கழித்தனர். (6)

சங்கரபகவற்பாதர்

அரி சங்கர க்ஷேத்திர மடைதல்.

பின்னர், கைலையிலும், வைகுண்டத்திலும், வெவ்வேறு திரு மேனியை யுடையதும், வணங்குவோர்களின் பாவத்தைப் போக்குவதும், அரி சங்கரம் என்னுந் திரு நாமமுடையதுமாகிய திவ்ய தலத்திற்கு, துறந்தார்களுக்குச் சக்கரவர்த்தியும், தீர்த்த யாத்திரை செய்பவருமாகிய சங்கர பகவற்பாதர் விரைவிற் சென்றனர். (7)

அங்குச் சென்று, பேதவாதிகளின் மயக்கத்தை நீக்குதற்பொருட்டு அத்துவித முத்திரையைத் தெரிவிப்பவர்களும், ஆராதித்தற்குரியவர்களுமான அரி, சங்கரர் என்னுமிருவரையும், சங்கரபகவற்பாதர், உண்மையுடைய

இருவிதப் பொருள் கொண்ட தோத்திரங்களால் கீழ் வருமாறு (துதித்தனர்). (8)

## மச்ச சிவ துதி

போற்றத் தக்கதும், மகத்தாகிய சோம கலை விலாச முடையதும், (ஈண்டு மறையை அபகரித்த சோமகன் என்னுமொரு அசுரனைக் கொல்லுங் கிரீடை, அல்லது மகத்தாகிய சோமம் கற்பாந்தக்கடலாம்; அதனிடையில் விளையாடல், பரசிவனுக்கு வெளிப்படை) அநாதியாகிய மைனத் தன்மையுடையதும், (மீனின் தன்மை; மச்சாவதாரர், விட்டுணு வென்பது வெளிப்படை; பரசிவனோ, மேனை, என்னும் பருவதத்தின் சம்பந்தமுடைய பார்வதியை யுடையவன்) சிந்திப்பதற்கெட்டாததுமாகிய உருவத்தைப் பெற்று, அன்புடன் கோவை = மறையை, அல்லது இடபத்தைக் கொண்டுவந்த வியாபகர் (விஷ்ணு, அல்லது சிவன்) எனக்கு நலத்தைச் செய்வாராக. (9)

## கூர்ம சிவ துதி

மந்தராகத்தை (மந்தர அகத்தை)க் கொண்டு மந்தர மென்னும் மலையை அல்லது, மந்தாரமென்னுங் கற்பகத் தருவை) யடைந்து அமுதமுண்ணுந் தன்மையைச் (சோக மின்மையை அல்லது விடமுண்ணுந் தன்மையைச்) செய்தவரும், (தேவர்களை யமுதமுண்ண வைத்தவர் விஷ்ணு ஆவர்; விஷமுண்டவர் சிவனவர்.) மலை விளையாட்டிற்கு உரியவரும், (மந்தார மலையைத் தாங்குவதாகிய விளையாடல் விட்டுணுவிற்காம்; கைலை மலையில் விளையாடல் சிவனுக்காம்;) அழகுடையவருமாகிய கூர்ம சிவ மூர்த்தியென்னும் தேவரீர் எனக்கு அளவிலாத அருள் புரிவீராக (ஈண்டுக் கூர்ம வடிவாய் அமுதங் கடையுமந்தர மலையை அசையாமற்

றுங்கினவர் விஷ்ணு ஆவர் பரசிவனுடைய செய்கைகள் வெளிப்படை). (10)

### வராக சிவ துதி

மகிமை மேலாக விளங்கச் செய்தவரும், (மகிமை)யை = பூமியை, மேலே, வரும்படியாகச் செய்தவர் விஷ்ணு. மகிமையை மேலாக விளங்கச் செய்தவன் சிவன்.) விளங்கிய வராகீச வுடம்புடையவருமாகிய, (வராக = பன்றியின் ஈசன் = பெரும் வராக வடிவத்தை, அடைந்தவர் விட்டுணு; வர - ஆகி, ஈசன். சிறந்த ஆதிசேடனைக் கண்டத்திலுடையவன் சிவன்) வராக சிவனுக்கு நாடோறும் கைகளிரண்டையும் அந்திப் போதைய கமல மலருக்கு ஒப்பாய் யான் செய்கின்றேன் (கை குவிக்கின்றேன் என்பதாம். விஷ்ணு வராகாவதாரமெடுத்து அமிழ்ந்து போன தரையை மேலே கொண்டுவந்தார் என்பது புராணத்தில் வெளிப்படை). (11)

### நரசிம்ம சிவ துதி

மேலாகிய கேசரித் தன்மையை (நரசிம்ம வடிவங் கொண்டவர் விஷ்ணு ; கே - சரித் சிரசிற் கங்கையைக் கொண்டவன் சிவன்) நன்கு பெற்று, அமரத்வேஷியை (இரணிய கசிபு அல்லது கயாசுரனை) எவர் கொன்றனரோ, அத்தன்மையராகிய பிரகலாத எழுச்சியுற்ற (பிரகலாதனுக்குப் பெருங் களிப்பைக் கொடுத்தவர் விஷ்ணு; பேரானந்தத்தை யடைந்தவன் சிவன்) அநாதி பஞ்சானன மூர்த்தியை (நரசிம்ம மூர்த்தியை, ஐமுகச் சிவனை) யான் வணங்குகின்றேன். (12)

### வாமன சிவ துதி

பலி வாங்க விரும்பித் தோன்றி, (பலிச்சக்கரவர்த்தியினிடத்தில் மூன்றடி மண் வாங்க விரும்பியவர் விஷ்ணு; தக்கன் கொடுத்த பலியை வாங்க விரும்பியவன் சிவன்) குற

டாகி (குள்ளனாய்—வாமனனாய் அல்லது, குறுகிய மான் தோலைத் தாங்கி) காந்தையை விடுத்து, (மனைவியைத் துறந்து, அல்லது பார்வதியை அனுப்பி) தவமேற் கொண்டவரும், ஆசிரமமடைந்தார்களின் ஆதி மூர்த்தியுமாகிய பிரமசாரி எம்மைப் பாதுகாத்தருள்வாராக (ஈண்டு வாமன வடிவப் பிரசாரியாய் பலிச் சக்கரவர்த்தியினிடத்தில் விட்டு மண்ணை யிரந்தாரென்பதும், தக்கன் வேள்வியில் பார்வதியை, பரசிவன் தவம் பண்ணச் செய்தானென்பதும் புராணத்தில் வெளிப்படை). (13)

பரசுராம சிவ துதி

மிருதலை யுடைய வாரியால் (மிக விளங்கிய பாலனால் பரசுராமரால், அல்லது மிருதலை யுள்ள வாரியால், கங்கையைத் தலையிற்றாங்கியவரால்) போர்க் களத்தில், அருச்சுனன் அல்லது கார்த்திய வீரியார்ச்சுனன் வெற்றி கொள்ளப்பட்டான் அன்றோ அத்தன்மைய நட்சத்திர நாதரால் விளங்குகின்ற (சந்திரன் போல் விளங்கும், அல்லது சந்திரனால் விளங்கும்) அந்த ஒரு நாதரால் யானும் நாதருடையவனாவேன். (14)

இராம சிவ துதி

பொய்த் தோற்ற விலாசத்தை யுண்டுபண்ணுஞ் சுயம் பிரகாசத்தால் விரும்பியவாறே, பத்து முகமுடைய பகைவனைக் (இராவணனை, அல்லது, பெண்ணைப் பார்த்தல், விரும்பல், நினைத்தல், துயினீங்கல், மெலிதல் புணர்தல், அதரபான முதலியன, உன்மாதம், மூர்ச்சை, ஸ்மிருதி, என்னும் பத்து அவத்தைகளையுடைய மன்மதன் உலகிற்கே பகைவனாயிருத்தலின், அல்லது, சிவன்மேல் பாணம் விட்டமையின் நேரே சிவனுக்குச் சத்துருவானவனை) கொன்று,

தரணிமகளின் (சீதையின் அல்லது பார்வதியின்) கொங்கையிலுள்ள சூட்டை, நேரே அநுபவித்த, தேவன் (இராமர், பரசிவர்) எமக்கு அளவிலா ஆனந்தத்தை யளித்தருள்வாராக. (15)

## பலராம சிவ துதி

உயர்ந்த தாலக் கொடியை யுடையவரும், (பனைக் கொடியை யுடையவரும், அல்லது இனிய கீதம் பாடும் போது முனிவுற்றவரும்) ஆலகாலத்தைத் தாங்கிய கழுத்தை யுடையவரும், (காள கண்டன் = சிவன் என்பது வெளிப்படை; ஆலகாலம் = கலப்பை, அதைத் தாங்கிய கழுத்தையுடையவர் = பலராமர்,) அங்ஙனமாயினும் சிறந்த கழுத்தை யுடையவரும், நிலைத்த தரும மூர்த்தியும், (நிலையாகவுள்ள தருமத்தின் பொருட்டு தரும வடிவ மூர்த்தியானவர், அல்லது முத்தி தருமத்தின் பொருட்டு மூர்த்தித் தன்மையை (காரியமாந் தன்மையை யடைந்தவர்) உரோகணீசரால் (வசுதேவரால் முத்தமிடப்பட்ட சிரசை யுடையவரும், அல்லது சந்திரனால்) முத்தமிடப்பட்ட சிரசை யுடையவருமாகிய வாக்கு மனங்கடந்த பலராம சிவ மூர்த்தி எம்மைப் பாதுகாத்தருள்வாராக. (16)

## கிருஷ்ண சிவ துதி

அகிதாபை (காலிங்கி என்னும் சர்ப்பத்தின் விடத்தை, அல்லது, துதிக்கையாற் கொட்டுகின்ற நீரை) பொருந்திய (காலிங்க நிர்த்தனம் பண்ணுங் காலத்தில், தன் தருகிலிருந்த அல்லது தனது உடம்போடு கூடியிருந்த) விநாயகரால் (கருடரால் அல்லது கணேசரால்) பெற்றுக் கொண்டவரும், பூதனமோகித (பூதனை, என்னுமொரு பூவையரை மோகிக்கச் செய்யும், அல்லது தம்மை நினைப்பவர்களிடத்தில் புநித

மான) சித்த விருத்தி யுடையவரும், கலாபாலங்காரமுடைய வருமாகிய (மயிலின் தோகையால் அலங்கரிக்கப்பட்டவரும், அல்லது சந்திரனால் அலங்கரிக்கப்பட்டவரும்) கிருஷ்ண சிவ மூர்த்தி களிப்புடையராய் என்னைக் காப்பாற்றி யருள் வாராக. (17)

## பௌத்த சிவ துதி

மீனக் கொடியானை (மன்மதனை) வெற்றி கொண்ட வரும், பிரசித்தியாகிய எல்லாமுணர்தற்றன்மை யுடையவ ரும், முழுத் தயை யுடையவரும், வேட்போருக்குத் துவேஷ முடையராகிய வடிவத்தால் (பைரவ வடிவால்) அன்புடைய வரும், ஆன்மானந்தரும், ஞானப் பிழம்பு வடிவருமாகிய பௌத்த சிவனை அடைய யான் விரும்புகின்றேன். (18)

## கல்கி சிவ துதி

உயிர்களின் உள்ளத்தைக் கடந்து விளங்குபவரும், அஞ்ஞானத்தைக் (கலியை) கெடுப்பவரும், பிரமானந்த வடிவரும், சத்தியத்தில் (உண்மையாகிய யுகத்தில், அல்லது, உண்மையாகிய உள்ளத்தில்,) வசிக்க விருப்புடையவரு மாகிய கல்கி சிவனுக்கு யான் பன்முறை வணங்குகின் றேன். (19)

## சங்கரபகவற்பாதர் மூகாம்பிகைத் தலத்தை யடைதல்

இவ்வண்ணம், இலக்குமி, பார்வதி, என்னுமிருவரின் கொழுநர்களுக்கும், கதலிக் கனியின் சுவையினுஞ் சிறந்த சுவை மலிந்த தோத்திரங்களால் ஆராதனை செய்து கொண்டு, களிப்புடையவரும், ஆன்மாவிற் காமமுடையவருமாகிய முனிகளிற் சிறந்த சங்கரபகவற்பாதர், மூகாம்பிகை என் னுந் தலத்திற்குப் பிரயாணப்பட்டனர். (20)

பிரயாணப்பட்டுப் போகுங்கால் வழியில் இருவர் உயிர் துறந்த குழந்தையை உடம்பின் மேற் போட்டுக்கொண்டு, அவர்களுக்கு அக் குழந்தை ஒன்றேயாமாதலின் பெரிதும் அழுகையுடன், அந்தோ! பெருஞ் சோகமுற்ற அம்மனைவி கொழுநர் இருவரையும் சங்கரபகவற்பாதர் பார்த்து கருணை வசத்தராய், தாமுஞ் சோகமுற்றனர். (21)

இவ்வாறு இவரும் எல்லையிலாத சோகத்தை யடைந்த போது வெளிப்படையாக, "பாதுகாக்க வலியற்ற மனிதரின் தயை, கேவலம் துன்பத்தின் பொருட்டே தோற்றுவதாம்," என அசரீரி வாக்குண்டானது. (22)

அறிஞராகிய சங்கரபகவற்பாதர் அவ் வாக்கைக் கேட்டு, "இஃதுண்மையே, மூன்றுலகத்தையுங் காப்பாற்றத்தக்க தங்கள் ஒருவருக்கே அத்தன்மைய தயை அழகுடைத்து," என மறு மொழி கூறினர். (23)

## சங்கரபகவற்பாதர் அந்தணரின் குழந்தை யொன்றைப் பிழைப்பித்தல்

இங்ஙனம் சங்கரபகவற்பாதர் கூறியவுடனே அவ் வந்தணக் குழந்தை இனிது துயின்றெழுந்தது போல் உயிர்த்தெழுந்தது; அங்கு அருகிலிருந்தவர்கள், எல்லாப் பிராணிகளுக்கும் இனியராகிய இச் சங்கரபகவற்பாதரின் செய்தியை நோக்கி வியப்புற்றார்கள். (24)

பின்னர், அவர், கதலி, கமுகு, தெங்கு, பனை, முதலான தருக்கள் சூழ்ந்த, களிப்பைத் தரும் உட் கிராமங்களை யுடையதும், சாதனையையே ஒரு சம்பத்தாகவுடையவர்களுக்கு சித்தியைத் தருந் தலமுமாகிய அம் மூகாம்பிகைத் தலத்தை யடைந்தனர். (25)

அங்கு, பிரமனுலகத்திலுள்ள களிப்பையும் சிறிதாகச் செய்யும், ஆனந்த பாட்ப மலிந்ததும், புளகிதமுற்றதுமாகிய பெரும்பக்தியை யுடைய சங்கரபகவற்பாதர், எல்லை யற்ற கருணையைச் செய்யத்தக்க அம் மூகாம்பிகையை ஆராதித்துக் கீழ் வருமாறு ஒப்பற்ற துதியைச் செய்தனர். (26)

## சங்கரபகவற்பாதர்
## மூகாம்பிகையைத் துதித்தல்

தேவியே, ஆயிரங் கோடிக் கணக்கையுங் கடந்த உமது திருவடிக் கமல ஒளிக் கூட்டங்களில் முந்நூற்றறுபது ஒளிகளின் கூறுகள், மதி, பருதி, எரி, முதலானவர்களை யடைந்து உலகனைத்தையும் விளக்குவன வாகின்றன. (27)

அம்மையே, பெரியார்கள், அழைத்தல் (ஆவாகித்தல்) முதலான அறுபத்து நான்கு வகை யுபசாரங்களாலும் அருகிலிருக்கின்ற திரைச் சீலை முதலான அருப்பணங்களாலும், நாடோறும் உம்மையே மனதில் ஆராதிக்கின்றார்கள். (28)

அம்பிகையே, அந்த அறுபத்து நான்கு உபசாரங்களுள் விசுத்தி, ஆஞ்ஞை என்னுமிரண்டிடத்திலும், ஆயிரமிதழ்க் கமலத்திலும், புண்ணியமுடையார்கள் உமக்கு மகிழ்ச்சி நிமித்தமாக பரிசுத்தமான ஒவ்வொரு உபசாரங்களையும் விரித்துச் செய்கின்றார்கள். (29)

அம்ப, உம்மைச் சில பொது மனிதர், வெளியிலே ஆராதிக்கின்றார்; சிலரோ, உள்ளும் புறம்பும் ஆராதிக்கின்றார்; சில உத்தமரோ உள்ளிலே ஆராதிக்கின்றார்; உமது அபேதாநுபவத்தில் நிலைத்தவர் சிலரோ, ஒருபோதும் உமக்குப் பூசையே செய்யார். (30)

அம்பிகே, (அம், ஆதார சக்தி, என்பது முதலான அ:, அமுதா சக்தி என்பதீறான) முப்பத்தெட்டுக் கலைக ளிற் சிறந்த நிவிருத்தி முதலான ஐந்து கலைகளின் மேல் விளங்கப்பட்ட உமது திருவடிக் கமலங்களை, அறிவுடை யார்கள் ஆராதிக்கின்றார்கள். (31)

காலாக்கினி வடிவத்தால் உலகங்களைத் தகித்து, அமுத வடிவால் மீண்டும் உண்டாக்கிக் காப்பாற்றுகின்ற உம் மைச் சிந்திப்பவர் படைக்குந் தொழிலுடையராகின்ற னர். (32)

உம்மை, முன்னர் ஆசிரியரின் உபதேசத்தாலறிந்து, "அவ் வம்மையே நானாயிருக்கின்றேன்," என நிட்டையோ கத்தால் உண்டாகிய பிரத்ய பிஞ்ஞை ஞானத்தால் எவர் உணர்கின்றாரோ, அவர் பிரத்திய பிஞ்ஞை மதத்தின் (அத்துவித மதத்தின்) எல்லையை யுணர்ந்த தன்னியராகின் றார். (33)

இவ் வுலக விடயங்களை விரும்பியவர்கள் (பொன் மய மான நாலிதழ்க் கமலமுள்ள) மூலாதார சக்கரத்திலும், (அதற்கு மேலுள்ள மின்னல் மயமான ஆறிதழ்க் கமல முடைய) சுவாதிட்டான சக்கரத்திலும், அதற்கு மேலுள்ள புகை நிறத்த பத்திதழ்க் கமலமுடைய மணிபூரக சக்கரத்தி லும், உம்மை எவர் உபாசிக்கின்றாரோ அவர் உமது உல கத்தினும் வெளியே வாழ்கின்றவர் ஆவர். (34)

தேவியே, உம்மை, (அரிதார நிறமுள்ள பன்னிரண் டிதழ்க் கமலமுடைய) அனாகத சக்கரத்தில் தியானிக்கின்ற வர்கள், உமது உலகத்தில் வாழ்கின்றார்கள் (புகை நிற முள்ள பதனாறிதழிழ்க் கமலமுடைய) விசுத்தி சக்கரத்தில்

உம்மைத் தியானிக்கின்றவர் உமது சாமீப்யத்தை யடைகின்றார். (கருப்பூர நிறமுள்ள ஆயிர மிதழ்க் கமலமுடைய) ஆஞ்ஞா சக்கரத்தில் உம்மைத் தியானிப்பவர் உமக்குச் சமமாகிய போகத்தைத் துய்க்கின்றனர். (35)

அம்பிகே, துருவ மண்டலமென்னும் ஆயிரமிதழ்க் கமலத்தில் உம்மைத் தியானிக்கின்றவர் என்னும், (கீழ்க் கூறப்படும்) நால் வகை அபேதாநுபவத்தால் மோகம் நீங்கியவர்களான சாதனையிற் சிறந்தோர் உமது சாயுச்சிய பதவியை யடைகின்றார். (36)

முதலாவது, ஸ்ரீ சக்கரம், ஷட் சக்கரமென்னும் இரண்டின் ஐக்கியம், பின்னர், ஸ்ரீ சக்கர மந்திரங்களுக்குச் சித்தித்த ஐக்கியம், அதன் பின்னர், சக்கரத்திற்கும் உமக்குமுண்டாகின்ற ஐக்கியம், மந்திரத்திற்கும் உமக்குமுண்டாகின்ற ஐக்கியம் என்னும் இவ்வபேதங்கள் நான்கையும் சாதனை செய்புஞ் சிலர் தியானிக்கின்றார். (37)

இவ்வாறு தோத்திர வாக்கியங்களால் அம் மூகாம்பிகையை நன்கு ஆராதித்துக்கொண்டு ஐயத்தால் வந்த அன்னத்தை யுண்டு களிப்புற்று, கிருத கிருத்தியராகிய அச் சங்கரபகவற்பாதர், அநேக சாதனமுடையோரால் (பக்குவிகளால்) மிகப் போற்றப்பட்டவராயும், சாந்த மனத்தராயுமிருந்து அத் தலத்தின்கண்ணே சில காலங் கழித்தனர். (38)

## சங்கரபகவற்பாதர் அத்தாமலகரைக் காணல்.

பின்னர், ஓர் போது, அச் சங்கரபகவற்பாதர், தமது மாணாக்கருடன், ஒவ்வொரு வீடும், தீ யோம்பலால் நிறையக் கிளம்பும் புநிதமான நறு மணங்களால் வேண்டுகோளையுடையதும், (39)

அபயிருந்து மெல்ல அக்கிராமத்துட் சென்று, தமது கருமங்களிலே நிலைத்தவரும், தொலை தூரத்தில் விலக்கின கருமங்களை விட்டவருமான அக் கிராமத்திலுள்ள அந்தணர்களைப் பார்த்துவிட்டு (அது இவர்களிடத்தில் நமது செய்கை செல்லாதென உறுதிகொண்டு) அக் கிராமத்திற்கு வெளியே செல்கின்ற தன்மையை யுடையதும், (40)

மறை யோதுபவரும், வேள்வி வேட்பவரும், மறை கட்டளை யிட்ட கருமங்களில் வல்லுநரும், பெரும் புகழுடையவருமான இரண்டாயிரஞ் சனங்கள் வசிக்கப்பட்டதுவுமாகிய ஸ்ரீ பலிபுரம் என்னுந் திருநாமமுடைய அந்தணரின் கிராமமொன்றை யடைந்தனர். (41)

பிணாக பாணியாகிய மலைமகள் கொழுநர் (பரசிவர்) அதன் நடுவிலிருந்துகொண்டு, மாலையை நடுவிலுள்ள நாயக மணி விளக்குவதுபோலும், இராக்காலத்தை வான் நடுவிலுள்ள சந்திரன் ஒளியுறச் செய்வது போன்றும், விளக்குகின்ற அந்த ஸ்ரீ பலிபுரமென்னுங் கிராமத்தில், சாத்திரமுணர்ந்தவரும், மகாநுபாவரும், நுண்ணறிவாளரும், கருமகாண்ட நூல்களில் மிக்கப் பிரியமுடையவரும், வேள்வியாற்றினதால் பரந்த புகழுடையவருமாகிய, பிரபாகரர் என்னுந் திருநாமம் பூண்ட அந்தணரொருவரிருந்தார். (42, 43)

அவருக்கு, பசு, பொன், பூமி, நல்லுறவினர், சசாதீய மாந்தர்கள் என்னு மனைத்தும் இருந்தன; இருந்த அவைகளால் அவர் இன்புற்றாரோ? இன்புற்றிலர், என்னை? அவருக்கு ஒரு ஊமைக் குழந்தை உதித்துள்ளது, ஆதலின் என்க. (44)

அது, சிறிதும் பேசாதது; அற்பமுங் கேளாதது; உண்மையாய் கடவுளைத் தியானிப்பது போன்று மந்தச்

செய்கை யுடையது; வடிவிலோ, அது மன்மதன் போன்றது; ஒளியிலோ, சூரியன் போன்றது; சந்திரன் போன்ற முகமுடையது; தரையை யொத்த அடக்கமுடையது. (45)

இக் குழந்தையைப் பார்த்த அதனது அன்னையார், இக் குழந்தை கிரகாவேசத்தால் சடம்போல் திரிகின்றதோ, அல்லது, இயல்பாலோ, அல்லது முன் செய்த தீவினையாலோ, என அல்லும் பகலுஞ் சிந்தை யுடையராய், மிகக் கற்றுணர்ந்தார் இங்கு வருவரேல், அவரை வினவ வேண்டும் என்னும் எண்ணமுடையராயினர். (46)

அப்போது, அக் குழந்தையின் அவ் வன்னையார், யாரோ ஒரு பூச்சிய பகவற்பாதர், அநேக சாத்திரச் சுமைகளைக் கொண்ட தமது மாணுக்கர், அம் மாணுக்கரின் மாணுக்கர் என்னுமிவர்களுடன் நமது கிராமத்திற்கு வந்திருக்கின்றனராம் என்னும் வார்த்தையைக் கேள்வியுற்று, மன்னனிடத்தும், இட்ட தெய்வத்தினிடத்தும், ஆசிரியரிடத்தும், வெறுங் கையோடு செல்லக்கூடாது என்னுந் தான்மரபுணர்ந்த அவர், தமது கையிற் கனிகளைக் கொண்டவராய் அவ் வூமைக்குழந்தையையுங் கூட்டிக்கொண்டு, சங்கர பகவற்பாதரிடத்திற்கு வந்து, அக் கனிகளை அவர் சந்நிதியில் வைத்து அவருடைய திரு வடிக் கமலங்களில் தாமும் பணிந்து அக் குழந்தையையும் பணியச் செய்தனர்; சாம்பரால் மறைக்கப்பட்ட தீயைப் போன்று சடத் தன்மையை யடைந்த அக் குழந்தையும் சங்கரபகவற்பாதருடைய திருவடிக் கமலங்களில் விழுந்து பணிந்தது. பணிந்து பெரும் பான்மையுந் தனது சாட்டியத் தன்மையை வெளிப்படுத்த விரும்பியதாய் மீண்டும் எழுந்திருக்கவில்லை. (47, 48, 49)

## சங்கரபகவற்பாதர் அத்தாமலகரைப் பேச வைத்தல்

அப்போது, சங்கரபகவற்பாதர் கருணையினால், கீழ் நோக்கிய முகமுடைய அக்குழந்தையை தமது திருக் கரங்களால் மெல்ல, மேலே தூக்கிவிட்டனர். அக் குழந்தையின் அன்னையார், இவர், தமது குழந்தையை எழுப்பிவிட்ட போது, அவரை நோக்கி, "இறைவரே, இக் குழந்தை சடம் போலிருப்பது யாது காரணம்? அதை அருள் செய்வீராக," என வினவினர். (50)

"அஃதன்றியும், பகவ, இக் குழந்தை பிறந்து பதின் மூன்று வருடமாயின; இது அறிவின்மையால் மறையையும் ஓதவில்லை; எழுத்துக்களையும் எழுதவில்லை; ஒருவகையில் இதற்குப் பூணு நூலும் புனைந்து விட்டேன். (51)

விளையாடலையே மேற்கொண்ட சிறுர்களின் கூட்டம் அழைக்கினும், இக் குழந்தை விளையாடச் செல்வதில்லை; மற்றைய சிறுவர் சடம்போல் ஊமையாயிருக்கின்ற இக் குழந்தையை அடித்தபோதினும் இது முனிவு கொள்வதில்லை. (52)

இது ஓர் போது அன்ன முண்கின்றது; ஒருபோது உண்பதில்லை; தனது விருப்பத்தின்படியே விளையாடுகின்றது, சொல்லியதைச் செய்கின்றதில்லை; அங்ஙனமாயினும் யான் முனிவால் இதை அடிப்பதே யில்லை; ஆனால் தனது கரும வசத்தால் நாடோறும் வளர்ந்து வருகின்றது. (53)

இவ்வாறு, அக் குழந்தையின் அன்னையாராகிய அவ் வந்தண மாது கூறி முடித்தவுடன், ஆசிரியர்களுக்கு இந்திராகிய சங்கரபகவற்பாதர், அவ் வூமைக் குழந்தையை

நோக்கி, "குழந்தாய், சடம் போன்ற செய்கை யுடைய நீ யாவன்?" என வினவி யருளினர்; அதற்கு வடிவத்திற் குழந்தையாயும் அறிவிலோர் மகானுயுமுள்ள அக் குழந்தை கீழ் வருமாறு மறு மொழி கூறிற்று. (54)

அத்தாமலகர் கூறுதல்

"ஆசிரிய, யான் சடம் அல்லன்; மற்றே, சடங்களனைத்தும் எனக்கெதிரில் தொழிற்படுகின்றன; இதில் யான் அணுத்துணையுமையமுறேன்; மற்றும், இன்ப துன்பமுதலான ஆறு அலைகளையும், பிறத்தல் வளர்தல் முதலான ஆறு விகாரங்களையுங் கடந்த ஆனந்தப் பிழம்பாகிய பரமான்ம வடிவே யானுயிருக்கின்றேன். (55)

அறிஞ, எனது, இவ் வநுபூதி முத்தி விருப்புடையார்களுக்கு உண்டாகற்பாலது;" எனக்கூறி கீழ் வரும் பன்னிரு விருத்தங்களால் உலகங் கடந்த சிதான்ம தத்துவத்தை அக் குழந்தை எடுத்துக் கூறிற்று. (56)

(1) "மனம், நேத்திரம் முதலானவைகள் தொழிற்படுவதற்கு நிமித்தமும், உபாதிகளனைத்துமொழிந்ததும், ஆகாயம் போன்றதும், உலகம், இரவி, என்பவைகள் சேட்டிக்க நிமித்தமுமாகிய நித்திய அறிவு வடிவ ஆன்மாவே யான்.

(2) சட வடிவான மனம், சட்சு, முதலானவைகள், தீயிற் சூடு போன்று, நித்திய சைதன்ய வடிவாகிய எப்பொருளைப் பற்றிக்கொண்டு பிரவிருத்திக்கின்றனவோ, அசைவற்ற அத்துவிதீய நித்திய அறிவு வடிவாகிய அவ்வான்மாவே யான்.

(3) கண்ணாடியிற் றோன்றப்பட்ட முகத்தினுடைய பிரதி விம்பம், முகத்தினும் வேறாக ஒரு பொருளன்று. புத்தியிற் றோன்றும் சிதாபாச வடிவ சிவனும் அதுபோல், அதிட்டானத்தினும் வேறாகான். நித்திய அறிவு வடிவாகிய அவ் வான்மாவே யான்.

(4) கண்ணாடி யில்லாதபோது முகத்தின் பிரதிவிம்பம் நாசமான விடத்து, கற்பனையற்ற முகமொன்று மாத்திரம் இருக்கின்றது போல, புத்தி நீங்கிய போது ஆபாசமின்றிய (அதிட்டானமாகிய) யாதொரு நித்திய அறிவு வடிவ ஆன்மாத் தோன்றுகின்றதோ, அதுவே யான்.

(5) மனம், சட்சு முதலியவைகளில் தொடர்ந்து நிற்பதும், மனது சட்சு முதலியவைகளுக்கு, மனதும், சட்சும் ஆனதும், மனது சட்சு முதலியவைகளாலறியப்படாததுமாகிய நித்திய அறிவு வடிவ ஆன்மா எதுவே அதுவே யான்.

(6) யாதொன்று, சுயம் பிரகாச சுத்த சைதன்ய வடிவாய் ஒன்றாகவே யிருந்தும், ஒரே இரவி குடத்திலுள்ள நீர்களில் அநேகமாய்த் தோற்றுவது போல், புத்திகளில் அநேக வடிவாய்த் தோற்றுகின்றதோ, நித்திய அறிவு வடிவாகிய அவ்வான்மாவே யான்.

(7) இரவியின் ஒளி, நேத்திரங்கள் விளக்கத் தக்க அநேக விதமான பொருள்களை ஒருங்கே விளக்குவது போன்று யாதொரு சைதன்யம் அனேக புத்திகளை ஒருங்கே விளக்குகின்றதோ, அந்த நித்திய அறிவு வடிவாகிய ஆன்மாவே யான்.

துடம்பின்கண்ணே அபேத வுணர்ச்சி யில்லாத விடத்து வெளிப் பொருள்களில் சொல்லற்பாலதென்னே? (61)

## அத்தாமலகர் சங்கரபகவற்பாதருக்கு மாணுக்கராதல்

சங்கரபகவற்பாதர் இவ்வாறு அருளிச் செய்து அத்தாமலகர் என்னும் அவ் வந்தணச்சிறுவரை தம்முடன் அழைத்துக்கொண்டு தாம் விரும்பிய திசைக்குச் சென்றனர். அக் குழந்தையின் தந்தையாரும் அவரைச் சிறிது தூரம் வழி கூட்டி யநுப்பிவிட்டு தாம் பல கற்றுணர்ந்த நிலை மதியுடையராதலின் (கிலேசஞ் சிறிதுமேயின்றி) தமது மனைக்குச் சென்றனர். (62)

## சங்கரபகவற்பாதர் சிருங்ககிரியை யடைதல்

பின்னர், பிரமநிட்டர்களிற் சக்கரவர்த்தியாகிய சங்கர பகவற்பாதர், விட்டுணு முதலான தேவகணங்களாற் போற்றப்பட்டவராயும், பத்மபாதர் முதலான மாணுக்கர் குழாங்களாற் சூழப்பட்டவருமாகிச் சிருங்ககிரியை யடைந்தனர். (63)

## சிருங்ககிரியை விதத்தல்

இருடி சிருங்கமுனிவர், பரமான்மாவில் உள்ளத்தை நிறுத்தியவராய் இக் கலியுகத்திலும் தவமாற்றுவதற்கிடமானதும், நன்கு தொடுதல் மாத்திரத்தானே இன்பங் கொடுக்குந் துங்கபத்திரை யென்னும் நதியால் அழகுடையதும், (64)

அதிதிகளை யாராதித்தலால் கற்பகத்தருவின் கிளைகளையும் சிறிதாகச் செய்பவர்களும், மறையின் சாகைகளை கரை

கண்டுணர்ந்தவர்களும், தடையற்ற நூற்றுக் கணக்கான வேள்விகளைச் செய்கின்றவர்களுமான நல்லார்கள் வாழ்தற்கு உரிமை யுடையதும் ஆனது சிருங்ககிரியாம் என்க. (65)

அங்குச் சங்கரபகவற்பாதர் தமது சிறந்த நூல்களை, அறிஞர்களில் மேம்பட்டார்களும், கேட்டன் மாத்திரத்தானே புருடார்த்தங்களை யடைபவர்களும் ஓதிய கல்விப் பொருளைக் கொள்வதில் வல்லுநர்களுமானவர்களுக்குப் படிப்பித்தனர். (66)

ஆதிசேடனையும், நாணத்தால் தலை குனியச் செய்வதொப்ப, படிப்பித்து (படிப்போர்களின்) உள்ளிருளனைத்தையு மோட்டி யருளினர்; என்னை? வாக்கின் இறைவராகிய சங்கரபகவற்பாதர், சீவேசுரர்களின் விசேடண நிவிருத்தியை உள்ளவாறே மிக விரித்துரைத்தனர். (ஆகையாலென்க). (67)

## சுரேசுரரை சிருங்ககிரி பீடத்திற்குத் தலைவராக்கல்

சங்கரபகவற்பாதர், அச் சிருங்ககிரியின்கண், இந்திரனுடைய விமானத்தைப் போன்றதும், சில்பங்கள் யாவும் அமைந்துள்ளதுமாகிய ஆலயமொன்று செய்வித்து, பிரமன் முதலானோர்களால் ஆராதிக்கப்படுபவரும், சாரதா, என்னுந் திருநாமத்தால் வழங்கப்படுபவரும், முன், தோல்வி யடைந்தபோது தாம் செய்த உறுதி மொழியைப் பாதுகாப்பவரும், தற்காலம் சிருங்ககிரிபுரத்தில் வசிப்பவரும், யாவருக்கும் வேண்டிய வரத்தைக் கொடுத்துக்கொண்டு விளங்குபவருமாகிய அச் சாரதா தேவியாரை, அதில் பிரதிட்டை செய்து ஆராதித்தனர். (ஈண்டுப் பண்டைக் காலத்தியர் கூறுவதோ, அவர் அங்கு மடாலயமொன்று

அமைத்து, அதில் வித்தியா பீடத்தை நிறுவி, பாரதி என்னுஞ் சம்பிரதாய மாணுக்கருக்கு உரியதாக்கி அப் பீடத்திற்கு சுரேசுராகிய தமது மாணுக்கரைத் தலைவராக்கினர் என்பதாம்). (68, 69)

### சங்கரபகவற்பாதர் அத்தாமலகருக்குக் கல்வி வருமாறு அருளல்

ஆசிரியரின் மனதிற்கிசைந்த ஒழுக்கம், தமது தருமத்தில் நிலைத்தல், உயிர்களிடத்தில் தயை, வாக்கின் வளப்பக் குறைவு என்னுமிவைகளை யுடைய அத்தாமலகரென்னு மொருவர், சங்கரபகவற்பாதருக்கு முன் மாணுக்கராணுரன்றே, அவரே தோடகாசிரியர் என மேற் கூறப்படுவார். (70)

அவர், நாடோறும் தமது ஆசிரியர் (சங்கரபகவற்பாதர்) நீராடு முன் நீராடி, சிறந்த கம்பளத்தாலும், ஆடையாலும் சமமாகவும் மிருதுவாகவும் ஆசனத்தை அவருக்கு அமைத்து வைப்பர்; மற்றும் விடியற்போதில் சிறந்த பல்லைத் தீட்டுதற்குக் கொம்பும், ஆசிரியர் மலங் கழிக்கச் செல்வரேல் நீர் முதலானவைகளும் கொடுப்பர். (71)

மற்றும், வினய மதியுடைய அவர், தமது, ஆசிரியரின் திருமேனியைத் துடைத்துக்கொள்ள கைத்துண்டு கொடுப்பார். அஃதன்றியும் குறிப்பறிந்து, கொடுக்கத்தக்கவைகளைக் கொடுப்பார்; ஆசிரியரின் பாதம் வருடல் முதலியவற்றிலும் வல்லுநராகிய இவர், நிழலைப் போன்று தமது ஆசிரியரை எப்போதும் பிரியாதிருந்தார். (72)

மற்றும் இவர், தமது ஆசிரியருக்கருகில், கொட்டாவி கொள்ளார் (வாயால் நெடுஞ் சுவாசம் விடார்); இருகாலையும் பரப்பிக்கொண்டு உட்காரமாட்டார்; (ஆசிரியரின்

வாக்கை) அற்பமும் அசட்டை செய்யார்; மிகை படப் பேசார்; ஆசிரியரின் முன் முதுகு காட்டி நில்லார். (73)

தமது ஆசிரியர் உட்காருவரேல், தாமும் உட்காருவர்; செல்வரேல் தாமும் செல்வர்; யாதேனுமொன்றைக் கூறுவரேல், அதைப் பணிவுடன் கேட்பார்; அவர் கூறு விடத்தும் அவருக்கு இனியதாமெனிலோ, அதையுஞ் செய்வார்; இன்னாதெனிலோ, அதைச் செய்யார். (74)

இத் தன்மைய அரிய மாணக்கரானவர், தமது ஆசிரியரின் ஆடையைத் தோய்த்தற் பொருட்டு ஒரு சமயம் ஆற்றுக்குச் சென்ற விடத்து, அன்பரிடத்தில் அன்பு மிக்குள்ள சங்கரபகவற்பாதர், மற்றைய மாணக்கர்களுக்குப் பாடமோதுவிப்பதில், ஆற்றிற்குச் சென்ற அவரும் வரவேண்டுமென நோக்கியவராய் சிறிது சமயம் போக்கினர். (75)

(அதற்கிடையில்) அநேக மாணக்கர் ஒன்றுகூடி பாடமோதுதற் பொருட்டு, முன்னர் சாந்திபாடம் (காப்புப் பாட்டு) படிக்க முயன்றனர். அக்கால் சங்கரபகவற்பாதர் அம் மாணக்கர்களை நோக்கி, சீடர்காள், சிறிது போது பொறுத்திருப்பீர்களாக. கணப்போதில் ஆனந்தகிரியென்பவரும் வந்துவிடுவார் என இன்சொற் கூறியருளினர். (76)

மறை முடி மொழியெனும் ஆசிரியர் திரு வாய் மலர்ந்தருளிய அத் திரு வாக்கைக் கேட்டு, பத்மபாதர், "மந்த மதியுடைய அபக்குவியையும் சாத்திர மோதுவதில் எதிர் பார்ப்பதுண்டோ?" என்று கூறுவதுடன் கண் சாடையால் சுவரைக் காட்டினர் (ஈண்டு, மண் சுவர் போன்றவரை எதிர்பார்த்தல் பயனற்றதென்பது உட்கிடை). (77)

அதைக் கண்ட சங்கரபகவற்பாதர், பத்மபாதருக்கு அச் செருக்குத் தொலையுமாறும் தமது அன்பரிடத்தில் வைத்த கருணை மேம்பாட்டாலும், அவருக்கு, தமது திரு வுளத்தாலே, வித்தை பதினான்கும் வருக என, பேரருட் செய்தனர். (78)

## அத்தாமலகர் தோடக மென்னும் நூலைப் பாடல்

ஆனந்தகிரி யென்னும் அவ் வத்தாமலகர், தமது ஆசிரி யரின் பேரருளைச் செவ்வனே பெற்றுக்கொண்டு அக் கணப் போதிலே கல்வி யெல்லாவற்றையுங் கருத்தி லுணர்ந்தவராய் பரமான்ம தத்துவத்தை குறிப்பாற் காட்டும் தோடகம், என்னும் வடமொழி யாப்பு விசேடத்தை வரும்போதே பாடிக் கொண்டே. தமது ஆசியர்பால் வந்தனர். (79)

## தோடகத்தை விதத்தல்

சங்கரபகவற்பாதரின் திருவடிக்கமலத் துணையாகிய மூலவேரையும், அவரையே பற்றுக் கோடாகவுடைய தன் மையையும், அவரது, கருணை யமுத நீர் வார்க்கப்பட்ட தன்மையையும், பக்தி யென்னும் நற்கொடியையும், தோடக மென்னும் யாப்பு வடிவ அழகிய இன் சுவையையும் உடைய தோடகமென்னும் யாப்பு வடிவான கனிகள், உண்ண விருப் புற்ற ஆன்றோரிற் சிறந்தவரென்னுங் கிளிகளால், அருந்திச் சுவைக்கத் தக்கனவாய் மீண்டும் மீண்டும் விரும்பப்பட் டன. (80)

முன்னேற்றத்தால் விரும்பியவாறே பொறுமையில் (தரையில்) இடம் பற்றிக்கொண்டதும், உயர்ந்த இடத்தை (அத்துவிதீய்த்தை) அடைய விரும்புவோர்களுக்கு (முமூட் சுக்களுக்குப்) படியாயுள்ளதும், ஆகாயத்தை (சிதாகா

சத்தை) யளாவியதும், ஒரு பெருந் தன்மையானதும், வமிசத்தில் (மூங்கிலில் - பிரமவித்தையின் மரபில்) தோன்றியதும், மூவுலக முறைமையைத் தாழ்மைப்படுத்தியது மாகிய ஆசிரியரின் திருப்பணி, அவ் வானந்தகிரியாரின் பேரறியாமையைத் தொலைக்கமாட்டாதென்பதெங்ஙனம்? (81)

பின்னர், இவ்வானந்தகிரியார், வாக்கு வழி முறைகளை யுணராதவராயிருந்தும், ஆசிரியரின் கருணையினாலே தோடகம் என்னும் யாப்புத் தொடர்களால் மும்மறை முடிப் பொருளையும் விளக்கிக் கொண்டுவந்த அவர், நூலாசிரியரான மற்றைய அம்மாணுக்கருள் கவி வல்லுநராகக் காணப்பட்டார். (82)

பின்னர், கவிஞராகிய அவ் வத்தாமலகரென்னும் தோடகாசிரியரின் அமுதச்சுவை மலிந்த வாக்கியத் தொடர்புகளை, நூலாசிரியரிற் சிறந்த பத்மபாதர் முதலானோர் கேட்டுச் செருக்கற்று பெரு வியப்புற்றனர். (83)

ஆசிரியரிடத்திலுண்டாகிய பக்தி மேலீட்டால் இத் தன்மைய தோடக யாப்பு வடிவ வாக்குகள் அவர்பாலிருந்து தோன்றினமையால் உலகு, ஆன்றோரொழுக்கத்தால் விளங்கிய இவரைத் தோடகாசிரியர் என வழங்குகின்றது. (84)

(பத வோசையால்) சுருக்கமானதும், பொருளால் விரிந்ததும், அரிய நீதியை யுடையதும், ஆன்றோர்களாற் கொள்ளப்பட்டதும், சிடாசார பதங்களோடு கூடியதும், மறை முடிவுகளாலுணரத்தக்க பரமான்ம தத்துவத்தை யறிவுறுத்துவதுமாகிய அப் பிரகரண சாத்திரம் இப்போ

தும் தோடகம் என்னும் திருநாமத்தாலே தரையில் பிரசித்தியாயிருக்கின்றது. (85)

## சங்கரபகவற்பாதரின் மாணுக்கர் நால்வரையும் விதந்தோதல்

அந்த ஆனந்த கிரியாரும், சங்கரபகவற் பாதரால் கிடைக்கப் பெற்ற தோடகர், என்னுந் திருநாமம் பூண்டு திக்குகளனைத்திலும் புகழ்பெ பற்றனர். மற்றும், அவர், பத்மபாதரைப் போன்ற பிரபாவமுடையராதலின் சங்கரபகவற்பாதருக்கு முதன்மை மாணுக்கராயினர். (86)

பேரறிவாளர்கள், சங்கரபகவற்பாதரின் அத்தாமலகர் முதலான மாணுக்கர் நால்வரையும், நன்கு ஆராய்ச்சி செய்து புருடார்த்தங்கள் நான்கென்றும், அல்லது, இருக்கு முதலான வேதங்கள் நான்கெனவும், அல்லது, சாமீலாக்கிய முதலான முத்தி வகைகள் நான்கெனவும், அல்லது, பிரமனுடைய நிலைத்த தலைகள் நான்கெனவும், அறிகின்ருர்கள். (87)

ஐராவதம் முதலான யானைகளின் வெளிக்கோளகங்களில் ஒழுகும் மதப் பெருக்கிலுள்ள வரிசையான வண்டுகளின் உல்லாசமான பாடல்களால், திக்குக்களை செவிடுபடுத்திய சுவர்க்க சம்பத்துக்களை, சங்கரபகவற்பாதரின் அத்துவித சித்தாந்தத்தில் ஒருப்பட்ட சம்பத்துக்களாலுண்டாகிய அளவிலா இன்பத்தைக் கொடுக்கும் தமது ஆன்ம விருப்புடைய பெருந் தன்மை யுடையார்கள், காறி யுமிழ்கின்ருர்கள் (சங்கரபகவற்பாதரின் மதத்தினுண்மையை யுணர்ந்தவர் வானுலக போகங்களை ஒருதுரும்பென்றெண்ணி முழுதும் வெறுக்கின்ருர் என்பது கருத்து). (88)

மந்தரகிரியாற் கடையப்பட்ட கடலிலெழுந்த அமுதத்தின் நிறத்தையும் சுவையையும் ஒத்த தமது புகழால் விளங்கப்பட்டவராயும், திருக்கண் பார்வை மாத்திரத்தானே பொய் நெறிகளை யொதுக்குபவராயுமுள்ள முனிவர்களுக்கரசராகிய இச் சங்கரபகவற்பாதர், பிற மதத்தர்களாற் கலங்காத மாணுக்கருடன் களிப்புற்று வாழ்ந்து கொண்டிருந்தனர். (89)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கரதிக்கு விசயச் சுருக்கத்தில் அத்தாமலகர்
முதலானோரின் சரிதத்தை மேற்கோண்ட
பன்னிரண்ாடவது சருக்கம்
முற்றும்.

---

# பதின்மூன்றுவது சருக்கம்

## சுரேசுரர் பாடிய வுரை செய்ய விரும்பல்

பின்பு ஒரு காலத்தில், சுரேசுராசாரியர், தமக்கு ஆன்மோப தேசகராகிய சங்கரபகவற்பாதரை வணங்கி, அவரியற்றிய ஆழ்ந்த கருத்துள்ள சாரீரக பாடியத்திற்கு தாம் (பிரமசூத்திர பாடியத்திற்கு) வெளிப்படையாகிய விரித்தியுரை செய்ய மனத்துட் கொண்டவராய் அவரிடத்தில் கீழ் வருமாறு கூறினர். (1)

"பகவ, தங்களுக்கு அடியேனல் செயற்பாலது ஒன்று உளதேல், அதைத் தாங்கள் எனக்கு ஐயமின்றி தெரிவிப்பீராக. பக்தியுள்ள ஆசிரியரின் வாழ்நாளில் அவராணையைச் செய்வதே அவரிடத்து அன்பு கொண்டவரின் நல் வாழ்க்கையாம்." (2)

இவ்வண்ணம் மாணாக்கரிற் சிறந்த சுரேசுரர் கூறிய போது, சங்கரபகவற்பாதர் பெருங் களிப்புற்ற மனத்தராய் அவரை நோக்கி, "சுரேசுரரே, எனது வேதாந்த பாடியத்திற்கு "வார்த்திகம்" என்னும் திருப் பெயர் கொண்ட உரை யொன்று இயற்ற வேண்டுமென்பது எனக்கும் விருப்பம்; (ஆகையால் அவ்வாறே அதைச் செய்வீராக என அநுமதி கொடுத்தமை கொள்ளக் கிடந்தது காண்க). (3)

மேன்மையான வாக்கியங்களை யுடையதும், தருக்கம் நிறைந்ததுமாகிய தங்களுடைய வேதாந்த பாடியத்தைப் பார்ப்பதற்கும் ஆற்றலற்றவனுயிருக்கின்றேன் யான்; அங்ஙனமாயினும், தங்களுடைய திருக் கடைக் கண்ணேக்கம் என்பாற் படுமேல் எனது ஆற்றலுக்குத் தக்கவாறு உரை நூலொன்று யான் செய்ய முயலுதல் கூடும் என்றனர். (4)

## சுரேசுரர், பாடியத்திற்கு உரை செய்யக்கூடாதென்ல்

அதற்குச் சங்கரபகவற்பாதரும் அங்ஙனமே யாகுக என, உடன்பட்டனர். அவ் வநுமதியைப் பெற்றுக்கொண்டு சுரேசுரர் போனவுடன், பத்மபாதருக்குப் பிரியமான, நாலாசிரியர்களென்னும் சிற்சுகாசிரியர் முதலான அவருடைய மாணுக்கர்கள் சங்கரபகவற்பாதருக்குக் கீழ் வருமாறு கூறிஞர்கள் :— (5)

“பகவ, தங்களால் செய்யப்படுகின்ற முயற்சியோ, நலத்தின் பொருட்டாகாது; மாருய் துன்பத்தையே கொடுக்கும் எனச் சங்கரபகவற்பாதருக்கு அவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியே தெரிவித்து விட்டு (மற்றும், கீழ் வருமாறும் எடுத்துச் சொன்ஞர்கள்) இச் சுரேசுரர் தாமோ வித்துவாஞனவர், கருமத்தையே மேற்கொண்டவர், மற்றும் உலகெலாம் பிரசித்தியான மும்மூர்த்திகளின் ஐசுவரியத்தையும் (முத்தொழிலையும்) அநேக விடைகளிஞல் மறுத்தவர்; (அஃதெவ்வண்ணமாமெனின்லோ, கருமமே, சுவர்க்கம், நரகம், என்னும் பலன்களைத் தருகின்றது; பலனளிக்கின்ற ஈசுரன் ஒருவன் இலன் என்பதாம்). (6, 7)

(இதுவே சைமினி முனிவருக்குங் கருத்தாமெனின்) ஒவ்வொரு புராண வாக்கியங்களும் இவ் வுலகிற்கு அழிவு பாட்டையே கூறுகின்றனவாம்; அந்தப் புராணங்களை யியற்றியவரோ, வியாசமுனிவர் ஆவர்; சைமினி முனிவரோ, அவருடைய மாணுக்கராவர்; அவரும் அப்பட்சத்தையே கூறுபவராதலின் அவ் வழிவு பாட்டை உடன்படுபவரே யாவர். (8)

ஆசிரியரின் கொள்கையும், மாணாக்கரின் கொள்கையும் வேறுபடினோ, அவ் விருவருக்கும், இவர் ஆசிரியர் இவர் மாணாக்கர் என்னும் நிலைமை எவ்வாறு பொருந்தும்? அங்ஙனமானதால் மாணாக்கரின் கொள்கையைப் பூருவபக்க மென்றே கொள்ளல் வேண்டும்; ஆசிரியரின் கொள்கையைச் சித்தாந்தமெனக் கொள்ளல் வேண்டும்; (இதனால் சைமினி முனிவரின் கருத்தும் வியாசமுனிவரின் கருத்தும் மாறுபாடல்ல என்பது கொள்ளக் கிடந்தமை காண்க). (9)

அஃதன்றியும், இச் சுரேசுரர், பிறப்புத் தொட்டே கருமத்திலே மனத்தைச் செலுத்தினவர்; இடையறாது கருமத்தையே செய்து கொண்டிருந்தவர்; அன்றியும், அவர், பிறருக்கு, நீவிர் கருமத்தையே செய்வீர்களாக, அதனால் சுவர்க்கம் முதலான சுகங்களை யடைவீர்கள்; பயனற்ற மற்றைய மார்க்கத்தில் பயன் என்னை? எனப் போதித்தவர், இத்தன்மையர் (சுரேசுரர்). தங்களுடைய அநுமதியைப் பெற்று பாடியத்திற்கு உரை செய்வரேல், அவ் வேதாந்த பாடியத்தை முழுதும் கருமத்தையே மேற் கொண்டதாகச் செய்துவிடுவார்; (அங்ஙனமாயின்) விருத்தி யடைய வேண்டுமென்னுந் தங்களால் மூலமுங் கெடுக்கப் பட்டதாகும். (10, 11)

இவர், சந்நியாசம் பெற்றுக் கொண்டதும் புத்திபூர்வக மாகச் செய்துகொண்டிலர்; மற்றோ, விவாதத்தில் தோல்வி யடைந்தமை கொண்டு செய்து கொண்டனர்; ஆகையால், ஆசிரிய, இவரைக்கொண்டு தாங்கள் உரை யியற்றுவித்தல் எங்கட்கு விசுவாசத்திற் கிடமாகக் காணப்படவில்லை ஆதலின் இவரைக்கொண்டு உரையியற்றச் செய்யாதீர். (12)

மற்றும், விரும்பிய கருமங்களைச் செய்தற்குரிய ஆற்றலுடையவன் கருமங்களை விடற்குரியானல்லன்; சந்நியாசங் கூறும் விதியில் ஆக்கிரகமிருக்கிலோ, இயற்கைக் குருடன், ஊமையன், முதலானோர்களையே அவ்விதி மேற்கொண்டதாமென்க. (13)

என, பட்டபாதர் மதத்தைத் தழுவியவர்கள் கூறுகின்றார்கள், இச் சுரேசுரரும், அம் மதத்தில் பட்சபாதமுடையவரே; இத் தன்மைய நிலைமையில் எது உரியதோ, அதைத் தாங்கள் செய்வீராக; இதில் எங்களுக்கொன்றும் கட்டாயமில்லை. (14)

அதைத் தவிர்த்தும், முன்னொருகால், தெய்வ கங்கையின் மற்றொரு கரையில் யாங்களெல்லோரும் உலாவிக்கொண்டிருக்கும்போது, தாங்கள் எங்களுடைய பக்தியை (எத்துணை யென்று) தெரிந்துகொள்வது போன்று எங்களை அழைத்தீர்களன்றோ? (15)

அப்போது, அதைக் கேட்டு யாங்கள் ஓடம் வேண்டுமெனத் தேடித் திரிந்தபோது இச் சனந்தனர் திடீரென்று அத் தெய்வ கங்கைப் பெருக்கிலிறங்கிவிட்டனர் (16)

அக்கால், முந்நெறியாகச் செல்லும் பகவதியாராகிய கங்கா தேவியார், அவருக்கு, தமது ஆசிரியர் பாலுள்ள, பிறருக்குச் சாமான்யமாகாத சிறந்த மனோபாவத்தையறிந்து களிப்புற்று, இவருடைய ஒவ்வொரு பாதத்திற்கும், ஒவ்வொரு பொற் கமல மலரைத் தோற்றுவித்தருளினாரன்றோ? (17)

அவர், அம் மலர்களிற் பாதம் வைத்து தேவரீருடைய பாங்கர் அம் மகாநுபாவர் வந்துவிட்டாரன்றோ, அது

பற்றியே, பெருங் களிப்புற்ற பகவராகிய தாங்களும் அவருக்குப் பத்மபாதரென்று திரு நாமஞ் சூட்டினீர்கள். (18)

பகவ, அப் பத்மபாதரே தங்களுடைய திருவடிக் கமலப் பணியால் பேதமுழுதுமொழிந்தவர்; இயல்பாகவே தங்கட்குக் கிடைத்தவர் ஆதலின் அவரே ஆழ்ந்த கருத்துள்ள தங்களுடைய வேதாந்த பாடியத்திற்கு விருத்தியுரை செய்யத் தக்கவராவர். (19)

அல்லது, இவ் வானந்தகிரியாரும், பெருந்தவத்தாற் களிப்புற்ற பிரமனது மனைவியார் இவர் முன் தோன்றி தங்களுடைய நூல்களின் கருத்திருக்கும் வண்ணமே உரை செய்யும் வலிமை தோன்றுமாறு வரங் கொடுக்கப் பெற்றுள்ளார். (20)

ஆசிரிய, கருமத்திலழுந்திய மனத்தராகிய இச் சுரேசுரர் தங்கட்கு எவ்வண்ணம் விசுவாசபாத்திரராவார்? பாடியத்திற்கு உரைசெய்வதற்குரியார் பத்மபாதரேயாவர் என தனியிடத்தில், யோகிகளுக்கு அரசராகிய சங்கர பகவற்பாதருக்கு மற்றைய மாணுக்கர்கள் தெரிவித்துக் கொண்டார்கள். (21)

## பத்மபாதருக்குச் சங்கரபகவற்பாதர் அத்தாமலகரின் செய்தியைக் கூறல்

அங்கு இதற்கிடையில் அச் சனந்தனுசிரியர் சங்கர பகவற்பாதரின் சமீபத்திற் சென்று, தேசிக, தங்களுடைய நூலுக்கு அத்தாமலகரும் வார்த்திக வுரைசெய்யும் ஆற்றலுடையாரே ஆவர் என்றனர். (22)

அதுவும் எதனுலெனிலோ? வேதாந்த சித்தாந்தங்களனைத்தையும், கையிலுள்ள நெல்லிக்கனிபோன்று உணர்ந்தவர், ஆதலின் அதுபற்றி யன்றோ, அவர் தங்களாலும், அத்தாமலகர் எனத் திருநாமஞ் சூட்டப்பட்டுள்ளார். (23)

இங்ஙனம், சனந்தனருடைய வாக்கியத்தை, பாடியகாரர் கேட்டு வியப்புற்றவராய், இவ் வத்தாமலகருக்கும், மற்றையோரைப் போன்றே (உரை நூலியற்ற) ஆற்றலுண்டு; ஆனுல், நிட்டையிலே ஒருப்பட்டவராதலின், வெளிச் செய்கை யில்லாதவர். (24)

இவ் வத்தாமலகர், இளமைப் போதில் அன்போடு (கல்விச் சாலைக்கு) தந்தையாரால் செலுத்தப்பட்டும், இவர் அங்குச் சென்று எழுத்துக்களை யோதிலர்; பூணு நூற் போட்டும், பரம்பொருளிலே நிட்டை யுடையவராய் ஆசிரியரிடத்தினின்று வேதத்தையுமோதிஞரிலர். (25)

சிறுர்களுடன் விளையாடார்; அன்னத்தையும் விரும்பார், ஒருபோதேனும் இன் சொற் கூறுர்; அத்தன்மையாகிய இவரை, ஏதோவொரு பைசாசு பற்றிக்கொண்டதென உறுதி பண்ணிக்கொண்டு இவரது தந்தையார் முதலானோர் எனதிடத்திற்குக் கொண்டுவந்தார்கள். (26)

எனதிடத்திற்கு வந்து இவர் என்னைப் பன்முறை வணங்கிக் கை குவித்து நிற்கும்போது அங்குள்ள சனக் கூட்டத்துள், நூதனமாகிய இயற்கை யுடைய இவரைப் பார்த்து யான் வியப்புற்றேன். (27)

பின்னர், யான் இவரை நோக்கி "குழந்தாய், நீ யாவன்?" "எவருடைய புத்திரன்?" "எங்கிருந்து வந்தனை?" என விஞவினேன்; அதற்கு இவ்வத்தாமலகர் என்னுஞ் சிறு

வர், யாப்பு வடிவமான வாக்கியங்களால் யாவரையும் வியப்படைவித்து, ஆனந்தப் பிழம்பாகிய பரமான்மாவை எடுத்துக் கூறினர். (28)

அக்கால், ஓர் போதுமே கேட்டறியாத விஷயத்தைக் (பொருளை) கொண்ட இவருடைய அழகிய திருவாக்கைக் கேட்ட இவருடைய பிதா, பெருங் களிப்புற்று, கீழ்வருமாறு பிரிய வார்த்தை பேசினர். (29)

அவர், என்னை நோக்கி, "ஆராதிக்கத் தக்கோய், என்னுடைய இப் புதல்வன், சனங்களால் சடன் (ஊமையன்) எனத் தீர்மானிக்கப்பட்டுள்ளான்; இப்போது தங்களிடத்திற்கு வந்ததால், அறிவுடையார்களிற் சிறந்தவர்களாலும், பாவித்தற்கரிய பரமான்ம தத்துவத்தை எடுத்துக் கூறுகின்றனன் ஆகையால் தங்களுடைய பிரபாவத்தை என்னென்றுரைப்பேன். (30)

சகத் குருவே, பிறப்புத் தொட்டே குடும்ப பந்தம் விடுபட்ட இப் புதல்வன், தங்களுக்கே மாணுக்கனுகுக; விரிந்த கமல மலர்க் கூட்டத்தில் விளையாடுகின்ற அன்னம், முள்ளையுடைய காட்டிலும் இன்படையுங் கொல்லோ?" என்றனர். (31)

இவ்வண்ணம் இவரது தந்தையார் இனிது கூறிச் சென்றபோது இவரும், அதுதொட்டே பெருந் தன்மையுடையராய் இங்கே வசித்து வருகின்றனர்; இவர் குழந்தைப்பருவந் தொட்டே பரமான்மாவில் மனத்தை இலயஞ் செய்தவர் ஆதலின் பெருநூல் இயற்றுவதில் எவ்வாறு முயல்வார்." (32)

என்று, சங்கரபகவற்பாதர் கூறி வந்ததை (பத்மபாதர் முதலான) மாணுக்கர்கள் கேட்டு, சுவாமின், கேட்டல் முதலான சாதனங்களில்லாமலே தத்துவ ஞானத்தை இவர் எவ்வாறடைந்தனர்? தாங்கள் அதை உள்ளவாறே எங்கட்குத் தெரிவித்தருளல் வேண்டும் என வினவினார்கள். (33)

நீத்தார்களுக் கிறைவராகிய சங்கரபகவற்பாதர் அம் மாணுக்கர்களுக்கு (அத்தாமலகரின் முற்பிறப்பு வரலாற்றை) கீழ் வருமாறு திருவாய் மலர்ந்தருளினர். "சீடர்காள் முன்னொரு காலத்தில் இயல்பாகவே இல்லறத்தார்களை நீங்கி சாதுவின் ஒழுக்கமுடையவராகிய சித்த புருடரொருவர் யமுனை நதிக் கரையில் வசித்து வந்தனர். (34)

ஒரு சமயம், அவருக்கருகில் ஒரு அந்தண மாது வந்து, அவள் தன்னிடத்திலிருந்த இரண்டு வயது சென்ற குழந்தை யொன்றை இச் சித்தரிடத்து வைத்துவிட்டு "அந்தணரே, இக் குழந்தையை ஒரு கணப்போது பார்த்துக்கொள்வீராக" என்று கூறிவிட்டு தனது பாங்கிகளுடன் நீராடச் சென்றனள். (35)

அவள் சென்ற அதற்கிடையில் அக் குழந்தை, தெய்வ கதியால் ஆவேசங்கொண்டது போன்று அந் நதியில் விழுந்திறந்தது; பின்னர், அக் குழந்தையின் அன்னையார் முதலானோர்கள் இறந்துபோன அக் குழந்தையை அந்த சித்த புருடராகிய முனிவருக்கு முன்பு போட்டு பெருங் கூச்சலிட்டழுதார்கள். (36)

அவர்கள் கதறியழுததைக் கேட்ட அம் முனிவர், பெரும் வருத்தமடைந்தவராய் தமது யோகவலியால் அக்

குழந்தையின் உடம்புட் புகுந்தனர். அத் தவத்தரே இவ் வத்தாமலகர் ஆவீர். (37)

ஆதலின், இவர் உபதேசமின்றியே அளவிலாத, சுருதிகளையும், மிருதிகளையும், சாத்திரங்களையும் அறிந்த துடன் பரமான்மாவையும் அறிந்துகொண்டனர். இவரா லறியப்படாததோ சிறிதுமில்லை. (38)

அத்தன்மைய மகாத்துமாவாகிய இவ் வத்தாமலகர், பாடியத்திற்கு உரைசெய்வதாகிய இவ் வெளிச்செய்கையில் செலுத்தற்குரியாரலர்; மண்டனரோ, அதற்குரியரேயாவர். என்னை? அவர், தத்துவமுணர்ந்தவர், மற்றும், சரசுவதி தேவியாரைச் சாட்சியாகக் கொண்ட எல்லாமுணர்தற் றன்மையை யுடையவர். (39)

அரிய பெரிய கீர்த்தியுடையவர்; சாத்திரங்களனைத்தின் கரையைக் கண்டவர்; அநுகூல தருமத்தை தேடிக் கொண்டவருமாவர்; அவர் வார்த்திகஞ் செய்ய பிரியப்படா ரெனிலோ, அதைச்செய்யத்தக்கார்; மற்றெவருங் காணப் பட்டிலர். (40)

பலராலும் பிரியமின்றிய பெரிய நூற் செய்வதென் னும் இக் காரியத்தை யான் செய்விக்க மாட்டேன்; அஃ தன்றியும், எனக்கு இதிலோர் ஐயமுந் தோன்றியது; ஒரு காரியஞ் செய்யவேண்டுமென்பதில் அநேக தடைகள் ஏற்பட்டனவே ஆதலின் (இக்காரியம் முடிவுறுமோ, முடியாதோ என்பதே ஐயமாம்). (41)

(அதைக் கேட்ட மாணக்கர்கள் சங்கரபகவற்பாதரை நோக்கி) பகவ, தங்களுடைய ஆணை யொன்று மாத்திரங் கிடைக்குமேல், விரும்பிய அவ் வுரைநூலைச் சனந்தனரே

செய்வார்; என்னை? இவரோ, பிரமசரியத்திலிருந்தே துறவாசிரமத்தை ஏற்றுக் கொண்டவர்; மற்றும், நுண்ணறிவாளர்; எல்லாவாற்றானும் உணர்வுடையர்; ஆதலின் என்க. (42)

(அதைக் கேட்ட சங்கரபகவற்பாதர் மாணுக்கர்களை நோக்கி சீடர்காள்,) சனங்களுக்கு களிப்புண்டாக்குபவர் சனந்தனர் ஆதலின் அவர் ஒரு தனி நூலியற்றுவாராக, பாடியத்திற்கு வார்த்திகஞ் செய்யவேண்டாம். என்னை? வார்த்திகஞ் செய்யவேண்டுமென்னுமதுவோ, பிறரால் உறுதி கூறப்பட்டுள்ளது. புதிய தீட்சையைச் செய்து கொண்ட (சந்நியாசம் பண்ணிக்கொண்ட) சுரேசுரரே உறுதி கூறிய அதைச் செய்வாராக என்றனர். (43)

## சங்கரபகவற்பாதர் சுரேசுரரை தனி நூலொன்று செய்வித்தல்

நீத்தார்களுக்கிறைவராகிய சங்கரபகவற்பாதர், இவ்வண்ணம் தமது மாணுக்கர் குழாங்களுக்குத் திருவாய் மலர்ந்தருளிவிட்டு, தனித்தோரிடத்திலிருந்த புதிய துறவியாரை (சுரேசுரரை) அழைத்து, "துறந்தோய், நீ எனது பாடியத்திற்கு வார்த்திக வுரை செய்வதொழிகுதி. என்னை? கெடு மதியாலெரிந்துகொண்டிருக்கின்ற மாணுக்கர்கள் அதைப் பொறுத்துக் கொள்ளார்களாதலின் என்க. (44)

மற்றும் அவர்கள், உனக்கு இல்லற தருமத்திலே கருத்திருந்தவாறு கண்டு அம் மரபின் சம்ற்காரம் இருக்குமென ஐயப்படுகின்றார்கள்; அன்றியும், அச் சுரேசுரர், வேதாந்த பாடியத்திற்கு வார்த்திகமென்னுமோர் உரை

யியற்றி இதையும் தம்து சித்தாந்தத்திற்கே அங்கமாகச் செய்துவிடுவார் என்றுஞ் சொல்கின்றார்கள். (45)

அது தவிர்த்தும், இத்தன்மைய துரியாசிரமம், (சந்நியாசாசிரமம்) வேதத்தில் துணியப்படா தென்பதே மண்டனரைத் தழுவியவர்களின் கொள்கையாம். அஃதொழிந்தும், "மண்டனர் வீட்டிலுள்ள வாயில் காப்பாளரால் தடுக்கப்பட்டு, துறவிகள் அவர் மனையிலும் புகாது வெளியே போய்விடுகின்றனர்" என்பது முதலான உலக வதந்தியைக் கேட்டுக் கொண்ட அவர்களுக்கு, (பத்மபாதர் முதலானோருக்கு) பெருந்தன்மையையுடைய உன்னிடத்தில் நல்லெண்ணமேயில்லை; மற்றும் யான் செயற்பாலதென்னை யென்னையேல், மகாத்மன், நீ, அவ்வெண்ணத்தை நீக்க பரமான்மாவையே மேற்கொண்ட தனி நூலொன்று இயற்றி அதனை எனக்குக் காட்டுவாயாக. (ஈண்டு "எனக்குக் காட்டுவாயாக," என்றதால் சங்கரபகவற்பாதருக்குஞ் சிறிது ஐயப்பாடு தோன்றியது என யூகித்துக் கொள்ளற்பாலதாம்). (46, 47)

அறிஞ, நீ இயற்றிய நூலைப் பார்ப்பதால் அம் மாணாக்கருக்கும் எமக்கும் உன்னிடத்தில் எவ்வாறு நல்லெண்ணம் உண்டாமோ, அவ்வாறே ஒரு நூலைச் செய்வாயாக என மண்டனருக்குத் திருவாய் மலர்ந்தருளி விட்டு, சங்கரபகவற்பாதர், பிரம சூத்திர பாடியத்திற்கு இம் மண்டனராலியற்றப்படும் வார்த்திக வுரை செய்யப்படாதொழிந்ததே அந்தோ! என்று சிறிது நொந்தனர். (48)

பிற மாணாக்கர்களின் வார்த்தையால் (சுரேசுரரைக் கொண்டே வார்த்திகஞ் செய்வித்தல் வேண்டும் என்னும் உள்ளத்திற்கொண்ட) விருப்பம் முடியாதொழிந்தமையின்

அச் சங்கரபகவற்பாதர் இச் சுரேசுரரைத் தனி நூலொன்று செய்ய விரைவிலேவினர்; அவ்வாறே அவரும், "நைஷ்கருமிய சித்தி," என்னும் பெயருடைய தனி நூலொன்று இயற்றி நியாயமாகிய, "சுரேசுராசிரியர்," என்னுந் திருநாமத்தை யடைந்தனர். (49)

அதன் பின்னர் சங்கரபகவற்பாதர், தோஷமின்றிய யுத்திகளையுடையதும், நிஷ்கருமமென்னும் பரமான்ம தத்துவத்தை விஷயஞ் செய்யும் தத்துவ ஞானத்தையே சிறப்பாக வுடையதும், தொடக்கமுதல் முடிவு வரை அழகான பதங்களாற்றொடுக்கப்பட்டதுமாகிய அந்த "நைஷ் கருமிய சித்தி" என்னும் நூலைத்,தொடக்கத்திலிருந்து முடிவுவரை பெருங் களிப்புற்றவராய்ப் பார்த்தனர். (50)

அந் நூலைக் கண்டு பெருங்களிப்புற்ற மனத்தராய் அழகமைந்த அந்நூலை மற்றையோர்களுக்குங் காட்டினர்; அவர்கள் அதைப்பார்த்தும் முன்போன்றே, அம் மண்டனர், பிறரைப் போன்று தத்துவ ஞானியலர் என்னுந் தோற்றமே அவர்கட்கிருந்தது. (51)

எந்த நூலில், கருமமின்றிய ஆன்மாவும், கருமத்தாலடையப்படாத முத்தியும், இப்போதும், சிறந்த துறவிகளா லறியப்படுகின்றனவோ, அந்த நைஷ்கருமிய சித்தி என்னும் நூல் அப் பெயராலே தழைத்தோங்குகின்றது; அத்தன்மையமாகான்மியத்தால் அந்த நூல் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டதாயிற்று. (52)

## சுரேசுராசிரியர் வார்த்திகத்திற்குச் சாபமிடல்

" ஆசிரியரின் திருவாக்கால், பாடியத்திற்கு வார்த்திகஞ் செய்யவேண்டுமென்று என்னை விதிக்கப்பட்ட

இதில் மற்றையோர்கள் தடை செய்தனராதலின், இச் சூத்திர பாடியத்திற்குச் சிறந்த வார்த்திக வுரை எவர் செய்யினும், அது இத் தரையின்கண் விருத்தியாகாதொழிக, என சுரேசுராசிரியர் சாபமிட்டனர். (53)

## முன்னர் பத்மபாதர் கூறியதற்குச் சுரேசுரரின் மறுப்புரை

மண்டனார், மேற்கூறியவாங்கே கூறிவிட்டு தான் செய்த நூலைப் பார்த்து சங்கரபகவற்பாதர் தம்மிடத்தில் விசுவாசமடைந்த பின்னர், தனக்கோர் தெய்வமாகிய தமது ஆசிரியருக்குக் கீழ் வருமாறு மறித்துங் கூறினர் :— (54)

"தேசிகவர, யான் நூலியற்றியது, புகழின் பொருட்டு மன்று; இலாப நிமித்தமுமன்று; போற்றுதற்குமல்ல, (மற்றெதன்பொருட்டோவெனின் ?) ஆசிரியரது திருவாக்குத் தள்ளற்பாலதன்று (என்னுமொன்றையே பற்றியென்க) அதைத் தள்ளினே, இவராசிரியர், இவர் இவருடைய மாணக்கர் என்னும் மரபு நிலைமையும் உண்டு கொலோ ? (55)

## "அவருக்கு இல்லற தருமத்தில் கருத்திருத்தல்கண்டு" என்றதற்கு மறுமொழி

ஐய, யான் முன்னர் இல்லறத்தனாயினும் இப்போது அத் தன்மையனல்லேன்; என்னை ? இளமைப் பருவத்தினுள்ள தன்மை தருணப் பருவத்திலுந் தொடராது; தருணப்பருவத்திலுள்ள தன்மை முதுமைப் பருவத்தைப்பற்றாது; அதுபோல துறப்பவர் முன்னிருந்த தன்மையை விட்டே துறந்து செல்வர் (ஆகையாலென்க). (56)

பகவ, யான் இல்லறத்தன் என்பதில் ஆராயத்தக்கது ஒன்றுமில்லை; முன் (இப் பிறப்பில் அல்லது, முற்பிறப்பில்) அவர்கள் இல்லறத்தார்களல்லரோ ? அது இருக்க, இதில் மனமே காரணம் ; பந்தமுத்தியிலும் அதுவே காரணம் ; மனத் தூய்மை யுடையவர் இல்லறத்தாராகுக; அல்லது துறவறத்தாராகுக (அதில் உயர்வு தாழ்வு இன்றென்பது கருத்து). (57)

## "துரியாசிரமம் (துறவாசிரமம்) வேதத்தில் துணியப்பட்டதன்று" என்பதற்கு மறு மொழி

சிறப்புடையோய், முதன்மையாகிய துறவாசிரமம் யான் இல்லையென மறுப்பேனேல், துறவை யடைதல், துறவை விடல் என்னுமிரண்டையும் விரும்பிய நம்மிருவருக்கும் சிறிது காலத்திற்கு முன்னிருந்த பிரதிக்ஞைகள் (ஒட்டம் வைத்த உறுதி மொழிகள்) எவ்வாறு பொருந்தும் ? பகவ, அவ்விதமாகிய உறுதி மொழியை யான் மறுக்காததெங்ஙனம் ? (முன்னர் நாமிருவரும் விவாதமிடுங்கால் எனக்குச் சந்நியாசமென்பது உடன்பாடில்லாதிருக்குமேல், அவ் வுறுதி மொழியை அப்போதே யான் மறுத்திருப்பேன் என்பது உட்கிடை). (58)

## "மண்டனரின் வீட்டில் வாயில் காப்பாளரால் துறவிகள் தடுக்கப்பட்டார்கள்" என்பதற்கு மறுமொழி

உத்தம, எனது வீட்டில் துறவிகள் புகமாட்டாரெனின், முன்னர் தாங்கள் எனது வீட்டில் புகுந்தீரன்றோ ? அஃதெவ்வாறு ? யான் தங்களுக்கு இனிய பிட்சை பண்ணி வைத்தலும் யாங்ஙனம் ?

### "உலகவதந்தியைத் தெரிந்து என்பதற்கு" மறு மொழி

உலகத்தார் வாயை மூடுபவர் யாவர்? (எவராலும் அதை மூட முடியாதென்பதாம்) (59)

### "சந்நியாசஞ் செய்து கொண்டதும் புத்தி பூர்வகமன்று மற்றே, தோல்வியடைந்தமையால்" என்பதற்கு மறு மொழி

தேசிக, முன்பு மனத்தூய்மையை யடைந்து பின்பு தங்களுடைய தத்துவவுபதேசத்தால் பரமான்மதத்து வத்தை யுணர்ந்து அதனாலுண்டாகிய வைராக்கிய வுறுதிப் பாட்டால் சந்நியாசத்தை யடைந்துள்ளேன், தோல்வி யடைந்ததாலன்று என்னை? விவாதஞ் செய்வது தத்துவ நிச்சயத்தின் பொருட்டேயா மாதலின் என்க. (60)

முன்னர் இல்லறத்தனாய் இருந்த என்னால் தார்க்கீகர் முதலானோர்களை மறுக்கும் விஷயத்தில் பெரும் பொரு ளடங்கிய நூல்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இனிமேல் எனதுள்ளம் தங்களுடைய திருவடித் திருப் பணியைக் கடந்து சிறிதளவேனும் செய்ய விரும்பவில்லை (இதனால் கரும காண்ட வாசனைக்ஷயங் கூறப்பட்டது). (61)

தேசிக, அத்துவிதத்தில் உறுதி யுள்ள அன்பு மிக்க அறிஞர் கழகத்தினலெழுந்த நன் மதியில் நிலைத்தவர் களையும், புதிய தீய வாதிகளின் செருக்கென்னும், மிகுந்த தீச் சுவாலை கலைகளால் வாடின அன்பர்களையும், தமது இனிய பாடியமென்னும் வாக்கியாமுதத் திரளால் தெளித்து விளையாட்டாகவே உடனே பாதுகாப்பாற் றத்தக்க தங்களுடைய பணி யியற்றலென்னுங் கடனை

நீக்கும் வகையில் அந்தோ! அந்தோ! யாவர் வல்லுநர். (என்னைப் போல் தங்களுக்கு வார்த்திக வுரை செய்த லாகிய தொண்டைச் செய்பவர் யாருமிலர் என்பது உட்கிடை). (62)

## சங்கரபகவற்பாதர் சுரேசுரரை மற்றைய வார்த்திகங்கள் செய்ய விதித்தல்

என்று, சுரேசுராசிரியர் கூறிமுடித்தவுடன், அவராலே சாரீரக சூத்திர பாடியத்திற்கு வார்த்திக வுரை செய்விக்க வேண்டுமென்னும் எண்ணமும் அந்தோ! அந்தோ! இல்லா தொழிந்ததா லுண்டாகிய சோகமென்னும் பெருந் தீயை விவேகமென்னும் நீரால் மெல்ல மெல்ல அவித்துக் கொண்டு தீரர்களிற் சிறந்த சங்கரபகவற்பாதர், சுரேசுரரால் தைத்திரீயம், பிருகதாரணியம், நரசிம்ம பூருவதாபனீயம், என்பவைகளின் மூன்று பாடியங்களுக்கும், பஞ்சீகரணம் தட்சிணாமூர்த்தித் தோத்திரம், என்னு மிரண்டிற்கும் வார்த்திக வுரைகள் செய்யவேண்டுமென்னும் அன்புறுதி கொண்டனர், (63)

(பின்னர், சங்கரபகவற்பாதர் மேற்கூறின ஐந்து வார்த்திக வுரைகளையுஞ் செய்யுமாறு கட்டளையிட அவ்வாறே அவரால்) பாடிய கருத்தைத் தழுவின இனியவாக்கியங்களாற் பொருள் தெரிக்கப்பட்டதும், தனது பதங்களைக் கொண்டு பூருவ பட்சத்தை மறுப்பதும் தமது சித்தாந்த யுத்திகளாற் புகுத்திய சித்தாந்தமுடையதுமாக இயற்றப்பட்ட அவ் வார்திகவுரைகளை சங்கரபகவற்பாதர் நோக்கிக் களிப்பு மேலிட்டவராய் கீழ் வருமாறு திரு வாய் மலர்ந்தருளினர். (64)

சங்கரபகவற்பாதர் சுரேசுரரை நோக்கி, வினய மதி யுடையாரே, தம்மாற் செய்யப்பட்ட வார்த்திக வுரைகள் உண்மையானவைகளேயாம். எனது மரபின் எசுர்வேத தைத்திரீய சாகை முடிவின் பாடியம் எனக்கு மிக்க விருப்பமானது, ஆதலின் என் பொருட்டு அதற்கோர் வார்த்திக வுரையும் தங்களாலியற்றத் தக்கது. நல்லோர் செயல் பல்லோருக்கும் அநுகூலமாகிய பயனையே யுடைய தாமென்பது பிரசித்தியா மாதலின். (65)

அதைப் போன்றே உமது காண்வ சாகை முழு மைக்கும் என்னாற் செய்யப்பட்ட பாடியமிருக்கின்றது; தாங்கள் அதற்குமொரு வார்த்திக வுரை செய்வீராக; பரோபகாரத்தின் பொருட்டே பெரியோர்களின் செய்கை நிகழ்வதாகலின். (66)

மேற்கூறின இவ் விரண்டிற்கும் களிப்பைத்தரும் வார்த் திக வுரை செய்வீராக; அதனால் கார்த்கை மதியின் நில வைத் தாழ்மைப்படுத்தும் புகழையுமடைவீராக; இதில் முன்போன்று தீய மூடர்களின் வார்த்தை தடை செய்யு மென்று ஐயப்படாதீர்; எனது வாக்கையே புகலிடமாய்க் கொள்ளுவீராக; இதில் ஆராச்சிசெய்தல் வேண்டா. (67)

என, சங்கரபகவற்பாதரால், வார்த்திகவுரை செய் விக்கவேண்டுமென்று அருளப்பட்ட, அறிஞரிற் சிறந்த விசுவரூபர், ஆசிரியரின் ஆணை ஆராய்ச்சி செயற்பாலதன்று எனக் கருதி இரண்டு பாடியங்களுக்கும் இரண்டு வார்த்திக வுரைகள் செய்தனர். (68)

ஒப்பிலாப் பேரறிவுடைய சுரேசுரர், ஆசிரியரைப் பின் பற்றியவர்களால் அவரது ஆணைகடக்கற் பாலதன்று எனக் கருதி, மறை முடியான அவ்விரண்டு பாடியங்களுக்

கும் இயற்றின வார்த்திகவுரைகளைத் தமது ஆசிரியருக்குத் தட்சணையாகச் சமர்ப்பித்தனர். (69)

சனந்தனாசிரியர் என்பவரும் ஆசிரியரின் ஆணையைப் பெற்று பிரமசூத்திர பாடியத்திற்குச் சிறந்த வுரை யொன்றைச் செய்தனர். அதனுடைய முற்பாகம் பஞ்சபாதிகை யென்றும், மற்றையபாகம் விருத்தி யென்றும் விளங்குகின்றன. (70)

அப் பத்மபாதரும் வியாசமுனிவரின் சூத்திரங்களின் பாதுபாட்டின் பொருட்டும், தமது புகழ் வெளியாமாறும், 'விசய டிண்டிமம்', எனப் பெயரிய யுத்திகள் நிறைந்த உரை யொன்றை யியற்றிச் சங்கரபகவற்பாதருக்குத் தட்சணை யாகச் சமர்ப்பித்தனர். (71)

அக்கால், சங்கரபகவற்பாதர், பத்மபாதரால் செய்யப் பட்ட பாடிய உரைக்குக் கால கிரகங்களின் கதியை யாராய்ந்து, சுரேசுரரை மாத்திரம் தனித்தோரிடத்தி லழைத்து, "மைந்த, இவ் வுரையில் ஐந்து பாதங்கள் மாத்திரம் இத்தரையிடத்து பிரசித்தியாய் விளங்கும்; அதிலும் நான்கு சூத்திரங்களின் உரையே மிகவிளங்கும்" என்றருளினர்." (72)

## சங்கரபகவற்பாதர் மண்டனருக்கு ஆசிமொழி கூறல்

சுரேசுரரே, நீர், மறித்தும், பிராரத்த கருமவசத்தால் இப் பூமியின்கண் வாசஸ்பதி என்னுந் திருநாம முடையவராய் அவதரித்து எனது பிரமசூத்திர பாடியத்திற்கு அரிய உரை (பாமதியென்னுமுரை) யொன் றியற்றுவீர்;

அதுவும் இப் பூமியின்கண் ஐம்பூதமழியும்வரை விளங்கும். (73)

என்று, நித்தார்களுக்கிறைவராகிய சங்கரபகவற்பாதர், மண்டனருக்கு மங்களமொழி யருளிச் செய்து, ஆனந்த கிரியார் முதலான முனிவர்களை யழைத்து, "சீடர்காள், நீவிரும் அத்துவிதத்தையே, மேற்கொண்ட நூல்களை யியற்றுவீர்களாக" என ஆணை கொடுத்தருளினர். (74)

ஆசிரியர்களிற் சந்திரன் போன்ற சங்கரபகவற்பாதரின் அனுமதியைப் பெற்றுக்கொண்டு ஆனந்தகிரியார் முதலான மகாநுபாவர்களனைவரும் தங்கள் தங்கள் மதிக்கியைந்தவாறு பரமான்மதத்துவமென்னுங் கமல மலர்க்குக் கதிரவனென்னும் விரிவான அநேக நூல்களை யியற்றி உலகிற் பரவச் செய்தார்கள். (75)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கரதிக்கு விசயச் சுருக்கத்தில் வேதாந்த நூல்
விருத்தியை மேற்கொண்ட
பதின்மூன்றாவது சருக்கம்
முற்றும்.

---

# பதினொன்காவது சருக்கம்

## பத்மபாதர், யாத்திரை செய்வதற்குச் சங்கரபகவற்பாதரை அநுமதி வேண்டல்

பின்னர், தீர்த்த யாத்திரை செய்ய மனங் கொண்ட பத்மபாதர், சங்கரபகவற்பாதரை நோக்கி, "ஆசிரியரே, யான் அநேக தீர்த்தங்களுள்ள தேசங்களைப் பார்க்க விழைகின்றேன் ஆதலின் எனக்கு அதன் பொருட்டு அநுமதி கொடுத்தருள்வீராக என வேண்டினர். (1)

## சங்கரபகவற்பாதர் பத்மபாதருக்கு யாத்திரையின் துன்பத்தைக் கூறல்

அன்ப, ஆசிரியருக்கருகில் வாழ்வதுவே க்ஷேத்திர வாசமாகும்; ஆசிரியரின் திருவடியின் நீரே தீர்த்தமாகும்; ஆசிரியரின் உபதேசத்தால் ஆன்மாவைக் காணலே சிறந்த தேவதைகளனைத்தின் தரிசனமாம். (2)

பணி செய்பவர் ஆசிரியருக்கருகிலே இருத்தல் வேண்டும்; பிற தேசங்களுக்குப் போதல் கூடாது; வழி நடப்பதால் மெலிவுற்றவருக்கு நித்திரை வந்து கண்ணை மூடலால் சிந்திக்கத் தக்கது யாது. (துவம்பதம் முதலியவைகளின் சிந்தனை யில்லாதொழியுமென்க)? (3)

இச் சந்நியாசமும் இருவகையாகக் கூறப்பட்டிருக்கின்றது; அதில் ஒன்றே, தத்துவமுணர்ந்தவருக்காம்; (விட்சேப நிவிருத்தி வாயிலாக சீவன் முத்திச் சுகத்தின் பொருட்டாம்), தத்துவமுணர வேண்டுமென்னும் வேட்கையாளருக்கு மற்றொன்றாம்; (தத், துவம் என்னும் பதப்பொ

ருள்களின் அபேதமுணர்தற் பொருட்டு மற்றொன்று) இந்த விவிதிஷா என்னுஞ் சந்நியாசமே உம்மால் ஏற்றுக் கொள்ளப்பட்டது ஆதலின் முயற்சியுடன் 'துவம்' என்னும் பதப் பொருள் உம்மால் ஆராயத்தக்கதாம். (4)

யாத்திரை செல்லுங்கால் வழியில் ஒரு விடத்தில் நீர் கிடைக்கும்; (ஒரு விடத்தில் அதுவுங் கிடைக்காது) ஓரிடத்தில் படுக்க இடங் கிடைக்கும்; (மற்றோரிடத்தில் அதுவுங் கிடைக்காது) படுக்க இடமும், அருந்த நீரும் பார்த்துத் தேடுவதிற் பற்றுள்ள மனத்தராய் கலக்கத்துடன் வழிச் செல்பவருக்குச் சுகமுண்டுகொலோ? (5)

ஒருவரை, சுரம், வயிற்றுப் போக்கு முதலான அநேக நோய்கள் பீடிக்குமேல் அங்கு அவருக்கு அநுகூலமென்பது ஒன்றுமேயில்லை; மற்றும், இருப்பதற்கேனும், செல்வதற்கேனும் வலியிலாதொழியும்; அச் சமயத்திலோ, அநுகூலமானவர்களும் கை நழுவ விடுவார்கள் (ஏனையோர்களைப் பற்றிக் கூறுவதென்னை?) (6)

விடியற்போதில் நீராடல் இல்லாதொழியும்; தேவாராதனையும் இன்றியதாகும்; சௌசம் என்பதெங்கே? நிட்டை யாண்டு? அருந்த லெங்ஙனம்? நட்புடையாரின் கூட்டுறவு யாண்டையது? பசியால் வருந்தி வழிநடப்பாருக்குக் கீரையுங் கிடைக்காது. (7)

### பத்மபாதர் யாத்திரையின் நலத்தைக் கூறி யாத்திரை செய்யவேண்டுமென்று வற்புறுத்தல்

ஐய, ஆசிரியரின் திரு வாக்கிற்கு மறுமொழி யொன்று மில்லை; அங்ஙனமாயினும், தலவாசம் செய்வதில் மாத்திரஞ் சிறிது எடுத்துக் கூறுகின்றேன் :—"ஆசிரியர்க்

கருகில் வசிப்பதுவே சிறந்ததென்று, பகவராகிய தாங்கள் திருவாய் மலர்ந்தருளியது உண்மையே; ஆனால் முதலாவதாக சந்நியாசிகளையும் (வித்வத் சந்நியாசிகளையும்) அநேக தேசங்களையும் காணுதொழியில் எனது உள்ளம் வருத்த மொழிந்ததாகாது. (8)

## பத்மபாதர் யாத்திரை செய்தலின் நலத்தைக் கூறல்

ஐய, யாத்திரை செய்யுங்கால், எங்குமே இனிய நீர் கிடைக்குமென்பதில்லை; முன்னிடத்திலேனும் பின்னிடத்திலேனும் அல்லது, வேறு திக்கிலேனுஞ் சலங் கிடைக்கும்; வழியோ, ஒப்புரவாக இராது; எப்போதும் யாண்டுஞ் சுகமாத்திரத்தாலே புண்ணியமடையப்படுமோ (புண்ணியத்தைத் தேடுங்கால் வருந் துன்பையும் பொறுத்துக் கொள்ளல் வேண்டும் என்பது கருத்து)? (9)

முற்பிறப்பிற்றேடிய பாவமே, பயனைக் கொடுக்கும் நிமித்தமாக நோய்வடிவாய்த் தோன்றுகின்றது; இதில் விவாதமொன்றும் எனக்கில்லை; ஆனால், பொதுவாக, இங்கே யிருந்தாலும், அல்லது, பிறதேசத்திலிருந்தாலும், அநுபவித்தொழியாத கருமம் தோற்றத்தையே யடைகின்றது. (10)

ஒருவனை நோக்கி வந்த காலனே, அவனை விடவேமாட்டான்; ஒரு தேசத்திற்குப் போனதால் ஒருவன் இறந்து போனன் என்பது முதலானவைகள் சனங்களின் மயக்கத்தாலானவைகளாம். (11)

உண்மையாகவே, மநு முதலான முனிவர்கள் தருமநூல்களில், தேசமுதலானவைகளைப் பார்த்து வரம்பின்

றிய ஒழுக்கமுடையாருக்குத் தருமம் முதலானவைகளைச் சுருக்கிக் கூறுகின்றார்கள் (பிராயச்சித்தஞ் சொல்லி யிருக்கின்றார்கள்); தேச முதலானவகளைக் கண்டு அங்குள்ள முறையையே பற்றிக்கொண்டு போகின்ற எனக்கு அவ்விதமாகிய பாவமோ வராது (12)

ஒருவனுக்குத் தெய்வமநுகூலமாயிருக்கின் அவன் வனத்திலுள்ள புதர்களிலிருப்பினும் வேண்டிய அன்னத்தை நன்கடைவான்; தெய்வம் பிரதிகூலமாகிய போதிலோ அதனால், முன்னுள்ள யாவையும் இழந்து விடுகின்றான்; அல்லது கெடுதலை யடைகின்றான். (13)

ஒருவன் வீட்டை விட்டு வெளித் தேசஞ் சென்று தீர்த்த முதலானவைகளைத் தரிசித்து நன்கு சுகமாயிருக்கின்றான்; அவன் வருவதற்கு முன்னமே வீட்டிலிருந்தவனே இறந்து விடுகின்றான்; இதில் யாது காரணம்? (14)

தேசகாலங்கள்கடந்த பிரமானந்தத்தை அவ்வத்தேச காலங்களில் பார்த்துக்கொள்பவருக்கு அவ்வவ்விடத்தில் மனம் ஒருப்படுந் தன்மை யிருக்கும்போது யாண்டும் நிட்டை கை கூடாதென்பதை யான் கருதிலேன். (15)

தீர்த்த யாத்திரையைத் திருந்த செய்தல், சித்தத்தை தெளிவிக்கின்றது; தேசங்களைக் காணல் மனதிற்குக் களிப்பைக் கொடுக்கின்றது; நல்லாரின் கூட்டுறவு பொல்லாத துன்பத்தைப் போக்குகின்றது; ஆகையால், தேசங்களைச் சுற்றிப் பார்த்தல் யாருக்குத் தான் பிரியப்படாது (யாவருக்குமே பிரியமாமென்க)? (16)

அறிஞன், வெளி தேசத்தில் ஒழுங்காய்ச் சஞ்சரிக்கின் அறிஞரின் சங்கத்தை யடைவன்; உண்மையாகிய நட்பு,

அறிஞருக்கு அறிஞருடன் உண்டாவதேயாம் என்று கூறப்படுகின்றது ; தீயார்களோடு உண்டாகும் நட்போ, நீடித்திராது. (17)

ஆசிரியருக்கருகில் வசிக்கவேண்டும் எனத் தங்களாற் கூறப்பட்டதன்றோ? அது, ஒருவன் வெளித் தேசத்திலிருப்பினும் உள்ளத்தில் ஆசிரியரைக் கொள்வனேல், அவன் ஆசிரியருக்கு அருகிலிருப்பவனே யாவன், ஒருவன் ஆசிரியருக்கு அருகிலே யிருப்பனெனினும், பக்தியில்லாதவனாய் ஆசிரியரைத் தனது உள்ளத்தில் அமைத்துக் கொள்ளானேல் அவன் வெளித் தேசத்திலிருப்பவனே யாவன். (18)

ஒருவன் நல்லாருடன் கூடுவனேல் நல்லார்கள் மெல்ல மெல்ல, அவன் புத்தியை வளர்ப்பார்கள் ; அவ்வாறு புத்தியை வளர்த்துக்கொண்ட விவேகி மெல்ல, தள்ளத் தக்க தீக் குணங்களைத் தள்ளுகின்றான் என்று பத்மபாதர் கூறினார். (19)

### சங்கரபகவற்பாதர் பத்மபாதருக்கு யாத்திரை செல்லும் முறையைக் கூறல்

(இவ்வண்ணங் கூறிய பத்மபாதரை சங்கரபகவற்பாதர் நோக்கி) " அன்ப, தீர்த்த யாத்திரையில் உனக்குப் பிடிவாதம் இருக்குமாகில், அப் புருடார்த்தத்தில் உண்மையாக யானொன்றும் தடை செய்யமாட்டேன் ; உனது உள்ளம் நிலையாயிருத்தற் பொருட்டே யாத்திரை கூடாதெனக் கூறினேன் ; நீ யாத்திரைக்குச் செல்வாயேல், மிக்க வருத்தத்தைக் கொடுக்கத் தக்க அதிக யாத்திரை செய்யவேண்டா ; (பெரும் வருத்தப்பட்டு மிகத் தூரம் நடக்காதே என்பதாம்.) (20)

ஒரு தல தீர்த்தங்களுக்குச் செல்கின்றவர்களுக்கு பல்லோர்கள் செல்லத்தக்க அநேக வழிகளுண்டு ; நீ, சுகமாய் வேறு வழியைப் பார்த்து அதிற் செல்வாயாக ; சிறந்த அந்தணர்களின் வீடுகள் அதிகமாயிருக்குமிடத்தில் வசிப்பாயாக ; (அங்ஙனமின்றேல்) தெரிந்தவர்களுடன் சிறிது காலம் வசிப்பாயாக ; விரைவாய் எண்ணிய தேசத்திற்குப் போய் விடுவாயாக. (21)

நல்லாருடன் கூடுவாயாக ; அந் நல்லாரின் கூட்டுறவோ, நல்லாருக்கு மிக்க இன்பத்தையுண்டாக்குகின்றது ; அந் நல்லோரால் கேட்பித்த, ஆன்மாபேதக் கதைகள் (ஆன்மாவின் ஐக்கியத்தைக் கூறும் விரிவுரைகள்) தேகத்தினுள்ள பீடைகளை நன்கு போக்குகின்றன ; (எதனாலெனிலோ ?) அவர்களுடைய வாக்கியங்கள், அநேக சுவைகள் மலிந்தனவாமாதலின் எப்போதுமுள்ள பவத்தைப் போக்குகின்றன ; (குடும்பத்திலிருந்து) களைப்புற்றவர்களுக்கு இளைப்பாற்றும் மரங்களாகின்றன ; உள்ளத்திற்கும் செவிகளுக்கும் இனிமையைத் தருகின்றன ; ஆசையையகற்றுகின்றன ; பசி யென்னுங் கலக்கத்தை மாற்றுகின்றனவுமாம் ஆதலினென்க. (22)

நல்லாரின் கூட்டுறவு என்னுமிது அநேக நற்குணங்களோடு கூடியதாமாயினும், பிரியுங்கால், தாபமுடையதாகி, கேவலந் துன்பத்தை யுண்டாக்குகின்றது ; ஆகையால் இந்த நற்சங்கம் இவ்வொரு தோஷத்துடன் மாத்திரங் கூடியதாம்; பிரிவதற்கு முன்போ அதாவது நல்லாருடன் கூடி வசிக்கும்போதோ இனியதாகின்றது ; பெரும்பான்மை உலகில் நிருமலமாயும், தோஷமற்றதாயும், எப்போதுமே ஒன்று இல்லை, (யாவும் மாறுபடுதல் இயற்கையாமாதலின்). (23)

அநேகநாள் வழி நடப்போர், ஒரு பொருளை யேனுங் கையிற் கொண்டு போதல் கூடாது; என்னை? அதனால் களவாகிய துன்பம் வரும்; மற்றும், செல்லவேண்டுமென்று எண்ணிய இடைஞ் செல்வதற்குத் தடை யுண்டாகும்; அங்ஙனமாயினும், நீ குறிப்பிட்ட தேசத்தை யடைந்து வசிப்பாயாக; இன்றெனிலோ, செய்யத்தக்க காரியந் தடைப்படும்; அதனால் காரணத்தினின்று வழுவியவருக்கு தாம் விரும்பிய இடமுங் கிடைக்காமற் போய்விடும். (24)

வழியில், அநேக தீக் குணங்களால் மறைக்கப் பட்டவரும், (தீக் குணங்களை மறைத்துக் கொண்டவரும்) இஷ்டதெய்வ மூர்த்தியை, அல்லது, புத்தகத்தை, அல்லது ஆடையை, கவர்ந்துகொண்டு செல்வதற்கு விருப்புடையதீயரும், தங்களுடைய உடம்பை மறைத்துக்கொண்டவராகவுமுள்ள கள்வர், நம்முடன் கூடியே வசிப்பார்; முயற்சியுடன் அவர்களை பரீட்சித்தல் வேண்டும்; ஆகையால் தெரியாதவர்களுடன் விசுவாசஞ் செய்யற்க. (25)

வழியின் இடையிலேனும், ஒரு கோசத்திற் கிடையிலேனும் (கோசம் எண்ணுயிரம் முழம் தூரம்) உன்னால் அடைதற்குரிய துறவிகளிருப்பார்களெனிலோ? நம்மைப் போற்றுபவர்களாயும், நம்மால் போற்றப்படுபவர்களாயுமுள்ள அவர்களையுங் கடந்து செல்லல் தீமையாகும்; என்னை? அவர்கள் சிறந்த காரியத்தையும் பயனிலாததாய்ச் செய்யவல்லார்கள் (ஆகையால் வழியிலுள்ள பெரியாரைத் தரிசித்தலும், நல்லாருக்குத் தரிசனங் கொடுத்தலும் நலமாமென்பது கருத்து). (26)

நீத்தாரிற் சிறந்தோய், எப்போதுமே நீ ஆபத்துகளைத் திற்கும் இடமின்றிய பொருளை உடன்பட்டுக் கொள்வா

யாக; மலினமுடைய மூடர்களின் நட்பை மனத்திற் கொள்ளாதே; தோஷத்தால் மனத்தைக் கலங்கவிடாமல் களிப்புற்றவனும் நல்லார்களுக்குத் தக்கவாறு இன்பமுடையனும் நடப்பாயாக; இன்பத்தில், நீடித்த நித்தியானந்தம் விளங்குகின்றதாமாதலின்.'' (27)

இவ்வண்ணம், ஆசிரியரின் திரு வாயாகிய குகையிலிருந்து எழுந்த அவ் வாக்கியாமுதத்தைக் குடித்துக் களிப்புற்ற அப் பத்மபாத முனிவர் யாத்திரைக்குப் பிரயாணப்பட்டனர். பின், ஆசிரியரிற் சிறந்த சங்கரபகவற்பாதர் அவரைப் பிரயாணப்படுத்திவிட்டு, சுரேசுரர் முதலான மாணுக்கருடன் சிருங்ககிரியில் சில நாட் கழித்து வந்தனர். (28)

## சங்கரபகவற்பாதர் தமது அன்னையாரிடஞ் செல்லல்

அப்போது, தமது யோக வலியால் (தமது அன்னையாரின் செய்கையை உணர்ந்து சிரவணம் பண்ணிக் கொண்டிருக்கின்ற தமது மாணுக்கருக்கு அச் செய்கையைத் தெரிவித்து விட்டு, சங்கரபகவற்பாதர் ஆகாய வழியால் விரைவில் (கேரள தேசஞ் சென்று) தமது அன்னையாரின் அருகடைந்தனர். (29)

அங்குச் சென்று, துன்புற்றிருந்த தமது அன்னையாரை நோக்கி, அன்புற்ற மனத்தராய் அவரது திருவடிகளை வணங்கினர். அவ்வன்னையாரும் இவரைக் கண்டு வெயிற் காலத்திய வருத்தம் மேகத்தால் நீங்குமாறு, தமது தேகத்திலுள்ள துன்பமொழிந்தனர்.

(ஈண்டுத் துறவியானபோதும் தனது மாதவை வணங்கல் வேண்டுமென்பது).

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

*கரும மெவையுங் கட்டறுத்துக் கடிதிற் றுறந்த காதலனைத்*
*தரும வவன்றன் றந்தையருந் தலையால் வணங்கத் தகுமவற்குச்*
*சருவ பணிகொளத் துறவி தனது தாயின் றுளதனைக்*
*குருவிற் பணிதல் மரபெனக் குலவுஞ் சுருதி கூறிமொல்*

எனுங் கருத்து, கந்த புராணத்தில் வந்துளதைக் காண்க, இஃது உரையிற் கண்டது. (30)

## சங்கரபகவற்பாதர்
## தமது அன்னையாருக்கு இனியவை கூறல்

சங்கரபகவற்பாதர் அசங்க வடிவராயிருந்தும் அச்சமயம் இளகிய மனத்தராய் அவ்வன்னையாரை நோக்கி, "அம்மையாரே, உமது புத்திரனாகிய யான் இங்கிருக்கின்றேன் ஆதலின் நீவிர் சோகத்தை விடுவீராக; உமக்குச் செய்யவேண்டியது என்னை அதைக் கூறுவீராக; அதை யான் செய்கின்றேன்" என, மோகாந்தகாரத்தைப் போக்கத் தக்க இன் சொற் கூறி யருளினர். (31)

அவ் வம்மையாரும் நெடு நாளாக, ஒருவித பீடைகளுமின்றி நலத்தோடிருந்த தமது புத்திரனை நோக்கிக் களிப்புற்ற மனத்தராய், "மைந்த யான் உன்னை இந் நிலைமையில் கண்ணுற் பார்க்கக்கிடைக்கப் பெற்றேன்; இதினின்று நீ எனக்குச் செய்யவேண்டியது வேறென்னை?" என மெல்லக் கூறினர். (32)

"புதல்வ, இனி சுரம் முதலியவைகளால் மெலிவுற்ற இவ் வுடம்பைச் சுமக்க முடியாதவளானேன்; நல்லொழுக்க முடையோய், நீ, சாத்திரமுறைப்படி எனதுடலைச் சமற்காரஞ் செய்துவைத்து என்னையும் புண்ணிய வுலகமடையுமாறு செய்விப்பாயாக," என்றனர். (33)

## சங்கரபகவற்பாதர் தமது அன்னையாருக்கு உபதேசித்தல்

தாய்க்கு புதல்வன் பின்னால் நடத்தவேண்டிய விஷயமாய் அவ்வம்மையார் கூறிய வாக்கியத்தைச் சங்கரபகவற்பாதர் கேட்டு தமது அன்னையாருக்கு, இன்ப வடிவமும், ஏகமும், மாயையின்|காரிய விசேடங்களனைத்தையுங் கடந்ததும், பிரமாணங்களுக்கு எட்டாததும், சுயம் பிரகாசமும், அப்பிரமேயமும், சனாதனமும், கைகால்கள் என்னுங் கற்பனைப் பிரிவுகளற்றதும், ஆகாயம் போல உள்ளும் புறம்பும் நிறைந்ததும், தோஷமற்றதும், பிறப்பு மூப்பிலாததுமாகிய நிர்க்குணப் பிரமத்தை யுபதேசித்தனர். (34, 35)

அதைக் கேட்ட அவ் வம்மையார் சங்கரபகவற்பாதரை நோக்கி, "அன்புடையோய், நிர்க்குணப் பொருளில் எனது மனம் பிரியப்படவில்லை ஆதலின் யான் பிரியப்படத்தக்க சகுண மூர்த்தியையே நீ எனக்கு எடுத்துக் கூறுவாயாக. என்னை? அணு, கோத்திரம், முதலானவைகளற்ற ஒன்றாகிய பெருந் தத்துவப் பொருள் மாத்திரம் எனது புத்தியிலேறவில்லை யாதலின் என்க. (36)

தயாளுவாகிய சங்கரமுனிவர், தமது அன்னையாரின் அவ் வாக்கியத்தைக் கேட்டு அட்டமங்கலவடிவ பரசிவனைப் புசங்கப்பிரயாதம் என்னும் ஒரு வகை வட மொழி யாப்பால் கீழ் வரும் பொருள் கொண்ட தோத்திரங்களால் துதித்தனர்:—

(1) "ஆதி நடு ஈறு அற்றதும், பரமும், தத்துவப் பொருளும், சித்துவடிவும், ஒன்றும், துரியமும், அளவைகளாலளக்கப்படாததும், பிரம விட்டுணுக்களாற் போற்

றப் பட்டதும், பரப்பிரம வடிவமும், வாக்கு மனங்களுக்கு எட்டாததும், மகத்துமாகிய சிவத்தை வணங்குகின்றேன்.

(2) தனது சத்தி முதலிய (பரா) சத்தி யீருகிய சிம்மாசனத்திலிருப்பவரும், மனத்தைக் கவரத்தக்க மணிகளிழைத்த அணி முதலியவைகளை அங்கங்களினைத்திலு மணிந்துகொண்டவரும், சடை, மதி, கங்கை, எலும்பு, என்பவைகளையுடைய சென்னி யுள்ளவரும், பராசத்தியின் கொழுநருமாகிய ஐம்முகச் சிவமூர்த்தியை வணங்குகின்றேன்.

(3) ஒப்பற்ற முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்தவரும், பர தத்துவருமாகிய தேவரீரை, ஈசான தற்புருஷ முதலான ஐம்முகங்களாலும், ஆறங்கங்களாலும் எவர் எங்கனமறிவார் ?"

என்பன முதலான பதினான்கு தோத்திரங்களால் துதித்தபோது பரசிவர் அத் துதிகளாற் களிப்புற்றவராய் தமது தூதரை யனுப்பினர். (37)

அவ் வம்மையாற், தநு, திரிசூலம் என்பன முதலானவைகளைக் கைகளிற்றுங்கின அச் சிவ தூதர்களை நோக்கி, புதல்வ, யான் இத் தூதர்களுக்குப் பின்னே செல்லமாட்டேன், என்ற விடத்து அச் சிவ தூதர்களை வந்த நெறியாக அனுப்பி விட்டு, பின்னர் விட்டுணுவைக் கீழ் வருமாறு துதித்தனர் :—

ஆதிசேடனது திருமேனியை படுக்கையாகக் கொண்டவரும், இலக்குமியை மடி மீதிருத்தியவரும், கமலமலர்ப் போன்ற திருவடிகளை யுடையவரும், நீலை, வசுதை, என்னும், இரண்டு மனைவிமார்களால் வெண் சாமரம் வீசப்பட்ட

வரும், தேரின் முன் தட்டில் கருடனால் முறையுடன் கை குவித்துக் கொண்டு சேவிக்கப்பட்டவரும், சங்கு, சக்கரம், கதை, வில், கட்கம், என்னும் ஐந்து அஸ்திர தேவதைகளால் அருகில் பிரகாசத்தை யுடையவரும், நீலோற்பலப் பூப் போன்ற அரிய சிறந்த கோமளமாகிய திரு மேனியை யுடையவரும், அநேக மணிகளிழைத்த கிரீடத்தை யுடையவரும், பெரிதும் போற்றுதற்குரிய வரும், இரவியால் அழகுற்ற முன்பக்கத்தை யுடையவ ரும், இந்திர நீல பருவதத்தில் விளையாடுபவருமாகிய அவ் விஷ்ணு மூர்த்தியைத் தோத்திரித்தனர் என்ப தாம். (38, 39, 40, 41)

## சங்கரபகவற்பாதரின் அன்னையாரின் மரணம்

அவ் வம்மையார், தமது புதல்வன் எடுத்துக் கூறிய செங் கமலத் திருக் கண்ணரை மனதில் நிலைநிறுத்திக் கொண்டனர்; இறக்குங் காலத்திலும் அவ் விஷ்ணு மூர்த் தியையே மனதால் பாவித்துக்கொண்டு உண்மையாகவே யோகியைப் போன்று திரு மேனியைத் துறந்தனர். (42)

## அவ் வம்மையார் பரமபதமடைதல்

பின்னர், கார்த்திகைத் திங்களின் கலை மதியின் கிரணத்தைப் போன்றதும், அசைகின்ற கொடிகளை யுடையதும், மனதிற்குக் களிப்பைக் கொடுப்பதுமாகிய விமானமொன்றை விட்டுணுவின் தூதர்கள் கொண்டு வந்தனர். (43)

கண்ணுக்கழகிய அவ் விமானத்தின் நலத்தைக் கண்டு களிப்புற்று தமது புதல்வனைப் பெருமை பாராட்டிக்

கொண்டு பிரகாசமாகிய அவ் விமானத்தின் மீது ஏறி அவ் வம்மையார் அவ் விட்டுணுவின் தூதர்களால் பெருமை பாராட்டப் பட்டவராய்க் கொண்டு போகப்பட்டார். (44)

அவ் வம்மையார், தீ, பகல், சுக்கில பட்சம், உத்தராயணம் (ஆறு திங்கள்) வருடம், என்னுமிவைகளில் வாயு லோகம், சூரிய லோகம், சந்திர லோகம், மின்னல் லோகம், வருண லோகம், இந்திர லோகம், பிரமலோகம், என்னுமிவைகளை முறையாய்க் கடந்து பரம பதத்தை யடைந்தனர். (45)

பின்பு, அவ் வம்மையாரின் திருமேனிக்குச் சங்கர பகவற்பாதர், தாமே அந்தியக் கிரியைகளைச் செய்ய விருப்புற்றவராய், சுற்றத்தார்களை யழைத்தனர்; அதற்கவர்கள், (இவரை நோக்கி) "துறவியே, உனக்கு அந்தியக் கிரியை செய்ய அதிகாரமுண்டா? நீ கபடன்," என, அவரை மிகப் பழித்தனர். (49)

## சங்கரபகவற்பாதர்
## கேரள தேசத்தில் சாபமிடல்

அப்போது, சங்கரபகவற்பாதர் அவர்களைப் பலவகையாய் வேண்டியும் அவ் வுறவினர்கள், (அவரது அன்னையாரின் திரு மேனியைச் சுடுவதற்கு) தீயுங் கொடுத்தாரல்லர். அதைக் கண்ட சங்கரபகவற்பாதர் ஆணவமேயற்றவராயிருந்தும் சினங்கொண்ட மனத்தராய் அவர்களுக்குக் கீழ் வருமாறு சாபமிட்டனர். (47)

"உறவினர்காள், நீவிர், தீ கேட்டும், கொடுக்காமையின், இனிமேல் நீங்கள் மறைக்குப் புறம்பாவீர்களாக

இங்கு அந்தணர்களுக்கும் செந்துறவிகளுக்கும் ஐயமில்லா தொழிக; இன்று தொட்டு நுங்கள் மனைக்கருகிலே மசானமாகுக" என அவர்களைச் சபித்தனர். (48)

(அது பற்றியே) இதுகாறும் அக் கேரள நாட்டிலுண்டானவர், மறையோதலொழிந்தனர்; துறவிகளுக்கும் ஐயமிடாதொழித்தனர்; அன்று தொட்டே அவர்களுடைய மனைக்கருகிலே சுடுகாடானது; உண்மையில் அந்தோ! பெரியாருக்குப் புத்தி பூருவமாய்ச் செய்யும் அபராதம், உலகத்தில் எவருக்கேனும் நலத்தின் பொருட்டாமென்பதுமுண்டு கொலோ? (49, 50)

சங்கரபகவற்பாதர் (இவ்வாறு சாபங் கொடுத்துவிட்டு) அவ் வீட்டுக்கருகிலுள்ள காய்ந்த விறகுகளைக் கூட்டி வைத்து, சல பாத்திரத்தைக் கொண்டு தனது அன்னையாரின் இடக் கையைக் கடைந்து தீ யெடுத்து அத் தீயால் தமதன்னையாரின் தேகத்தைக் சுட்டு விட்டனர். (இது தொடர்பு நோக்கி பின் வைக்கப்பட்டது). (51)

ஒருவர் பொறுமை யுடையாரெனக் கொண்டு அவருக்குத் துன்பை யுண்டாக்கல் கூடாது; என்னை? பொறுமை யுடையவராகவே யிருப்பினும் இடுக்கண் படும் வசத்தால் அவர் முனிவுடையவராவர்; உண்மையில் சந்தனக் கட்டை இனிய தண்மை யுடையதாயினும், மிகத் தேய்க்கிலோ, கணப் போதில் அப்பெருஞ் சூட்டை யுண்டாக்குகின்றதன்றோ? (52)

மிக்கப் பிரபாவமுடையார்களின் செய்கை, நூன்மரபுக்குப் பிறழ்ந்ததாகவே காணப்படினும், அது பழிக்கத் தக்கதன்றாம்; என்னை? பரசுராமர், தமது அன்னையாரைக்

கொன்றதும், மற்றும் சமதக்கினியின் சாபவசத்தால் அவருடைய புதல்வர்களைக் கொன்று நாய்க்கு இரையாக்கினதும் நிந்திக்கத் தக்கதன்றோ (இச் செய்கைகள் பழிக்கத் தக்கதாமாயினும் பழிக்கப்பாடாதன போன்று) சங்கரபகவற்பாதரின் செய்கையும் பழிக்கப்படாததாம் என்பது உட்கிடை)? (53)

## சங்கரபபவற்பாதர் புற மதங்களை மறுக்க மனங் கோள்ளல்

இவ்வண்ணம், சங்கரபகவற்பாதர், தமது அன்னையார், முனிவர்களால் வேண்டப்பட்டதும், மறித்தும் வீழாமையை யுடையதும், பேரின்பப் பெருக்கை யுண்டாக்குவதும், இருளில்லாததுமாகிய பரகதி யடையுமாறு செய்துவிட்டு, இனி, இவ் வுலகிலுள்ள புறச் சமயங்களை மறுத்தொழிக்கவேண்டுமென முயற்சித்தனர். (54)

பின்பு, புறச் சமயங்களைக் கெடுக்கவேண்டுமென்னும் அவருடைய விருப்பத்திற்கு அநுகூலராகிய பத்மபாதர், வந்து சேரவேண்டுமென எண்ணிக்கொண்டு சங்கரபகவற்பாதர் சிறிது காலதாமதஞ் செய்தனர்.

## பத்மபாதர் தேன் திசை யாத்திரைக்குச் சேல்லல்

பின்னர், பத்மபாதரும், தமது ஆசிரியரின் ஆணையால், முன்னரே வடதிசைக் கண்ணுள்ள தீர்த்தங்களனைத்தையுஞ் சேவித்தனர். (55)

பின், மெல்ல மெல்ல, மட் குடத்திலுதித்தவரும், கடலைக் கடுகெனக் கையாலெடுத்துக் குடித்தவருமென நூல்களிற் கேட்கப்பட்ட அகத்திய முனிவரது, நோயனைத்

தையும் போக்குவதென்னப் பிரசித்தியாகிய தென் திசையை பத்மபாதர் மெல்ல மெல்ல அடைந்தனர். (56)

## பத்மபாதர் ஸ்ரீ காளத்தியை யடைதல்

பத்மபாதர் தென் திசைக்குச் சென்று, ஸ்ரீ காளத்தியை யடைந்து அழகிய அரவமணிந்த திரு மேனியை யுடையவரும், இலிங்கத்தின்கண் சாந்நித்தியமானவரும், மத்தகத்தில் மதியின் கலையை யணிந்தவரும், பார்வதியால் கருணை ரசத்தால் நனைந்த மனத்துடன் தழுவப்படுபவரும் பெருங் களிப்புக்கோரிடமானவரும், இந்திரன் முதலானோர் களால் சய சயவெனப் போற்றப் படுபவருமாகிய காளத்தீசரை வெளியே கண்டனர் (ஸ்ரீ - சிலந்தி, காள - நாகம், அத்தி-யானை, என்னுமிவைகளாற் பூசிக்கப்பட்டவர்). (57)

பின்னர், அங்குள்ள சுவர்ணமுகி நதியில் நீராடி ஆலயத்துட் சென்று அம்பிகையையுஞ் சிவனையும் பணிந்தனர்; பணிந்து, பாவனை யென்னும் பனி மலர்களால் அவ் வீசனை யருச்சித்தனர்; அருச்சித்துத் துதித்து அக் காளத்திநாதனை தீர்த்த யாத்திரையைப் பற்றி வேண்டிக்கொண்டனர். (58)

## பத்மபாதர் காஞ்சித் தலமடைதல்

பிரமஞானிகளிற் சக்கரவர்த்தியாகிய பத்மபாதர், ஸ்ரீ காளத்தீ சரிடத்தில் அநுமதி பெற்றுக்கொண்டு அங்கிருந்து, புநிதமானதும், இத்தரையிடத்து, பவக் கடலைக் கடக்க விருப்ப முடையாருக்கு நல்ல தனமாமென முன்னோராற் கூறப்பட்டதுமாகிய காஞ்சித் தலத்தை யடைந்தனர். (59)

அடைந்து, அங்குள்ள, உலகினுக்கோரிறைவராகிய ஏகாம்பர நாதரையும், அத் தலத்திலிருக்கின்ற காலனுக்குங் காலனுமாகிய உருத்திரனுடைய அன்பை அறிய விருப்புற்றாள் போன்றிருக்குங் காமாட்சி தேவியையும் வணங்கி, (60)

விரைவாக, அத் தலத்திற்கு அருகில், இலக்குமியின் கொழுநரும், பழையரும், கருணையாலிளகிய திருவுள்ளமுடையரும், தோன்றல் முதலானவைகளற்றவருமாகிய கல்லாலீச தேவரை நிறைந்த பக்தியாற்றரிசித்துக் களிப்புற்றனர் (ஈண்டு விட்டுணுகாஞ்சியிலுள்ள விட்டுணு மூர்த்தியே, கல்லாலீசர் என்னுந் திரு நாமமுடைய இலக்குமி காந்தர் எனவும், கல்லாலக் கிராம நாயகர் எனவுங் கூறப்படுவர் என்பது காண்க). (61)

பத்மபாதர் சிதம்பரத்தை யடைதல்

பின்னர், பத்மபாதர், மூலப் பிரகிருதியின் பரிணாமமாகிய பார்வதி (சிவகாமசுந்தரி) களிப்புற்றவளாய் உள்ளத்தினால் சதாசிவனுடைய நிருத்தனத்தை இடையறாது பார்த்துக் கொண்டிருக்கும் புண்டரீக புரத்தை (சிதம்பரத்தை) யடைந்தனர். (62)

அந்தத் தலத்தில், திவ்ய நோக்கும், தெளிந்த அந்தக் கரணமுமுடைய முனிவர்கள்;, பிறப்பிறப்புப் பயத்தை நீக்கத்தக்கதும், தரிசன மாத்திரத்தால் நேத்திரத்திற்கும் மனதிற்கும் வியப்பைக் கொடுக்கத் தக்கதுமாகிய பரசிவனது தாண்டவத்தை இடையறாது தரிசிக்கின்றார்கள். (63)

அங்குப் பத்மபாதர் முதலான துறவி கணத்தர் சிவகங்கையைக் கண்டு, சிவனுடைய திருவடிக் கமலங்களில்

அன்பு மிகுந்தவராகிய அங்கிருந்த ஒரு அன்பரை நோக்கி, இஃதென்ன தீர்த்தம்" என்று வினவினார்; அதற்கவர், "அன்பர்களால் வேண்டிக் கொள்ளப்பட்ட பரசிவன் (நடராசர்) கருணையால் இவ்விடத்தில் கங்கையை நினைத்தனர்; உடனே தெய்வ கங்கை இப் புண்ய தீர்த்தமாக (சிவ கங்கையென்னுந் தீர்த்தமாக) வெளிப்பட்டது ஆதலின் அப் பெயரிய தீர்த்தமாம்," என்றும், (64)

மற்றும் அவர், "இத் தீர்த்தம், சிவனுடைய ஆணையாற்றோன்றியதால் இதை உலகத்தார் 'சிவ கங்கை' என்கின்றார்கள்; அஃதன்றியும், இத்தீர்த்தத்தில் நீராடினோர் பாவங்களனைத்துமொழிந்தவராய் மெல்ல மெல்ல சிவ தாண்டவத்தையுந் தரிசிக்கின்றார், எனவுங் கூறுகின்றனர்," என்றும், (65)

அஃதொழிந்தும், "தாண்டவமாடியதால் மெலிந்த சதாசிவனுக்கு அக் களைப்பை நீக்குதற் பொருட்டு எண்ணிய பார்வதி தேவியார், கங்கையாகப் பரிணமித்தனர்; அதுபற்றி இத் தீர்த்தம், சிவ கங்கை யெனப் பிரசித்தியாயிற்று," என்றும், (67)

"இம் மாந்தர்கள், சிறந்த இத் தீர்த்தத்தில நாடோறும் நீராடி நடராசப் பெருமானது திருவடிக் கமலங்களைத் தரிசித்து உள்ளந் தெளிந்து அழுக்கிலா மனத்தர்களாகி இந்தச் சிவ தாண்டவத்தையுந் தரிசிக்கின்றார்கள்," என்றும், (68)

அன்றியும், "சிவன், விளையாட்டாக சிறந்த தாண்டவஞ் செய்யும்போது, தாண்டவமென்னும் கரையாற்றடுக்கப்பட்ட நீரோட்டத்தை யுடைய தனது செஞ் சடை

மண்டலத்தினின்று நாற்புறத்தும் கங்கை நீர் துவலித் துளியாய்க் கீழே யிறங்கியதாமாதலின் இத் தீர்த்தத்தைச் சில வித்துவான்கள் 'சிவகங்கை' என்கின்றார்கள் என்றும், (69)

"இச் சிவகங்கையில் நீராடி சிவகாமி சுந்தரியையும் அவ் வம்பிகையின் நாதராகிய நடராசப் பெருமானையுந் தரிசித்தவரின் புநிதமான பெரும் புண்ணியங்களை விதந்து கூற முப்புரமெரித்தவரே (அந் நடராச மூர்த்தியே) ஆற்ற லுடையார்" என்றும், (பிறரால் விசேடித்துக் கூற முடியா தென்பது கருத்து) அவ் வன்பர் கூறினர் என முடித்துக் கொள்க," (70)

இவ் வண்ணம், அங்குள்ள ஒரு அன்பர் கூறியதைச் சிவனிடத்திற் பற்றுள்ள மனத்தராகிய பத்மபாதர் அன் போடு உள்ளத்திலமைத்துக் கொண்டனர். பின்னர், அச் சிவ கங்கையில் நீராடி உலகைக் காக்குஞ் சம்புவின் (நட ராசப் பெருமானது) திருவடிக் கமலங்களைப் பணிந்த னர். (71)

பின், மிகச் சிறந்த முனிவராகிய பத்மபாதர், இரா மேசுரம் போகவேண்டுமென மனத்திற் கொண்டு பிரியத் துடன் போகும்போது வழியில் கவேர முனிவராற் றோன் றிய காவேரி நதியைக் கண்டனர். (71)

அக் காவேரி நதி எத் தன்மையதாமெனிலோ? பொன் னுடையை யுடுத்தவரும், 'பத்மநாபன்' என்பது முதலான திரு நாமங்களை யுடையவரும், மணற்றரை நீருடைய கட லில் வசிக்கப் பிரியமுடையவருமாகிய விட்டுணு மூர்த்திக்கு மிக்க விருப்பமானதாம். (72)

அங்கு, மேற்குத் தொடர்பு மலைகளின் புத்திரியாகிய காவிரி யாற்றின் மிகத் தெளிந்த நீரால் சங்கரபகவற்பாதருடைய திருவடிக் கமலங்களுக்கு அபிடேகஞ் செய்து அதைத் தியானித்துக்கொண்டு பத்மபாதர் அநேக மாணாக்கர் குழாங்களால் சூழப்பட்டவராய் தாம் விரும்பிய இராமேசுர தலத்திற்குப் போகவேண்டுமென அங்கிருந்து பிரயாணப்பட்டனர். (73)

## பத்மபாதர் தமது அம்மான் வீட்டிற்குச் செல்லல்

பிரயாணப்பட்டு மெல்ல மெல்லச் செல்லுங் கால் வழி நடுவில் தமது அம்மான் (வந்து விரும்பி யழைக்க) அவருடைய வீட்டிற்குப் போயினர்; சாத்திரத்தை யுணர்ந்த அம்மான் நெடு நாட் கழித்து அநேக மாணாக்கருடன் வந்த பத்மபாதரைக் கண்டு களிப்புற்றனர். (74)

தமது அம்மான் வீட்டில் அநேக மாணாக்கருடன் அவர் வந்திருக்கின்றாரென்பதை முந்திய சுற்றத்தார்கள் கேள்வி யுற்று வந்து அநேக நாளுக்குப் பின் வந்த அவரைக் கண்டு அன்பின் மிகுதிப்பாட்டால் கண்ணீருகுத்தவராய்க் களிப்புற்றனர். (75)

அங்கு வந்த சுற்றத்தார்களுட் சிலர், அழுதனர்; சிலர் களித்தனர்; சிலர் இவருடைய முன் செய்கைகளைப்பற்றி பேசினார்; சிலர் அதைத் தவிர்த்து பிறவார்த்தைகளாடினர்; சிலர் தழு தழுத்த பேச்சுடையராய் வணங்கினர். (76)

பின், பத்மபாதரை நோக்கிக் களிப்புற்ற சில சுற்றத்தார் கீழ்வருமாறு கூறினர்:—“ நீர், அநேக நாட் கழித்து

எங்களுக்குக், கண்ணுற் காணக் கிடைத்தீர்; கூட்டமாய்ச் சனங்கள் மிக்க விருப்புடன் உம்மைப் பார்க்கின்றனர்; அங்ஙனமாயினும் நீர் காண்பதற்குப் பொறுக்கலீர். (77)

உமக்கு மக்களிலர்; நண்பருமிலர்; உறவினருமிலர்; அரசனது உபத்திரவம் இல்லை; கள்ளரின் பயம் இல்லை, கிருதார்த்தத் தன்மைக்கு நீரே மேலாகிய துறவியாவீர்; கிளைகளுடன் உப கிளைகளுடன், பூ, கனி, முதலானவை களையுமுடைய ஒரு பெருந் தருவை பறவைகள் வந்து பீடிக்கின்றன; அவைகளற்ற தருக்களை பறவைகள் பீடிக்காத வாங்கு தனமுடையாரை வறுமையுடையார் வந்து வந்து நாடோறும் பீடிக்கின்றார்; திரவியமில்லாதவரைப் பீடிக்க மாட்டார். (78, 79)

குடும்பத்தைப் பாது காப்பற்ற வேண்டுமென்பதில் மனஞ் சென்றவர்களுக்கு ஒரு காலும் சுகமாய் நித்திரையும் வாராது; அவர்களுக்கு தேவாராதனை யெங்கே? தீர்த்த யாத்திரை யெங்கே? பெரியாரின் சேவையும் அவருக்குண்டு என்பதை யாம் உடன்படோம் (80)

முன்னொருபோது, எங்களுடைய வீட்டிற்குவந்திருந்த ஒரு அந்தணரால், நீர் சந்நியாசம் பண்ணிக் கொண்டிருக்கின்றீர் என்பதை யாங்கள் கேள்விப்பட்டோம்; கேள்விப்பட்டு நெடு நாளாயிற்று; தெய்வ வசத்தால் தீர்த்த யாத்திரையின் நிமித்தமாய் நீர் எங்களுடைய வீட்டிற்கு வந்தீர். (81)

பறவைகள் பிறரால் வளர்க்கப்பட்ட தருக்களை, அவை இனிய வாயின் நன்கு பற்றுவனபோலவும், அவை இனி யன வன்றெனின், விட்டு விடுவன போன்றும், துறவி

கள், பிறரால் கட்டப்பட்ட, மடம், தேவாலயம், முதலானவைகளை யடைகின்றார்கள் (உண்மையாகவோ, அவைகளைப் பற்றாது விட்டு விடுகின்றார்கள்). (82)

வண்டுகள் மலர்களையே யடைந்து அவைகளின் சாரத்தைக் கவர்ந்து இரசத்தை மாத்திரம் உண்பன போன்றே துறவிகளும் சுகத்தின் சாரத்தை யடைந்துகொண்டு வீடுகடோறும் அன்னத்தை யிரக்கின்றனர்; (83)

துறவிக்கு அனைத்தையும் விட்டு நீங்குதலாலடையும் ஆன்மாவினடைவே, மனைவியாம்; தாரணை, சமாதி, என்பவைகளாலுண்டாகும் சீவன் முத்தித் தோற்றமே சௌக்கியமாம்; வைராக்கியமுடைய மாணுக்கரே மக்களாவர்; மகாத்மன், மற்றும், துறவிகளால் வேண்டற்பாலதென்னை? (84)

மனோ கற்பனைக்கு முடிவில்லை, மறித்தும் மறித்தும், மனோ சங்கற்பமே பெருகுகின்றது. என்னை? மாந்தர் முதலில் மனையாளை வரும்பி முயற்சிக்கின்றார். (85)

பின்னர், புத்திரப் பேறின்றெனில், பெருந் துன்பமடைகின்றார்; இவ்வாறு மறித்தும் விரும்பியதுடன் பற்று வைக்கின்றார்; ஆசையுட் சிக்கிக் கொண்டவருக்கு எவ்வாற்றானுந் துன்பமேயாம்; ஆகையால் மாந்தர் வைராக்கியத்தையே யடையத்தக்கார். (86)

"மனத்தின் தெளிவு வைராக்கியத்தை மூலமாகவுடையது; வைராக்கியத்திற்கு மூலமோ, பெரியாரின் திருப்பணியாம்" என ஆன்றோர் கூறுகின்றார். ஆகையால் உம்மைப் போன்றார் தூர தேசத்தில் சஞ்சரிக்கின்றனர். (87)

ஆன்மா இன்னதன்மையதென் றறிந்தவரும், தமது கோத்திரம் இன்னதென்று வெளியில் தெரிவியாமல் உயிர்களிடத்து அன்புடையவருமான, நல்லார்கள் கிட்டியதை யுண்பவர்களாய் உலக நோக்கிற்கு மூடர் போன்று திரிகின்றனர். (88)

அழுக்கற்ற உண்மையரான பெரியார்கள் உலகானுக்கிரகத்தின் பொருட்டே தீர்த்தங்களிற் சஞ்சரிக்கின்றார்கள். தம் பொருட்டன்று என்னை? புநிதமாகிய ஆன்மஞானத்தால் பாவமொழிந்தவர்களாகிய நீரே தீர்த்தமாமென, கற்றுணர்ந்தார் கூறுகின்றனராதலின் என்க. (89)

அறிஞ, இங்கே சில நாள் நீர் வசிப்பீராக; உமது தரிசனம் ஆனந்த முதலான மங்கலங்களை மிகக் கொடுக்கின்றது; இச் சனக் கூட்டங்கள், நீர் போய்விடுவீரேல், உமது சங்கம் நீங்கிவிடும்; நீங்கவே இங்கு யாவருக்குந் துன்பமுண்டாகுமென மேல்வருந் துன்பைப்பற்றி அச்சமுற்றிருக்கின்றன. (ஆதலின் இங்குச் சில நாள் வசிப்பீராக என மேற் கூட்டுக). (90)

மற்றும், கிலேசமாகிய மலமிருப்பதற்குப் பெட்டகமாயும், மிகுந்த கொடுமைக்கு ஆலயமாயும், பிறருடைய தோடத்தை நோக்கற்குரிய குறிப்புகள் தங்குமிடமாயும், மேன்மேலும் பொய் வாசத்திற்குப் பற்றுக் கோடாகவும், இச்சையால் வியாபிக்கப்பட்டதாயும், தள்ளத் தக்க தீயாரிணக்கமுடையதாயுமுள்ள, மனையைப்பற்றி யிருப்பவர்களாகவும், திரவியத்தின் பேராசையால் குரோதமுடையவர்களாகவும், இருக்கின்ற நாங்கள் துறவிகளிற் சந்திரராகிய உம்மால் கருணையுடன் புநிதமாக்கத்தக்கவர்களாக இருக்கின்றோம் எனச் சுற்றத்தார் கூறினர். (91)

## கூறிப் போந்த சுற்றத்தாருக்குப் பத்மபாதர் கூறல்

தேகியான பிரமன் முதலானோர்களையும் சிறிய வுயிர்களையும், தெய்வச் செயலே ஒன்று கூட்டுகின்றது பிரிக்கின்றது; மாந்தரைப் பிரியத்திலும், வெறுப்பிலும், கூட்டிப் பிரிக்கும்போது, மாந்தர் விகாரப்படாதவர்களாயிருத்தல் வேண்டும். (92)

சுற்றத்தார்களே, துறவி, உச்சிப் போதில் பசி தாகங்களாற் பீடிக்கப் பட்டவனாய், எவர், எங்கே தனக்கு அன்னமிடுவாரோ, எனச் சொல்லிக்கொண்டே வெளியிற் செல்கின்றான்; அவ்வாறு பசியால் வருந்துந் துறவிக்குப் பசிப்பிணி தணிப்பவரின் புண்ணியத்தை இவ்வளவென்று கூற வல்லுநர் யாவர்? (93)

பிரமசாரியோ, அந்திப் போதிலும், விடியற் போதிலும், அக்கினி காரியத்தைச் செய்துகொண்டும், நீராடிக்கொண்டும், மான்தோல் முக்கோல்களைத் தாங்கிக்கொண்டும், மறையை யோதிக்கொண்டும், பசியால் மெலிவுற்றவனாயும், விரைவாக இல்லறத்தானது மனைக்குச் செல்கின்றான். (94)

எதியாகிய துறவியோ சாத்திரத்தை வெளிப்படையாய்ப் படித்துக் கொண்டேனும், தாரக மந்திரத்தைச் செபித்துக் கொண்டேனும், உச்சிப்போதில் உதராக்கினி யோங்கியபோது தண்டந் தாங்கியவனாய் நாடோறும் இல்லறத்தானது மனைக்குச் செல்கின்றான். (95)

வானப்பிரத்தன், "எவருடைய அன்னங் கிடைத்ததால் உடலை யோம்பிக்கொண்டு உக்கிரமாகிய தவஞ் செய்கின்றானோ, அத் தவப்பயனில் தவம் பண்ணுவோனுக்குப்

பாதியும், அன்னமளித்தவனுக்குப் பாதியுமாம்,, எனக் கூறும் மிருதிவாக்கைத் தழுவி, தோடமிலாத இல்றத் தார் நடந்துகொள்கின்றார் (ஈண்டு வானப்பிரத்தனுக்கும் இல்லறத்தானின் உதவி யுண்டென்று கூறி யிருப்பது காண்க). (96)

தீர்த்த யாத்திரை செய்கின்றவர்களுக்குப் பணிவிடை செய்வதினாலே, அறிஞனாகிய இல்லறத்தான், வருத்தமே யின்றி வீட்டிலே புண்ணியத்தைத் தேடிக்கொள்வான், தீர்த்த முதலானவைகளின் சேவையோ அநேக வருத்தங் களுடன் தேடப்படுவதாகும். (97)

தனமுள்ள இல்லறத்தானே பெரிய தன்யனாவன் என் பதே எனக்கெண்ணம்; என்னை? அவனுடைய தனத் தைக் கொண்டு அநேகர் பிழைக்கின்றார்களாதலின், (அஃதெவ்வாறெனிலோ?) (அத்தனத்தைக்) களவு செய்வ தாற் சிலரும், அவனைப் பணிகின்றதாற் சிலரும் அவன் கொடுக்குந் தானத்தாற் சிலரும், அவனிடத்தில் ஆணை செலுத்துவதாற் சிலரும், பிழைக்கின்றார் என முடித்துக் கொள்க (98)

மறையை யோதி யுணர்ந்த அந்தணரை எவர் களிப்பிக் கின்றாரோ, அவர் தேவர்களனைவரையுங் களிப்பித்தவரே யாவர், என்னை? மறையுணர்ந்த அந்தணரிடத்திலே தேவர்க ளனைவரும் வசிக்கின்றார்கள் என்பதை நேரே சுருதி கூறு கின்றதாமாதலின் என்க. (99)

தமது தருமத்தில் நிலைத்திருப்பவரும், முழுதையு முணர்ந்தவரும், இந்திரியங்களை வென்றவரும், தீர்த்த மெல்லாவற்றையுஞ் சேவித்தவரும், பரோபகாரத்தையே

விரதமாகக் கொண்டவருமான அனைவருமே இல்லறத்தா னுடைய வீட்டிற்கு வருகின்றார்கள். (100)

இல்லறத்தான் தனது வீட்டிலே யிருக்கின்றவனே யாயினும், மற்றைய சனங்கள் தீர்த்தசேவைகளா லடையப் படும் பலன்களை அவனுமடைகின்றான் என்னை? அவனுக் குத் தீர்த்தம் அவனுடைய வீடேயாம் என நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றதாதலின்; தனிகளுற் பிழைக்கின்ற மாந்தர் மற்றையோர் யாரும் இல்லாதபோபோதும், தனி கன் வள்ளலே யாகின்றான்; என்னை? அவனுடைய மனைக் குள்ளிருக்கும் எலி முதலான பிராணிகளும், வெளியே யுள்ள, பசு, விலங்கு, பறவை, முதலிய பிராணிகளும், அவ னைக் கொண்டே பிழைக்கின்றன ஆகையால், இல்லறத்தான் மற்றைய அனைவரினுஞ் சிறந்தவனே யாவன் என்பது எனது கொள்கை. (101, 102)

புருடார்த்தத்தைத் தேடுதலென்பது உடம்பை நிமித்த மாக வுடையது; அவ் வுடம்பும், அன்னத்தை மூலமாக வுடையதாம் என்பது, சுருதியாலறியப்படுகின்றது; எங் களுக்கு வேண்டிய அவ்வன்னமும், இல்லறத்தார்களிடத்தி லிருக்கின்றது; ஆகையால் எல்லாப் பயன்களுக்கும் இல் லறத்தான் கற்பக தருவே யாவன். (103)

சுற்றத்தார்களே, உங்களுக்கு இன்னுஞ் சிறிது கூறு கின்றேன்; அதையும் அன்போடு கேட்பீர்களாக; களைப் புடன் உங்களுடைய வீட்டிற்கு வந்த அதிதியை நீங்கள் ஆதரவுடன் பூசித்தல் வேண்டும்; என்னை? உங்களால் ஆராதிக்கப்பெற்ற அதிதி உங்களுடைய குலங்களையே யீடேற்றுகின்றான்; அவ்வதிதி உங்களை யிகழ்ந்து தள்ளு

வனேல், அதனுல் உங்களுக்கு வருவது (கேடு) இன்ன தென்று சொல்ல முடியாததாம். (104)

மற்றும், அந்தணர்காள், நீவிர் மறை கட்டளை யிட்ட கருமங்களை, பயனில் விருப்பமின்றிச் செய்வீர்களாக; அதிலும், "எல்லா வுலகிற்கும் இறைவனே, நீ, பிரீதி யடை வாயாக," எனப் பிரார்த்திப்பதையுந் தவிர்த்து, ஈசுரனை வழிபடிலோ, உங்களுடைய அந்தக்கரணம் மிக்க விரைவிலே தெளிவடையும். (105)

மன திசைந்து தழுவுகின்ற இன்சொல் கூறும் மாதரின் கொங்கையில், சந்தன அகில் என்பதின் குழம்புகளால் புதிது புதிதாகப் பூசுவதில் உள்ளும் புறம்பும் ஒரு குறியா யுள்ள மனமுடையவர் நீவிர்; யாமோ, நீத்தார்களுக்கிறைவ ராகிய சங்கரபகவற்பாதரின் திருவடித் தொண்டின் திரு விழாவால் கிலேசமொழிந்தவராயும், தயையுடைய உள்ளத் தினராயும் புண்ணியசாலிகளாயு மிருக்கின்றோம் என் றனர். (106)

## பத்மபாதருடைய அம்மான் அவருடைய பாடிய வுரையைக் காணல்

நீத்தாருக் கிறைவராகிய பத்மபாதர் இவ் வண்ணம் தமது சுற்றத்தார்களுக்கு உபதேசித்துவிட்டு அம்மா னுடைய வீட்டிலே ஐயமருந்தினர்; பின்னர், அம் மாமனார் உணவேற்றுக்கொண்ட பத்மபாதரை நோக்கி, "அன்ப, நீ கையில் மறைத்து வைத்துக் கொண்டிருகின்றது என்ன புத்தகம்? என வினவினர்." (107)

அதற்குப் பத்மபாதர், "அறிஞ, அது பிரம சூத்திர பாடிய வுரை," என்றனர். அற்றேல் அதை எமக்குக்

கொடுப்பீராக என இரந்தனர். அவரும் அவ் வுரையை அம்மானிடத்திற் கொடுத்து விட்டனர்; அவ்வுரைப் புத்தகத்தை வாங்கி அவர் பார்த்து பத்மபாதருடைய புத்தியைக் (புத்தியின் வல்லூறத் தன்மையை) கண்டு மிகக் களித்தனர்; சிறிது கிலேசமுமுற்றனர். (108)

மற்றும், நூலியற்றுவதில் இவருக்கிருந்த அதிசயிக்கத் தக்க நிபுணத் தன்மையைக் கண்டும், அநேக யுக்திகளால் பிறமதங்களை வாயெடுக்காது உண்மையாய் அடக்கியிருந்ததைக் கண்டும், சிறிது சந்தோஷித்தனர். (109)

பின்னர், அவ்வுரையில் தமக்குப் பிரியமாகிய பிரபாகர மதத்தை முழுதும் மறுத்திருப்பதைக் கண்டு அவரிடத்திற் பொறுமையுடையவராயினர், அங்ஙனம் பத்மபாதரிடத்திற் பொறுமை யுடையவராயிருந்தும் இது நல்ல நூல் என்றே சொல்லிக்கொண்டு ஆனந்தித்தனர். (110)

## பத்மபாதர் இராமேசுரத்திற்குப் பிரயாணப்படல்

பின்னர், பத்மபாதர் தமது அம்மானை நோக்கி, "அறிஞரே, பாரமுள்ள இப்புத்தகத்தை உமது வீட்டில் வைத்துவிட்டு இராமேசுரத்திற்குப் போகின்றேன்; என்னுடைய பிராணன் இப்புத்தகத்திலிருக்கின்றது, பிறருக்கு, வீடு, மாடு, முதலியவைகளில் மிகுந்த விருப்பமிருப்பது போன்று எனக்கு இப்புத்தக மூட்டையில் மிக்க விருப்பமுளது (ஆகையால் இதை கவனமாய்ப் பேணி வைத்துக்கொள்வீராக) என்றனர். (111)

இவ்வாறு பத்மபாதர், அம்மானுக்குச் சொல்லிவிட்டு, தமது மாணுக்கர்களைக் கூட்டிக்கொண்டு இராமேசுரத்திற்குப் பிரயாணப் பட்டனர்; அவ்வாறு பிராயணப்பட்ட அவருக்கு மேல்வருந் துன்பத்தின் அறிகுறியாக தீச் சகுனங்களுண்டாயின. (112)

(அவை யாவையெனிலோ?) புறப்பட்ட அவருக்கு இடக்கண் துடித்தது; இடக்கையும், இடத் துடையும் துடித்தன, முன்னின்று ஒருவர் தும்மினர்; அவையனைத்தையு முணர்ந்த அப் பத்மபாதர் அவைகளை யெண்ணுமலே விரைவாகப் புறப்பட்டுச் சென்றுவிட்டனர். (113)

## பத்மபாதரின் வேதாந்த பாடியவுரையில் அவருடைய அம்மான் தீவைத்தல்

பத்மபாதர், இராமேசுரத்திற்குச் சென்றவுடன் அவருடைய அம்மான், இவ் வார்த்திகவுரைநூல் உண்மையாயிருக்கில், பிரபாகரரது கொள்கை கெடுதலை யடையும்; இதைத் தீ வைத்துக் கொளுத்தி விடிலோ, யாண்டுந் தெரிந்துவிடும், நாமே யுத்தியால் இதை மறுத்து விடலாமெனிலோ, நமக்கு ஆற்றலில்லை, என வெண்ணிப் பார்த்தனர். (114)

பின்னர், நமது மதத்தின் கொள்கை கெடுவதிலும், நமது வீடு நாசமாதலே மேலெனக் கருதி, புத்தகத்துடன் வீட்டையுங் கொளுத்தி விடுவோமெனத் துணிந்து தமது மனையில் தாமே தீயிட்டனர். தீயிட்டு (வெளியில் நின்று) எமது வீடு தீப்பற்றி எரிகின்றது எனப் பெருங் கூச்சலிட்டனர். (115)

ஒன்றைச் செய்தவனுக்கு எத்துணைப் பாவமுண்டோ, அதில் இரட்டித்தபாவம் அதை வெளிப்படச் சொன்னவனுக்காம், என்னை? அவ்வாறே ஐதீகமாய்ச் சனங்கள் சொல்லுகின்றூர்கள். இங்கு யாம் கூறிய இதற்கும் ஐதிகமே மூலமென்க. (116)

இராமேசுரத்தை விதத்தல்

பத்மபாதர், அங்கிருந்து சென்று, முன்னர் இராமபிரானூர் தாம் ஒரு அரசமரத்தடியில் தமது வில்லை வைத்திருந்த விடமும், தாமும் தருப்பையாசனத்தில் உட்கார்ந்த விடமுமாகிய, புல்ல முனிவர் என்னும் ஒரு முனிவருடைய ஆசிரமத்தை யடைந்தனர். (117)

முன்னர், இராமச்சந்திரர், கடலைக் கடந்து காதலியைக் காண உபாயமொன்று மறியதவராய், மற்றும், தரையிற் றிரிகின்ற வானரங்களுங், கடலை நீந்த முடியாதவைகளே, என்று தருப்பை யாசனத்தின்மீது இருந்து சிந்திக்கும்போது, அருகில் ஒரு சோதியைக் கண்டனர், (அச்சோதி எவ்வண்ணத்ததாமெனிலோ)? இவ்வுலகை வியாபித்துக் கொள்வது போன்றதும், இனிய தண்மையை யுடையதும், முனிவராலும், தேவராலும், இடையறுது போற்றத் தக்கதுமாம். (118, 119)

மற்றும், தமக்கெதிரே வருகின்றதுமாகிய அச் சோதியைக் கண்டு சிறந்த ஆற்றலுடையாரனைவரும் எழுந்தார்கள். பின்னர், அப் பேரொளிப் பிழம்பின் நடுவில் ஒரு புருட வடிவைக் கண்டனர். (120)

அதன் பின்னர் அப் பேரொளி மண்டலத்தை, எல்லாத் தவ மயமாகிய சிவாகிருதியாய்ப் பார்த்தனர், பின்பு

உலோபா முத்திரையுடன் கூடிய குடமுனி யென்று அன்பால் அனைவரு முணர்ந்தனர். (121)

இரகு நந்தனர் அகத்தியமா முனிவரைப் பார்த்து அவருடைய தரிசனமாத்திரத்தானே தமது மனத்தி லுண்டாகிய துன்பத்தை யொழித்துக்கொண்டனர். என்னை? இரவி, பிராணிகளின் பேரிருளை நீக்குவதுபோன்று, பெரியாரின் தரிசனமே பெரும்பான்மை துன்பத்தைத் தொலைக்கின்றதாமாதலின் என்க. (122)

அவ் விராமசந்திரர் மனைவியுடன் கூடிய அகத்திய முனிவரை ஆராதித்து, துன்பக்கடலில் மூழ்கியவராய் ஒரு முகூர்த்தப்போது ஒன்றுமே யுணராது இருந்து விட்டனர் ; பின்பு தைரியமுடையராய் அகத்திய முனிவருக்குக் கீழ் வருமாறு கூறினர் :— (123)

தந்தை போன்ற தங்களைத் தரிசித்து யான் பெருங் களிப் புற்றேன் மற்றும் துன்பக்கடலில் மூழ்கிக் கிடக்கின்ற என்பால் தாங்கள் வந்தமையால் எனதான்மா விரும்பியதை யடைந்த தாகவே எண்ணுகின்றேன் எனது வமிசம் சூரியவமிசமாதலின் பெரியவமிசமாம். (124)

அவ் வமிசத்தில் என்னைப் போன்றார் முன்னுந் தோன்றினரிலர் ; பின்னுந் தோன்றார், (ஈண்டு யான் ஒருவன் மாத்திரம் பெரிய தீனனாய்த் தோன்றி யுள்ளேன் என்பது கருத்து) என்னை? முதலாவதோ, யான் மனைவியுடன் இராச்சியத்தையு மிழந்தேன், அதிலும் இலக்குமணருடன் வனத்தையு மடைந்தேன், அங்கும் மாரீசனுடைய மாயையால் மறைக்கப்பட்ட மனத்தனானேன். (125)

அங்கும், அரக்கர்களுக்கரசனுகிய இராவணன், எனது மனையாளை வஞ்சித்துக் கொண்டு போய்விட்டான், எனது மனைவியாகிய சீதையும் இப்போது என்னைப் பிரிந்ததால் இயல்பாகவே மெலிந்த உடம்புடையவளாய் கற்புடைமை கெடாமலே ஒரு அசோக வனத்திலிருக்கின்றுள். (126)

ஆகையால், முனிவர்க் கரசரே, யான், கடலைக் கடந்து சீதையைக் கொண்டு வருவதற்கு உபாமொன்று நீர் கூறியருள்வீராக, தங்களைத் தவிர்த்து எனக்கு இனியவை சொல்பவர் யாவருமிலர்.'' (127)

என்று இராமச்சந்திரர் கூற, அதைக்கேட்ட பேரறிவாளராகிய அகத்திய முனிவர், அவருக்குக் கீழ்வருமாறு இன்சொற் கூறினர் :—"இராமச்சந்திர, நீ, மோகவசத்தனுகாதே ; சந்திரவமிசம் சூரியவமிசம் மிரண்டிலும் உன்னைப் போன்றே துன்புற்று அத் துன்பத்தினின்று நீங்கின (நளன் அரிச்சந்திரன் முதலான) பேரரசர்களுமிருக்கின்றனர். (128)

தசரதருடைய புதல்வர்களுள் நீயே வில்லாளிகளிற் சிறந்தவன். விசாரிக்கில் வானரங்களுக்கு அரசனுகிய சுக்கிரீவனுடைய துன்பங்களில் கோடியில் ஒரு கூறும் உனக்கு இல்லை; ஏழ்மை வார்த்தை மொழியாதே ; ஏழ்மை வார்த்தை மொழியாதே. (129)

இராமச்சந்திர, உனக்கு இனியவைகளைப் போதிப்பதற்கு யான் இருக்கின்றேன், ஆகையால் அநுகூலமாகிய சம்பத்து மிருக்கின்றது ; இக் கடல் இப்போது உனக்கு என் செய்யும்? இதை ஒரு ஆவின் குளப்படி நீரென நினைப் பாயாக. (130)

மற்றும், முன் போன்றே இப்போதும் இப் பெருங் கடலை ஓர் துளியென யான் அருந்தி விடுவேன் ; பின்னர் உலர்ந்துபோன கடல் வழியாக நீ இலங்கைக்குச் செல்வாயாக. இவ் வண்ணமாயினே, அப்புகழ் என்னுற் றேடியதேயாகும். நீயே கடலில் அணை கட்டி அதின் வாயிலாகச் செல்வையேல் அப் புகழ் உன்னுலே தேடியதாமன்ருே ? (131)

ஆகையால், இராகுநாத, கடலில் அணை கட்டுவித்து வஞ்சமாய்ச் சீதையைக் கவர்ந்த நெஞ்சு உரமுடைய தீயனை வெல்வையேல், சந்திரன் நட்சத்திரம் உள்ளவரையும் புகழுடைவாய் ; (ஆதலின் உடனே) வானரங்களுக்கிறைவர்களைக் கொண்டு கடலில் அணை கட்டுவிப்பாயாக என்றனர். (132)

என்று அகத்திய முனிவரின் வாக்கியத்தால் ஏவப்பட்ட இராமச்சந்திரர் எவ்விடத்தில் வானரங்களால், உயரமான முகடுகளையுடைய மலைகளைக் கொண்டு கடலிற் சேது கட்டுவித்து இலங்கைக்குச் சென்று இராவணனுடன் போராடி போரில் இராவணனைக் கொன்று சீதையைக் கொண்டுவந்தனரோ, அத்தன்மைய இராம சேதுவென்னும் இராமேசுர தலத்திலுள்ள தீர்த்தத்தில் நீராடி இராமேசுரரை வணங்கி அத் தலத்தின்கண் மாந்தருக்கு அன்புண்டாமாறு இராமேசுரரின் மாகான்மியத்தை தமது மாணுக்கருக்கு அங்குப் போதித்தனர். (133, 134)

## இராமேசுரன் என்பதின் பொருளுரைத்தல்

இவ்வாறு இராமேசுரத்தின் மாகான்மியத்தை விரிவாய்க் கூறிக்கொண்டிருக்கும் அப் பத்மபாதரை நோக்கி அங்குள்ள சில அறிஞர்கள், “இராமேசுரன் என்னும்

பெயர்ச்சொல் என்ன வேற்றுமைத் தொகை கொண்டு முடிந்தது?" என வினவினார்கள். அதற்கவர் மூவகையான தொகைகளுண்டு எனக் கீழ் வருமாறு அதை விரித்திக் காட்டி மறு மொழி கூறினர். (135)

அறிஞர்காள், இராமருடைய ஈசுரன், இராமேசுரன் என ஆறும் வேற்றுமைத் தொகையாக்கி இரகுநந்தனர் கூறி யிருக்கின்றார்; பரசிவரோ, இராமனை ஈசுரனாக வுடையவன் என அன்மொழித் தொகையாக்கிக் கூறி யிருக்கின்றனர். இந்திரன் முதலானோர்களோ, இராமனும், ஈசுரனும், இராமேசுரன், என உம்மைத் தொகையாக்கிக் கூறி யிருக்கின்றார்கள் என்பதாம். (136)

## பத்மபாதர் தமது அம்மானுடைய வீட்டிற்கு திரும்பி வருதல்

இவ்வண்ணம் அவ் வறிஞர்களுக்குப் பத்மபாதர் நன்கு உறுதியாகக் கூறின வேற்றுமைத் தொகை முதலியவைகளைக் கேட்டு அவர்கள் மிக்க களிப்புற்றனர். பின்னர் அவர்களால் துதிக்கப்பட்டவராய் யோகேசுரராகிய அப் பத்மபாதர் ஆண்டுச் சில நாள் கழித்துவிட்டு, தீர்த்தமாடலாற்றேடிய தெளிந்த தத்துவ ஞான முடையராய் தமது மாணாக்கருடன் அங்கிருந்து புறப்பட்டு இடையிலுள்ள தேசங்களைப் பார்த்துக்கொண்டு வருங்கால் புத்தகத்துடன் அம்மான் வீடும் தீவாய்ப் பட்டெரிந்து போயிற்று என்பதைக் கேள்விப்பட்டு அவ் வம்மான் வீட்டுக்கே வந்தனர். (137, 138)

வந்து பார்த்துச் சிறிது துன்பமடைந்தனர்; பின், தத்துவ பதப் பொருளை உணர்ந்து உணர்ந்து தைரியமுற்ற

னர்; அம்மானுடைய வீடு பெருந் தீவாய்ப் பட்டெரிந்ததைக் கேட்டுக் கேட்டு இரங்கினர்; அத்தன்மைய பத்மபாதருக்கு அவருடைய அம்மானுர் கீழ்வருமாறு கூறினர். (139)

"அறிஞ, நீ என்னிடத்தில் நம்பிக்கையுடன் உனது புத்தகச் சுமையை வைத்துப் போனாய்; அது மறதியால் வீட்டுடன் தீப் பட்டெரிந்தது; எனது வீடு தீப்பட்டொழிந்ததுபற்றி எனக்கு அத்துணை வருத்தமில்லை; மற்றோ, உனது புத்தகமும் போய்விட்டதே யென்று யான் பெருந் துன்பப்படுகின்றேன்" என்றனர். (140)

இவ்வண்ணம் கூறிய அம்மானைப் பார்த்து பத்மபாதர் அன்புடையோய், எனது புத்தகம் போனபோதிலும் என்னுடைய புத்தி போகாமலிருக்கின்றது என்று அவருக்குச் சொல்லி விட்டு நீத்தார் கணங்கள் தொழுகின்ற தீரராகிய பத்மபாதர் மறித்தும் அவ் வார்த்திக வுரையை யெழுதத் தொடங்கினர். (141)

பத்மபாதருடைய புத்தியின் தீவிரத்தை அவருடைய அம்மானுர் பார்த்து மீண்டும் பயமுற்றவராய் அவருக்கு முன் போல் வார்த்திக வுரை செய்ய ஆற்றல் இல்லாது ஒழிதற் பொருட்டு அவருடைய மனத்தைக் கெடுக்கத் தக்க ஒரு பொருளை அன்னத்திற் கலந்து கொடுத்தனர் எனச் சிலர் சொல்லுகின்றனர். (142)

ஆண்டு, இதற்கிடையில் தம்மைப் போல் தீர்த்த யாத்திரை செய்யப்பட்டவரும், தமது சம்பந்தமுடையவரும், சங்கரபகவற்பாதரின் மாணுக்கரும், நூலாசிரியரும், தம்மில் தாழ்ந்த ஆசிரமம் உடையவருமான மற்றையோர் இஃதுணர்ந்து காரணமொன்றுமில்லாமலே (திடீரென) வந்து வருத்தத்துடன் பத்மபாதரைக் கண்டனர். (143)

கண்ட அவர்கள், பத்மபாதருடைய திருவடிக் கமலத் தூளியைச் சிரமேற் கொண்டவராய் அவரை வணங்கு முறையாய் வணங்கினர்; நெடுநாட் பிரிந்தமையால் (ஆசிரியரிடத்திலிருந்து பிரிந்தமை இரு திறத்தாருக்குஞ் சமமானதால்) விரைவாக ஒருவரை யொருவர் வணங்கினர்; வணக்கத்தையும் ஏற்றுக் கொண்டனர். (144)

அக்கால், வாக்கால் ஆதிசேடனையும் வான் மீகியையும் வென்ற பெருமனமுடைய சங்கரபகவற்பாத முனிவரின் இளந் தளிர் போன்ற காந்தியுடன் விளங்குவனவும், காந்தியால் ஆசங்கைகளுக்கு இடமாகிய அஞ் ஞானத்தைப் போக்குவனவும், வேண்டிய புருடார்த்தத்தை யளிப்பனவுமான திருவடிகளை மனத்திற் கொண்டவர்களாயும், பசி தாக முதலானவைகாளல் மெலிந்தவர்களாயும், அச் சீடர் குழாங்கள் விளங்கினார்கள். (ஈண்டுப் பசி தாக முதாலனவைகளால் அவர்கள் துன்புற்றவர்களாய் தங்களுடைய ஆசிரியரின் (சங்கரபகவற்பாதரின்) திருவடியை மனத்தில் தியானித்துக் கொண்டிருந்தார்கள் என்பது கருத்து) (145)

## பத்மபாதர் தமது ஆசிரியரைக் காணல்

அம் மாணாக்கர் குழாங்கள், தீர்த்தமனைத்தையுஞ் சேவித்துக்கொண்டு காரணமொன்றுமின்றி (திடீரென) வந்த சிறந்த ஒரு அந்தணர் தங்களுடைய தேசத்தைப் பற்றிய இன்ப மளிக்கும் இனிய வார்த்தைகளைக் கூற, கேட்டனர். (146)

கேட்டு, அவர்கள் சிருங்ககிரியை யடைந்து அங்கு தமது ஆசிரியரைக் (சங்கரபகவற்பாதரை) காணாதவராய் மிகுந்த கவலை யடைந்து எதோ ஒருவகையால், ஆசிரியரது

இனிய செய்கைகளைக் கேட்டு உறுதி செய்துக்கொண்டு அங்கிருந்து கேரள தேசத்தை யடைந்தார்கள். (147)

அங்குச் சங்கரபகவற்பாதர் இதற்கிடையில் தமது அன்னை யாருக்கு அந்தியகருமங்களைச் செய்துவிட்டு, தமது தருமத்தைப் பாதுகாப்பாற்றும் இச்சையுள்ள மனத்தராய் அத் தேசத்தில், வானளாவின சிறந்த தரு விசேடங்கள் நிறைந்துள்ள ஒரு இடத்தில் இச்சையிலாதவராய்ச் சஞ்சரித்துக் கொண்டிருந்தனர். (148)

(பத்மபாதர் முதலான மாணாக்கர்கள் அங்குச் சென்றனர்) மாணாக்கர்கள் வந்ததைக் கண்டும், ஒப்பற்ற பெரும் பிரபாவமுடைய சங்கரபகவற்பாதர் ஒன்றும் பேசாமலே அங்குள்ள மகாசுராலேசர் என்னும் விட்டுணு மூர்த்தியை வினயமாய் வணங்கிக் கீழ் வருமாறு துதித்துக் கொண்டிருந்தனர். (149)

செகதீசரே, நீர் சத்து அசத்தினும் வேறாகிய (அநிர்வசநீய) மூலப்பிரகிருதியால் சித்து, அசித்து, வடிவாய் வியப்புற்ற இவ் வுலகை விளையாட்டாக உண்டாக்குகின்றீர்; பரிபூரணமாகிய தேவரீருக்குப் பயனடையும் வேட்கையில்லை. (150)

ஈசுரரே, நீரே, இரசோகுணத்தால் பிரமனாகி உலகைப் படைக்கின்றீர்; சத்துவ குணத்தால் விட்டுணுவாகி உலகைக் காப்பாற்றுகின்றீர்; தமோகுணத்தால் உருத்திரனாகி உலகை அழிக்கின்றீர்; அதுபற்றியன்றோ, நீர் ஒருவராகவே யிருந்தும், பிரமன், விட்டுணு, உருத்திரன் என்னும் அநேக பெயர்களால் வழங்கப் படுகின்றீர். (151)

பலவகையான ஆறு குளம் முதலானவைகளில் இரவி பலவாகத் தோற்றுவதுபோல பிரதி விம்பத் தன்மையைப் பெற்று பலவகைப்பட்ட இவ்வுலகவடிவுகளிற் புகுந்து நீர், ஒருவராகவே இருந்தும், அநேக வடிவராய்த் தோற்றுகின்றீர். (152)

இவ்வாறு சங்கரபகவற்பாதர், தேவாலயத்திற் சென்று அவ்விட்ணு மூர்த்தியைத் தோத்திரஞ் செய்துகொண்டிருந்தபோது அவரை, நெடுநாளாக விட்டுப் பிரிந்த மாணுக்கர் குழாங்கள் துன்புற்றவர்களாய்ப் பணிந்தார்கள். (153)

## பத்மபாதர் தமது செய்தியை ஆசிரியருக்குத் தெரிவித்தல்

ஆசிரியர் மாணுக்கரின் நலத்தை கேட்பதுடன் அவர்களிடத்தில் இன்சொற் கூறிக்கொண்டிருக்கும் இடையில் பத்மபாதர் மாத்திரம் பெரும் வருத்த முற்றவராய் தழு தழுத்த வாக்குடன் மெல்ல கீழ் வருமாறு ஆசிரியருக்குக் கூறினர். (154)

"பகவரே யான், சீரங்கத்தை யடைந்து இரங்கநாதரைத் தரிசித்துக்கொண்டு திரும்புங்கால் எனது முந்திய ஆசிரமத்திற்குரிய அம்மானவர் வழியிற் கண்டு பலவகையான இன்சொற்கள் கூறி என்னை அவரது வீட்டிற்கு அழைத்துக்கொண்டு சென்றார். அந்தோ! (155)

யான் அவருடைய வீட்டிற்குச் சென்று முந்திய ஆசிரம வாசனையின் கட்டுப்பாட்டால் பேத வாதிகளிற் சந்திரன் போன்ற எனது அம்மான் முன்னிலையில் தங்க

ளுடைய பாடியத்திற்கு யான் செய்துள்ள வுரையைப் படிக்கவேயில்லை. அல்லது இவ் வுரையைப்பற்றி வினவிய அவரை தோல்வியடையுமாறுஞ் செய்திலேன். (156)

தீயால் சுடப்பட்ட, சங்கு சக்கர முத்திரைகளை யுடையாரின் வாயைத்தம்பனம் பண்ணுவதற்கு மந்திரம் போன்றவைகளும், தார்க்கிக, பாட்ட, காபில, மதங்களைத் தொலைக்கத் தக்கவைகளும், வேதங்களின் சாரமென்னும் அமுதத்தால் விளங்குபவைகளுமான, தங்களுடைய வாக்கியங்களென்னும் கவசத்தை யணிந்து கொண்டவனாகிய யான் எனது அம்மானைத் தோல்வியடையச் செய்திலேன் என மேற் சுலோகத்துடன் கூட்டுக (இது, யானே வென்றிலேன் என்னும் தனது ஆணவத்தை விலக்குதற்குக் கூறியதெனக் காண்க) (157)

முனிவ, மற்றும், கணாதமதத்தில் ஒருவருக்கொருவர் செய்யுங் கத்திச் சண்டையாலுண்டாகுந் தழும்பையும், அக்கபாதர் மதத்தில் ஒருவருக் கொருவர் செய்யும் கைவிடர்ப் படைச் சண்டையாலுண்டாகும், பொறுத்தற்கரிய களைப்பையும், காபில மதத்தில் ஒருவருக்கொருவர் செய்யும், தடியடிச் சண்டையாலுண்டாகுந் துன்பத்தையும், மூங்கிலின் முத்துக்கள் வடிவான தமது வாக்கியங்களென்னும் யுக்திகளான கவசங்களை யணிந்தவனாகிய யான் அடைந்திலேன். (158)

இவ்வாறு மதவாதிகளை யான் வெற்றிகொண்டபின்னர் முன்போல் என்னைக் களிப்படையச் செய்து உபசரித்த வஞ்சக நெஞ்சமுடைய அம்மான் வீட்டில் அவர் இவ்வாறு செய்வாரென்னும் ஐயப்பாடு கொள்ளாத யான்

ஓர் நாள், பொழுது புலர்தற்கு முன்பே எழுந்து (இராமேசுரம்) போய்விட்டேன்.) (159)

பிரளய காலத்தில் தாண்டவஞ் செய்யும் உருத்திரனது நெற்றியின் கண் உண்டாகும் அக்கினிச் சுவாலை போன்ற பயங் கொடுக்குஞ் சுவாலைகளையுடைய தீ மறுநாள் நடு இரவில் எனது அம்மானது வீட்டுடன் பாடிய வுரையையுஞ் சாம்பராக்கிவிட்டது. அந்தோ! (160)

கெட்ட எண்ணமுடைய அம்மான், புற மத நூலைத் தீயாற் கொளுத்திவிடவேண்டு மென்னும் தீய வேட்கையுடையராய்த் தாமே புத்தகத்துடன் வீட்டிற் தீ வைத்துக் கொளுத்திவிட்டாரென்றும், (மறித்தும் யான் அதைப் போன்றே) மற்றுமொரு உரை செய்யா வண்ணம் அன்னத்தில் விடங் கலந்து எனக்குக் கொடுத்தனரென்றும் அநேகரால் அவருடைய செய்கை வெளிப்பட்டிருக்கின்றது. (161)

இப்போது எனது மதியும் முன் போன்று தெய்வானுக்கிரகத்தை ஐயமின்றி யடையவில்லை; இத்தன்மைய மாறுபாடாகிய நிலைமை தமது திரு வடித் தொண்டனாகிய எனக்கும் பொருந்துங்கொலோ (பொருந்தாதென்க)? (162)

ஆசிரியரிற் சிறந்தோய், தம்முடைய சிறந்த பாடியத்திற்கு, ஒப்பற்றதும், உண்மையானதும் வெளிப்படையான யுக்திகளை யுடையதும், எளிதானதுமாய் என்னாற் செய்யப்பட்டிருந்த விரித்தியுரை அந்தோ, வழியில் தீப்பட்டு வெந்தொழிந்தது, (163)

மறித்தும் யான் அத் தன்மையதாகவே உரை செய்ய வேண்டுமென முயலுங்கால், பகவரே, முன் போன்ற எனது புத்தியில் துண்ணிய புத்தி எறவில்லை. (164)

கருணைக் கடலாகிய தமது திருவடியின் ஒரு மூலையிற் சிறிதளவையேனும் அடைக்கலமென அடைந்த எளியவர்களிலும் துன்புற்றவர்களிலும் எவர், எவர், சருவேசுர பதவியை முன் அடைந்திலர் (யாவருமே அடைந்தனர் என்க)? ஆசிரிய, (அங்ஙனமிருக்க, தமது திருவடியையே) வழி பட்டுக் கொண்டிருக்கின்ற எனக்கு அபராதம் போன்றுள்ளது யாது கொலோ? பாவத்தின் கூறதாமெனிலோ? இப் பாவக் கூறு ஆசிரியரின் திருவடித் தியானத்தையே முடிவாக வுடையது, என நூலிற் கூறியுள்ளது பொய்யாகு மன்றோ" (ஆசிரியரின் திருவடியைத் தியானிப்பவருக்கு எவ்விதமாகிய பாவமும் பற்றாமையி னென்க)? (165)

## சங்கரபகவற்பாதர்

## பத்மபாதரின் தாபத்தை அடக்கல்

கருணைமலிந்த திருவுளத்தராகிய சங்கரபகவற்பாதர், இவ்வாறு கூறிய பத்மபாதரை, அமுதக் கடலை யொத்தனவும், மோகத்தைப் போக்குவனவும், அழகிய தொடர்புள்ளனவுமான வாக்கியங்களால் கீழ் வருமாறு சாந்தப் படுத்தினர். (166)

"மைந்த, அந்தோ, விடத்தாலுண்டாகிய மோகத்தைப் போன்ற கருமத்தின் தீய பலன் இதுவாம்; இது முன்னரே என்னாலுமறியப் பட்டதே; இதை, முன் சுரேசுரருக்கு யான் சொல்லியுமிருக்கின்றேன். (167)

முன்னர், நீ, சிருங்ககிரியின்கண் என்னிடத்தில் படித்துக் காட்டிய அவ் வுரையின் ஐந்துபாதங் கொண்டது, (பஞ்சபாதிகை) எனது உள்ளத்தின் கண்ணே யிருக்கின்றது; அது போகவில்லை; அதை மாத்திரஞ் சொல்கின்றேன்; இப்போது நீ எழுதிக் கொள்ளுவாயாக; (எழுதுவையேல்) உனது கவலை விரைவில் நீங்கிவிடும்,'' எனச் சங்கரபகவற்பாதர் திரு வாய் மலர்ந்தருளினர். (168)

இவ்வாறு சங்கரபகவற்பாதர், பத்மபாதரைக் களிப்புறச் செய்துவிட்டு, தாம் முன்னர்க் கேட்டிருந்த பஞ்சபாதிகை என்னும் பத்மபாதரின் உரை நூலைக் கேட்டிருந்த முறையாகவே அவருக்குச் சொல்லிவந்தனர். கல்விகளனைத்தின் விருத்திக்குக் காரணராயும், பரமபுருடராயும், கேடற்ற ஞான வலியுடையவராயும், மூன்றுலகத்திற்குங் குருவாயுமுள்ள சங்கரபகவற்பாதரிடத்தில் இதுவு மோர் வியப்பாமோ? (169)

பத்மபாதரும், (தாமே முன்னியற்றியதும் இப்போது சங்கரபகவற்பாதரின் திருவாக்கால் வெளிப்பட்டதுமாகிய) பஞ்சபாதிகை என்னும் அவ் வுரை நூலை உறுதிப்பிடியாய்க் கொண்டு அதனை எழுதிப் பெருங் களிப்புற்றவராய் அமர்ந்தார்; எழுந்தார்; ஆடினார்; பாடினார்; அழுதார். (170)

### சங்கரபகவற்பாதரிடத்தில் கேரள தேசத்தரசன் வரல்

பின்னர், கவிஞர்களில் வல்லுநரும், தமது முடிகளிலுள்ள மணிகளால் பாதத்தின் நுனி விரல் வரை காந்தியை

யுடையவருமாகிய அழகுவாய்ந்த இராசசேகரர் என்னுமொரு கேரள தேசத்தரசர் வந்து சங்கரபகவற்பாதரைப் பணிந்தனர். (171)

பணியுங்கால், (அவ் வேந்தரை சங்கரபகவற்பாதர் நோக்கி, "அரச, முன்னொரு போது எனக்குத் தெரிவித்த,") "அம் மூன்று நாடக நூல்களும் விளங்குகின்றனவோ?" என அவரை வினவினர்; அதற்கு அவ்வரசர், "ஐய, மறதியால் அந் நூல்கள் தீக்கிரையாயின," என மறு மொழி கூறினர். (172)

அதைக் கேட்ட சங்கரபகவற்பாதர், (அரசரை நோக்கி "அறிஞ, அக்காவிய நூல்களை யான் முறையாய் சொல்கின்றேன் என்று சொல்லியருளினர்) அவர் கூறின அக் காவிய நூல்களை அவ் வரசர் எழுதிக்கொண்டு வியப்படைந்து சங்கரபகவற்பாதரை நோக்கி, "வரத, யான் தமது தொண்டன்; தங்களுக்குச் செயற்பாலது யாது? என்று அடி பணிந்து கேட்டனர்." (173)

அதற்குச் சங்கரபகவற்பரதர், "அரச, (நமது தேசத்தைச் சார்ந்த) காலடி என்னும் அந்தணரின் கிராமத்தில் உள்ள அந்தணர்கள், அந்தணரின் கருமங்களுக்கு அதிகாரிகளாகத் தக்காரலர் என எம்மால் முன்னர் சாபமடைந்திருக்கின்றார்கள் ஆதலின் இப்போது தாங்களும் அவ்வாறே (அவர்கள் நடந்துவர) அவர்களுக்குக் கட்டளையிடுவீராக," என்று ஆணை கொடுத்தருளினர். (174)

இவ்வாறு, பத்மபாதர் ஒழிந்து போன தமது பாடிய வுரையை சங்கரபகவற்பாதரிடத்திலிருந்து பெற்றுக்

கொண்டு களிப்புற்ற பின்னர், கேரளதேசத்தரசரும் நீத்தார்களுக்குச் சக்கரவர்த்தியாகிய அச்சங்கரபகவற்பாதரையடைந்து அவரது திருவாக்கால் கெட்டுப்போன தமது நாடக நூல்கள் மூன்றையும் பெற்றுக்கொண்டு ஆனந்தக் கடலில் மூழ்கியவராய் சங்கரபகவற்பாதரின் திருவடிக் கமலத் துணையை இடையறாது தியானித்துக்கொண்டு தமது இராச்சியத்திற்குச் சென்றனர். (175)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கரதிக்கு விசயச் சுருக்கத்தில் பத்மபாதர்
தீர்த்தயாத்திரையை மேற்கொண்ட
பதிநான்காவது சருக்கம்
முற்றும்.

---

# பதினைந்தாவது சருக்கம்

## சங்கரபகவற்பாதர் இராமேசுரத்திற்குத் திக்குவிசயத்தின் பொருட்டுச் செல்லல்

அதன் பின்னர், வீரமாகிய மனமுடைய சங்கரபகவற்பாதர், பத்மபாதர், அத்தாமலகர், சமித்ரபாணியர், சித்விலாசர், ஞானகந்தர், விட்டுணுகுப்தர், சுத்தகீர்த்தியர், பாநுமரீசியர், கிருஷ்ணதரிசனர், புத்தி விருத்தியர், விரிஞ்சியர், பாதசுத்தானந்தர், ஆனந்தகிரி முதலான ஆயிரக்கணக்கான சிறந்த மாணக்கர் குழாங்களுடன் சுதன்வன் என்னும் அரசனும் பின்றொடர்ந்து வர எல்லாத்திக்குக்களிலுள்ள பேதவாதிகளையும், வெற்றி கொள்ளல் வேண்டுமென்னும் விருப்புடையராய் முதலில் இரமேசுரத்திற்குப் பிரயாணப் பட்டனர்.

(ஈண்டுச் சங்கரபகவற்பாதர் முன்னர் மத்தியார்ச்சுனம் (திருவிடை மருதூர்) என்னுந் தலத்தை யடைந்து மத்தியார்ச்சுனேசுரரைப் பலவகை உபசாரங்களாலும் ஆராதித்துத் தெளிந்த மனமுடையராய் அவர் அவ் வீசனை நோக்கிப் "பரசிவ, தேவரீர் முற்றுமுணர்ந்தவராகவும் எல்லா வுபநிடதங்களின் பொருளாயுமிருக்கின்றீராதலின், வேதத்தின் கருத்து, துவிதமோ? அல்லது, அத்துவிதமோ? என்னும் ஐயப்பாட்டை இங்குள்ளார்களுக்கு நீக்கியருள்வீராக," என வேண்டினர்; அப் பரமேசுரன் இலிங்கத்தில் எழுந்தருளிய பேரொளியுடன், "சத்தியம் அத்துவிதம்," என வலக்கையைத்தூக்கி மும்முறை கூறி மறைந்தனன்; அதைக் கேட்ட யாவரும் வியப்புற்று,

சங்கரபகவற்பாதரையே உண்மையாசிரியரெனக் கொண்டு அங்குள்ளார் வைதிக சிவ பூசை முதலானவைகளை யநுட்டிப்பவராயும் சுத்தாத்துவித பராயணராயும், அவருக்கு மாணுக்கராஞர்கள்; பின்னர் சங்கரபகவற்பாதர் அவர்களையுங் கூடவே அழைத்துக்கொண்டு இராமேசுரஞ் சென்றனர். என்னும் இது பழைய சங்கரதிக்குவிசயக் கதைச்சுருக்கமாம்). (1)

## சாக்த மத வெற்றி

சங்கரபகவற்பாதர் இராமேசுரத்திற்குச் சென்று, சக்தி பூசை யென்னுமோர் வஞ்சகத்தால் மதுவை விரும்பின சாக்த மதத்தர்களுடன், அருகிலுள்ளாருக்குப் பெருங் களிப்பைத் தருவதும், அரிய பெரிய யுத்திகளால் விளங்குவதுமாகிய பெரு விவாதஞ் செய்தனர். (2)

இவ்வாறு விவாதஞ் செய்து அச் சத்தி மதத்தர்களை அரிய யுத்திகளால் ஒவ்வொரு சொல்லிலும் பேச வலியற்றவர்களாக்கி அந்தணரின் கருமங்களுக்குப் புறம்பான தாழ்மையடைந்த அவர்களை உலக நன்மையின் பொருட்டு வைதிக கருமங்களின் எல்லையை யடைந்தவர்களாக்கினர். (வைதிக கருமங்களை யநுட்டிப்பதில் மிக்கச் சிறந்தவர்களாக்கினர் என்பதாம்).

(ஈண்டு, அங்கு முதலில் பார்வதியை யுபாசிப்பவர்கள் வந்து சங்கர பகவற் பாதரை வணங்கி, தம்முடைய சாக்த மதத்தை அநேக பிரமாணங்களால் எடுத்துக் கூறி "தாங்களும் இம் மதத்தையே அநுட்டிப்பீராக," எனச் சங்கரபகவற் பாதருக்குக் கூறினார்கள். அதைக் கேட்ட அவர், "பார்வதி தேவியார், வித்தை வடிவானவர்,

அவரை யுபாசிப்பதால் அந்தக்கரண மாத்திரம் தெளிவை யடையும்; முத்தி யென்பதோ, சீவப்பிரம அபேத ஞானத் தாலன்றிக் கிடைக்காது; "பிரமத்தை யுணர்ந்தவன் பிரமமே யாகின்றான்," என்றற் றொடக்கத்துச் சுருதிகளும் அவ்வாறே கூறுகின்றன ஆகையால் நீவிரும் சுத்தாத்து விதத்தையே மேற்கொண்டவர்களாவீர்களாக," என்று அவர்களுக்கு உபதேசிக்க, அவர்களும் தம்முடைய மதத்தை விட்டவர்களாயும், நீராடல் முதலான ஒழுக்கமுடையவ களாயும், சுத்தாத்து விதத்தில் அன்பு மிக்குடையவர்களு மாகி, சங்கர பகவற் பாதருக்கு மாணுக்க ராயினர்.

அதன் பின்னர், மகாலக்குமியை யுபாசிப்வர்கள் வந்து தங்களுடைய மதத்தையே சங்கர பகவற் பாதரும் அநுட்டித்துவரல் வேண்டுமென்று கூற அதற்கவர் அநேக பிரமாணங்களால் அத்துவித ஞானமே முத்தியைக் கொடுக்கு மென்று எடுத்துக் கூறி அவர்களையும் அதையே உடன் படுமாறு செய்வித்தனர்; பின்னர் அவர்களும் குங்குமத் தாற் பங்கயம் போலணிதல் முதலான இலக்குமி விரத முதலிய உபாசனைகளை நீக்கி சுத்தாத்துவிதத்தில் அழுந்திய வராய்ச் சங்கரபகவற்பாதருக்கு மாணுக்கராயினர்.

பின்பு, சாரதாளை யுசாசிப்பவர்கள் வந்து, "சாரதா தேவியாரே நித்தியமாவர்; அவரே ஞான வடிவினர்; அவரே, பிரமன் முதலானோருக்கும் வாக்கு வடிவாயுள்ள வர்; ஆகையால், தாமும் அவரையே உபாசித்து வரல் வேண்டும்" என்று சங்கரபகவற்பாதருக்குக் கூற, அதற் கவர், "அவ் வம்மையார் சப்த வடிவாராதலின், அச் சப்தம், கழுத்து, உதடு, நா, முதலான விடங்களினின்று உண்டாவ தாமாதலின், எவ்வாறு சாரதா தேவியார் நித்தியமாவர்?

அன்றியும், சப்த சமுதாயமாகிய வேதம் உண்டானதென்று அறியப்படுதலால் அது நித்தியமாகாது என, சாரதா தேவி யாரை அநித்தியரென்று நிறுவி, நித்தியமாகிய சுத்தாத் துவிதீயமே முத்திக்குக் காரணமாம்,'' என்று அநேக சுருதிகளாற் கூற, அவர்களும் சாரதா வுபாசனையை விட்டு சுத்தாத்துவிதீய பதத்தையே கைக் கொண்டவர்களாய் சங்கரபகவத்பாதருக்கு மாணாக்கராயினர்.

பின்னர், வாம மார்க்கிகள் வந்து, "ஞான வடிவாயும், சுவதந்திரமாயும், பிரமன் முதலானோருக்குங் காரணமா யும், உலகனைத்தையுந் தன் வசப்படுத்துவதுமாகிய ஆதி பராசத்தியே உபாசிக்கத் தக்காள்; அதை விட்டு மலடி மகன் போன்ற வேதாந்த ஞானத்தைக் கற்று பந்த முத்தி களின் பாகுபாடே யிலாது வீண் வேடந் தாங்கி தாங்கள் திரிவதில் யாது பலனும்? என்று சங்கரபகவற்பாதரை வினவ, அதற்கவர், "சாக்ததர்களே, ஈண்டுப் பலவுஞ் சிறிதுமில்லை,'' என்றறிருடக்கத்துச் சுருதிகளால் பர மான்மாவைத் தவிர்த்துச் சிறிதும் வேறு பொருளின்மை யாலும், ஈசுரனே வித்தைகளனைத்திற்குங் காரணமாமெனக் கூறி யிருத்தலாலும், அநிரு வசனமாகிய மாயையின் வடி வை வழிபட்டு, கள், கஞ்சா, கலஞ்சம், முதலானவைகளை யுண்டு பிறப்பை வீணாக்குகின்ற உங்களுடைய அறியாமை யை என்னென்று சொல்லுவேன், என்று கூறி அவர்களையுந் தமது வசமாக்கி அவர்களுக்குப் பிராயச்சித்தஞ் செய்விக்க அவர்களும் நன்னடக்கை யுடையவர்களாயும், சுத்தாத்து விதிகளாயும் மாறி சங்கரபகவற்பாதருக்கு மாணாக்க ராஞர்கள், இது இந் நூலின் உரையின் கருத்து. விசேடம் ஆண்டுக் காண்க).

(3)

பின்னர், அங்கு, இராமநாதரை ஆராதித்துக்கொண்டு, அதிலிருந்து, பாண்டி நாட்டரசர்களுடன் சோழநாட்டரசர்களையும், தமது வசமாகச் செய்து, அதினின்றும், காஞ்சி மாநகரை யடைந்தனர். காஞ்சி, அஸ்தி என்னும் மலையின் இடுப்பினுடைய மேகலையாம் (முத்துக் கோத்துள்ள ஒட்டியாணம், மேகலை). (4)

அங்குச் சங்கரபகவர்பாதர் பரவித்தையைத் தழுவி வியப்புற்ற தேவாலயமொன்று கட்டுவித்து, அதில் காமாட்சி தேவியாருக்கு, சத்தி தந்திர நூலை யநுசரித்த ஆராதனை முறைகளை நீக்கி, வைதிக பூசை செய்யுமாறு செய்வித்தனர்.

(ஈண்டுச் சங்கரபகவற்பாதர் இராமேசுரத்தில், கங்கை நீர் முதலானவைகளால் இராமநாதரை யாராதித்துக் கொண்டு அங்கு இரண்டு தினங்கள் தங்கினர்; கையில் சிவலிங்க முத்திரைத் தழும்புடையவரும், நெற்றியில் சூலக்குறி யுடையவரும், இலிங்கந்தரித்தவரும், கையில் துடியை யுடையவரும், மற்றும் எல்லா அங்கங்களிலும் திரி சூலக் குறி யுடையவரும் அத்துவிதத்தில் துவேஷமுடையவருமான பாசுபதர்கள் சங்கரபகவற்பாதரிடம் வந்து, உலக காரணர் பசு பதீசரேயாவர்; அவரை, சத்தியர், பரப்பிரம வடிவர், புருடர், கிருஷ்ணபிங்களர், சுக்கிலங் கலிக்காதவர், விரூபாட்சர் என்வும், உலக வடிவராகிய உமக்கு வணக்கம், எனவும், அவருடைய, தலை, சுவர்க்கம், நாபி, வான், கண்கள், இரவிமதி, செவி திக்கு, வாக்கு, வேதம், எனவும் துதிப்பவர்களும், சிவச் சின்னத்தைத் தமது உடம்பில் குறியாக அணிந்து கொண்டு உபாசிப்பவர்களும், சிவலோகத்தை யடைகின்றனர்

இதைப் போலவே, தேவர்கள் பரசிவரை வினவ அதற்கவர் "நானே பரதேவதை; நான் ஒருவனே முன்னிருந்தேன்; நானே பிரமன் விட்டுணு முதலானோர்கள்; நானே உலகனைத்தையும் ஆக்கியளித்தழிக்கின்றேன்," என்று திரு வாய் மலர்ந்தருளினார்; இவ்வண்ணமே மகாதேவரும் துருவாச முனிவருக்குக் கூறியுள்ளார். வாசுதேவன் என்றது, உலகம் தன்பால் வசித்திருத்தல் என்னும் பொருள் படலின், சிவனே யாவன்; நாராயணன் என்றதும், நாரம், பிரமன், விட்டுணு முதலானோரை இடமா உடையவன் என்றதால், சிவனே யாவன் என்று பலவாறான புராண இதிகாச வாக்கியங்களை யெடுத்துக் கூறி, 'தாங்களும் சிவச்சின்ன முதலானவைகளைப் பெற்று, சிவோபாசனையைச் செய்வீராக,' என்றார்கள். அதைக் கேட்ட சங்கரபகவற்பாதர், "பரமான்மாவே பிரமன் முதலான வடிவங்களாய்ப் படைத்தளித்தழிக்கின்றது என்பது எனக்கும் உடன்பாடேயாம்; இது சுருதி சம்மதமாமாதலின், இலிங்கதாரண முதலியவைகளில் பிரமாணமின்மையின் அது விடத்தக்கதேயாம், மற்றும் தேவர்களனைவரும் இத் தேகத்தின் கண்ணே வசிக்கின்றார்களாதலின் இவ் வுடம்பு முழுதும் தழும்பு படச் செய்தல் (சிவலிங்க முத்திரையாற் சுடுவது) சிறப்புடையதன்று, ஏனெனின்? தேவர்கள் தழும்புற்ற தேகத்தைக் கண்டு நீங்கி விடுவார்,' என்றற்றொடக்கத்து சுருதி மிருதிவாக்கியங்களில் அது பழிக்கப்பட்டிருத்தலின். மற்றும், அந்தணர்காள், நிலையாமையை யுடைய இவ் வுலகத்தில் வைராக்கியத்தை யடைந்து நிலைத்திருக்கின்ற பிரமத்தை யறிய முயலுவீராக; சின்னங்களை யணிவதில் பயனொன்று மில்லை, கேவலம் ஞானமே முத்தியைக் கொடுப்பதாம்.

அந்த ஞானமோ, மனந் தூய்மையான விடத்து பரசிவனருளா லுண்டாகும்; அதிலும் ஆசிரியரின் அநுக்கிரகம் வேண்டுமாகையால் பாசுபதர்களே, நீவிர் வேத சம்மதமில்லாத இலிங்கதாரண முத்திரை போடல் முதலானவைகளையொழித்து வைதிக சைவராய் அத்துவித ஞானத்தையடைந்து நித்திய முத்தியுண்டாகும் வண்ணம் முயலுவீர்களாக'' என்று அநேக பிரமாண, யுத்திகளா கதைகளுடன் அவர் எடுத்துக் கூறியதைக் கேட்ட பாசுபத மதத்தார்களிற் சிறந்த 'வித்துவே நீரர்' என்பவர் ஒருவர், சங்கர பகவற்பாதருடைய திரு வடியில் அடைக்கலம் புகுந்து சுத்தாத்துவித பரராய்ச் சுகமுற்றனர்.

அதன்பின் சங்கரபகவற்பாதரிடத்தில் மற்றொரு சார்பார்வந்து அவரை நோக்கி "நீ யாவன்? வேட தாரியாயிருக்கின்றாய் நீ எங்கள் மதத்திற் சேர்ந்த ஒருவனை, பிரமாணிகமாயுள்ள இலிங்க முத்திரை முதலியவைகளை நீக்கி அவனை அம்மதத்தினின்றுங் கெட்டவனாகச் செய்துவிட்டனை; நீ கபட முடையை. "பிரமனது நிலையிலும் சிறந்தது வைணவம்; வைணவ நிலையினுஞ் சிறந்தது சைவம்," என்று பிரமனே நாரதருக்குக் கூறியிருக்கின்றனன்; நமஸ்தே என்றற் றொடக்கத்து மறைமொழியும் இதையே கூறுகின்றது. மற்றும் உருத்திர யாமலக தந்திர நூலிலும், கந்த புராணத்திலும், புருட சூக்தத்திலும், சுவேதா சுவதர முதலான உபநிடதங்களிலும் இதுவே கூறப்பட்டுள்ளது. பத்தினிகள், "ஹரீ இலக்கிய," என்பது முதலான சிவ வசனத்தாலும் இதுவே பெறப்படுகின்றது; அதர்வண வேதத்தில், "நித்தியா நித்தியம் யானே," என்றற் றொடக்கத்து வாக்கியங்களும் பரசிவனே காரண

மென்று கூறுகின்றன ; சிவரகசியத்திலும் ' சிவனே தியா னிக்கத்தக்கவன் எனக் கூறப்பட்டுள்ளது. மற்றும், எல்லாச் சுருதிகளும் சிவனே உலக காரணன் என்று கூறுகின்றன உருத்திர காண்டத்தில் சிவலிங்கத்தின் முத்திரையும், தாரணமுங் கூறப்பட்டிருக்கின்றன. சிவ கீதையிலும் "சிவலிங்கமணிவதால் பாவ மனைத்து மொழியும்" என்று கூறப்பட்டிருக்கின்றது காலாக்கினியுருத்திரவுபநிடதத்திலும் முனிவர்களுக்கு சிவ தீட்சை சிவ லிங்கதாரண முதலானவை கூறப்பட்டுள்ளன. அகத்திய சம்மிதையும், விபூதி தாரண முதலியவற்றைக் கூறுகின்றது என்றனர். அதைக் கேட்ட சங்கரபகவற்பாதர் மேற்கூறிய பிரமாணங்களுக்குத் தீயாற் சுடல் கருத்தன்று. மற்றே, கிருச்சிர சாந்திராயண முதலான விரதங்களால், தாபம் என்பது மெலிவு, என்னும் பொருளைக் கூறும் நாரதீயத்திற்கு விரோதமுமாம். அஃதன்றியும், "இலிங்க முத்திரை, சங்கு சக்கர முத்திரை யுடையார்களைக் காணில், நீராடல் வேண்டும் ; அவர்களுக்கிட்ட தானம் வீண். இலிங்கமுத்திரை சங்கு சக்கர முத்திரை போட்டுக் கொண்டவன் பதிதனாகின்றான்," என்று கூறுகின்றது பெரிய நாரதீயம். மற்றும், மார்க்கண்டேய புராணத்தில், முன்னொருகால் காயத்திரிக்கும் அந்தணருக்கும் விவாதமுண்டாகியபோது "தேவர்காள், நீவிர் பாகண்டர்களாகி வைதிககருமங்களைவிட்டுத் தாந்திரிக ஒழுக்கமுடையவர்களாய் மண்ணிற் பிறப்பீர்களாக," என, காயத்திரியால் தேவர்கள் சாபமடைந்தவர்களாய் கலியில் பாகண்டராயும், அவைதிகராயும், இலிங்க முத்திரை சங்கு சக்கர முத்திரை களுடையவராயும், ஞான வழி, கரும வழி என்பவைகளால் நழுவியவர்களாய்த் தோன்றினர் என்றும், மீண்டும், கலியில் முப்பதி

ஞாயிர வருடஞ் சென்ற பின் நீவிர் அழிந்து விடுவீராக என்றும், மறித்தும் அத்துவித சிந்தனை யுடையவராயும் உண்மை மார்க்கத்தை ஒழுகுபவராயும் பிறப்பீர் என்றும், சாபானுக்கிரகங்களை யுடைய சரிதங் கேட்கப்படுகின்றது. ஆகையால், இலிங்க முத்திரை 'மனிதர்களால் கொள்ளற்பாலனவன்று என, அநேக பிரமாணங்களை எடுத்துக் காட்டி அவர்களையும், மறுத்தனர்; உடனே அவர்களும் இலிங்க முத்திரை முதலானவைகளை நீக்கி வைதிக சைவ மார்க்கத்தை யநுட்டிப்பவர்களாயும், சுத்தாத்துவித பரர்களாயுமாகி, சங்கரபகவற்பாதருக்கு மாணாக்கராஞர்கள்.

அதன் பின்னர், சங்கரபகவற்பாதர் அனந்த சயனஞ் சென்று ஒரு திங்கள் அங்குவசித்து, அங்குள்ள, பக்தர், பாகவதர், வைணவர், பாஞ்சராத்திரிகர், வைகாநசர், கருமஈனர், என்னும் அறுவகை வைணவ மரபினர்களை நோக்கி "வைணவர்காள், உங்களுக்கு இலக்கணம் யாது? எனவினவினர். அதற்கவர்கள் தங்களுடைய மதத்தை அநேக பிரமாணங்களைக் கொண்டு நிரூபிக்க, அதைக்கேட்டு, அவர், "நீவிர் வைணவசம்பிரதாயத்தை அநுட்டிப் பீர்களாயினும், வேத விரோதமான சங்கு சக்கர முதலான முத்திரைகளை நீக்கி விடுவீர்களாக. அன்றெனிலோ, பிரகலாதன், விபீடணன், கசேந்திரன், துருவன், ஆநிலன், துரோபதை, விரசவாசிகள், முதலானோர்கள் சங்கு சக்கர முதலான முத்திரைகளைக் கொண்டார்களென்பது எங்களால் கேட்கப் படாமையின் அவை உடன்பாடன்று, மற்றும், விட்டுணுவை யாராதித்தல் தோஷமற்றது; அல்லது அம் முத்திரைகளையே அணிந்து கொள்வோமென கட்டாயப் படுத்துவீர்களேல் கழுத்திலும், நெற்றியிலும், ஆதிசேடன், கரு

டன், என்பவர்களின் சின்னங்களையும் அணிந்து கொள்வீர் களாக,'' என், அநேக வழிகளையெடுத்துக்கூறி, அவர்களை வைதிகசைவ மார்க்கத்தில் நிலைக்கச் செய்து வைணவசம் பிரதாயத்திலும் வைதிக சைவ மார்க்கமே சிறந்ததென்றும் நிறுவி அவர்களை வைதிக சைவ மார்க்கத்தில் ஒருப்பட்டவர் களாகவும், அத்துவித தற்பரராகவும் செய்து சங்கரபகவற் பாதர் தமக்கு மாணுக்கராக்கிக் கொண்டனர்.

அவர் பின்னர் அங்கிருந்து சுப்பிரமணிய தலத்திற் குச் சென்று கூர்ச்சம் கமண்டல முதலானவைகளைத் தாங் கிக்கொண்டு இரணியகருப்பனை யுபாசிப்பவர்களென்னும் அங்கு வந்து கூடிக்கொண்டிருந்தவர்களை சுத்தாத்துவிதத் தையே மேற்கொண்டவர்களாகச் செய்து தமக்கு மாணுக்க ராக்கிக் கொண்டனர்.

பின், அக்கினியை யுபாசிப்போர்களையும், அவர், சுருதி முதலானவைகளில் அக்கினியை பூதாக்கினி யெனக் கூறப் பட்டுள்ளது என்று அவர்களையும் திருப்பி தமக்கு மாணுக்க ராக்கிக் கொண்டனர்.

பின், உதித்த சூரிய மண்டலத்தை பிரமன் வடிவாக உபாசிப்பவர், உச்சிப்போதைய சூரியனை ஈசுரனாக உபாசிப் பவர் அத்தமன சூரியனை விட்டுணுவாக உபாசிப்பவர், மற் றும், இரவி மண்டலத்திலுள்ள பொன் மயிர் முதலான வடிவத்தைப் பார்க்கும் விரத முடையார், சூரிய தரிசனமாத் திரமே யுடையார், நெற்றி, கை, முதலான விடங்களில் சூரிய மண்டலத்தின் சின்ன முடையராய் இடையரூது மனதில் சூரியனைத் தியானிப்பவர் என்னும், அறுவகையான சூரியோ பாசகர்களுக்கும், அவர், சூரியனுக்கு உற்பத்தி காணப் படு

தலின் இச் சூரியன் அநித்தியனே யென்றும், சுருதி, ஸ்ருதி, புருட சூக்தம், புராண முதலானவைகளில் கூறப்பட்டிருக்கின்ற சூரியன் என்னுஞ் சத்தத்திற்குப் பரமான்மாவே பொருளென்றும் எடுத்துக் கூறி, சுத்த அத்துவித்திய பரமான்ம தத்துவத்தையே தியானிப்பவர்களாகச் செய்து தமக்கு அவர்களை மாணுக்கராக்கிக் கொண்டனர்.

அதினின்று, மூவாயிரக் கணக்கான மாணுக்கர் குழாங்களாற் சூழப்பட்டவராய்ச் சங்கரபகவற்பாதர் வாயுதிக்கை யடைந்து கணவரபுரம் என்னும் ஊரிற் சென்று அங்குள்ள கணபதி யாசிரமமென்னுமோரிடத்திற்றங்கினர். அங்கு பல்லாயிர மாணுக்கர்களால் அநேகவிதமான வாத்தியங்களுடன் சங்கரபகவற்பாதருக்கு நடத்தப்படு ஆராதனையின் மாகான்மியத்தைக் கண்ட அவ் வூரிலுள்ள ஏரம்பர், வக்ரதுண்டர் முதலான பலவகைப்பட்ட கணேசரின் உபாசகர்கள் சங்கரபகவற்பாதரிடம் வந்து, "ஐய, தும்பிக்கை, முத்திரை, முதலானவைகளைத் தரித்துக் கொண்டு மதுபானம் பண்ணல் முதலியவைகளோடும் எல்லாவற்றிற்கும் மூலகாரணராகிய கணேசரை யுபாசித்தலே சிறந்ததாம். ஆகையால் தாங்களும் அக் கொள்கையையே கைபற்றுவீராக," என்று வணக்கமாய்க் கூறினார்கள். அதைக் கேட்ட சங்கரபகவற்பாதர் "மதுபான முதலான பாவச் செய்கையிலாதவர்களுக்கு முத்தியுண்டா மென்று சுருதி கூறுதலின், வேதவிரோதமான மதுபானம் மூலான பாவச் செய்கைகளையும், வேத சம்மதமில்லாத, அங்கங்களில் முத்திரை அணிந்து கொள்ளல் முதலானவைகளையும் விலக்கி விட்டு, பஞ்சாயதன தேவதைகளை வைதிக முறைப்படி நீவிர் ஆராதிப்பீர்களாக; மூலா

தாரத்திலிருக்கின்ற கணநாதரைத் தியானிக்க முத்திரை முதலானவைகள் 'வேண்டா; மற்றும் 'கணபதி' என்பதும் பரமான்மாவிற்கே உள்ளவாறு பொருத்தமாகுமாதலின், அத்துவித பரமான்மாவை யறிந்து, வைதிக சைவ மார்க்கத்தால் மனந்தூயராய் முத்தியை யடைந்து உய்வீர்களாக," என பலவகையா யெடுத்துக் கூறி அவர் அவர்களை அத்துவித மார்க்கத்தையே மேற்கொண்டவர்களாகச்செய்து தமது மாணுக்கராக்கிக் கொண்டனர். இது நூலின் உரையின்சுருக்கமாம். விரிவாயுணர வேண்டிலோ இந் நூலினது டிண்டிமம் என்னும்உரையிற் காண்க.

மற்றும், பரசிவன் மண் இலிங்கவடிவமாகத் தோன்றி 'அம்பரநாதர்' என்னுந் திரு நாமத்துடன் விளங்குகின்ற காஞ்சிமா நகரத்தில் சிவப்பிரதிட்டை செய்து அங்கு சிவகாஞ்சி யென்னுமொரு நகரத்தையு முண்டாக்கி, விட்டுணு, வரதராசர் என்னும் பெயரால் விளங்குகின்ற விடத்தில், 'விட்டுணு காஞ்சி' என்று ஒரு நகரத்தையு முண்டாக்கி, மற்றும் சிவ விட்டுணுகளுக்கு அநே அந்தணர்களையும், பக்தர்களையும், அங்கு குடியேற்றி, அவர்களையும் சுத்தாத்துவிதத்தில் ஒருப்பட்டவர்களாகவும் வைதிக சைவாநுட்டானத்தில் அழுந்தியவர்களாகவுஞ் செய்தனர்.

பின்னர், தாமிரபரணி நதிக்கரையிலுள்ளவர் சிலர் வந்து, சங்கரபகவற்பாதரை வணங்கி, "சுவாமின், தேக முதலியவற்றின் பேதங்கள் கண் கூடாகக் காணப்படுதலானும், பரலோகத்திலும் அவ் வத்தேவதைகளின் உபாசனையால் அவ் வவ்வுலகங்களை யடைவார்க ளென்று சாத்திரங்களில் கூறப்படுதலானும், பேதம் உண்மையாகவே காணப்படுகின்றது; என்றனர்," அதற்குச் சங்கரபகவற்

பாதர், அவ் வந்தணர்களை நோக்கி "அந்தணர்காள், பரமான்ம தத்துவத்தை நீவிர் உள்ளவாறு உணராமையின் இவ் வண்ணங் கூறினீர்; என்னை? "எப்போது இவன் எல்லாவடிவமு மாகின்றானோ அப்போது எதனால் எதைக் காண்கின்றான்," என்றற் றொடக்கத்துச் சுருதிகள் தத்துவ ஞானத் தீயால் பாவமெலாந் தகிக்கப்பட்டவனுக்கு முத்தியில் சிறிதுமே பேதமின்மை கூறுகின்றன. அன்றியும், "அதுவே யுண்டாக்கி அதுவே அதில் புகுந்துள்ளது" என்றும் "இச்சீவ வடிவாற் புகுந்து நாம வுருவங்களை வெளிப்படுத்துவேன்" என்றும், "அது பலவுயிர்களாக எண்ணியது," என்றும், மறைமொழிகள் உலகைப் பரமான்ம வடிவாகவே கூறுகின்றன வாதலின், நித்திய, முத்த, சுத்த, அத்துவித, அதிட்டானப் பிரமமே முத்தி விருப் புடையவர்களால் உபாசித்தற் குரியதாம் ஆதலின் தாங்களனைவரும் சீவ பரமான்ம பேதத்தையும், தேவதைகளின், பேதத்தையும் விட்டுச் சுத்தாத்துவிதீய பிரமத்தை யுபாசிப்பீர்களாக என்று, இனிய வுபதேசஞ் செய்யவே, காஞ்சியிலுள்ளாரும், தாமிரபணி தீரத்திலுள்ளாரும் சுத்தாத்துவிதீயத்தையே மேற்கொண்டவர்களாய்ச் சங்கரபகவர்பாதருக்கு மாணாக்கராயினர். (5)

## சங்கரபகவற்பாதர் திருப்பதியை யடைதல்

அதன் பின், சங்கரபகவற்பாதர் திருப்பதித் தலத்திற்குச் சென்று திருவேங்கட நாதரைப் பணிந்து ஆராதித்து அங்கு அவருடைய திரு வடிக் கமலத் தொண்டிற்கு வினயத்துடன் தாமே வந்த தெலுங்கு தேசத்திலுள்ளவர்களுக்கு அநுக்கிரகஞ் செய்துவிட்டு விதர்ப்ப தேசத்தை யடைந்தனர். (தெலுங்கு தேசத்திற்கு வடக்கும் டில்லிக்குத் தெற்குமாயுள்ள தேசம்) (6)

## விதர்ப்பதேச வெற்றி

சங்கரபகவற்பாதர் விதர்ப்ப தேசத்தை யடைந்து அங்குள்ள அரசரால் அன்போடு ஆராதிக்கப் பட்டவராய், அத்தேசத்திய, பைரவ தந்திர நூல்களைத் தழுவின தீய மதியுடையார்களை நன்னெறிக்குத் திருப்பி யருளினர் (சுத்தாத்துவித நெறியில் ஒழுக்கமுடையவராக்கித் தமக்கு அவர்களை மாணாக்கராக்கிக் கொண்டனர் என்பது கருத்து). (7)

## கர்ணாடக தேச வெற்றி

பின்னர், கர்ணாடக தேசத்திற்குப் போதல் வேண்டுமென்னும் விருப்புடைய சங்கரபகவற்பாதரை அவ்விதர்ப்ப தேசத்தரசன் நோக்கிப் பணிந்து, "பகவரே, அநேக காபாலிக மதத்தர்களாற் சூழப்பட்ட அக் கர்ணாடக தேசத்திற்குத் தாங்கள் செல்லல் வேண்டா. (8)

(எதனாலெனின்) அங்குள்ள காபாலிகர்; பகவானுடைய புகழைக் கேட்கவும் பொறுக்காதவர், சுருதிகளில் பொறாமையை யுடையவர்; பெரியாரிடத்திலும் சத்துருத் தன்மையைக் கொண்டாடுபவர்; உலகிற்குத் தீது செய்வதிலோ, உற்சாக முடையவர்; ஆகையால் யான் இவ்வாறு சொல்கின்றேன்" என்றனர். (9)

விதர்ப்ப தேசத்தரசர் இவ்வாறு கூறியவிடத்து சங்கரபகவற்பாதருடன் இருந்த சுதன்வ வேந்தன், எதிக்கரசரை (சங்கரபகவற்பாதரை) நோக்கி, வணங்கி, "எதிகளுக் கிறைவ, நாணேற்றிய வில்லுடன் தமது அன்பனாகிய யான் இருக்கும் போது தங்களுக்குப் பாமரர்களான பிறரால் பயமுமுண்டோ?" என்று கூறினர். (10)

அதைக் கேட்ட பின்னர் நூலாசிரியரிற் சிறந்த சங்கர பகவற்பாதர், அக் காபாலிக கூட்டத்தார்களை ஒருதலையாக வெற்றி கொள்ள விரும்பி அங்கிருந்து புறப்பட்டு கர்ணாடக தேசஞ் சென்றனர்; அவர் அங்கு வந்ததை கேள்வியுற்ற காபாலிக மதத்தின் ஆசிரியரிற் சிறந்த, 'கிருகசன்' என்னும் ஒருவன் சங்கரபகவற்பாதரிடத்திற்கு வந்தான். (11)

சுடு காட்டுச் சாம்பலை யணிந்தவனும், தலையின் கபாலம்,. திரிசூலம், என்பவைகளைக் கையிலேந்தியவனும், தன்னை யொத்த வேடங் கொண்ட அநேக மாணாக்கர்களாற் சூழப்பட்டவனுமாகி வந்த அவன் மிக்க கருவங் கொண்ட மனத்தனாய்க் கீழ் வருமாறு பேசினான் :— (12)

(நீத்தார்காள், நீவிர்,) "திரு நீறணிந்திருக்கின்றீர்களன்றோ ; அது பொருந்தும் ; மற்றும், புனிதமாகிய இந்த மனிதரின் தலைக் கபாலத்தை நீக்கிவிட்டு அசுத்தமாகிய மண்ணோட்டை (மண்கமண்டலத்தை) கையில் வைத்திருக்கின்றீர்களே அது எதன் பொருட்டாம்? கபாலியை உபாசியாததென்னை?" (13)

கள்ளுடன் இரத்தங் கலந்த மனிதரின் தலையோடுகளென்னும் கமல மலர்களால் பைரவ மூர்த்தியை ஆராதிக்காமல் கமலமலரொத்த கண்களுடைய அவருக்குச் சமமாகிய உமையவளால் தழுவிய திரு மேனியைக் களிப்புற்று எவ்வாறு ஆராதிக்கின்றீர்கள்?" (14)

இவ்வாறு அக் காபாலிகன் பைரவ தந்திர நூலின் கருத்தைப் பேசிக்கொண்டிருக்கும் போது, சுதன்வ வேந்தன் அவனை நோக்கி, "நீ தீயோன்," (பழிக்கத்தக்கவன்)

என்று நிந்தித்து அவனை, தன்னுடைய அதிகாரிகளைக் கொண்டு அவ் வான்ம ஞானிக் கழகத்தினின்றும் வெளியேற்றி விட்டனன். (15)

அதற்கு, அம் மூடனாகிய காபாலிகன் மிக்க வொளியுடைய பரசு என்னுமோர் ஆயுதத்தை கையாலெடுத்து உயர்த்திக்காட்டி (வேடதாரிகளே,) "உங்களுடைய தலைகளை இவ்வாயுதத்தால் வெட்டாவிடின் நான் 'கிருகசன்' என்னும் பெயருடையனல்லேன் எனச் சொல்லிக் கொண்டு போய்விட்டான். (16)

அவன் போய் அநுப்பின பெருங் கோப முடைய காபாலிகக் கூட்டங்கள் யாவும், பிரளய காலத்திய கடல் போன்று ஒலித்துக் கொண்டு ஆயுதங்களையுங் கையிற்றாங்கினவர்களாய்க் கணக்கற்றோர்கள் அங்கே வந்து விட்டனர். (17)

அதனால் பயமடைந்த அந்தணர் குழாங்களை மகாரதனாகிய சுதன்வ வேந்தன் கண்டு கோபமடைந்தவனாய் கவசமணிந்து கொண்டு இரதத்தின் மீதிலேறி அம்புறாத் தூணியோடு வில்லையுங் கையிற்றாங்கியவனாய் மழை போன்று பாணங்களைப் பொழிந்து கொண்டு சென்றனன். (18)

இவ்வண்ணமாக சுதன்வ வேந்தன் தான் ஒருவனாகவே அச் சத்துருக்களுடன் போர் செய்து கொண்டிருக்கும் போது, ஆயுதங்களைக் கைகளிலேந்தின ஆயிரக் கணக்கான காபாலிகர்கள் அக் கிருகசன் என்னுந் தலைவனால் ஏவப்பட்டவர்களாய், விரைவாக மேன்மேலும் வந்து விட்டார்கள். (19)

எமனுடைய படைகளைப் போன்று அருகே வந்து விழுகின்ற அக்காபாலிகக் கூட்டங்களைக் கண்ட அந்தணர்கள் கலக்க மடைந்தவர்களாகி சரண்புகத்தக்க சங்கரபகவற்பாதரின் திரு வடியை அடைக்கலமாய்ப் புகுந்தனர். (20)

உடனே சங்கரபகவற்பாதராகிய எதிகளுக் கரசர், கத்தி, ஈட்டி, மற்றுமொரு கூரிய ஈட்டி விசேடம், திரிசூலம் என்னம் ஆயுதங்களால் அந்தணரைக் கொல்ல வேண்டுமென்று பெரிய அட்டகாசஞ் செய்த அக்காபாலிகர்களை, தமது உங்கார வொலியினின்று எழுப்பிய தீயால் கணப்போதில் பொடியாக்கி விட்டனர். (21)

சுதன்வ அரசனும், பொன் முகமுடைய் பாணங்களால் ஆயிரக் கணக்கான வெட்டப்பட்ட சத்துருக்களின் தலைக ளென்னுந் தாமரை மலர்களால் போர்க் களத்தை நன்கு அணிபெறச் செய்துவிட்டுக் களிப்புடன் சங்கரபகவற்பாதரிடத்திற்கு வந்தனன். (22)

பின்னர், கிருகசன் என்னுங் காபாலிகன், தன்னைச் சேர்ந்தவர்கள் வெட்டுண்டு கிடப்பதையும், சிறப்புற்ற அந்தணர்கள் தழும்புபடாதிருப்பதையுங் கண்டு பெரும் வருத்த முற்று மறித்தும் எதிகளுக்கரசராகிய சங்கரபகவற்பாதரிடத்திற்கு வந்தனன். (23)

வந்து, சங்கரபகவற்பாதரை நோக்கி, "தீய மதத்தைச் சேர்ந்தோய், என்னுடைய பிரபாவத்தை இப்போது காண்பிக்கின்றேன் நீ பார்; உடனே இச் செய்கையின் பலனையுமடைகுவை," என்று சொல்லிவிட்டு, கண்ணை மூடி ஒரு கணப்போது பைரவனைத் தியானித்தான். (24)

அக்கால் பைரவர் வருவதை யறிந்த அக் கிருகசன், தியானித்துக் கொண்டே விரைவாக, கபாலத்தில் கள்ளை நிறைத்தனன். நிறைந்த அக் கள்ளில் பாதியைத் தான் குடித்துப் பாதியை மாத்திரம் அக் கபாலத்தில் வைத்து விட்டு மறித்தும் பைரவமூர்த்தியை நினைத்தனன். (25)

அதன் பின், மனிதரின் தலைக்கபாலங்களை மாலையாக அணிந்தவரும், ஒளி மிகுந்த தீச் சுவாலை போன்ற கற்றைச் சடைகளை யுடையவரும், திரிசூலந் தாங்கியவரும் அட்டகாசத்தை யுடைய மகத்தாகிய கபாலிக மூர்த்தி அவன் முன் தோன்றினர். (26)

காபாலிகன் மரணம்.

அப்போது அவன், "தேவ, உன்னுடைய பக்தர்களை வருத்திய இச் சங்கர பகவற் பாதரை பார்வையாலே கொல்வாயாக," என்று அக் காபாலிகனால் ஏவிய பைரவ மூர்த்தி அவனையே நோக்கி (தீயோய்,) நீ "என்னுடைய ஆன்ம வடிவரேயாகிய சங்கரபகவற்பாதருக்கும் பிழை பாட்டைச் செய்விக்கின்றாய்கொலோ?" என்று கோபித்து, அப் பைரவ மூர்த்தி, கிருகசனென்னும் அக் காபாலிகன் தலையையே வெட்டி விட்டனர். (27)

அதன் பின், தேவர்களிற் சிறந்த அப் பைரவ மூர்த்தி, துறவி மணியாகிய சங்கர பகவற் பாதரால் துதிக்கப்பட்டவராய் மறைந் தருளினர். இவ்வாறு தீயர்களான காபலிகர்கள் ஒழிந்த விடத்து அந்தணர் குழாங்கள் களிப்புற்றவர்களாய் சங்கரபகவற்பாதரை நிறை மனத்தர்களாய் ஆராதித்தார்கள், (28)

(ஈண்டுச் சங்கரபகவற் பாதர் அப் பைரவ மூர்த்தியை வணங்கி, "பகவ, வேதம், புராணம், முதலான சாத்திரங்களில் கட்டளை யிட்டுள்ள கருமங்களை யநுட்டிப்பதால் பாவமெலா மொழிந்து மனந் தூய்மையாய் ஆன்மாவின் சாட்சாத்காரமுண்டாகின்றது ஆகையால், அக் கருமங்கள் ஒருதலையாக ஒழுகற்பாலன வென்பது எனது கருத்து; உமது பக்தர்களோ, தீய தொழில்களையே வளர்க்கின்றார்கள் என, எனது மாணாக்கர்கள் அவர்களை மறுக்கின்றார்கள்; "தேவ, இதில் உண்மையையும், பொய்யையும் தேவ, நீரே பகுத்தருள்வீராக," என்று பிரார்த்திக்கும்போது, பைரவ மூர்த்தி அவரை நோக்கி, "சங்கர, நீ, நேரே சங்கரவடிவனாகவே யிருக்கின்றாய்; உன்னாற் செய்யப்படுங் கருமத்தையே யானுஞ் செய்கின்றேன், நீ உலகை ஈடேற்றுவதற்கே வந்தவனாதலின் காபாலிகர்களை நன்கு சீர்திருத்துவாயாக," என்று திரு வாய் மலர்ந்தருளி மறைந்தனர். அதன் பின், பத்மபாதர் முதலியோர்கள் அக் காபாலிகர்களுக்கு இனிய வுபதேசஞ் செய்து அவர்களை அத்துவித மார்க்கத்திற்குக் கொண்டு வந்தனர்; வந்த அவர்கள் தங்களுடைய பைரவ மூர்த்தி திரு வாய் மலர்ந்தருளியதை யுணர்ந்து அனைவரும் சங்கரபகவற்பாதருக்கு மாணாக்கராயினர் என்பது பண்டைய கதையின் கருத்து இது உரையிற் கண்டது).

மற்றும், அதைக் கண்ட சாருவாகர்கள் (நாத்திகர்) சங்கரபகவற்பாதரிடம் வந்து, "உலகர் மூடர்; என்னை? பரலோகம் ஒன்று உண்டென்றும், உயிர் துறந்தபின் சீவன் பரலோகத்தை யடைந்து இன்பதுன்பங்களை நுகர்கின்றான் என்றும் கூறுகின்றாராதலின், இவ் வார்த்தையோ, அறிவிலாத ஒரு மூடன் கட்டிவிட்டதாம்; "நீ,

அறிவுடைய துறவியானதால் உனக்கேனும் சிறிது விவேக மிருக்குமென்றெண்ணி இச்சபைக்கண் யாம் இவைப் பேசுகின்றோம்; இன்றெனிலோ பேசமாட்டோம், ”என்று, அவர்கள் கூறத் தொடங்கினர். ‘ துறவியே, நீ, முதலில் எங்களுடைய மதத்தைக் கேட்பாயாக. சீவன் இலயமாவன் என்பதும், முத்தியடை கின்றான் என்பதும் இல்லை; ஆறுகள் கடலில் சேருகின்றன போன்றும், வருகின்றன போன்றும், பிறப்புகளும், முத்திகளுமாம்; கண்ணுக்குப் புலப்படாத சுவர்க்க முண்டென்று கூறுதல் பொய்யாம்; தேகேந்திரியங்கள் கெட்டொழிந்த பின்னர் சீவன் பரலோகத்தை எவ்வாறடைவன்? சீவனுக்கு உருவமொன்றுமின்மையால் அவன் போதல் வருதல் என்பது குடத்தின் வெளிபோல் எங்கும் எப்போதும் இல்லை.

அதைக் கேட்ட சங்கரபகவற்பாதர், அந் நாத்திகர்களை நோக்கி, சாருவாகர்களே, உங்களுடைய மதம் வேதத்திற்குப் புறம்பானதா மாதலின், வேத சம்மதமாகிய என்னுடைய மதத்தைச் சொல்கின்றேன். கேட்பீர்களாக :—

“தேகம் முதலானவற்றிலும் வேறாக பரமான்மா என்பதொன்றுண்டு; அது அஞ்ஞான வசத்தால் பந்தத்தை யடைகின்றது; ஞானத்தால் முத்தியடைகின்றது; வேதமும், “ஞானத்தாற் கருமங்கள் யாவுமொழிந்து முத்தியடைகின்றான்,” என்று கூறுகின்றது; வேதவாக்கியங்கள் பொய்களாமென்னிலோ, உங்களுடைய வார்த்தைகள் தான் எவ்வாறு பிரமாணங்களாம்? மற்றும் உங்களுடைய வாக்கியங்கள் மிகத் தாழ்ந்தவைகளேயாம். வேள்வி முதலானவைகளைக் கூறும் வேதவாக்கியங்களே தூல வுடம்

பினும் வேறாக வொரு சூட்சும உடம்பு உண்டென்பதில் குறிகளாகின்றன; சூட்சும தேகத்துடனே சீவன் பரலோகஞ் செல்கின்றான்; அங்குப் பிசாசாகுந் தன்மை நீங்கவும், புண்ணிய வுலகத்தை யடையவும் பிதிர்க்கடன் முதலான கருமங்கள் ஒருதலையாகச் செய்ய வேண்டியனவேயாம்; இதுவே வேத, புராண, சாத்திரங்களின் கருத்தாம். ஆகையால், மூடர்களே நீவிர் வாய்ப் பேச்சற்றவராய் வாளா இருப்பீர்களாக,'' என்றனர்; அதைக் கேட்ட அந் நாத்திகர்கள் சங்கரபகவற்பாதரின் திருவடியிற் சரணடைந்து இவருடைய புத்தகச் சுமையைச் சுமக்கத் தலைப்பட்டனர்.

அதன் பின், சௌகதர்கள் (நாத்திகவி சேடர்) சங்கர பகவற்பாதரைப் பணிந்து, "சுவாமின், சில மூடர் இவ் வுலகில் இடையறாது நீராடல் முதலான கருமங்களைச் செய்து கொண்டு, பௌதிகமாகிய இவ் வுடம்பு நிருமலமாகின்றதென்றும், தேகம் நீங்கியவிடத்து மறித்துமோர் தேகம் உண்டாகின்றதென்றுஞ் சொல்கின்றார்களன்றோ? இவ் வுடம்பு எவ்விதமான கருமங்களாலேனும் சுத்தப் படுவதுமுண்டோ? உடம்பு நீங்கிய பின்னர் மறித்தும் அது உண்டாகின்றதென்பதைக் கண்டவர் யார்? ஆகையால், இவ் வுடம்பு இருக்கும்போதே, நிறையவுண்டு பெரிதுங் களித்திருப்பதுவே முத்தியாம்; தனது கையிற் பொருளின்றேனும், கடன் வாங்கியேனும் உடம்பைப் பாதுகாத்தல் வேண்டும்; உடம்பு நீங்கிய பின்னர் கடன் வந்து துன்புறுத்துமென்னும் பயமே வேண்டியதில்லை; "கடன் வாங்கி நெய்யுண்க," என நூற்பிரமாண மிருத்தலின், நீராடல் முதலான கருமங்கள் வேண்டா; எதையு

முண்டு எவ்வாறேனு மிருக்கலாம்; வேள்வி முதலியன உயிர்களின் கொலையாமாதலின் பெரும் பாவமாம்,'' என்றனர்.

அவ் வார்த்தைகளைக் கேட்ட சங்கரபகவற்பாதர், அவர்களை நோக்கி, மூடர்காள், வேதத்தால் கட்டளையிடப் பட்ட கருமம் பாவமாதலுமுண்டோ? "வேள்வியில் இறந்துபோன கடாக்கள் சுவர்க்கத்தை யடைகின்றன,'' என்று வேதங் கூறுகின்றது; வேதம் விதித்ததைச் செய் பவர் முத்தி யடைகின்றார்; வேதம் விதிக்காததைச் செய்ப வர் நரகத்தை யடைகின்றார். ஆகையால், வேதத்தில் விதித்தவைகள் செயற்பாலனவேயாம்; விதிக்காதவைகள் தள்ளற் பாலனவேயாம்; இவ் வார்த்தை மநுவுஞ் சொல்லி யிருக்கின்றார் என்று பலவகையான யுத்திப்பிரமணங் களோடு சொல்ல, அதைக் கேட்ட சௌகதர்கள் சங்கரபக வற்பாதரையே சரணடைந்து பத்மபாதர் முதலானோர்க ளின் பாதுகைகளைச் சுமப்பவராயினர்.

அதன்பின், சைன மதத் துறவிகள் வந்து, "காலமே எல்லாவற்றிற்குங் காரணம்; காலத்தால் அனைத்துமுண் டாதலின்,'' என்றனர். அதைக் கேட்ட சங்கரபகவற்பாதர் "அற்றேல் நீவிர் காலத்தை யுணர்ந்தவராதலின் எம்மிடத் திலேயே இருந்து விடுவீர்களாக; உங்களிடத்தில் யாம் காலங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்கின்றோம்'' என்ற னர்; அதைக் கேட்ட அவர்கள் அதற்கிசைந்து சங்கரபக வற்பாதரிடத்திலேயே தங்கிவிட்டனர்.

பின்னர், சைனமதத்தார்கள் வந்து, "சினதேவன் ஒரு வனே கடவுளாவன்; அவனை வணங்கில் சீவன் நிருமல

மாகின்றான்; உடம்பு அழுக்குடையதாமாதலின், நீராடல் முதலியன வேண்டா'' என்றனர். அதைக் கேட்ட சங்கர பகவற்பாதர், மூடர்காள், "சீவனுக்கு, தூலம், சூட்சுமம், காரணம், என மூன்று தேகங்கள் உண்டு; அச் சீவன் அஞ் ஞானத்தால் பந்தப்படுகின்றான்; அவனை விவேகத்தால் தேக முதலானவைகளினின்றும் வேறாக்கி பரமான்மாவுடன் அபேதமாயறியில் முத்தியாம்,'' என்றனர். அதைக் கேட்ட அச் சைனர்கள் சங்கரபகவற்பாதரைச் சரணடைய அவர் களை அவருடைய மாணாக்கர், நெற் குத்தல் முதலான தொழில்களைச் செய்வதற்குத் தம்மிடத்தில் வைத்துக் கொண்டனர்.

பின், பௌத்தர்கள் வந்து, "சீவப் பிரமங்களுக்குள்ள அபேதமென்பது முயற் கோடு போன்று பொய்யாம்; மற்றும் எல்லாம் பரமான்மாவே என்பது பொருந்தாது; தேகம் நீங்குதலே முத்தியாம், என்று பலவகையாக அவர் கள் தங்களுடைய மதத்தை எடுத்துக் கூற, அதைக் கேட்டு, சங்கரபகவற்பாதர், சுருதி, யுத்திகளால் அத்து வித மதத்தை நிலை நாட்டி, அதுவே முத்தியைக் கொடுக்கும் என்றும் உறுதிப் படுத்தினர்; அதைக் கேட்டுப் பௌத்தர் கள் சங்கரபகவற்பாதரைச் சரணடைந்து அவருடைய புகழைப் பாடுந் தொழிலையே மேற்கொண்டனர்.

## சௌராட்டிரதேச வெற்றி.

சங்கரபகவற்பாதர், அக் கர்ணாடக தேசத்தினின்று சௌராட்டிர தேசஞ் சென்று அநுமல்லபுரம் என்னும் ஒரு ஊரில் இருபத்தொரு நாள் தங்கி யிருந்தனர்; அங்கு, சிவனை, மல்லாரி என்னும் பெயரிட்டு அவருக்கு நாயே வாகனமாமென்று கொண்டு, அதில், "நாய் வடிவமாகிய

வருக்கும் நாயினுடைய இறைவருக்கும் வணக்கம்,'' என்னும் மறை மொழியைத் தழுவி நாய் வேடம், நாய்ச்சின்ன முதலானவைகளைப் பூண்டு, நாடோறும் மாதர்களுடன் நடித்தலையே சிவத் தொண்டெனக் கொண்ட மல்லாரி மதத்தர்களையும், சுத்தாத்துவிதத்தில் வழிபாடுடையவராய்ச் செய்து அவர்களுக்குப் பிராயசித்தமுஞ் செய்துவைத்து, சங்கரபகவற்பாதர் தமக்கு மாணுக்க ராக்கிக் கொண்டனர்.

பின், அங்கிருந்து குடதிசையை நாடிச் சென்று மருந்தம் என்னுமோர் ஊரை யடைந்து, சங்கரபகவற்பாதர் நிருவிகற்ப நிட்டையை யடைந்திருக்குங்கால், விஷ்வக்சேனர் (விட்டுணவின்) பக்தர்கள் வந்து, "யாங்கள் விட்டுணு மூர்த்தியை வழிபட்டு வருகின்றோம்; எங்களுக்கு எம பயமென்பதில்லை; ஆகையால், நாங்கள் வைகுண்டத்தை யடைவோம் என்றனர். அதைக் கேட்ட சங்கர பகவற்பாதர், அன்பர்காள், அவ் வைகுண்டத்தில் சிவ பக்தர்களுமிருக்கின்றார்கள் ஆகையால், கேவலம் விட்டுணுவையே உபா சிக்காமல் சிவனையும் விட்டுணுவுடன் அபேதமாய் உபாசிப்பீர்களாக; அவ் வபேத ஞானத்தாலேயே முத்தி கிடைக்கும் என்று, அவர்களையும் அத்துவிதத்தில் திருப்பித் தமக்கு மாணுக்கராக்கிக் கொண்டனர்.

பின்னர், விடய இன்பத்தையே முத்தி யென்று கொண்ட மன்மத வுபாசகரையும், அவர், "மன்மதன் விட்டுணுவின் புதல்வன் அவன் முத்தி கொடுப்பவனல்லன்; விடயவின்பமோ, நிலைமை யற்றது; துன்பமிக் குடையது; ஆதலின் பரமான் மாவைத் தியானித்து முத்தியை யடைவீர்களாக என, உபதேசித்து தமது வசப் படுத்திக் கொண்டனர்.

பின்னர், குபேரனை உபாசிப்பவர்கள், இந்திரனை உபாசிப்பவர்கள், எமனை உபாசிப்பவர்கள் முதலான பலரையும், அவர், பொருள் துன்பமனைத்திற்குங் காரணமாமென்றும், பொருளைத் துறந்தாலன்றி முத்தி கை கூடாதென்றும், எமன் என்பவனே, பிரம ஞானத்தை யடைந்தவனுவன்; என உபநிடதத்தில் எமன், நாசி கேது என்பவர்களின் சரிதங் காணப்படலின், என்றும், இந்திரன் என்பவன் பரமான்மாவே யன்றி, பிறர் மனையை விழைந்து ஆயிரங் கண்களைப் பெற்றுக் கொண்ட இந்திரனலன் என்றும் பலவகைப் பிரமாணங்களாலும் யுத்திகளாலும் அவர் கொள்கையை மறுத்துசுத்தாத்துவித மார்க்கத்தில் ஒருப் பட்டவர்களாகச் செய்து, தமக்கு மணுக்கராக்கிக் கொண்டனர்.

## பிரயாகை வெற்றி

சங்கரபகவற்பாதர் அங்கிருந்து பிரயாகையை யடைந்து தங்கினர்; அங்குள்ள வருணேபாசகர்கள், வாயுவை யுபாசிப்பவர்கள், பூமியை யுபாசிப்பவர்கள், தீர்த்தத்தை யுபாசிப்பவர்கள், முதலான பல மதத்தர்களை, சங்கரபகவற்பாதர் அவ் வம்மதங்களை மறுத்து, அத்துவிதத்தை அவர்களுக்கு உபதேசித்து தமது வழியிற்றிருப்பித் தமக்கு மாணுக்க ராக்கிக் கொண்டனர்.

பின், சூன்யவாதிகள், கானல் நீராடி, ககன மலர் சூடி, முயற் கோட்டாலாகிய வில் ஏந்திக் கொண்டு மலடி மகன் செல்கின்ருன்; அவனையும் ஆகாயத்தையும், யாங்கள் தெய்வங்களாகத் தொழுகின்ரேம், என்றனர், அதைக் கேட்டுச் சங்கரபகவற்பாதர், சூன்ய மென்பது ஒரு பொருளன்ருமாதலின், அதை யெரிதிக்கிவிட்டு ஆகாயத்தைப்

போன்ற பரமான்மாவையே நீங்கள் உபாசிப்பீர்களாக என்று அவர்களுக்கு உபதேசித்து, அவர்களையும் தமக்கு மாணுக்கராக்கிக் கொண்டனர்.

பின், வராகத்தை உபாசிப்பவர்கள், மநுலோகத்தை உபாசிப்பவர்கள், பிரமன் முதலானோர்களை உபாசிப்ப வர்கள், சாங்கிய மதத்தார்கள், யோக மதத்தார்கள், அட யோகிகள், தீர சைவர்கள் என்பவர் முதலானோர்களையும் வெற்றி கொண்டு; அவர்களை அத்துவித மார்க்கத்தில் நிலைப்பவராகச் செய்து சங்கரபகவற்பாதர் தமக்கு மாணுக்க ராக்கிக் கொண்டனர்.

மற்றும், அங்குள்ள, கரும காண்டிகள், சந்திரனை யுபாசிப்பவர்கள், நவக்கிரகத்தை யுபாசிப்பவர்கள், பிதிர்க் களை யுபாசிப்பவர்கள், சேடனை யுபாசிப்பவர்கள், கருடனை யுபாசிப்பவர்கள், சித்தர்களை யுபாசிப்பவர்கள், கந்தருவ வித்தியாதரர்களை யுபாசிப்பவர்கள், வேதாளத்தைத் தொழுபவர்கள், பூதப் பிசாசுகளைப் போற்றுபவர்கள், முதலானவர்களையும் வைதிக மார்க்கத்தில் திருப்பி அவர்களை அத்துவித மதத்தில் உறுதி யுடையவர்களாகச் செய்து சங்கரபகவற்பாதர், தமக்கு மாணுக்கராக்கிக் கொண் டனர்.

மற்றும், சங்கரபகவற்பாதர் அநேக விதமான மதத் தார்களை மறுத்துத் தமது மதத்திற் சேர்த்துக் கொண்டதின் விரிவையும் பிற மதங்களின் கொள்கைகளையும் அறிவுடை யார் இந் நூலின், டிண்டிமம் என்னும் உரையிற் காண்க. இவ்வாறு அவைகளைச் சுருக்கிக் காட்டப்பட்டது. (28)

## நீலகண்ட சிவாசாரியரை வெற்றி கொள்ளல்.

பின்னர், எதிகளுக்கு அரசராகிய சங்கரபகவற்பாதர், அவ்வத்தேசங்களிலுள்ள பாகண்டர்களான அந்தணர்களை வைதிக நெறியில் திரும்புமாறு செய்து விட்டு, வாதமிடும் பிரதி வாதிகளின் ஆணவத்தை யொழிக்கவேண்டுமென்று, நுரைகளென்னும் கைகளால் பேரியின் ஒலியைப் பழிக்கும் பேரொலியால் இரகசியப் பொருளை வெளிப்படுத்திக் கொண்டு பிரதிவாதி போன்று விளங்குகின்ற மேற்றிசையிலுள்ள பெருங் கடலுக்கருகிற் சென்றனர். (29, 30)

சென்று, சங்கரபகவற்பாதர், அக் கடல், மறித்தும் மறித்தும், பலவனேகச் சுழல்களை யுடையதாலும், சட (சல) வடிவமானதாலும், நுண்ணறி யுடையோர்களால் (தேவர்களால்) முன்னரே கடையப்பட்டபடியாலும், அக் கடலை உபேட்சித்துவிட்டு பொறுமை யுடையாரைப் போன்று பெருந் தன்மையுடைய மனத்தராய் கோகர்ணமென்னுந் தலத்திற்குப் பிரயாணப் பட்டனர். (31)

அங்குச் சென்று அவர் ஆறுகளுக்குத் தலைமையாகிய கடலில் நீராடி இமைய மலையின் புதல்வியின் கொழுநரை (மகாபலேசுரரை) யடைந்து, புசங்கப் பிரயாதமென்னும் வட மொழி யாப்புக்களால் அழகுடையனவும், வியப்பித்தற்குரிய பொருள்களால் ஆச்சரியப் படத்தக்கனவுமான அரிய ஏழு துதிகளை யியற்றித் துதித்தனர். (32)

பின், அங்கு, தம்மை வந்து பணிந்த மாணுக்கர்களுக்கு உபநிடதக் கல்வியைப் போதித்துக் கொண்டிருந்த அச் சங்கரபகவற்பாதரை, அரதத்த சிவாசாரியர் என்பவ

ரொருவர் வந்து பார்த்துவிட்டுப் அவர் போய். தமது ஆசிரிய ராகிய நீலகண்ட சிவாசாரியருக்குக் கீழ் வருமாறு கூறினர் :— (33)

"ஆசிரிய, சங்கரர் என்னும் பெயர் பூண்ட துறந்தா ரொருவர், பூச்சிய பாதராகிய தங்களை வெற்றி கொள்ளல் வேண்டுமென்னும் விருப்பால், பட்டர், மண்டனர் முத லானோர்களையும் தமது வசம் பண்ணிக் கொண்டு அவர்க ளுடனே இங்கு வந்துள்ளார். அவரோ, சிவாலயத்திற் றங்கி யிருக்கின்றனர். (34)

என்று அரதத்தர் கூறியதைக் கேட்டு, அநேக சாத் திரங்களென்னும் இரத்தின மாலையை இனிது தொடுத் தவரும், (இயற்றியவரும்) பிரம சூத்திரத்திற்குச் சிவ பரமாக பாடியமொன்று செய்தவருமாகிய, சைவரிற் சிறந்த அந் நீலகண்ட சிவாசாரியர் அதைக் கேட்டுப் புன்னகை கொண்டு கீழ் வருமாறு கூறினர்:— (35)

இச் சங்கரர், கடலை வற்றச் செய்வரெனினும், அல் லது, வானிலுள்ள இரவியை கீழ் விழுமாறு செய்வ ரெனினும், அல்லது ஆகாயத்தை ஆடை போற் சுருட்டுவ ரெனினும், இவர் என்னை மாத்திரம் வெற்றி கொள்ள வல் லாராகார். (36)

பிறரின் கொள்கைகளென்னும் அஞ்ஞானவிருளை இரவி போன்ற எனது தருக்கங்களாற் பலவாறுக அவ ருடைய மதம் கெட்டொழிவதை இப்போதே அவர், கண்ணினாற் காண்பர். என, மிக்க கோபங் கொண்டவ ராய் அவ்விடத்திற்கு நீலகண்டர் புறப்பட்டனர். (37)

புறப்பட்டு உடம்பு முழுதும் வெள்ளிய நீறணிந்தவர்

களும், உருத்திராக்க மணி மாலைகளால் விளங்குகின்றவர்களும், சைவ சாத்திரங்களைத் தடையறக் கற்றவர்களுமான மாணுக்கர் குழாங்களாற் சூழப்பட்டவராய் வருகின்ற அந் நீலகண்ட சிவாசாரியரை சங்கரபகவற்பாத முனிவர் கண்டனர். (38)

பின், கவி வல்லுநராகிய நீலகண்டர், சங்கரபவற்பாத மகரிஷியின் பாங்கர் வந்து சுகமுனிவரின் தந்தையார் செய்த சாரீரக (சீவப் பிரமங்களின் அபேதத்தை உறுதிப் படுத்தும்) உத்தர மீமாஞ்சை யென்னும் பிரம சூத்திரத்திற்குக் கபிலாசிரியர் (கபில முனிவர்) நேராய்த் தமது சாங்கிய மதக் கொள்கையை நிலைநாட்டல் போன்று அவர் அவருடைய சைவ மதக் கொள்கையையே நிலை நாட்டினர். (39)

அக்கால், கூரிய மதியுடையார்களுக்குத் தலைவராகிய சுரேசுராசிரியர், தமது ஆசிரியராகிய சங்கரபகவற்பாதரை நோக்கி, "சுவாமின், முதலில் ஒரு கணப்போது சைவமதக் கொள்கைளின் வலிய யுத்திகளை மறுக்கத் தக்க மிக வலிய எனது யுக்திகளைத் தாங்கள் தமது திருக் கண்ணுல் நோக்குவீராக என்று, தம்முடைய ஆசிரியரைத் தடுத்துவிட்டு நீலகண்டருடன் சுரேசுரர் விவாதமிடத் தொடங்கினர். (40)

அதைக் கண்ட நீலகண்டசிவாசாரியர், சுரே சுரரை நோக்கி, 'நன்மதியோய், உன்னுடைய வல்லுநத் தன்மையை யானறிவேன், என்னுடன் நேரே இச் சங்கர முனிவரே மறுமொழி கூறுவாராக" என்று, சுரேசுரரைத் தடுத்துவிட்டு துறவிகளிற் சிம்மமாகிய சங்கரபகவர்பாதருக்கு எதிர் முகமாய் தாமிருந்து கொண்டனர். (41)

இருந்தபோது, பிறருடைய மதங்களென்னும் முத்து வரிசைகளுக்கு அன்னங்களான வாக்கியங்களால் அவருடைய சைவமதத்தை சங்கரபகவற்பாதர் மறுத்து விட்டனர். பின், நீலகண்டர் தம்முடைய கொள்கையைப் பாது காப்பாற்றுவதை விட்டு அத்துவித மதத்தை மறுக்க விரும்பியவராய்க் கீழ் வருமாறு கூறினர். (42)

நீலகண்டர்:—" துறவறத்தோய், மும்முறைகளின் முடிகளிலுள்ள தத்துவமசி, (அது நீயாயிருக்கின்றாய்) என்பது முதலான வாக்கியங்களால் உமக்குப் பிரியமாகிய அபேதப் பொருள் கூறுதல் பொருந்தாது; என்னை அந்தோ; அவை விரோத தருமங்களை யுடையன வாதலின், ஒளி, இருள், என்னு மிவ் விரண்டிற்கும் அபேதமும் பொருந்துங் கொல்லோ (ஈண்டு, சீவே சுரகளின் அபேதம் பொருந்தாது; விரோதமான தருமங்களை யுடையன வாதலின்; இருளொளிகளைப் போன்று, என, அநுமான மாதல் காண்க. எனவே, வேதாந்தங்கள் உமக்குப் பிரிய முடைய அபேதப் பொருளைக் கூறுவனவன்ரும் என்பது கருத்து). (43)

அவதாரிகை

[இரவியும், அதன் பிரதி விம்பங்களும், பிறழ்தல், அசைதல், அசையாமை, என்பன முதலான விரோத தருமங்களை யுடையனவாயினும், அவைகள் அபேதமாதல் போன்று, விரோத தருமங்களையுடைய சீவப் பிரமங்களுக்கும் அபேதங் கூடு மென்று, ஆசங்கித்து அதை மறுக்கின்ருர்.]

இரவியும் அதன் சாயையும் அபேதமாகுவன போன்று சீவப் பிரமங்களுக்கு அபேதங் கூடு மென்பதும்

உண்மையில் பொருந்தமுடைய வார்த்தை யன்று; என்னை? வியோமசிவர் என்பவர் முதலான சைவாசிரியர்கள் கூறியுள்ள யுக்திகளால் கண்டனம் செய்யப் பட்ட சூரிய நிழல் பொய்யாம் என அறியப்படலின், (இவ்வாறாய வழி பாதகமாகும் பிரதி பிம்பத்திற்கு அபேதயாகும் தன்மையே யில்லாமையின் என்பது உட்கிடை). (44)

அவதாரிகை

[அஃதல்லாமலும் உம்முடைய கொள்கை பற்றியவர்களுமிருக்கின்றனர் என்று கூறுகின்றார்]

பிம்பமாகிய முகத்தினின்றும், தருப்பணத்தில் பிரதி பிம்பித்துள்ள முகம், அருகிலுள்ளவர்களால் வேறொன்று அறியப்படுவதாலும், பிரதி பிம்பித்த முகம் பொய்யாம் என, உங்கள் மதத்தைத் தழுவியவரும் கூறுகின்றார் ஆகையாலும் என்க. (45)

அவதாரிகை

[சீவன், ஈசன், என்பவரிடத்திலுள்ள, சிற்றறிவுத் தன்மை, முழுது முணர்தற்றன்மை என்னும் விரோத தருமங்கள், மாயையின் காரியங்களாமாதலின் பாதகப் படும் ஆதலின், சீவன், ஈசன், என்பவர்கள் சைதன்ய மாத்திர வடிவர்கள் என்பதில் ஒன்றும் விசேடமின்மையால், அவர்களின் அபேதம் உண்மையேயாம் என்று சங்கித்து, அதையும் விலக்க உறுதி மொழி கூறுகின்றார்]

சீவன், ஈசன், என்பவர்களுக்குள்ள அற்பக்ஞத் தன்மை, சருவக்ஞத் தன்மைகள், பாதகமடைதலின், அவ்

விருவருக்கும், சைதன்ய மாத்திர வடிவமாந் தன்மை பொதுவாதலின் அபேதமே உண்மை யென்பதுங் கூடாது. (46)

அதிற் காரணங் கூறுகின்றார்

நூற்றுக் கணக்கான பிரமாணங்களாற் பெறப்பட்ட பேத தருமங்களுக்கு அழிவுண்டென்றல் அமையாது. (அவை கேடுறாமையின் மாயையின் காரிய மென்பது மின்றாம்) அவ்வாறின்றெனிலோ? பேதம் என்பது தத்தம் பண்ணி நீர் விட்டதேயாகும். (கைவிட்டதேயாம்) என்னை? மாறுபட்ட குதிரைத் தன்மை, பசுத்தன்மை, என்பவைகளைப் பாதிப்பதாலும், குதிரை, பசு, என்பவற் றின் உருவமும் அபேதமாம் என்பதும் வரும் என்னும், யுத்தியாலும், என்க. (47)

பிரத்தியட்ச முதலான பிரமாணங்களாற் பெறப்பட் டதை (விரோததருமங்களை) கெடுக்க விருப்பின்றெனிலோ? யான் ஈசுரன் அல்லாதவனு யிருக்கின்றேன் (நான் சீவனு யிருக்கின்றேன்) என்னும் பிரத்தியட்சத்தாற் பெறப் பட்ட சீவேசுரர்களின் பேதத்தையுங் கெடுக்க விருப்ப மெழாது. (48)

இவ்வாறு கவிஞராகிய நீலகண்ட சிவா சாரியர் நூற் றுக்கணக்கான யுத்திகளால் மறை முடி வாக்கியங்களில் விளங்கும் அத்துவிதத்தை, பரந்த தாமரை வனத்தை யானைக்குட்டி கலக்குவது போன்று கலக்கிவிட் டானர். (49)

சங்கரபகவற்பாதர் :—(நீலகண்டரால் இவ்வாறு பல வித தோடங்கள் (அத்துவிதத்தில்) கூறப்பட்ட போது,

அவரை நோக்கி) அறிஞரே, நீர் கூறியது உமது பிரியப் படியே இருக்க. தத்துவமசி என்னும் ஆன்றோரொழுக்கத் தால் வந்த பராபரத்தின் அகண்ட ஏக ரசத்தினுடைய, அல்லது, "காரியத்தை உபாதியாக வுடையவன் ஈசன்," எனச் சுருதியிற் கூறப்பட்டிருத்தலின் காரணத்திற்கு அபின்னமாகிய காரியத்தினுடைய, இரகசியத்தைக் கேட் பீராக:— (50)

உண்மையால் அவனே இத் தேவதத்தன் என்னும் வாக்கியம் போல, தத்துவமசி மகாவாக்கியத்திலுள்ள விரோத வுணர்ச்சி இலக்கியத்தில் உள்ளதன்று; அவ் வாறே விட்டுவிடாத இலக்கணையால் விரோதக் கூற்றைத் தள்ளுவதால் விரோதம் நீக்கிய விடத்து சைதன்ய மாத் திரத்தைக் கொண்டு தத்துவமசி என்னும் பதங்கள் அபேதத்தை வெளிப்படையாய்க் கூறுகின்றன, அதில் விரோதமென்பது யாண்டையது? (51)

சைவாசிரியரே, நீர், ஈண்டுக் கூறும் விஷயத்தில் அதிவியாப்தி யென்னுந் தோடமாம் (இலக்யமில்லாத தின் கண்ணுஞ் செல்லல்) எனக் கூறினீரன்றோ? அஃ தமையாது; என்னை? பசு, குதிரை, என்னுமிரண்டினுக் கும் அபேதம் போதிக்கும் பிரமாணமொன்றுமின்மை யின், அவ் விரண்டற்கும் விட்டு விடாத இலக்கணையால் அபேதாநுபவம் எந்தப் பிரமாணத்தாலுண்டாகும்? (அபே தத்தைப் போதிக்கும் பிரமாணம் இல்லாத விடத்து குற் றங் காட்டில் அது கொள்ளற்பாலதன்று என்பது உட் கிடை). (52)

நீலகண்டர்:—சிற்றறிவை யுடைய சீவ வடிவினும், முற்றறிவை யுடைய ஈச வடிவினும் வேறாய் அவ் விரு

வருக்கும் இயல்பாகிய வடிவம் ஒன்று உண்மையாக இல்லை; அத் தன்மய வடிவமொன்று உண்டு ஆகையால் அதில் இலக்கணை கொள்ளற்பாலதென்பது யாண்டையதாம்? (53)

சங்கரபகவற்பாதர்:—நீர் இவ்வாறு கூறிலோ? அது பொருந்தாது; என்னை? சிற்றறிவு முதலான மாறுபட்ட தருமங்களை யுடைய சீவன் முதலானவர்களின் வடிவம் பொய்யானதாம்; காணப்படுதலின், கிளிஞ்சில் வெள்ளி போன்று என்னும் யுத்தியால், காணப்பட்ட சீவன், ஈசன், என்பவர்களின் வடிவங்கள் பொய்யாமெனப் பெறப் படலின், அவ் வடிவங்களால் அதிட்டிக்கப்பட்ட உண்மைப் பொருள் எக்காலும் நியமமாய்க் கொள்ளற்பாலதாமாதலின் என்க. (நிலைக்களமற்ற கற்பிதம் யாண்டுங் காணப் படாமையின் என்பது கருத்து). (54)

உம்மால் உடன்படத் தக்கது
எமக்கு உடன் பாடன்றெனில் கூறல்

உம்மாலும் நான் என்பதற்கிடமாகக் காணப்படு கின்ற உடம்பு முதலானவைகள் சடமென உடன் படற் பாலதேயாம்; ஆதலின் எஞ்சிய வடிவம் ஒன்று உள்ள தென்றே கொள்ளல்வேண்டும். கொள்ளுங்கால், சீவனுக்கு எவ் வடிவங் கொள்ளப்படுகின்றதோ, அதுவே அவனுடைய உண்மை வடிவமாம். (இதனால் நிருபாதிக பிரத்தியக் சைதன்யமாகிய சீவ வடிவம் பெறப்பட்டமை காண்க. இதுவே முன்னர் காணப்படும் விசிட்ட வடிவினும் வேறு வடிவம் இன்றென்றதற்கு மறுமொழியாம்). (55)

ஈசுரனுடைய வடிவும் இவ்வாறேயாம் என்றல்

இவ் வண்ணமே மித்தையாகின்ற இவ்வுலகைப் பற்றிய ஆசங்கைக்கு, இவ் வுலகம்பொய், சத்தாகவேனும் அசத்தாகவேனும் எடுத்துக்கூற முடியாமையால், கயிற்றரவு போன்று, என்னும் யுத்தியால் இவ்வுலகம் பொய் யெனப் பெறப்படலால் இக் கற்பித வுலகிற்கு அதிட்டான மாகிய ஈசுரனுடைய உண்மை வடிவமொன்று உடன் படற்பாலதேயாம். (56)

ஆதலின், சுருதியாலுணரப்பட்ட உபாதிகளற்ற சைதன்யமான சீவ ஈசுர வடிவங்களில் சிற்றறிவுத்தன்மை, முற்றறிவுத் தன்மைகள் இல்லை. உபாதி நீங்கிய படிகத்தில் சிவந்த பூவிற்றோற்றுஞ் சிவப்புநிறம் இன்றியது போலென்க. (57)

அஃதொழிந்தும், பேதவுணர்ச்சி உண்மையாகவே இருக்கினே, சுருதி பேதத்தைக்காண்பவனுக்குப் பயத்தைக் கூறுது; மற்றும், பேதநோக்கு மயக்க உணர்ச்சியாமாதலின் மாறுபாட்டைக் காண்பவனுக்குப் பொல்லாங்கும் உண்டாகுமென்க (ஈண்டு "அவன் மிருத்துவினின்று மிருத்துவை யடைகின்றான்" "எவன் ஈண்டு அநேகம்போற் காண்கின்றான்" "எவன் அப்பமேனும் பேதஞ் செய்கின்றானே அவனுக்குப் பயமுண்டு" என்னுஞ் சுருதியின் பொருள் கூறப்பட்டமை காண்க). (58)

சுருதியாற் பெறப்பட்ட அபேதமும் பொய்யெனிலோ, அபேத நிலையால் முத்தி யென்று சுருதியிற் கேட்கப்படுவதுபொருந்தாது, "நான் சிவனல்லேன்" என்னும் பிரத்தியட்சத்தாற் பெறப்பட்ட மயக்கத்திற்கு, பிரத்தியட்சப்

பிரமாணத்தால் 'சந்திரன் பத்துவிரற் கடைப் பருமனுள்ளவன், என்னு முணர்ச்சியைப் போன்று, சுருதியாற் பாதமுண்டு. (ஈண்டுப் பிரத்தியட்சப் பிரமாணத்தால் நான் சிவனல்லேன் என்று பேதம் பெறப் பட்டிருப்பினும் அது, சந்திரன் அற்ப பரிமாணமுடையவன் என்னும் பிரத்தியட்ச வுணர்ச்சி, 'சந்திரமண்டலம் மிகப்பெரிது, என்று கூறும் சாத்திரப் பிரமாணத்தாற் கேடுறுமாறு, அபேதங் கூறும் 'தத்துமசி, என்னுஞ் சுருதியால் பாதமுறும். இவ்வாறுயவழி அபேதமே உண்மை யென்பதும், பேதமே பொய் என்பதும், வெளிப்படையாய்க் கொள்ளக் கிடந்தமை காண்க, மற்றும், "ஆண்டுச் சோகமேது? மோகமேது? அபேதத்தை யுணர்பவனுக்கு" என, அபேத வுணர்வால் முத்தி யுண்டாம் என்னுஞ் சுருதியையு முணர்க). (59)

இவ் வண்ண மாகையால், (பிரத்தி யட்சத்தாற் பெறப்பட்ட சீவேசுரபேதம்) பாதமாகா தென்பது பாதமாயிற்று பாதமாகுமென்ற சுருதியாற் பெறப்பட்ட சீவப் பிரமங்களின் அபேத வுணர்வு பாதமாகாத தானது; ஆகமத்தினும், சுருதி மிகுந்த ஆற்றலுடைய பிரமாணமா மென்பது நீர் காண்கின்றிலீரோ? என்னை? சுருதி கூறியது பாதமாகு மென்பது எக் காரணத்தாலாம்? (எவ்வாற்றானும் பாதமாகா தென்பது காண்பீராக; மாறுக மற்றைய பிரமாணங்கள் யாவற்றையும் சுருதிப் பிரமாணமே பாதிக்கு மென்பது இரசியமாம்) (60)

நீலகண்டர்:— மகரிஷிகளான கபிலர் முதலானோர், பரமான்ம தத்துவத்தின் உண்மையையும் முத்தியின் உண்மையையும் பலவகையாகக் கூறியிக்க, அதை மறுத்துவிட்டு நீர்ஒருவர் மாத்திரத்தாற் கூறப்பட்ட ஒரேவகை யாகிய

முத்தி எவ்வாறு ஏற்றுக் கொள்ளத்தக்கதாம் (அநேகர் கொண்ட நெறியே நியாயமாதலின் என்க)? (61)

சங்கரபகவற்பாதர் :—பேராற்றலுடைய சுருதிப் பிரமாணத்திற்கு விரோதம் வருங்கால், ஆற்றலின்றிய மிருதி வாக்கியங்கள் கொள்ளற்பாலனவாகா என்னும் நீதி வலியால் வேத மூன்றிற்கும் விரோதமான, இருடிகளின் வாக்கியங்கள் பிரமாணங்களாகா மாட்டா. (ஒரு சுருதியைத் தழுவாத பல்லோரின் வாக்கியங்களுந் தள்ளற் பாலனவேயாம் என்பது நியாயமாம்) (62)

நீலகண்டர் :—புத்தியோடு கூடின மகரிஷிகளின் வாக்கியங்கள் சுருதியைப்போல முழுதுங் கொள்ளற் பாலனவேயாம், என்னை? ஒவ்வொரு உடம்பிலும், ஆன்மாவும் வெவ் வேறும்; இன்ப துன்பங்கள் முதலானவைகளும் பலவகையாய்க் காணப்படுதலின். (63)

உடம்பனைத்திலும் ஆன்மா ஒன்றேயா மெனிலோ, எண்ணிலாத துன்ப முடைய வொருவன், இளவரசனது இன்பங்களை யடைதல் வேண்டும்; மற்றும், இவன் இன்ப முடையவன், இவன் துன்ப முடையவன் என்னும் அநுபவ மும் இல்லா தொழியும், அவ் விருவரும் ஒருவரே யாகலின். (64)

மற்றும், (கருத்தன் ஆன்மா வல்லனென்றும், சடமாகிய அந்தக் கரணமே கருத்தனென்றும், உம்மாற் கொள்ளப்படுங் கொள்கை பொருத்த முடையதன்று என்னுங் கருத்துக்கொண்டு கூறல்) உணர்வுடைய இவ் வான்மாவே கருத்தனுதல் வேண்டும்; சடத்திற்குக் கருத்தன் என்னுந் தன்மை காணப்படவில்லை: ஆகையால், அவ் வான்

மாவே போக்தாவும் ஆதல் வேண்டும்; பிறவற்றிற்குப் போக்துருத் தன்மைகொள்ளிலோ, அதிவியாப்தித் தோஷமுண்டாகும் (ஒருவன் செய்த கருமத்தின் பயனை மற்றொருவன் அநுபவித்தல் வேண்டும் என்பதாம்). (65)

(நீர் கொள்ளுகின்ற முத்தியும் பொருந்தா தென்றல்) துன்ப மொழிதலே முத்தியாம். (இன்ப மடைதலன்று) இன்ப மெல்லாம் விடங்கலந்த உணவு போன்று, துன்பத்துடன் கூடினவைகளேயாம்; ஆகையால் அது தொலை தூரத்தில் தள்ளற்பாலதாமாதலின் அது முத்தியன்று, என்னும் நிலைத்த யுத்திகளால் என்க. (66)

சங்கரபகவற்பாதர்:—நீர் இவ்வண்ணங் கூறிலோ, இன்ப துன்பம் முதலானவைகளின் பலவகைத் தன்மைகள், மனதின் தருமங்களாகையால் அவை ஆன்மாவை வேறு படுத்துவனவாமென்பது எவ்வாறும்? எவ்வாற்றனும் அது பொருந்தா தென்க; மாறாக இன்ப துன்பங்களின் பலவகைத் தன்மைகள் மனத்தையே வேறு படுத்துவனவாம்; ஈண்டு "காமம், சங்கற்பம்" என்று தொடங்கி, ஈற்றில், "இவ்வனைத்தும் மனமே" என்னுஞ் சுருதியே இதற்குப் பிரமாணமா மென்பது கருத்து). (67)

சைதன்யத்தின் சம்யோக விசேடமே (பிரதி விம்பித்தல் வடிவாகிய சம்பந்தமே) சடமாகிய தேகத்தில் கருத்தனுந் தன்மையை யுண்டாக்குவதாம் துரும்பு முதலானவைகளில் அவ்வாறாகிய, சைதன்யத்தின் சம்பந்த விசேடமின்மையினால் கருத்தனுந் தன்மை இல்லா தொழிந்தது, என்று கற்பித்துக் கொள்ளலே சுருதியைத் தழுவியதாமாதலின் சிறப்புடைத்தாம். (இது, சடத்திற்குக் கருத்

தனுந்தன்மை காணப்படவில்லை என்பது முதலானவை களுக்கு மறுமொழிகளாம்) (68)

விடயத்தி லுண்டாகின்ற இன்பமனைத்தும், துன் பத்துடனே கூடினவைகளா மென்றாலும், அழிவற்ற பிர மானந்தம் துன்பத்துடன் கூடிய தன்று, ஆதலின் அதுவே முத்தி யென்று கொள்ளற்பாலதாம். அபாவமாகிய துச்ச மென்னும் (வெறுமை யென்னும்) துன்பநீக்கம் மாத் திரம் முத்தியன்று. (இது முத்தி கூடா தென்பதற்கு மறுமொழி). (69)

இவ்வாறு நூற்றுக் கணக்கான யுக்திகளோடு கூடின பொருள்களடங்கினவும், சுருதியைத் தழுவின கவசத் தையுடையனவுமான வாக்கியங்களால் சங்கரபகவற்பாதர் தமது அத்துவித மதத்தை நிறுவி பிறர் செய்த நூலை மறுக்கத்தக்க வாக்கியங் களால் அதை மறுத்து சைவா சிரியராகிய நீலகண்ட சிவாசாரியரை வெற்றி கொண்ட னர். (70)

எதிகளுக் கரசராகிய சங்கரபகவற்பாதர் நீலகண்டரை வெற்றி கொண்டவுடன், அந் நீலகண்டர், தமது செருக் கையும் சைவபாடியத்தினையும் விட்டு அரதத்தர் முதலான தமது மாணுக்கருடன் அச் சங்கரபகவற்பாத மகரிஷியின் திருவடியில் அடைக்கலம் புகுந்தனர். (71)

துறவிகளுக்கரசர், கூரிய மதியுடையாரிற் சிறந்த நீலகண்டரை வெற்றி கொண்டனர் என்பதை, அத்துவித மதத்தின் கள்ளர்களான உதயனுசிரியர் (தார்க்கீகர்) முத லான கவீந்திரர்கள் கேட்டு இயல்பாகவே பெரும் பய மடைந்தனர். (72)

பின்னர், பகவர், சங்கரதேசிகர், சௌராட்டிகம் முதலான தேசங்களில் அவ் வவ் விடங்களிலும் தமது வேதாந்த பாடியங்களைப் பரப்பிக் கொண்டு பலவகையான விபுதர்களால் துதிக்கப்பட்டவராய்த் துவாரகைப் பதியை யடைந்தனர். (73)

அங்குப் பழுக்கக் காய்ச்சிய சங்கு சக்கர வடிவாகிய இரும்பால் சுடுவதாலுண்டான தழும்புக் குறிகளை இரண்டு கைகளிலுடையவர்களும், சரப்புல்லின் குச்சுபோன்று மேல் நோக்கிய சிவப்பு வெண்மைநிற நெற்றிக் குறியை யுடையவர்களும், துளசி இதழ்களோடு கூடிய செவியை யுடையவர்களுமான நூற்றுக் கணக்குள்ள பாஞ்சராத்திர மதத்தர்கள் வந்து, மிக்க வுறுதியுள்ள, சங்கரபகவற்பாதரின் மாணுக்கருடன், முத்தியில் ஐவகைப் பேத முண்டெனப்பேசி, சிம்மத்தால் யானைகள் வெருண்டோடுவன போன்று, அம் மாணுக்கரால் பயந்து (அப் பேச்சு அடியோடு மறுக்கப்படவும்) ஓடிவிட்டனர். (ஈண்டுச் சீவேசுரபேதம், சீவர்களில் ஒருவருக் கொருவள்ளபேதம், சீவனுக்கும் அசித்திற்கு முள்ளபேதம், ஈசுரனுக்கும் அசித்திற்கு முள்ளபேதம், அசித்துக்களுக்கு ஒன்றற்கொன்றுள்ள பேதம் என்பன, பாஞ்சராத்திரிகளின் பேதங்களாம்). (74, 75)

சங்கரபகவற்பாதர்

உச்சைனித் தலத்தை யடைதல்

சங்கரபகவற்பாதர், இவ்வாறு, வைணவர், சைவர், சாக்தர், சௌரர் (சூரியோபாசகர்) முதலானவர்களை "உங்களுடைய வசமாகி விட்டோம் யாம்" என்று சொல்லுமாறு

செய்து கொண்டு அளவற்ற வாக்குப் பெருக்கால் பிரதிவாதிகளனைவரையும் வென்றவராய் உச்சைனி யென்னும் பதியை யடைந்தனர். (76)

அங்கு, காரோலியோ அலவோ வென்னும் ஐயப் பாட்டாற் கலக்கமுற்ற மயிலினங்கள் தங்கள் கூண்டில் ஒடுங்கி யிருக்கச் செய்யத்தக்கதும், பிரதித் தொனியால் திக்குகளனைத்தையும் வியாபிக்கத் தக்கதுமாகிய, சந்திர மௌலியின் (மாகாள ரென்னும் மாதேவருடைய) வேள்வியிலெழும் மத்தள வொலியைக் கேட்டனர். (77)

பின்னர், மீனக் கொடியானுடைய (காமனது) சத்துருவின் (பரசிவனது) வழிபாட்டின் முறையை யுணர்ந்த சங்கரபகவற்பாதர், பூவின் நறுமணத்தாற் களைப்பைப் போக்கத்தக்கதும், அகிலின் புகையால் திக்குகளை நறு மணப் புகை யுடையனவாகச் செய்வதுமாகிய மாகாளே சுரரின் தேவாலயத்தை யடைந்தனர். (78)

அடைந்து, முனிவர்கணங்களாற் போற்றப்பட்ட திருவடிக் கமலங்களை யுடையவரும், மிக்கப் பிரபாவத்தை யுடையவருமாகிய அச் சங்கரபகவற்பாதர், மாகாளேசுரர் என்னுஞ் சந்திர மௌலீசுரரைப் பணிந்து துதித்துக் கொண்டு இளைப்பை நீக்கத்தக்கதோர் அழகிய மண்டபத்திற் களைப்பாறி யிருந்தனர். (79)

## பட்டபாஸ்கரரை வெற்றி கொள்ளல்

சங்கர பகவற்பாதர் அங்கிருந்து கொண்டே தமது அருகிலிருந்த பத்மபாதரை நோக்கி, நன்மனத்தோய், நீ, நான் வந்திருக்கின்றேன் என்னும் வார்த்தையை பட்ட

பாஸ்கரருக்குச் சொல்வாயாக, என்று தமது மாணாக்கரிற் சிறந்த சனந்தனாசிரியரை அவரிடத்திற்கு அநுப்பினர், வாக்கில் வல்லுநராகிய அவர் அங்குச் சென்று, அறிஞர் குழாங்களிற் சிறந்தவரும், பொதுவாகிய வேதத்திற்குப் பலவகையான உரை செய்யதவரும் வெல்லுதற்கரிய மதவாதிக ளென்னுஞ் சத்துருக்களையும் விளையாட்டாகவே வெற்றி கொண்டவருமாகிய அப் பட்டபாதரை யடைந்து அவருக்குக் கீழ் வருமாறு கூறினர். (80) (81)

திக்கின் முடிவுவரை போற்றறப்பட்ட புகழுடைய பகவர் சங்கர யோகியென்னுஞ் சக்கரவர்த்தியானவர், அத்துவித தத்துவத்தை நன்கு விளக்கியும், அதற்கு மாறுபட்ட மதவாதிகளின் செருக்கை யடக்கியும் (இரவி போல்) விளங்குகின்றாரன்றோ? அத் தன்மையராகிய அவர், அறிஞர்களிற் சிறந்த தங்களுக்கு, "தீய மதத்தர்களாற் செய்யப்பட்ட பிரம சூத்திர விருத்திக ளனைத்தையும் மதிக்காமல், மும்முறையின் முடிவிற்கும், பிரமாபின்ன பிரத்தியக் சைதன்யத்தில் கருத்தாமெனயாம் கூறுகின்றோம்; அறிஞ, மனதினால் ஆராய்ந்து, தீய மதமாகிய உமது மதத்தை விட்டு, இத்தன்மைய எமது மதத்தைக் கைக்கொள்ளல் வேண்டும்; இன்றெனிலோ யாம் எம்முடைய உக்கிரமான வச்சிரம் போன்ற யுத்திகளால் அம்மதத்தை புடைப்போ மாதலின் நீர் அதினின்றும் உமது மதத்தைத் தழும்பு படாது பாதுகாப்பாற்றிக் கொள்வீராக," என்று தெரிவிக்கச் சொன்னார். (82) (83, 84)

அறிஞராகிய பட்டபாஸ்கரர் அவமதிப்புள்ள சொற்களையுடைய அவ் வாக்கியத்தைக் கேட்டபோது புகழ்

களுக்கு நிதியாகிய அவர் சிறிது முனிவுற்று பிறகு புன்னகைகொண்டு எதீந்திரரின் மாணாக்கருக்குக் (பத்மபாதருக்கு) கீழ் வருமாறு கூறினர். (85)

"தாத, உனக்கு அச் சங்கரர் ஆசிரியராவர், தீய மதவாதிகளின் வாக்கு முறைகளைக் கெடுப்பதும், பிறருடைய புகழென்னும் தாமரை முளைகளை யுண்ணுவதும், அறிவுடையாரின் தலையில் நடிப்பதுமாகிய, அவருடைய செய்தியை எமக்குச் செவியுறி வுறுத்தல் வேண்டா. (86)

என்னுடைய வாக்கியத் தொடர்பின் கூட்டங்கள் அழகுடன் நிர்த்தனஞ் செய்யுங்கால், கணாத முனிவரின் வாக்கும் அற்பமாகின, கபில முனிவரின் வாக்குகள் ஓடின. இப்போதைய அறிவாளிகளின் கதை என்னும்? (87)

என, கூறிய பட்டபாஸ்கரரை, வாக்கு வல்லுநராகிய சனந்தனர் நோக்கி, அறியாமை யுடையோய், இவ்வாறு அவமதியாதே, என்னை? மலையைப் பிளக்கத்தக்க உளி இரத்தின மணியைப் பிளக்க வலியற்றதாகிவிடும், என, நல்லறிஞரிற் சிறந்த சனந்தனர் கூறிவிட்டு தீர்த்தங்களுக்கு இறைபோன்று (பிரயாகை போன்று) உலகத்தைப் புநிதப் படுத்துவதால் புகழ் மலிந்த சங்கரபகவற்பாதரிடத்திற்கு வந்து; அங்கு நடந்தவைகளை முறையாய்ச் சொன்னார் பின்னர், அம் மகாத்துமராகிய பட்டபாஸ்கரரும் எதிகட்கிறைவரிடத்திற்கு (சங்கரபகவற்பாதரிடத்திற்கு) வந்தனர். (88, 89)

வந்தபின் பலவகை விடைகளிலும், மறு மொழிகளிலும் வல்லுநர்களானவர்களும், வெற்றி கொள்ளும் விருப்புடையவர்களுமான பட்டபாஸ்கரருக்கும், துறவி வீர

ருக்கும் பலவகை வாக்கியங்களாற் சிறந்த |விவாத முண்டானது. (90)

மிக்க வழகான பதங்களைத் தழுவினவர்களும், விசிராந்தியுடையவர்களும், தீ நெறிகளை மறுக்கத் தக்க யுத்திகளில் வல்லுநர்களுமான அவ் விருவர்களின் விவாத மென்னும் போரில், அதை வழியிற் கேட்டுக் கொண்டிருந்தவர்களும் இடையறாது கேட்டுக் கொண்டே யிருந்து விட்டனர். (91)

பின், எதியாகிய சங்கரபகவற்பாதர், பட்டபாஸ்கரரின் வல்லுநத்தன்மையைக் கண்டு, தமது கொள்கை யாகிய (சித்தென்னும்) சந்திரனுக்கு, சடமாகிய கார்த்திகைத் திங்களிலுதித்த கமல மலர் போன்றதும், அறிஞர்களுக்கெதிரில் ஆசங்கை தோன்றாததுமாகிய அவர் கொள்கையை பல வாறாக ஆசங்கித்தனர். (92)

வாக்கு வல்லுநரிற் சிறந்த கவிஞர் என்னும் பட்ட பாஸ்கரராகிய பண்டிதர் தமது கொள்கையைப் பாதுகாப்பாற்றுவதில் கலக்க முண்டானவராய், அரிய பெரிய யுக்திகளால் மறை முடிபில் மன்னும், அத்துவிதத்தை மறுக்கும் இச்சையுடையராய்க் கீழ் வருமாறு ஆசங்கித்தனர். (93)

பட்டபாஸ்கரர் :—சங்கரபகவற்பாதரை நோக்கி, நீத்தோரே, நீர், பிரகிருதி, சீவேசர்களை வேறுபடுத்துகின்றதென்று கூறினீரன்றோ? அது பொருந்தாது; என்னை? அப் பிரகிருதி, சீவனைப்பற்றிக் கொண்டேனும், அல்லது பரமான்மாவைப் (ஈசுரனை) பற்றிக் கொண்டேனும், வேறுபடுத்து மென்பது கூடாது. சீவன் என்னும் நிலைமையும் ஈசுரன் என்னும் நிலைமையும் பிரகிருதிக்குப் பின் காலத்தனவாமாதலின். (94)

சங்கரபகவற்பாதர் :—அறிஞ, கண்ணாடி, பிம்பப் பிரதி பிம்பங்களை வேறுபடுத்துகின்றதென்பது எங்ஙனமாம்? அங்ஙனமாயின், கண்ணாடி, பிரதி பிம்பத்தைப் பற்றிக்கொண்டு வேறுபடுத்தியதோ, அல்லது, விம்பத்தைப் பற்றிக்கொண்டு வேறுபடுத்தியதோ? (பிரதி பிம்பம் அதற்குப் பின்காலத்தையதாமதலின்) பிம்பமாகிய முகத்தைப் பற்றிக் கொண்டிடனிலோ, ஈண்டும் கேவல சைதன்யத்தைப் பற்றிக்கொண்டு வேறுபடுத்தியதென்பது சமமாம். (95)

அவதாரிகை

[அற்றேல், பிரகிருதி, கேவல சைதன்யத்திற்கே இன்ப துன்பங்களைக் கொடுக்காது சீவனுக்கு மாத்திரம் இன்ப துன்பங்களைத் தோற்றுவிக்கின்றதென்னையோ? என்றாசங்கித்துக்கொண்டு அவர் மேற்கூறியதையே உறுதிப் படுத்துகின்றார்.]

கேவல சைதன்யத்தைப் பற்றிக்கொண்டுள்ள பிரகிருதியாகிய வுபாதி, பிம்பவடிவ ஈசனுக்கு இன்ப துன்பங்களைக் கொடுக்காது, கண்ணாடியைப் போன்று பிரதி பிம்பமாகிய சீவனுக்கே இன்ப துன்பங்களை யுண்டாக்குகின்றது இதில் விரோத மென்பதே யில்லை. (96)

அற்றேல், விகாரியாயும், அஞ்ஞான வடிவாயுமுள்ள பிரகிருதி, விகாரமும் சங்கமும் அற்ற ஞானமே வடிவாகிய சைதன்யத்தைப் பற்றிக்கொண்டிருக்கின்றது என்பது விரோதமாமாதலின், அது பொருந்தாது. இதனாலே, பிரகிருதியின் கூறாகிய அஞ்ஞான விசிட்ட சீவனைப் பற்றிக் கொண்டுள்ளதென்று ஆசங்கித்தலும் பொருந்ாது என்று ஆசங்கிக்கிறோ, (97)

அற்றன்று, பிரகிருதி, விசிட்டத்தை ஆசிரயித் திருக்கின்றது என உம்மாற் கொள்ளப்பட்டதிலும் ஒரு பிரமாணமும் (கதையும்) காணப்படவில்லை. அஃதாமாறு விளக்குதும்:—'நான் அஞ்ஞானி, என்னும் அநுபவத் தோற்றமோ, பிரகிருதி, விசிட்டாசிரிதம் (சீவனைப்பற்றி நிற்பது) என்பதிற் பிரமாணமாகாது. அவ்வாறு கொள்ளின், 'நான் அநுபவி, என்னும் அநுபவத் தோற்றமும் விசிட்டத்தில் உள்ளதென்று கொள்ளுதலும் நேரும் (அஃது உமக்குச் சம்மதமாமெனிலோ) உமக்குப் பிரியமா மென்பது அமையுமா றெங்ஙனம்? என்னை? ஞான வடிவாகிய அநுபவத்திற்குச் சட வடிவ அந்தக் கரணத்தைப் பற்றி நிற்குந் தன்மை அமையாமையின் (இவ்வாற்றால் சங்கர பகவற்பாதரின் கருத்தாகிய அஞ்ஞானங் கேவலஞ் சைதன்யத்தைப்பற்றி நிற்பதாம் என்னும் பட்சமே பெறப்பட்டமை காண்). (98, 99)

பட்டபாஸ்கரர்:—தீயின் சம்பந்த வசத்தால் இரும்புக் கட்டி சுடுகின்றது என்னுந் தன்மை வழங்கி வருவது போன்று, அநுபவ முடைய ஆன்மாவின் தாதான்மிய (ஒற்றுமை) சம்பந்தப்பட்ட அந்தக் கரணத்தில் நான் அநுபவி என்னுந் தோற்றம் வழங்கப்பட்டு வருகின்றது. அதில் குற்றம் யாண்டையது? (100)

சங்கரபகவற்பாதர்:—நீர் இவ்வண்ணங் கூறுதலும் பொருந்தாது; என்னை? 'அஞ்ஞானி' என்னும் அநுபவத்திலும், அவ்வாறே மாயை ஆசிரயித்திருக்கின்ற சின்மாத்திரத்துடன் கூடிய அந்தக்கரணத்திலும், அவ்வஞ்ஞானம் உபசாரமே யன்றி, சைதன்னியத்திற்கு உபாதியாகிய பிரகிருதி சம்பந்தமுள்ள அந்தக்கரணத்திற்கு

இல்லை என்று வேறோர் வகையாற்றோற்றுவது சமமா மாதலின். (101)

### சங்கரபகவற்பாதர் மற்றோர்வகையாலும் ஆசங்கித்துத் தமது மதத்தை நிறுவல்.

அந்தக்கரணத்தில் (அநுபவம் உபசாரமா மென்பதில் ஞான வடிவாகிய அநுபவம் சட வடிவ அந்தக்கரணத்திலிருக்கின்றதென்பது பொருந்தாது எப்போதும்) பாதகமாந்தன்மையிருத்தலின் இந் நிலைமை அநுபவமுடைய ஆன்மாவின் சம்பந்தமுள்ள அந்தக் கரணத்தில் நான் அனுபவி என்னும் வழக்கு உபசாரமாகவுள்ளது என்னும் நிலைமை இருக்க; நான் அஞ்ஞானி என்னும் வழக்கு சைதன்ய சம்பந்தமுடைய அந்தக் கரணத்தில் உபசாரமாம் என்னும் பிரகிருதி நிலைமை பாதக மாயிருத்தலின், அது இல்லா தொழிக என்று கூறிலோ, அதுவு மொவ்வாது; என்னை? ஈண்டும் ஞானத்தால் (சைதன்யத்தால்) உண்டாகிய அந்தக்கரணத்தில் ஞானம், ஆசிரயஞ் செய்துகொண்டிருக்கின்றது என (ஆன்மாசிரிய தோடமாகிய) பாதகமிருத்தலின். (102)

மற்றும், இவ் வஞ்ஞானம் அந்தக்கரணத்தை யாசிரயித்திருக்கின்றதெனில், சுழுத்தியிலும் அந்தக்கரணத்தை யாசிரயித்துள்ள அஞ்ஞான முளதென்பதும் வரும்; வரின்ஞ, பிரகிருதி, திருசியமாகிய அந்தக் கரணு சிரிதம் என்பதில் கூறிப்போந்தவாங்கு பிரமாண மொன்று மில்லை. (ஆகையால் பிரகிருதி சைதன் யாசிரிதமே என்பது உறுதியானமை காண்க). (103)

பட்டபாஸ்கார்:—அற்றேலஃதாகுக; சுழுத்தியில் சீவனும் பிரமமும் ஒன்று படுவதில் தடையாயுள்ள அஞ்

ஞானமென்பதொன்றில்லை; ஆகையால் அப்போது, அவித்தை, சைதன்யத்தை ஆசிரயித்து இருக்கின்றதென்னும் வார்த்தையே தொலை தூரமாம். என்னை; சுழுத்தியில் சீவப் பிரமங்களின் அபேதத்திற்குத் தடையொன்றும் இல்லையென்பதோ, "அக்கால், சத்துடன் ஒன்றுபடுகின்றான்," என்பது முதலான சுருதி வாக்கியத்தால் சுழுத்தியில் சீவப் பிரமங்களுக்கு அபேத முணரப் படுதலின் என்க. (104)

சுழுத்தியில் "சத்துடன் ஒன்றுபட்டு உணர்வதில்லை," என்னுஞ் சுருதி வாக்கியத்தால், அஞ்ஞானம் சுழுத்தியில் உள்ளதென்று காணப்படுகின்றதெனினோ, அது பொருந்தாது. என்னை? சுருதிவாக்கியம், ஞானத்தை விலக்குகின்றது, "உணர்வதில்லை" என்னுமபாவத்தோற்றத்தால், ஆங்கு ஞானத்தை விலக்கல் இன்றெனிலோ, அற்றன்று; அதில் ஞானத்தை விலக்கல் இல்லையென்பதில்லை (அபாவத் தோற்ற மிருத்தலின் என்க). (105)

இவ் வஞ்ஞானம் நித்தியமோ, அல்லது அநித்தியமோ, நித்திய மெனின், அஃதமையாது, அதில் யுத்தியொன்று மின்மையால். அநித்திய மெனின், அதை நீக்குவதென்பது பொருந்தாமையின். என்னை? அநித்தியமாமென்பதிலும், சைதன்யப் பிரகாசம் அதை நீக்குகின்றதா? அல்லது சடப் பிரகாச நீக்கு கின்றதா? அவ்விரண்டில் சைதன்யப் பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியாகாமையின் அது அதனை நீக்கமாட்டாது. (106)

## அவதாரிகை.

[சடப் பிரகாசமும் அஞ்ஞானத்தை நீக்காது இயல்பாய்ச் சடமாகிய இவ் வஞ்ஞானத்திற்கு விரோதி யாகாமை

யின், இவ் வாறாய விடத்து, மூன்றவத் தைகளினுங் கெடாததும், பந்தமனைத்திற்குங் காரணமானதும், பந்த நீக்க வாயிலாக கொள்ளப் பட்டது மாகிய அஞ்ஞானம் உண்டென்னும் உங்களுடைய துணிபு பொருந்தா தென்றா தாயிற்று. அற்றேல், சுழுத்தியில் தடை யென்பது யாது? என்றாசங்கித்துக் கூறுகின்றார்.]

பட்டபாஸ்கரர் :—மூன்றவத்தை களினும், சைதன் யந் தோன்றாமைக்குத் தடையோ, பிராந்தியை யுணராமை முதலியவைகளேயாம்; அற்றேல், சுழுத்தியில் சிவப் பிரமாபேதத்திற்குத் தடையென்பதே என்றும் இன்றேனி லோ? அற்றன்று. துயின் றெழுந்தவனுடைய நினைவு எதை விடயமாக உடையதாம்? பிராந்தியை யுணராமையே அஞ்ஞானமாக இருக்கின்ற தென்க. (107)

அவதாரிகை.

[சங்கரபகவற்பாதர், மயக்கம் நீங்கியபோது சமற்கார மும் நீங்கியதாகவே கொள்ளல் வேண்டும், கொள்ளவே, பிராந்தியை யுணராத தன்மை யென்பது பொருந்தாது.]

இவ் வாறா மெனினோ, பிராந்தி யென்பது யாண்டை யது? ஈண்டுப் பேத அபேதங்களை விடயஞ் செய்வதால் உணர்வனைத்தும் உண்மையே யாமாதலின், பிராந்தி யென்ப தொன்றில்லை என்பதே "யாண்டையது" என்னும் வினாப் பொருளாம். (பின்னர், அவர் வினாவை யேற்றுக் கொண்டு விடை கூறுகின்றார்) "நான் மனிதன்," என்பது, (அகங் கார முதலான அநாத்துமாக்களில்) ஆன்ம புத்தியா மெனினோ? அற்றன்று; என்னை? அந்தோ! பொருள் கள் அனைத்திற்கும் கலப்புத் தன்மை கூறும் உமது அறி

யாமைக் குணத்தை என்னென்று சொல்வேன். (பேதா பேதங்களால் பொருள்கள் எல்லாவற்றிற்கும் சங்கரத் தன்மை (கலப்பாந்தன்மை), கூறும் உமக்கு மிகுந்த அறியாமை யுள்ளது. உளதாகவே உமது மதத்தில் பிராந்தியென்பதே இல்லாதொழிந்தது. (108)

அவருடைய பேரறியாமையை விளக்கல்

அனைத்திற்கும் பேதாபேதத்தைக் கவருந்தன்மை உமது சாத்திரத்தாற் பெறப்பட்ட காரணத்தால் "இது கண்டம்" என்னும் பேதாபேதா விடயப் பிரத்தியட்சப் பிரதீதி பிரமாணமாந் தன்மையால் "நான் மனிதன்" என்னுந் தோற்றத்திற்குப் பேதாபேத விடயங்கூறும் நீர், சருவ சங்கரவாதி யென்பதை (எல்லாப் பொருளுக்குங் கலப்பாந் தன்மை பேசுபவர்) என்பதை தள்ளிவிட்டீர் கொலோ? நீர் கலப்புவாதி யாவீரென்பதாம்). (109)

இவ்வாறாயபோது, விவாதத்திற்கு விடயமாகிய (நான் மனிதன் என்னும்) புத்தி, பிரமாணமாம்; பேதாபேத விடயகமாதலின் என்னும், அநுமானமும் பெறப்பட்டமை காண்க. இதில், 'இது கண்டப்பசு என, உமக்குண்டாந் தோற்றமே சிறந்த எடுத்துக் காட்டாகும். (110)

பட்டபாஸ்கரர்:--அற்றேலஃதாகுக, "நான் மனிதன்" என்னும் சமுதாயவடிவ வுணர்ச்சி பிரமாணமே யாகாது பாத விடயகமாதலின்; இப்பியில் பிரசித்தியாகிய இது வெள்ளி யென்னு முணர்வுபோன்று, என்னும் மிக்க வலியுள்ள அநுமானம் சற்பிரதிபக்கமாம் (மாறுபட்ட ஏதுவையுடைய அநுமானமாம்) எனின், ஈண்டு நான் மநிதன்

என்னும் தோற்றவலியால் பாதத்திற்கு விடயமாந் தன்மை யிருத்தலின் என்று கொள்க. (111)

பட்டபாஸ்கரர் :—அற்றன்று, இவ் வேதுவிற்கு (பாதத்திற்குரிய விடயமாதலின் என்பதற்கு) கண்டப்பசு, என்பதில் பிறழ்சியாந் தன்மை யிருத்தலின் மற்றைய விடத்தில் (இது கண்டப்பசு வன்று, மற்றோ, முண்டப்பசு என்பதில்) அதற்கு வேறாகிய உணர்ச்சிக்கு விடயமாகிய முண்டத்தில் நிடேதிக்கப்பட்ட கண்டத்தன்மை. இருத்தலின் கூறிய ஏது இருக்கின்றதா மாதலின் என்க (எனவே கண்டத்தன்மை, முண்டத்தன்மை என்னு மிரண்டுடன் கூடிய கோத்தன்மையின் அபேதவுணர்ச்சியைப் போன்று, தேகத்தன்மை பிரமமாந்தன்மை என்னும் இரண்டுடன் கூடிய ' நான் மனிதன், என்னும் அபேத வுணர்ச்சியும் பிரமாணமானது காண்க), (112)

பட்டபாஸ்கரர் :—அவ் வதுமானத்தில், அவ் வேதுவைக் கூற விருப்பில்லை ; மற்றோ, உள்ள வுபாதியில் பாதிக்கப்படுந் தன்மையால், என்னு மிது ஏதுவா மெனிலோ, (ஈண்டு உள்ள வுபாதியகிய அதிட்டானத்தில் என்று அதற்குப் பொருளாமாதலின், இது என்னுங் கூற்றின் கண் இருக்கின்ற ' வெள்ளி ' அதற்கு அதிட்டனமாகிய கிளிஞ்சியில், " இதுவெள்ளியன்று" என பாதிக்கப்படுகின்றது. அவ்வாறே ஆன்மாவின் கண்ணுள்ள மனிதத்தன்மையில், ஆன்மாவினிடத்தில் நான் மனிதனல்லன், மற்றோ, பிரம வடிவமாகவே இருக்கின்றேன் என, நிடேதிக்கப்படுகின்ற தாமாதலின் அது பிராந்தி யுணர்வேயாம் ; 'கண்டப்பசு' என்பது இத்ற்கு மாறுபட்டதா மாதலின்

அது பிராந்தி புணர்ச்சியல்ல வென்பது சங்கித்தவரின் உட்கிடை என்பது காண்க)

சங்கரபகவற்பாதர் :—அதுவுமமையாது, என்னே ? விரும்பிக்கூறிய இவ் வேதுவிற்கும் 'கண்டப்பசு' என்பதில் மறித்தும் பிறழ்தற்றன்மை யிருத்தலின். (113)

பட்டபாஸ்கரர் :—அற் றேலஃதாகுக, கோத்தன்மை யென்னு முபாதியில் உள்ள கண்டத் தன்மைக்கு, 'இது கண்டமன்று' மற்றோ, முண்டம் என்று, கோத்தன்மையின் கண் நிடேதமில்லை; மற்றோ, காணப்படுகின்ற முண்டம் என்பதிலாம், ஆதலின் மேற்கூறிய ஏதுவிற்குப் பிறழ்ச்சி யாந்தன்மை யில்லை யெனினோ ?. (114)

சங்கரபகவற்பாதர் :—அதுவுமமையாது, என்னே ? விகற்பஞ் செய்தபின் நிலைத்திராமையின் ; (அவ் விகற்பம் யாதானினோ ?) கண்டத் தன்மையின் நிடேதம் கேவலம் முண்டத்தன்மையிலா ? அல்லது கோத்தன்யோடு கூடிய முண்டத்தன்மையிலா ? கேவல முண்டத்தன்மை யின்கண் நிடேத மெனினோ ? அதுகூடாது ; சம்பந்தமே யிலாததால் ; (முண்டத்தில் கண்டத்தன்மை ஒருபோதுஞ் சம்பந்தப்பட மாட்டா தென்க (உள்ளதே பாதகத்திற் குரியதாம், என்னும் நீதியால் ; இத்தரையிற் குடமில்லை என்பதில், தரையிற் சம்பந்தமாகிய குடமே மற்றோரிடத்திற் பாதிக்கப்படுதல் யாண்டுங் காணப்படுதலின் ; முண்டத் தன்மையோ ஒருபோதிலேனும் கண்டத்தன்மையிற் சம்பந்தப்படலின்மையின் அதைப் பாதித்தலென்பது ஆண்டுப் பொருந்தாது.)

கோத்தன்மையோடு கூடிய முண்டத் தன்மையில் கண்டத் தன்மை பாதிக்கப்படுகின்றது, என்னும் இரண்டாவது பட்சமும் பொருந்தாது, என்னை? கோத்தன்மையோடு கூடிய முண்டத் தன்மையில் கண்டத் தன்மை பாதிக்கப்படுகின்றபோது, முண்டத் தன்மையை விசேடணமாக வுடைய கோத்தன்மையில் பிரசித்தியாக பாதம் அறியப் படுகின்றது; அடைந்துள்ள, இது என்னும் கூற்றில் வெள்ளி, பாதிக்கப்படுவது போன்றதாம்; இவ்வாறுயவ்ழி இருக்கின்ற வுபாதியில் பாதித்தற்குரிய விடயமாந் தன்மை யுடைய கண்ட உணற்சியில் கூறிய ஏது இருத்தலால் இவ் வேதுப் பிறழ்ச்சி வச்சிரம் போன்று உறுதியாயினமை காண்க. (115, 116, 117)

மற்றும், அவ் வநுமானத்தில் பாத மின்றிய இவ் விவகாரம் என்பது, உபாதியெனக் காணப்படுகின்றதெனிலோ? அற்றன்று ஆன்மசாட்சாத் காரத்தின் பின்னரும் (பிராரத்த கரும வசத்தால்) நான் மனிதன் என்னும் அநுபவந் தோன்றலின் சாதனத்துடன் (ஏதுவுடன்) வியாபகமாந் தன்மையே யிருக்கின்றது ஆகையால் (ஈண்டுச் சாத்தியத்துடன் வியாபித்துச் சாதனத்துடன் வியாபியாதது உபாதியாம்); எடுத்துக்கொண்ட இதிலோ, முற்கூறிய அநுமானத்தின் சாதனம், பேதா பேத விடயமாதலின், என்பதாம், யாண்டாண்டுப் பேதா பேத விடயமோ, ஆண்டாண்டுப் பாத மிலாத இவ் விவகாரமாம் (நான், மனிதன் என்னும் விவகாரமாம்) இது தத்துவசாட்சாத் காரத்தின் பின்னரும் பிராரத்த கரும வசத்தாற் காணப் படுதலின் நான் மனிதன் என்பதே பேதாபேத விஷயமாம் இவ்வாறுக, இது சாதனத்துடனும் வியாபித்தமையின்

கேடிலாத இவ் விவகாரம் என்னுமிது அவ் வநுமானத்தில் உபாதியாகாமை காண்க). (118)

அற்றேலஃதாகுக இவ் விவகாரம் ஒழிவு (ஈண்டு, எவனுக்கு இவ் வனைத்தும் எப்போது ஆன்மாவே யானதோ, அப்போது அவன் எதனுல் எதைக் காண்கின்ருன்? என்னும் இச் சுருதிவாக்கியத்தால் நன்கு காணப் படுதலின், (அதாவது ஆன்மஞானிக்கு விவகார நாசங் காணப்படுதலின்) விவகாரம் பாதமாவதில்லை என்பது எவ்வாறு பொருந்தும் என்று ஆசங்கிக்கிறே? (119)

அற்றன்று, இதுவும் எமது மதத்திலே பொருந்து கின்றது. என்னை? பிரமத்தை யறியாமையால் (பிரமத் தின் அஞ்ஞானத்தால்) விரிந்திருக்கின்ற உலகனைத்தும் அவ் வஞ்ஞானம் இலயமானபோது இலயமாம் என்பது பொருந்துதலின்; உமது மதத்திலோ, உலகம் சத்திய மாதலின் நாசமென்பது பொருந்தாமையின் என்க. (120)

அற்றேலஃதாகுக, (சாதி வியத்தி, குண குணி, காரிய காரணம், அவயவம் அவயவி என்னும்) ஐந்திடங்களி லன்ருே, பேதாபேத விடயமாந் தன்மையுண்டு; தேகம் தேகி, என்பவற்றில் அது இல்லாததேயாம். இது பிர சித்தியான அவ் வைந்திடங்களிலும் வேருதலின். இங் ஙனமாகவே தேகம், தேகி, என்பவற்றில், அவ்வேது அசித்தம் என்பதே (இல்லை என்பதே) பயனுகிய பொரு ளாம் (ஈண்டுத் தேகம், தேகிகள், பதார்த்தமாதலின், சாதி, வியத்தி, என்றலும் குண, குணி, என்றலும் பொருந்தாது; தண்டத்தை யுடைய தன்மை ஒருவனைப் பற்றியது போன்று, தேகம் பௌதிகமாதலின், ஆன்மவசத்ததன்று,

ஆகையால் காரிய, காரண மென்பதும் பொருந்தாது ; அது போன்றே விசிட்டமாந் தன்மையும் அமையாது, தேகி, நிரவயவத்திரவிய (பொருள்) மாமாதலின் அவயவம், அவயவி, என்றலும் பொருந்தாதென்பது கருத்து.) (121)

சங்கரபகவற்பாதர் :—இவ்வாறு ஆசங்கிக்கினே, அது பொருந்தாது ; விகற்பஞ் செய்யுங்கால் நிலைத்திராமையின், (அஃதெவ்வாறெனிலோ? சாதி, வியத்தி, முதலான ஐந்தும்,) ஒருமித்துப் பேதா பேதங்களுக்குக் காரணமாகின்றனவோ? அல்லது தனித்தனியே காரணமாகின்றனவோ? முதலாவது பட்சமாமெனின், அது பொருந்தாது, யாண்டும் ஐந்தும் ஒருமித் திருத்தலே அமையாமையின். (122)

இரண்டாவது பட்சமென்னிலோ? அதுவும் அமையாது ; என்னை? அவ்வாறுகு மிடத்து, அங்கம், அங்கி, என்பதுங் காரணமாகாததெனல் என்னையோ? (தேக தேகிகளுக்குள்ள அங்க அங்கித் தன்மையும், பேதா பேதத்திற்குக் காரணமாதலுங் கூடுமென்பது பொருள்) ; காரணம் பற்றிய கௌரவமும் தோஷமாகாது. எடுத்துக் கொண்ட இதில் அங்காங்கித் தன்மையும் உமக்கும் உடன் பாடாமாதலின். (123)

மற்றும், சாதி, வியத்தி, என்னும் சிறப்புற்ற ஐந்தனுள் ஒன்றே எனக் (பேதா பேதத்திற்குக் காரணமாமென்று) கட்டாயப் படுத்தினே, அதுவும் ஈண்டு அரியதல்ல ; என்னை? சிதான்மாவிற்கும் தேகத்திற்கும், காரண காரியத் தன்மை யிருத்தலின். (124)

உலகெலாம் பரமான்மா வினிடத்திலிருந்து உண்டானதாகையால் சீவனுடைய காரியமாதல் யாங்ஙனம்? என்று

கூறற்க; சீவன், பரமான்மாவுடன் அபேதமாதலின் இவ்வுலகம் சீவனுடைய காரியமா மென்பதும், பொருந்துமாதலின். (125)

அவ் வநுமானத்தில், (விவாத விடயமாகிய, நான் மனிதன் என்னும் உணர்வு, பிரமாணமாம், பேதாபேத விடயமாதலின். இப் பசு கண்டம் என்பதுபோல், என்னும் இவ் வனுமானத்தில், ஏது சித்தியாமை முதலான அநுமான தோடங்களில் ஒன்றுமே யிலாமையின் கூறிய அநுமானம் குற்றமற்றதா மாதலால், பிராந்தியை பிரமிதி (நல்லறிவு) என்றுணரும் உமக்கு பிராந்தி யென்பதின் பொருளே யில்லாதொழியும். (126)

அஃதன்றியும், (நான் மனிதன் என்னும் இப் பிராந்தி யுணர்வு உம்முடைய மதத்தில் அந்தக் கரணத்தின் பரிணமமா? அல்லது, சிதான்மாவின் பரிணமமா? இவற்றுள் முதலாவதோ, பொருந்ாது ஆன்மாவின்கண் பிராந்தி யநுபவம் இருக்கின்றதென்பதற்குக் குறைவு பாடாமாதலின் (பங்கம் வருதலால் என்பதுமிது). (127)

பட்டபாஸ்கரர்:—அற்றேலஃதாகுக, சிவப்பு நிறக் குசும்பாவின் சம்யோகத்தால் படிகத்தில் சிவப்புத்தன்மை நன்கு தோற்றுவது போன்று, பிராந்தியுடன் கூடிய சித்தத்தின் சம்யோகத்தால், இப்பிராந்தி யநுபவமும் ஆன்மாவின்கண் தோன்றுகின்றதென்பதும் பொருந்தும். (128)

சங்கரபகவற்பாதர்:—இங்ஙனங் கூறின், இப் பிராந்திக்குப் பற்றுக்கோடு அந்தக் கரணமென்றே கொள்ளப் பட்டதாயிற்று அங்ஙனமாயுழி, அதற்கு ஆன்மாவின்

சம்பந்தம், உண்டோ? அல்லது, இன்றோ? உண்டென்பதுவோ பொருந்தாது, அன்னியதாக்கியாதியைக் கொள்ளும் உமது மதத்தில் சம்பந்தமென்பது ஒன்று இல்லாமையின். (129)

சம்பந்தம் இன்றென்பதுவும் அமையாது; அபரோட்சமாகிய, நான் மனிதன் என்னு முணர்வு, பிரசித்தியாகிய பிராந்தியா மென்பது பொருந்தாமையின், ஆன்மாவின் பரிணாம மென்னும் இரண்டாவது பட்சமும் பொருந்தாது, என்னை? (130)

பிறவற்றின் சம்பந்தமற்ற ஆன்மா நிரவயவமாதலின், பரிணாமத்திற் குரியதென்னுந் தன்மை பொருந்தாமையானும், பரிணாமத்திற் குரியதாந் தன்மை பொருந்தினும் சிதான்மாவிற்கு, புத்திவடிவ பரிணாமம் பொருந்தாமையானு மென்க. (131)

("ஒன்று மறியாமற் சுகமாய்த் தூங்கினேன்" என்னுந் தோற்றத்தால்) கரணங்களொடுங்கிய விடத்தும் நித்தியமாகிய ஞானத்திற்குப் பற்றுக்கோடாந் தன்மையையுடைய சிதான்மாவிற்கு மறித்தும் பிராந்தி வடிவாகிய பிற பரிணாமம் இல்லை. குணமுதலானவைகளுள், அவாந்தர சாதியினின்றுஞ் சமான சாதியையுடைய குணங்களுக்கு சமுதாய அடைவின்மையின் ஒரேகாலத்தில் சமவாய முண்டாந் தன்மை கூடாமையின். (132)

பட்டபாஸ்கரர்:—யாண்டும், இரண்டு வெண்மை நிறங்கள் ஒன்றாய்த் தோன்றுகின்றதில்லை; அற்றேல், (எமது மதத்தில் ஞானம்) குணமுமன்று, குணியுமன்று, அங்

னமாகவே கூறிய தோடமுடைய தன்மை பற்ற மாட்டாது. (133)

சங்கரபகவற்பாதர் :—இங்ஙனங் கூறினே, அது பொருந்தாது ; என்னே ? கங்கணங்களுக்குப் பற்றுக் கோடாயுள்ள, ஒளிர்கின்ற பொன்னிற்கு (அக்காலத்திலே) மற்றொரு பூடணத்திற்குப் பற்றுக் கோடாந் தன்மை பொருந்தாமை போன்று, நித்திய ஞானத்திற்குப் பற்றுக் கோடாகிய சிதான்மாவிற்கும், மறித்தும் மற்றொரு ஞானத்திற்குப் பற்றுக் கோடாந் தன்மையும் பொருந்தாது ஆதலின். (134)

பிராந்தி யென்னுஞ் சப்தத்தின் பொருளைக் கூற முடியாதபோது, சமஸ்காரத்தை யுணராமையே அவித்தையா மென்பதுமில்லை ; பிராந்தி யென்னும் பெயருள்ள தொன்று பெறப்படாத விடத்து, பிராந்தியால் தேடப் பட்ட சமஸ்கார மென்பதும் பெறப்படாமையின். (135)

அவதாரிகை.

(மற்றும் உணராமை யென்றதும், சொரூபத்தை யுணர்தலின் அபாவமோ ? அல்லது, ஆகந்துகமோ, (விருத்திவடிவமோ) ? என விகற்பித்து முதலாம் பட்சம் பொருந்தாதெனக் கூறப்படுகின்றது )

உணராமை யென்பது சித்துவடிவின் அபாவமன்றும்; சித்துரூப உணர்ச்சி நித்தியமா மாதலின், விருத்தியின் அபாவ வடிவமே உணராமை யென்பதும் பொருந்தாது ; விருத்தி அபாவமானவிடத்து (ஆகந்துகவுணர்வு இல்லாதுழியும்) சிதான்மா விளங்குதலின். (136)

அஞ்ஞானம், துக்க, சட, அநித்திய, வடிவமெனக் கொள்ளிலோ, அதை நிவிர்த்திப்பது காணப்படவில்லையே யெனக் கூறுதலொழிக, (தத்துவமசி முதலான மகாவாக்கியங்களா லுண்டாகிய) அகண்டாகார விருத்தியில் ஆரூடமாகிய பிரமசைதன்யம் அஞ்ஞானத்தை நீக்குதல் கூடுமெனல் பொருந்தலின். (137)

அஃதன்றியும், பிரியம், வெறுப்பு என்பவைகளின் சாதன ஞானந் தோன்று மிடத்து சருவ சங்கர (எல்லாங் கலப்பு) வாதியாகிய உமது மதத்தில், உலகம், பிரவிருத்தித்தல் நிவிருத்தித்தல், (பற்றல், விடல்,) என்பதும் பொருந்தாது, சருவ விவகாரமும் சங்கரமாதலின் (வழக்கனைத்தும் கலத்தலின்) உமது வாழ்வும் அரியதாயிற்று. அந்தோ! போதும் போதும் (உமது நிரூபணம்). (138)

இவ்வாறு பட்டபாஸ்கரருடை தீயமதம் தாழ்ந்தவிடத்து, சங்கரபகவற்பாதருடைய பிரசங்க மென்னும் அமுதம், பெருமழைக் காலத்திய மேகக் கூட்டங்கள் ஒதுங்கியபோது கார்த்திகைத் திங்களின் கலைமதி நிலவு பரந்தொளிர்வதுபோற் பரந்து விளங்கியது. (139)

## ஆருகதமதத்தை வெற்றி கோள்ளல்

பின்னர், சங்கரபகவற்பாதர், அவந்தியில் (உச்சைனியில்) பிரசித்த பண்டிதர்களான, பாணர், மயூரர், தண்டி என்னும், சிறந்த அறிவாளிகளை விவாதத்தால் தீய ஆணவச் செருக்கொழிந்தவர்களாகச் செய்து, தமது வேதாந்த பாடியத்தைச் சிரவணஞ் செய்ய விருப்புடையவர்களாகச் செய்தருளினர். (140)

பின்பு, மகரிஷியாகிய சங்கரபகவற்பாதர், அநேக தேசங்களை யடைந்து, தம்முடைய மாணுக்கர்களுக்குத் தமது பாடியத்தை இனிது போதித்துக் கொண்டிருக்குமிடத்து, ஆருகத மதத்தை எடுத்துக் கூறுங்கால், ஆருகத மத பண்டிதரிற்சிலர், அதைக்கேட்டுப் பொறுக்கமுடியாதவராகிக் (கீழ் வருமாறு) கூறினர். (141)

அற்றேலங்ஙனாகு, சங்கரபகவரே, தாங்கள், ஞானவடிவாகிய சீவன், சடமாகிய அசீவன், இந்திரியப்பிரவிருத்தி யென்னும் ஆசிரவம், அதைப் பற்றிக்கொண்டுள்ள, சமதம முதலிய பிரவிருத்தி யென்னும் 'சம்வரம்' அனுதி மலத்தைப் போக்கத்தக்க காய்ந்த கல்மேலேறல் முதலான 'நிர்ச்சரம், பந்தம், மோட்சம், என்னும் இவ்வேழு பொருள்களையும் எழுவகை முறையாக எவ்வாறு உடன் படுகின்றீரல்லீர்? (142)

(ஈண்டு இதற்கு அநுகூலமான ஆருகத மதக் கொள்கைகளிற் சில காட்டுவாம்:—ஞான வடிவ சீவன், சடவடிவ அசீவன், என்னும் இவ் விரண்டின்விரிவு ஐவகைத்தாம், அவை, சீவாத்திகாயம் புத்கலாத்திகாயம், தருமாத்திகாயம், அதருமாத்திகாயம், ஆகாயாத்திகாயம், என்பனவாம். காயமென்பதோ, கூறுகின்ற வாசகமாம். அவற்றுள் சீவாத்திகாயம் மூவகைத்து; பந்தமுடையவன், முத்தன், நித்தியசித்தன், என்பனவாம், அவருள் அருகக்கடவுள் நித்திய சித்தர், மற்றையோர் சாதனங்களால் முத்தியடைந்தவர். இன்னொருவகையார் பந்த முடையவர். புத்கலாத்தியமும் அறுவகைத்தாம், அவை பிருதிவி முதலான நான்கு, தாவரம், சங்கமம், என்பனவாம், பிரவிருத்தியால் அநுமானிக்கப்பட்ட அபூர்வ மென்னுந் தருமம் தருமாத்திகாயம்;

மேலே செல்லத்தக்க உடம்பு மேலெழும்பா திருத்தலால் அநுமித் தறிந்தது அதருமாத்திகாயம்; ஆகாயாத்திகாயம் இருவகைத்து, உலகாகாயம், அலோகாகாயம் என, அவற் றுள் உலகங்களுக்குள் ளிருப்பது முதலாவதாம், மேலே யுள்ள முத்தித்தானம் இரண்டாவதாம் பந்தம்; எண் வகைத்து, அவை, ஞானத்தால் பொருள் பெறப் படுகின்ற தில்லை என்னும்விபரியயம் ஞானவரணியம்; ஆருகதநூலால் முத்தியில்லை யென்றுணரல் தரிசனவரணியம், ஆருகத நூலாசிரியர் கூறிய முத்திநெறியில் உறுதி யில்லாமை மோகனீயம், முத்தி நெறியிற் பிரவிருத்தித்தவர்களுக்கு அதைத் தடைப்படுத்துவது அந்தராயமாம், இந் நான்கும், முத்தியைப் பெறுது கெடுத்தலின் காதககருமங்க ளெனப் பட்டன. தேகோற்பத்தியை யுணர்தல், வேதனீயம், அதைப் பற்றியது நாமிகம், சுக்கில சோணிதமாய் வெளிப் படாத தேகோற்பத்தியின் முந்நிலைமை, கோத்திரிகம்; ஆயுளைக் காட்டுவது ஆயுட்கம்; இந் நான்கும் அகாதக கரு மங்கள் இவ் வெண்வகைக் கருமங்களும் மனிதனைப் பந்தப் படுத்துகின்றன. கிலேச மனைத்தும் நீங்கி நிராவரண ஞான சுகவடிவாகிய ஆன்மா மேலிடத்திற் சென்று நிலைத்தல், அல்லது, பந்தம் நீங்கிய ஆன்மா மேலே செல்லல் முத்தி யாம்.

எழுவகை நீதி (முறை)கள்:—ஆகும் உள்ளது, ஆகும் இல்லது, ஆகும் உள்ளது இல்லது, ஆகும் சொல்லொணு தது, ஆகும் உள்ளது சொல்லொணுதது, ஆகும் இல்லது சொல்லொணுதது, ஆகும் உள்ளது இல்லது சொல்லொணு தது, என்பன.

இவற்றுள், பொருள் உள்ளது என விரும்பில் முதலா வதாம். இல்லது என விரும்பில் இரண்டாவதாம்,

முறையே இவ்விரண்டையும் விரும்பில் மூன்றாவதாம், முதலாவதையும் இரண்டாவதையும் விரும்பில் நான்காவதாம், முதலாவது நான்காவது என்னும் இரண்டையும் விரும்பில் ஐந்தாவதாம்; இரண்டாவது நான்காவதென்னும் இரண்டையும் விரும்பில் ஆறாவதாம்; இரண்டாவது நான்காவதென்னும் இரண்டையும் விரும்பில்; ஏழாவதாம்; என்னும் பாகுபாட்டையுணர்க, இதன் விரிவை இந்நூலின் உரையிற் காண்க.

இவ்வாறு ஆருகத மதத்தர்கள் எடுத்துக்கூற அதைக் கேட்ட மௌனியாகிய சங்கரபகவற்பாதர், ஆருகதர்காள், சீவாத் (ஸ்) திகாயம் என்பது எவ்வாறாயது? அதை விளக்கிக் கூறுவீர்களாக, என்றனர் அதற்கு அவ் வாருகதர்கள் "பண்டிதரே, அது, உடம்பிற்கொத்த பரிமாணமுடையதும், கூறிப்போந்த எண்வகைக் கருமங் களாற் பந்தப்பட்டதுமாம்" என்றார்கள். (143)

சங்கரபகவற்பாதர் :—மகத்பரிமாணமும், அணுபரிமாணமுமற்ற (மத்திய பரிமாணமுடைய) அச்சீவன், (மத்தியபரிமாண முடையவனாதலின், குடமுதலானவைகள் அநித்தியமாவன போன்று) அநித்தியனே யாவன் (நித்திய மாகான்) மற்றும், மனிதசீவன், மனித தேக பரிமாணத்தை யடைந்து ஒரு கருமவசத்தால் மனித வுடம்பினின்று யானையின் உடம்பை யடையின் (யானையின்) தேகத்தில் முற்றும் புகான்; சீவன் புகுந்தவிடத்தினும் வேறாகிய இடம் சீவன் இல்லாததாகிவிடும்; மற்றும், சிதலின் உடம்பை யெடுக்கினும், அதில் அச்சீவன் முழுதும் புகமாட்டான்; (சிதலின் தேகத்தினும் புறம்பே சீவன் நிற்பன் என்று சங்கித்தனர்). (144)

ஆருகதர்கள் :—அற்றன்று, இச்சீவனுக்குப் பெரிய சமுதாய வுடலிற் சம்பந்த முண்டாகுங்கால், சில கூறுகள் விரிந்து கொள்கின்றன, அங்ஙனமே, சிறிய வுரு வுள்ள வுடம்பை அடைய விருப்புற்ற இச் சீவனுக்குச் சிலகூறு கள் சுருங்கிக் கொள்கின்றன. (இவ்வுடல் நிகழ்ச்சியினும்) 'தேக சமன், என்னுஞ் சுருதியாலும், சீவன் தேகத்திற்குச் சமனே யாவன் (மத்திய பரிமாண முடையவனே யாவன் என்பதாம்.) (145)

சங்கரபகவற்பாதர் :—இவ் வவயவங்கள், குவிதல், விரிதலையடையுங்கால், உடம்பைப் போன்றே சீவத் தன் மையை யடைகின்றன என்பதெவ்வாறும்? அடையவே மாட்டாதனவாம். மற்றும், அணுன்மாவாகிய சீவனுடைய அவயவங்கள் எவ்வாறு வெளிப்படுகின்றன? அவ் வவயவங் கள் அணுன்மாவின்கண் இலயமாகின்றன என்ப தெவ் வாறும் (விரோத மாகையால்)? (146)

ஆருகதர்கள் :—ஆன்மாவின் அவயவங்கள் உற்பத்தி நாசம் இல்லாதன ; (நித்தியமாக இருந்துகொண்டே இவை) விரிதல், குவிதல், என்பவற்றை யடைகின்றன, இங்ஙன மாகுமிடத்து விரிதலை யடைந்து (யானையினுடம்பில்) முழு தும் புகுகின்றான் ; குவிதலைக்கொண்டு (சிதலின் உடம்பில்) அற்பமாய்ப் புகுகின்றான். (147)

சங்கரபகவற்பாதர் :—அற்றேல், அவைகள் அசேத னங்களோ? அல்லது சேதனங்களோ? நீங்கள் கூறுவீர் களாக. சேதனங்க ளென்பீரேல்? (அநேக சேதனங்களுக் குக்கருத்து ஒன்றேயென்னும் நியதமின்மையின்) விரோத புத்தியால் தேகம் சிதறித் தூளாயொழியும் ; அசேதனங்க

ளென்பீரேல், உடம்பு முழுவதும், உணர்வுடையதாகச் செய்யாவாம். (148)

ஆருகதர்கள் ,—தத்துவ ஞானிகட் கிறைவரே, அநேக குதிரைகள் ஒரே புத்தியுடன் இரதத்தைச் செலுத்துகின் றன வன்றோ, அதைப்போல், ஒன்றற்கொன்று சைதன் யத்தன்மையைப் பெற்று இத்தேகத்தை செலுத்துவன வுமாம். (149)

சங்கரபகவற்பாதர் :—நன்மதியோர்காள், குதிரைகள் அநேகமா யிருப்பினும், நியமிப்பவனொருவன் இருத்தலின், இரதத்தைச் செலுத்துவதில் ஒரே மதியுடையனவாந் தன்மையை அடைவனவாதல் கூடும்; இச்சீவன்விடய மாய் ஒருவரும் நியமிப்பவரின்மையின் ஒரே மதியுடையன வாந் தன்மை பொருந்துமா றெங்ஙனம்? (150)

ஆருகதர்கள் ;—நீத்தார்களிற் சிறந்தோய், சீவனுடைய உறுப்புக்கள் விரிகின்றன ; குவிக்கின்றன ; ஆனால் யானை முதலான உடம்புகளில் விரிகின்றன ; பிரியமிலாததில் (சிதல் முதலான உடம்பில்) குவிகின்றன ; இதில் நீரட் டையே எடுத்துக் காட்டாகும். (151)

சங்கரபகவற்பாதர் :—இவ்வாறாகில் அவைகள் பரி ணும முடையனவா மாதலின் குடம்போல் நாசமடைவன வாம். இவ்வாறாய விடத்து, சீவனும் நாசமுடையனவன்; ஆகிலோ செய்த கருமமொழிதல் செய்யாத கருமத்தைக் கொள்ளல் என்னுங் குற்றங்களும் வருகின்றன, கிருதநாசம் அகிருதாப்யு கமம் என்பதுமிது. (152)

மற்றும் இங்ஙனமாகுங்கால், எண்வகைக் கருமங் களின் சுமைகளால் இடையறாதுபவக்கடலில் மூழ்கி

க்கிடக்கும் பிராணிகளுக்கு சுரைக்குடுக்கையைப் போன்று நீங்கள் கொள்ளும் முத்தியும் பாதமுடையதாகும். (153)

அஃதன்றியும், ஆருகதர்காள், சாதனவடிவமான உங்களுடைய எழுவகை ரீதிநெறி நியாயமும், யான் உடன்படத் தக்கதல்ல, என்னை ? பரமார்த்திக சத்திற்கு விரோதமாகிய சத்துவ, அசத்துவ, தருமங்கள் ஒரே தருமியில் ஒரு காலத்தில் உண்டு என்பது பொருத்த மில்லை, ஆகையால் என்க. (154)

இவ்வாறாக, ஆருகதர்களையும், ஆருகதமதத்தைத் தழுவின மாத்திமிகரையும், செருக்கற்றவர்களாகச் செய்துவிடத்து, சங்கரபகவற்பாதர், நைமிசத்தில் தமது பாடியங்களைப் பரப்பிவிட்டு, தரதம், பரதம், சூரசேனம், பாஞ்சாலம் முதலிய தேசங்களையும் வெற்றி கொண்டனர். (145)

பின்பு, பாடியகாரராகிய சங்கரபகவற்பாதர், அரியயுத்திகளால் சாத்திரங்களனைத்தையும் மறுத்தவரும், பட்டபாதர், பட்டபாஸ்கரர், உதயணாசிரியர், என்பவர் முதலனோர்களால் வெல்லமுடியாதவரும், பெருஞ்செருக்குடையவருமாகிய கண்டனக்காரரை (கண்டன கண்ட காத்நிய மென்னும் நூலின் ஆசிரியராகிய அர்ஷமிசிரரை) பெருவிவாதஞ்செய்து வென்று தமக்கு மாணாக்க ராக்கிக் கெண்டனர். (156)

## அபி நவ குப்தரை வெல்லல்

பின் சங்கரபகவற்பாதர், காம வடிவ மென்னுமோர் தேச விசேடத்தையடைந்து, (பிரமசூத்திரத்திற்கு) சத்திபரமாகிய பாடியஞ் செய்தவ ரென்னும் அபிநவ குப்தரைவெற்றிகொண்டனர். அதன்பின் அபிநவ குப்தர் கீழ் வருவாறு ஆலோசித்தனர். (157)

"மறைகளென்னுங் கமல மலருக்கு இளஞ்சூரியன் போன்ற இச் சங்கரபகவற்பாதருக்கு ஒப்பானவர் மூவுலகத்திலுமிலர். எவ்வாற்றாலும் இவர் நமது வசமாகார் ஆதலின் இவரை யான் தெய்வ கிருத்தியத்தால் தோல்வியடையச் செய்கின்றேன் என்பதாம். (158)

இவ்வாறு, அவர் மனதில் இரகசியமாகவும், பின்னர் தமது மாணுக்கருடன் கூடியும், ஆலோசித்துக்கொண்டு தமது சத்திமத பாடியத்தை மெல்ல கைவிட்டு, சங்கர பகவற்பாதருக்குச் சீடர் போன்று பின்றொடர்ந் திருந்தனர். (159)

இவ்வாறு, வடதிசைக் கண்ணுள்ளவர்களைத் தமக்கு மாணுக்கராக்கிக் கொண்டு, விதேக தேசத்தவர்களிற் சிறந்தவர்களாற் செய்யப்பட்ட ஆராதனையை யடைந்தவராய், அங்கதேசம், வங்கதேசம், என்பவற்றிலும் இவ்வாறு பெருமையைப் பெற்று, கௌடதேசத்தை தயடைந்தனர். (160)

கௌடதேச வெற்றி

பின் சங்கரபகவற்பாதர் கௌடதேசத்திற் சிறந்தவர்களான, முராரி மிசுரரை இயல்பாகவே வெற்றி கொண்டு உதயணு சாரியரையும் விவாதத்தால் வெற்றி கொண்டு, தரும குப்தமிசுரரையும் வெற்றி கொண்டு கௌடதேசத்தில் பெருங் கீர்த்தியை யடைந்தனர். (161)

முன்னர், கலியில், சிறந்த அந்தணர்களை மோகிக்கச் செய்த அசத்தராகிய அப் புத்தருக்கு விரோதிகளான பாஸ்கரர் முதலானவர்கள், வேதசாத்திரங்களைப் பழிக்கின்றவர்களானதாலும், தீயமதியால் பொய்வாதம் புரிகின்

றவர்களானதாலும், பொய் வடிவங்களிற் பிடிவாத முடைய வர்களானதாலும், மறைமுடிகளில் வல்லுந ராகிய சித் தார்களிற் சிறந்த சங்கரபகவற்பாதர், அவர்களை, ஒரு கணப் போதில் அச்ச மடையுமாறு செய்தனர்; இதனால் பொய் மதத்தைக் கொண்டமையின், புத்த மதமும் பய முற்றது. (162)

சாத்த மதத்தர், பாசுபத மதத்தர், க்ஷபணக மதத் தர், காபாலிக மதத்தர், வைணவ மதத்தர், மற்றைய வைசேடிக மதத்தர், என்பவர்களாலும்,ஏனைய தீய மதவாதி களாலும், கேடுற்ற வைதிக நெறியைப் பாது காப்பாற்றுதற் பொருட்டே முற்றறிவுடைய முழுமுதற் கடவுளாகிய சங்கரபகவற்பாதர், உக்கிரமான மதவாதிகளை வெற்றி கொண்டனர்; அது புகழின்பொருட்டன்று: ஆகையால், இவர், பெரும்புகழுடையாரலர் என்பது யாங்ஙனம்? (இவ ரை உலகனைத்தும் பெருமையுடன் ஏற்றுக் கொள்ளுமென் பது கருத்து.)? (163)

அஃதன்றியும், உலகிற்கு முதல்வனாகிய கமலாசனத் தனால் உபதேசிக்கப்பட்டதும், அவனுடைய புதல்வர் களான சனகாதியர்களால் நன்கு போதிக்கப்பட்டு மறித் தும், வால்மீகி முதலான பேரறிவாளர்களால் முழுதும் பழக்கஞ் செய்து வைத்ததுமாகிய அத்துவித நெறியில், பேத வாதிகளென்னுந் தீய மதத்தர்களான முட்களை, தயாளராகிய சங்கரபகவற்பாதர், நன்றாய்க் களைந்தெடுத்து விட்டு முத்தி நெறியிற் செல்லத்தக்க மூமூட்சுக் களால் (முத்தி விருப்புடையர்களால்) அதில், இனிது பழக்கஞ் செய்யத் தக்க நிலைமையைச் செய்தருளினர். (164)

மிகப் பெரிய வயிகறுளை யுடையவரும், நாவில் அதிக தினவுடையவருமான பாகண்டர்களை மறுத்தலின் கண் ணேயே மிகப்பிரிய முடையவரும், சாந்தி, தாந்தி, உபரதி, அடக்கம், பரமான்மாவில் மனவொருமைப்பாடு, என்னும் அறுவகை அன்னையர்களால் அறுமுகக் கடவுள் போன்று வளர்ந்த திருமேனியை யுடையவருமாகிய எதிச் சக்கர வர்த்தி யென்னும் சங்கரபகவற்பாதர் சிறந்து விளங்கும் போது, புதர்களுக்கு (பண்டிதர் களுக்கு அல்லது தேவர் களுக்கு) பீடையென்பது எங்கிருந்து வரும் (எவ்வாற்று னும் வருத்தமேயில்லை யென்பதாம்)? (165)

எவருடைய விவாதப்போரின் தொடக்கத்தி லெழுந்த கருணலம் என்னும் பறைவிடேத்தின் ஒலிகளால், உலோ காயத மதத்தர்கள் விரைவில் ஓடிவிட்டனரோ, கணாத மதத் தர்கள், சேனைகளின் தூளிபடலத்தாற் குருட ரானார்களோ, சாங்கிய மதத்தர் விவாதப்போர் செய்ய எங்களால் முடியாது என்னும் புத்தியைக் கொண்டனரோ, அவ் வனைவரும் விவா தஞ் செய்து தோற்று ஓடுங்கால் அவர்களுடன் கூடவே இடையில் பதஞ்சல மதத்தரும் இயல்பாகவே ஓடிவிட்ட னரோ, அத் தன்மையராகிய சங்கரபகவற்பாத முனிவருக் கெதிரில் நின்று விவாதப்போர் புரிய உலகில் வாதிக ளென்னும் படைவீரர் யாவர்? (166)

முன்னர், மண்டனபண்டிதருடைய மறுப்பில் கலகங் கூடாதென்னுங் கட்டுப்பாட்டால் சங்கரபகவற்பாதருக் குண்டான, மிக்க வழகான, ஒலியின் பெருக்குக்கள், இப் போது, பாகண்டர்களான தீய மதத்தர்களென்னும் அடவி களில் காட்டுத் தீச் சுவாலைகளாயின. (167)

சங்கரபகவற்பாதருடன் விவாதப் போர்புரிய, முன்வந்த புத்தர்கள் உண்மையராய் எதிர்த்து நிற்க முடியாமல் விரைவாய் ஒருகணப் போதிலேயே ஓடிவிட்டனர்; கணாதர்கள் ஒரு மூலைக்குள் மறைந்து கொண்டனர்; கௌதம மதத்தர் பேரிருளில் அழுந்தினர்; காபிலர், குறைவடைந்து ஓடினர் அதுபற்றியே பாதஞ்சலர் சஞ்சலமடைந்தனர்; இத்தன்மையராகிய எதிகளுக் கரசரின் ஆற்றல் எதனுடன் ஒப்பிடத்தக்கதாம்? (168)

வைதிகரான வாதிகளுடன் விவாதமாகிய போர் புரிந்ததில், போராடின கணாத மதத்தர் முதலானோர்களிற் சிலர், அப் போரில் கையாற் பிடிக்கப்பட்டனர்; வேதத்திற்குப் புறம்பான உலோகாயதர்கள் கட்டாயத்தாற் கொல்லப்பட்டனர்; அம்ம! இக் கணாதர் முதலானோர்கள் பிரமானந்த மென்னும் அவருடைய இராச்சியத்தில் வேலைக்காரர்களாக நியமிக்கப் பட்டவராய் அச் சங்கர பகவற்பாதரையே சேவித்தனர்; இது எதிகளுக் கரசரின் வீரத்தின் பாற்படுமோ, அல்லது தயையின் பாற்படுமோ அறிகிலேம் இது மிகவியப்பா யிருக்கின்றது. (169)

சாந்தி முதலானவைக ளென்னுங் கடலுக்கு வடவானலச் சுவாலைகளும், சத்தியங்களென்னு மேகங்களுக்குச் சுழற் காற்றும், தயை யென்னும் நிலவுக்கு அமாவாசையிரவும், சாந்த மென்னுந் தாமரை மலருக்கு நிறைமதி நிலவும், ஆத்திக மென்னுந் தருவிற்கு புதிய காட்டுத் தீயின் வரிசையான சுவாலைகளும், நற்கதை யென்னும் அன்னத்திற்கு பெருமையுமாக வுள்ள பாகண்டர்களின் வாக்கின் பெருக்கு, துறவிகளுக் கரசராகிய சங்கரபகவற்பாதரால் மறுக்கப் பட்டது. (170)

*நாற்புறத்துஞ் சூழ்ந்த அழகான அத்துவித அமுத மழையைப் பெய்வதும், முத் தாபங்களையும் அடியோடு தொலைக்கத்தக்க பேராசிரியராகிய சங்கரபகவற்பாதரின் திருவாக்குக்க ளென்னும் முகில்களால், சீவப்பிரம அபேதத்தைப் பயனுகவுடையதும், துர்ப்பிட்சுக்களால் (பௌத்தர் முதலானோர்களால்) தேடப்பட்டது மாகிய துர்ப்பிட்சம் (பஞ்சம்) அம்ம! அம்ம! இப்போது நீங்கியது, கொடிய பாகண்டர்க ளென்னும் பெரிய வெப்பமுஞ் சாந்தமானது.* (171)

*சாந்தர்களான பாதஞ்சல மதத்தருக்குத் தூதுவரும், காபில மதத்தர்களுக்குப் பாதுகையைத் தாங்கல் முதலான தொழிற் செய்பவரும், கணத மதத்தர்களுக்கு வாயில் காப்பாளரும், க்ஷபணகர் என்னும் அரசருக்குச் சேனைகளும், (க்ஷபணகர் = ஆருகதர்) திகம்பர குலத்திலுண்டாகிய தானைத் தலைவரு மான, புதிதாயெழுந்த சில சாருவாகர்கள், சங்கரபகவற்பாதருடைய திருவாக்கால் அத்து விதப் பிரசங்கத்திற்கு அங்கமாய்ச் செய்யப்பட்டார்கள்.* (172)

*இவ்வாறு எல்லாத் திசைகளிலும் துவிதம் என்னும் பேச்சே நீங்கிய விடத்து, சூரியன் பேரிருளைத் தொலைத்து மிகுந்த பிரகாசத்தைப் பரப்புகின்றானன்றே; அதைப் போன்று, சங்கரபகவற்பாதர் நாடோறும் ஐயப்பாடெலாமொழித்து, அத்துவித மார்க்கத்தை நாற்புறத்தும் விரித்தருளினர்.* (173)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கர திக்கு விசயச் சுருக்கத்தில் திக்குவிசய
விளையாட்டை மேற்கொண்ட
பதினைந்தாவது சருக்கம்
முற்றும்.

---

# பதினாறாவது சருக்கம்

## சாரதா பீடவாசத்தை விதத்தல்

அதன் பின்னர், நீத்தார்களுக் கரசராகிய சங்கர பகவற்பாதர், அனைவரினுஞ் சிறந்த மாந்திரிகராகிய அபிநவ குப்தரை வெற்றி கொண்ட காலந் தொட்டே, அவ் வபிநவ குப்தர், தாம், தோல்வியடைந்தமையின் மனம் மிகக் கெட்டவராய்ச் சங்கரபகவற்பாதரைக் கொல்லல் வேண்டுமென்று முயன்றனர். (1)

அதினின்று, பெருந்துவேஷங் கொண்ட மூடமதியுடைய அவ் வபிநவ குப்தர், எதிகளிற் சிம்ம மாகிய சங்கர பகவற்பாதர்மேல் ஏவல்வினை செய்துவிட்டார். அதனால் சங்கரபகவற்பாதருக்கு, வைத்தியர்களால் நீக்குதற்கரிய மூல நோயுண்டானது. (2)

பரிகரித்தற் கரிய அம் மூலநோயால் ஒழுகிய இரத்தத்தால் நனைந்த அவருடைய ஆடைகளை, தோடகாசிரியர் அருவருப்பற்றுத் தோய்த்தலாகிய திருப்பணியை அவருக்குச் செய்து வந்தனர். (3)

இவ்வாறு மூல வியாதியால் துன்புற்ற ஆசிரியரை நோக்கி மாணாக்கர்கள், பகவ, தங்களுக் குண்டாகிய இப் பெருநோய் உபேட்சிக்கத் தக்கதன்று, தண்டிக்காத பகைவர் வளர்வதுபோன்று இது விருத்தியாகும் என்று, மெல்ல கீழ்வருமாறு தெரிவித்தார்கள். (4)

(ஆசிரியோத்தமரே) தாங்கள் இவ்வுடம்பில் 'எனது' என்னும் புத்தியின்மையின் இத்தன்மைய நோயாலுண்டா

கிய பீடையையும் எண்ணிலீர், அருகிலுள்ள யாங்கள் அதைக்கண்டு இயற்கையிற் கிலேச மடைந்தவர்களாய்ப் பெருந் துன்புறுகின்றோம். (5)

(அற்றேல் யாது செய்யத்தக்கதெனின்) ? பகவரே இப்போது வைத்திய நூற் கூறிய, பொருட் சித்தியுடையவர்கண் கூடாகச் சிலர் இருக்கின்றனர்; ஆதலின் நோய் நிதானத்தில், அறிஞராகிய சிறந்த வைத்தியரை எங்கிருந்தேனும் அழைத்துக் கொண்டு வரல் வேண்டும்'' என்றனர்(6)

என்னைப்போல்நீவிரும்உபேட்சித்திருக்கில்
என்னை கோலோ? எனச் சங்கரர் ஆசங்கிக்க,
மாணவர் கூறல்

உடம்பு முதலானவைகளில் அபிமான மின்மையின், ஆசிரியர் (உடம்பைப் பற்றியதை) உபேட்சித்திருப்பரேனும், ஆசிரியரின் துன்பத்தைப் பார்க்கின்ற ஆற்றலுள்ள மாணுக்கர்கள் உபேட்சை செய்ய வுரியாரலர்; என்பது சாத்திரத்தால் உறுதிப் பட்டுள்ளதாம். (7)

அன்றியும், பகவற்பாதராகிய தங்களுடைய திருவடிக் கமலங்கள் நல்ல நிலைமையிலிருக்கில் நாங்களும் நல்ல நிலைமையிலிருப்போம், என்னை ? அத் திருவடிக் கமலங்களில் நாங்கள் வண்டுகள் போன்று வாழ்ந்து கொண்டிருக்கின்றோமாதலின். ஆகையால், போற்றத்தக்கோய், தங்களுடைய திருமேனி எவ்வாற்றால் நல்ல நிலைமையிலிருக்குமோ, அவ்வாற்றையே எங்களுடைய மனம் விரும்புகின்றது. (8)

எக் காரணத்தால், நோய் முற்பிறப்பின் பாவ கருமத்தினுடைய பயனேமோ, அக் காரணத்தாலே இந் நோய் போகத்

தினால் தொலைக்கத் தக்கதாம்; அநுபவித்துத் தொலைக்காத இந் நோய் வேறு பிறப்பிலும் ஒருவனை விடாது (பற்றும்) என நூல் கூறுகின்றது. (9)

அற்றேல் வாகடநூல் பயனற்றதாமோ வெனின் ? அதற்கு மறுமொழி

வியாதி இருவகைத்தாம், என்று அறிஞர்களாற் கூறப்படுகின்றது ; அவற்றுள், ஒன்று கருமத்தாலுண்டாவது ; மற்றொன்று, வாதம் முதலான தாதுக்களால் (தாதுக்களின் மாறுபாட்டால்) உண்டாவது ; முதலாவது நோயோ, கருமமொழிதலினாலே நாசமாம் ; இரண்டாவது நோயோ, பரிகாரஞ் செய்வதால் ஒழியும். (10)

எனது உடம்பி லுண்டாகி யிருக்கின்ற நோயோ, கரும நாசத்தினாலே யொழியத் தக்கதாகும் ; யான் அதற்குப் பரிகாரஞ் செய்யேன், அதனால் உடம்பொழிந்து விடுமெனிலோ, ஒருதலையாக வீழ்க. சிறிதும் யான் அதில் அச்ச முறேன். (11)

ஆசிரிய, இது உண்மையே ; தங்களுக்கு உடம்பில் ஆசையில்லை ; நாங்களோ அத் திருமேனி நீண்ட நாளிருக்க வேண்டுமென்று விருப்புடையவர்களாக இருக்கின்றோம் ; எதனாலெனிலோ, தங்களுடைய வாழ்வினாலேயே நாங்கள் வாழ்ந்திருத்தலுமாகும் ஆதலின், (எதுபோன்றெனின் ?) நீரில் வாழுகின்ற உயிர்களுக்கு நீரே வாழ்வாம் அது போன்று. (12)

அறிஞரே, செயற்பாலன செய்து முடித்த நல்லார்கள் பிறர் நலத்தின் பொருட்டே தங்களுடைய உடம்பைப்

பாதுகாக்கின்றார்கள் ; ஆகையால் தங்களாலும் இவ்வுடம்பு உலக நன்மையின் பொருட்டு இனிது பாதுகாப்பாற்றத் தக்கதாம். (13)

சங்கரபகவற்பாதர், இவ்வாறாக மாணாக்கர்கள் கட்டாயப் படுத்தியதால் எந்தத் திக்குகளி லிருந்தேனும் சிறந்த வைத்தியரை அழைத்து வருமாறு அவர்களுக்கு ஆணை கொடுத்தனர். அநுமதி பெற்றுக் கொண்டு, பிற தேச வாசத்தில் வல்லுநர்களும், அரி பக்தியை யுடையவர்களுமான அவர்கள் களிப்புற்றவர்களாய் ஒவ்வொரு திசையைக் குறித்தும் புறப்பட்டுச் சென்றனர். (14)

புறப்பட்ட அவர்கள், "கவிஞரும், வைத்தியரும், பொருளை விரும்பியவராய், வள்ளலாகிய அரசரையே நாடோறுஞ் சேவிப்பர் ; ஆகையால், இவர் இராசனுடைய நகரத்திற் காணப்படுவார்," என எண்ணினர். (15)

அவர்கள் இவ்வாறு எண்ணிக்கொண்டு, அநேகதேசங்களைக் கடந்து தம்முடைய காரியங் கைகூட, ஒரு அரசரின் நகரத்திற் சென்று ஒரு வைத்தியரைக் கண்டு அவருடன் பேசி, அவரை, ஆசிரியர்களிற் சிறந்த சங்கரபகவற்பாதருக்கருகில் அழைத்துக் கொண்டு வந்தார்கள். (16)

பின்னர், அவ் வைத்தியர், சங்கரபகவற்பாதரின் தொண்டர்களான சிறந்த அந்தணர்களால் அவர் கருதிய பொருள் கொடுக்கப் பட்டதாற் களிப்புற்ற அந்த இராச வைத்தியர், சங்கரபகவற்பாதரை நோக்கி, "பகவரே, ஈண்டு யான் தங்களுக்குச் செய்யத்தக்கது யாது? அதைத் திருவாய் மலர்ந்தருளுவீரேல், எனது ஆற்றலுக் கியைய

அதைச் செய்கின்றேன், என்று வினவிய வைத்தியருக்குச் சங்கரபகவற்பாதர் கீழ் வருமாறு கூறினர். (17)

"பண்டிதரே, குதத்திற் கருகாய் தேகத்திற்கு நடுவில் நோயென்று உண்டாகி உடம்பைப் பீடிக்கின்றது; இந் நோய்க்குச் செய்யத்தக்க உண்மையாகிய மருந்தைச் சொல்வீராக; இந் நோய் பெருஞ் சத்துருவா யிருக்கின்றது" என்றனர். (18)

(அதைக்கேட்ட வைத்தியர், "சுவாமின், தாங்கள் இந் நோயை இதுகாறும் ஏன் உபேட்சித் திருந்தீர்கள்? என்று வினவுமிடத்து, சங்கரர், "யான் இந் நோயை; நீண்ட நாளாக உபேட்சித்து வருகின்றேன்; இந் நோய் பாவ கருமத்தாலுண்டாகிய தென்று எனக்குத் தோற்று கின்றது; அங்ஙனமாயினும், எனது மாணக்கரின் கட்டா யத்தால் உம்மை யழைத்து வருமாறு மாணக்கர்களை யனுப்பினேன்." (19)

என்று, சங்கர முனிவர் கூறியபோது, சிறந்த அவ் வைத்தியர் பலவாற்றாலும் அந் நோயின் பரிகாரக் கிரியைகளைச் செய்தனர், அதனால் நோய் தீரவில்லை அதுபற்றி பெரும் வருத்தமேயுண்டாயிற்று. பின்னர் வல்லுநராகிய வைத்தியர் மனக் கிலேசமுற்றனர். (20)

அதன் பின், முனிவரிற் சிறந்த சங்கரபகவர்பாதர், மனக்கிலேசமுற்ற சிறந்த அவ் வைத்தியரை நோக்கி, "பண்டிதரே, நீர் உமது மனைக்குச் செல்வீராக, நீர் வந்து நெடுநாட்க ளாயின, நோய் தீருவதின் பொருட்டு; உம்மைப் பிரிந்ததால் துன்புறுகின்ற உம்முடைய பிரிய சனங்கள் நீர் வந்த தினங்களைக் கணக்கிட்டுக் கொண்டிருப்பார்கள்;

அரசனும் உம்மையே அடக்கலம் புகுந்துள்ளான், அவன் நீர் பிறதேசம் வந்து விட்டதைக் கேள்விப்படுவனேல் முனிவுற்று உறுதிமொழி கூறிய சீவிதத்தை (உமக்கு ஒவ்வொரு திங்களுந் கொடுத்து வருவதாய் உறுதிப்படுத்திய பொருளை) உமக்குக் கொடுக்கமாட்டான்; அரசன் பாதகமற்ற ஆணையை யுடையவன், குதிரை யோட்டம் போல சஞ்சல மனத்தன், ஆதலின் இவன் வேறு வைத்தியரைத் தனக்கு ஏற்படுத்திக் கொள்ளினுங் கொள்வான். (21, 22, 23)

மற்றும், நோயைப் போக்குபவர் வேறெவரு மின்றியவர்களும், இயல் பாகவே உடம்பில் பிரியமுடைய நகர சனங்களும், அநேக துன்புற்ற சனங்களும், நோயைப் பொறுத்துக் கொள்ள முடியாதவர்களுமான பல்லோர்கள், உமது மனைக்கு வந்து உம்மைத் தேடுவார்கள். (24)

இவ் வுடம்பின் தோற்றம் தந்தையா லானது; இதை நன்கு பாதுகாப்பவர், வைத்தியராவர்; வைத்திய ரின்றெனில், இவ் வுடம்பு தோன்றியும் பயனற்றதேயாம்; ஆகையால், இவ் வைத்தியர் உடம்புடையார் களுக்கு விட்டுணுவே யாவர் என்றனர். (25)

இவ்வாறு சங்கரபகவற்பாதர் திருவாய் மலர்ந்தருளியதைக் கேட்ட வைத்தியர், அவரை நோக்கி, சுவாமின், தங்களால் திருவாய் மலர்ந்தருளியது உண்மையே; அங்ஙனமாயினும் எமது மனம் வீட்டிற்குச் செல்லப் பொருந்தவில்லை; என்னை? தெய்வ பூமியைவிட்டு மனிதபூமியை யாவன் விரும்புவான் (தங்களை விட்டுப் பிரிய, மனமில்லையென்பதாம்)? (26)

என்று சொல்லிவிட்டு, வல்லுநரா யிருந்தும் அவ் வைத்தியர் மனக்கிலேச முடையராய்த் தமது மனைக்குச் சென்றனர். பின்னர், ஆசிரியரிற் சிறந்த சங்கரபகவற் பாதர் உடம்பில் என்னுடையது என்னும் புத்தியை அடி யோடுந் தொலைத்து விட்டு அந்நோயா லுண்டாகிய பெருந் துன்பைப் பொறுத்துக் கொண்டிருந்தனர். (27)

பூமியிற் பிரசித்தி பெற்ற ஆயிரக்கணக்கான வைத்தி யரின் கூட்டங்களால் (பரிகாரஞ் செய்தும்) மூலநோய் மிகுதியானபோது பரிகாரஞ் செய்வதை யொழித்தவ ராய், முனீந்திரராகிய சங்கரபகவற்பாதர் அந்தோ" காமாந்தகனையே கருத்தில் நினைத்துக் கொண்டிருந்த னர். (28)

பின்னர், அக் காமாந்தகனாகிய கடவுளின் ஆணையால் ஏவப்பட்டவர்களும், மற்றும் அசைகின்ற நேத்திரங்களையும், அழகிய தோள்களையும் அரிய புத்தகத்தையும் உடைய, அசு வினி குமாரர்கள் இருவர் அந்தணரின் வேடத்தைத் தாங் கிக் கொண்டு தரையை யடைந்தவர்களாய்ச் சங்கரபகவற் பாதருக் கருகில் வந்தனர். (29)

வந்து, அவரை நோக்கி எதிகளிற் சிறந்தோய் இந் நோய் பரிகாரஞ் செய்தற்குரிய தன்று, மற்றோ, பிறருடைய ஏவற் கருமத்தா லுண்டானது என, யோகியிற் சிறந்த அவ ருக்குக் கூறிவிட்டு அத் தேவதைகளிருவரும் வந்தவாறே மறைந்தனர். (30)

பின்னர், பத்மபாதர் முனிவுற்றவராய், பகைஞர் கூட்டத்தாரிடத்துங் கருணையுடைய சங்கரபகவற்பாதர்

தடுத்தும், (அதைக் கேளாமல்) தமது ஆசிரியரின் நோய் நீங்குதற் பொருட்டு பர மந்திரத்தை (பிரணவத்தைச்) செபித்தனர். (31)

## அபிநவ குப்தரின் மரணம்

செபிக்கவே, (சங்கரபகவற்பாதரின் உடம்பினின்று) அந்த ஏவற் றேவதை திரும்பிச் சென்று, அபிநவ குப்தரின் உடம்பில் அம் மூலவியாதியை யுண்டாக்கி, அந் நோயாலேயே அவரைக் கொன்று விட்டது, பெரியோர்களுக்கு, அறிந்து செய்த பிழை எவர்களுக்குத்தான் இன்பத்தைக் கொடுக்கும்? (32)

## சங்கரபகவற்பாதர் கௌடபாதரைத் தரிசித்தல்

பின்னர், நோய் நீங்கி இன்புற்ற சங்கரபகவற்பாதர் கங்கைக் கரையிலுள்ள மணற்றரையில் பிரமத்தியானஞ் செய்து கொண்டிருக்கும் போது, அங்குக் கங்கையின் நீர்த் திவலைகளால் நனைக்கப்பட்ட தண்மைமிக்க வாயுவைக் கொள்வதுடன் வருகின்ற யோகீசுர ராகிய 'கௌடபாதர், என்னுந் திருநாம முடையாரைக் கண்டு அவர்க் கெதிரிற் சென்றனர். (33)

(அக் கௌடபாதர்—எவ் வண்ணத்த ரெனின்?) விரிந்த வெண்கமல மலரின் அழகால் பிரியப்படுதற் குரிய நிறமுடைய திருக்கரத்திலிருக்கின்ற கமண்டலத்தால் தூரத்திற் றோன்றும் வெள்ளைக்கமலத்தி லுண்டாகும் ஆனந்தத்தையுடைய அந்திப் போதின் செந்நிறத்தால் நாற்புறத்துஞ் சூழ்ந்த செம் மேகங்களின் விளையாட்டை யேற்றவரும். (34)

மற்றும், திருக்கரத்தில் இது செங்கமல மலரென்னும் புத்தியால் நாற்புறத்துஞ் சூழ்ந்துள்ள வண்டுக் கூட்டத்திற் கொத்த விரல்களின் நுனிகளிற் சுழல்கின்ற உருத்திராக்க மாலையை யுடையவருமாகிய கௌடபாதரைக் கண்டுச் சென்றனர் என மேற் கூட்டி முடிக்க. (35)

பின்னர், சங்கரபகவற்பாதர், கௌடபாதரின் கமல மலர் போன்ற திருவடியிணையை ஆராதித்து பக்த்தி சிரத்தையின் மேலீட்டில் மூழ்கிய மனமுடையராய் வணங்கிக் கைகுவித்து அவர்க் கெதிரில் உட்கார்ந்தனர். (36)

உட்கார்ந்த அவரை கௌடபாதர், பாற்கடற் கொத்த திருக்கண்களால் அன்புடன் குளிரச் செய்து (நோக்கி) அவருடைய பற்களின் நிறம் திக்குக்களை வியாபிக்குமாறு செய்ய கீழ்வருமாறு திருவாய் மலர்ந்தருளத் தொடங்கினர், (37)

கௌடபாதர் வினா

“சங்கரபகவற்பாத, நீ, பவக்கடலைக் கடப்பதற்கு நிமித்தமாகிய கல்விகளனைத்தையும் கோவிந்தபகவற்பாதர் என்னுந் திருநாம முடையாரிடத்திற் கற்றுக்கொண்டனையோ? சச்சிதானந்த மாயும், நித்திய, நிருமல மாயுமுள்ள அறியத்தக்க அப் பரதத்துவத்தை யறிந்து கொண்டனையோ? (38)

பணிவிடை செய்பவரும், உன்னிடத்து அன்புடையவரும், விடயங்களி லிச்சையற்றவரும், உட்கருவி, புறக் கருவிகளை அடக்கியவரும், சிரத்தை யுடையவரும் தத்துவ ஞானவேட்கை யுடையவருமான உன்னுடைய சிறந்த மாணாக்கர் ஆசிரியராகிய உன்னை வழிபட்டு வருகின்றார்களா? (39)

நீ நித்தியமான பகைஞர்களை (காம முதலானவைகளை) வெற்றி கொண்டனையா? சாந்தி முதலான நற்குணங்கள் உன்னால் அடையப்பட்டனவா? அட்டாங்கங்களை யுடைய யோக சாதனை செய்யப்பட்டதா? உனது சித்தம் சைதன்ய தத்துவத்தை நன்கு வுணர்ந்து விட்டதா? (40)

இவ்வாறு, அத்துவித போதகாசிரியரிற் சிறந்த கௌட பாதாசிரியர் அன்புடன் சங்கரபகவற்பாதரை வினவிய போது, சாந்த சீலராகிய சங்கரபகவற்பாதர், அன்பு மிகுதியால் கண்ணீ ரருவி மலிந்தவராய், சிரசின்மேல் கைகளைக் குவித்துக் கொண்டு கீழ் வருமாறு விடைபகர்ந்தனர். (41)

சங்கரபகவற்பாதர்
கௌடபாதருக்கு விடை கூறல்

பகவரே, ஆசிரிய பாதராகிய தங்களால், யாது யாது வினவப்பட்டதோ, அவையனைத்தும் ஒரு தலையாக உண்டாகத் தக்கனவாம்; கருணைக்கடல் போன்ற தங்களுடைய திருக்கடைக் கண்ணால் பார்க்கப்பட்ட பிராணிகளுக்கு அரியது மொன்று உண்டு கொலோ? என்றனர். (42)

மற்றும், பகவரே, ஆசிரியராகிய தங்களுடைய திருக்கடைக்கண் நோக்கால் கணப் போதில், ஊமையன், வாக்கு வல்லுநனாவான்; மந்தமதியன், பண்டிதருள் முதல்வனாவான்; பாவச் செய்கைகளை யுடையவன், புண்ணியவான்களில் ஒருவனாய் எண்ணப்படுவான்; காமுகன் வேட்கையற்றோர்களுட் புகழுடையவனாவான். (43)

கரையற்ற தங்களுடைய மகிமையில் ஒரு சிறிதேனும் அறியும் ஆற்றலுடையார் யார்? என்னை? அனைவருக்கும் பிரசித்தராகிய வியாச முனிவரின் புத்திரர் (சுக முனிவர்)

தங்களிடத்தில் மிக்கக் களிப்புற்று நேரே தத்துவ வித்தையை உபதேசிப்பவ ராயினர் ஆதலின். (44)

## சுகமுனிவரின் பெருமை

(அச் சுக முனிவர் எத்தன்மைய ரெனிலோ?) பிறப்புத் தொட்டே ஆன்மஞான சித்தியை யுடையவர் எவரோ, உதா சீனமாய்த் தூரத்திலோ, அல்லது சமீபத்திலோ, சென்றவரு மாகிய எவரை, பராசரர் முனிவரின் புதல்வர் (வியாசர்) அன்பு மிகுதியால் சோகமுற்று, "மைந்த, மைந்த", என அழைத்துச் சென்று அடைந்தனரோ. (45)

எவர்? யோகபாடிய கருத்தராகிய தந்தையரால் (வியாச முனிவரால்) அழைக்கப் பட்டவராய் இவ் வனைத்தும் தமது வடிவே என்னுஞ் சீலமுள்ள யோக பூமி மகிமையால் (யோக நிலையின் வடிவால்) உலகத்துடன் கூடிய பிரமத்தில் ஒருமைப் பட்டவராய் தருக்கள் வடிவாகி ஏன், ஏன், என விரித்து மறுமொழி கூறியருளினரோ, (அத் தன்மைய சுக முனிவர் தங்களுக்குத் தத்துவோபதேசகராயினரோ, என மேலே கூட்டிக் கொள்க. ஈண்டு யோகவலியால் போதல், வருதல், அமைதலின் பரீட்சித்துக்கு உபதேசக ரானதுபோல் இவருக்கும் உபதேசகராந் தன்மையும் விரோத மாகாமை காண்க). (46)

ஆகையால், இத் தன்மை வாய்ந்த ஞான சமுத்திரம் போன்றவராகிய தங்களுடைய கமல மலர்க் கொப்பாகிய களிப்பைத் தருந் திருவடி யிணைகள், தெய்வாதீனமாய் எம்மை யொத்த எளியவரின் கண்களுக்குப் படுமாகில் அது அவ் வன்பரின், அறிதற்கரிய பாக்கியமேயாம். (47)

## கௌடபாதர் சங்கரபகவற்பாதருக்கு இனிது கூறல்

இவ் வண்ணம், சங்கரபகவற்பாதர் கூறியதைக் கேட்டு கௌடபாதர் அவரை நோக்கி, "மைந்த, உண்மையான உன்னுடைய குணக்கூட்டங்களைக் கேள்வியுற்று சாந்த மனத்தனாகிய உன்னைக் காணுதற் பொருட்டே என் மனம் மிக்க எழுச்சியைக் கருவிற் கொண்டதாயிருந்தது. (48)

மற்றும், என்னுடைய மாண்டூக்கிய காரிகை யென்னுங் கமல மலருக்கு இனிய இரவிகளான பாடிய நூல்கள் உன்னாற் செய்யப்பட்டுள்ளன வென்று கோவிந்த பகவற்பாதராற் கேள்வியுற்று, அறிஞ, இப்போது உனது கண்களுக்குப் புலப்பட்டேன்" (49)

இவ்வாறு வெளிப் படையாய்த் திருவாய் மலர்ந்தருளிய கௌடபாதருக்கு வினய மதியுடைய சங்கரபகவர்பாதர் தம்மாற் செய்யப்பட்ட பாடியங்களனைத்தையும் அவருக்குச் செவியறிவுறுத்தினர்; அவற்றுள் மாண்டூக்கியவுபநிடதத்தின் பாடியம், காரிகையின் பாடியம், என்னும் இரண்டு பாடியங் களையுங் கேட்டுக் களிப்புற்று சங்கரபகவற்பாதரை நோக்கிக் கீழ் வருமாறு திருவாய் மலர்ந்தருளினர். (50)

"அறிஞ, எனது காரிகையின் கருத்து மாறுபடாத பாடியமும், அத்தன்மைய மாண்டூக்கிய வுபநிடத பாடியமுமான அவ் விரண்டு பாடியங்களைக் கேட்டதால் உண்டாகிய களிப்பு அறிஞரிற் சிறந்த உனக்கு வரமொன்று கொடுக்க என் மனதை உற்சாகப் படுத்துகின்றது, ஆதலின் விரைவில் நீ வரம் வேண்டுவா யாக." (51)

என, கௌடபாதர் கூறியதைச் சங்கரபகவற்பாதர், "வடிவ வேற்றுமையால் உபலட்சித்ராகிய (சுகப்பிரம ரிஷிக்கு எல்லாவகையாலும் ஒப்புடையாராகிய) தங்களை, யுகங்கள் மூன்றிற்கும் பரமான்மாவாகிய விஷ்ணு மூர்த்தி யென்றே கண்டு தரிசித்தேன், இதைப்பார்க்கிலுஞ் சிறந்த வரமொன்றுளதோ? அங்ஙனமாயினும் ஆசிரியரே, எனது சிந்தனை இடையறாது சைதன்ய தத்துவ விஷயமாக இருத்தல் வேண்டுமென்னும் வரம் எனக்கு ஈந்தருள்வீராக," என்றிரந்தனர். (52)

அதற்குக் கௌடபாதர், "அவ்வாறே உண்டாகுக," என்றருளி, மோகமற்ற சிரஞ்சீவி முனிவராகிய அவர் மறைந்தனர், சங்கரபகவற்பாதர் இச் செய்தியைத் தமது மாணாக்கருக்கு அன்புடன் கூறி அங்கு அவ் விரவைக் கழித்தனர். (53)

### சங்கரபகவற்பாதர் சருவஞ்ஞபீடமேற முயலுதல்

அதன் பின், சங்கரபகவற்பாதர், விடியற்போதில் கங்கையில் தமது மாணாக்கருடன் நித்திய கருமங்களை விதிப்படி முடித்துக் கொண்டு, அக் கங்கைக்கரையில் பிரம நிட்டை செய்துகொண் டிருந்தனர். இதற்கிடையில் (கீழ் வரும்) உலக வதந்தியைக் கேள்விப்பட்டனர். (54)

இப் பூமியில், சம்புத் துவீபஞ் சிறந்ததாம்; அதிலும் பாரத மண்டலஞ் சிறந்ததாம்; அதிலும் வாக்கிற்கு இறைவியாகிய சாரதா (கலைமகள்) இருக்கப்பட்ட காசுமீரம் என்னும் பெயருடைய மண்டலஞ் சிறந்ததாம். (55)

அக் காசுமீர தேசத்தில், எதி லேறுவதற்கு முற்றுணர்வுடைய நல்லார்கள் *ஆற்றலுடைய ராவரோ, மற்

றையர் யாவரும் ஆற்றலற்றவ ராவரோ, அத்தன்மைய சரு வஞ்ஞ பீடத்தை யுடைய சரசுவதியின் ஆலய மென்னு மொரு மண்டபம் உளதாம். (56)

அதன், பூர்வ பாகத்திலுள்ள வாயிலை, கிழக்குத் திக்கிலிருந்து வந்த முற்றுணர்வுடையோர் திறந்து விட்டனர்; மேற்குப் பாகத்திலுள்ள வாயிலை மேற்குத் திசையிலிருந்து வந்த முற்றுணர் வுடையோர் திறந்து விட்டனர்; வட பாகத்திலுள்ள வாயிலை வடதிசையி லிருந்துவந்த முற்றுணர் வுடையார் திறந்து விட்டனர்; தெற்குத் திசையி லுள்ளவர் வந்து தெற்குப்பாகத்தி லுள்ள வாயிலை இன்னுந் திறந்திலர். (57)

என்னும், இவ் வுலக வதந்தியைக் கேள்வியுற்று, தெற்குத் திசையி லவதரித்த சங்கரபகவற்பாதர், அவ் வுலக வார்த்தை, பிரமாணமா? அன்று? என்று உறுதி செய்தற் பொருட்டுக் களிப்புற்றவராய் அவ் வாயிலைத் திறப்பதற்குக் காசுமீர தேசஞ் சென்றனர், (58)

சென்று, "பிரசித்தியாகிய தென்திசை வாயில் அடைத்திருக்கின்றது; இப்பூமியின் தெற்குத் திக்கில் பண்டிதர்களிலர்" என்னும் உலகவதந்தியை பயனற்றதாகச் செய்வதற்குச் சங்கரபகவற்பாதர் களிப்புற்று அங்குள்ள சாரதா தேவியின் ஆலயத்திற்குச் சென்றனர். (59)

கூட்டமான மதவாதிக ளென்னும் கசேந்திரர்களுடைய தீய மதவொழுக்கின் செருக்கினை அடியோடு உராஞ்சித் தொலைக்கின்ற, முற்றுணர்வுடைய சங்கரபகவற்பாத தேசிகேந்திர ராகிய சிம்மம் வருகின்றது, (இது எத்தன்

மைய தெனினே?) துறவென்னும் பற்களாகிய ஆயுத முடையது; வேதாந்த மென்னும் பெரும் வனத்தைப் பற்றி யிருப்பது, வேதாந்தத்தினும் வேறான துவிதமென்னும் வனங்களை யருந்துவது, ஆகையால், மதவாதிக ளென்னும் தீய சடமதியை யுடைய யானைகளே, நீங்கள் தூரத்திலோடி விடுவீர்களாக. (60)

மற்றும் இச் சிம்மம், யானைகள் செல்லுந் தடங்களின் உட்பாகங்களில் ஒழுகியுள்ள மத சார வாசனை மிகுதியால் எழும்பும் வண்டுக்கள் சூழ்ந்த யானையின் மத்தகத்தைப் பிளத்தற்குரிய வலியுடையது; மதமின்றிய யானைகளையும், பற்களில்லாத யானைகளையும் ஒரு கணக்கில் எண்ணுதது போன்று, நீத்தார்களைப் பழிக்கின்ற தீய சனங்களையும் உண்மையாக இவைகளு மொருபொருளென கண்ணல் நோக்காதது. (61)

மதவாதிகள் சுங்கரபகவற்பாதரைத் தடுத்தல்

சங்கரபகவற்பாத தேசிகேந்திரர், இவ்வண்ணம் மார்க்கீத்திற், சொல்லிக்கொண்டு, தென்திசையிலுள்ள வாயிலி னருகை யடைந்தனர்; அங்கிருந்து அக் கதவைத்திறந்து அதிற் புகுவதற்கு ஆடம்பரஞ் செய்துகொண்டிருந்த சங்கரபகவற்பாதரை மதவாதிகளின் குழாங்கள் தடுத்தனர். (62)

அதன் பின், அந்த மதவாதிகளின் குழாங்கள் சங்கர பகவற்பாதரை நோக்கி, "(நீத்தாரிற் சிறந்தோய்,) இவ் வண்ணம் பெருமை பண்ணிக் கொண்டிருப்பது எதற்கு? நீர் ஈண்டுச் செய்ய வேண்டிய காரியமெதுவோ, அதை எங் களுக்கு மெல்லச் சொல்வீராக; விரும்பிய காரியத்தில் ஆடம்பரஞ் செய்தல் வேண்டா". (63)

மற்றும், நீர், யாரேனும் எம்மைப் பரீட்சிக்கின்றவர் வருவரேல் வருவாராக; யான் மறையனைத்தையு முணர்ந் துள்ளேன்; யான் உணராதது ஒன்றுமில்லை; என்று நீர் சொல்கின்றீர்; ஆதலின் சிறப்படைய விரும்பிய நீர் எங் களுக்குப் பரீட்சை கொடுத்துவிட்டு தேவாலயத்திற் புகு வீராக, என்றனர். (64)

## கணுதமதத் தார்க்கிகர்வினு

அவ் வார்த்தையைக் கேட்டு, பரீட்சை கொடுக்க முன் வந்து நின்ற சங்கரபகவற்பாதரை நோக்கி தார்க்கிகரில் ஒரு வன், அறிஞரே, இரண்டு பரமாணுக்களின் சையோகத் தால் சிறிய இரட்டையணு உண்டாகின்றதென்பது எமது மதக் கொள்கையாம். (65)

இதில், இவ் விரட்டையணுவைப்பற்றி நிற்கின்ற அணுத்தன்மை எதினின்று உண்டானது நீர் முற்று முணர்ந்தவரென்பீரேல் அதைக் கூறுவீராக? இன்றேல், உம்மை வல்லுநர் என்று சொல்லுதற் பொருட்டு உமது மாணுக்கர் பொய்யாக நீர் சருவக்ஞரென்று சொல்கின் ருர்கள் அஃதெவ்வாறு உமக்குப் பொருந்தும்? சருவஞ்ஞர் என்பதின் பொருள் உம்மிடத்திலின்ரும் அது கேவலம் பேச்சு மாத்திரத்ததாம் என்றனன்; (66)

## கணுதமதத் தார்க்கிகருக்கு சங்கரபகவற்பாதரின் விடை

இரண்டு பரமாணுக்களிலுள்ள துவித்வமே (இரண் டென்னுந் தன்மையே) இரட்டை யணுவிலுள்ள அணுத் தன்மைக்குக் காரணமாம், என, அறிஞராகிய சங்கரபகவற் பாதர் கூறிய விடத்து, அவ் வாக்கியத்தைக்கேட்டு நன்கு

அவரை ஆராதித்துக் கொண்டு கணாதமதத்தின் இலக்ஷி தானே நீங்கி விட்டனள். (67)

## கௌதம மதத் தார்க்கிகரின் வினா

அதன் பின், அவ் வாதிகளுள் கௌதம மதத்தைத் தழுவிய நையாயிக னொருவன், செருக்குற்றவனாய், சங்கர பகவற்பாதரை நோக்கி நீ சருவக்ஞனெனில், கணாத மதத்திற் கொள்ளப்படும் முத்தியினின்று அட்சபாதராகிய கௌதம மதத்திற் கொள்ளப்படும் முத்தியின் விசேடத்தைக் கூறுவாயாக, இன்றேல், "நான் சருவக்ஞன், என்னும் உறுதிமொழியை யொழிப்பாயாக என வினாவினன். (68)

## கௌதம மதத் தார்க்கிகருக்கு சங்கரபகவற்பாதர் விடை

(தருக்க முணர்ந்தோய்,) குண சம்பந்தம் அடியோடு நாசமான விடத்து ஆகாயம் போன்றுள்ள நிலைமையே கணாத மதத்தில் முத்தியாம்; அதன் சம்பந்தப்பட்ட அக்க பாதர் மதத்திலோ, குண சம்பந்தம் முழுது மொழிந்த விடத்து ஆனந்த வுணர்ச்சியுடன் ஆகாயம் போன்றுள்ள நிலைமை முத்தியாம். (69)

இவ் விருமதங்களிலும் பதார்த்தங்களின் பேதமோ, (கணாத மதத்தில் எழுவகைப் பாதார்த்தங்க ளென்பதும், கௌதம மதத்தில் பதினாறு வகைப் பதார்த்தங்க ளென்பதும்) வெளிப்படையாகப் பெறப்பட்டனவேயாம். அவ்வாறாகவே, இரண்டு மதங்களிலும் உலகிற்குப் பரமேசுரனே நிமித்த காரணனாவன், என, மறுமொழி கூறவும், அவ் வீசுர வாதியாகிய தார்க்கிகன் நீங்கினன். (70)

### கபில மதத்தரின் வினு

அவ் வாதிகளில், சாங்கிய மதத்தன் ஒருவன் அவரை நோக்கி, " நீர் சருவஞ்ஞரெனின், கபில மதத்தில், மூலப் பிரகிருதி சுவதந்திரமாய் (தானே) உலகிற்குக் காரணமா? அல்லது, சைதன்யத்தால் அதிட்டிக்கப் பட்டு உலக காரணமா? இதைக் கூறுவீராக? இன்றேல் உமக்கு சருவக்ஞ பீடத்தி லேறல் அரியதாகும் என்றனன். (71)

### கபில மதத்தருக்கு சங்கரபகவற்பாதர் விடை

சாங்கிய மதத்தரே, மூலப்பிரகிருதி முக்குண வடிவாய் நின்று அநேக வுருவங்களைப் பெற்று சுவதந்திரமாகவே உலகிற்குக் காரணமாகின்றது; என்பதுவே காபில மதத்தின் சித்தாந்தப் போக்கு, வேதாந்த பட்சத்திலோ, பராதீனப் பட்டாதாமென உடன்பாடு என்றனர்; அதிலிருந்து கபில மதத்தன் நீங்கிவிட்டனன், (72)

### பௌத்த மதத்தர் வினு

அதன் பின்னர், புறப்பொருள் வாதம், விஞ்ஞானவாதம், சூனிய வாதம், என்பவைகளால் தரையின்கண் மிகுந்த கருவ முடையவர்களான, (சௌத்திராந்திகர், வைபாடிகர், யோகாசாரர், மாத்தியமிகர், என்னும்) பௌத்தர்கள் சங்கரபகவற்பாதரை நோக்கி, "துறந்தோரே, நீர், எங்களுக்குப் பரீட்சை கொடுத்துவிட்டு சாரதா தேவியின் ஆலயத்திற்குச் செல்வீராக," என்று கூச்சலிட்டுக்கொண்டு அவரைத் தடுத்து விட்டனர் (73)

நீர், இத் தேவாலயத்திற் புக விருப்புடையரேல், புறப் பொருள் விவாதம் இருவகைத்தாம், அவற்றில் ஒன்றற்

கொன்றுள்ள வேறுபாட்டைச் சொல்வீராக? மற்றும், விஞ்ஞான வாதிக்கும் உம்முடைய மதத்திற்கும் உள்ள வேறு பாடு யாது? அதையுங் கூறுவீராக, கூறிவிட்டு தேவாலயத்திற்குச் செல்வீராக; எனத் தடுத்தனர். (74)

## பௌத்தர்கட்கு சங்கரபகவற்பாதர் விடை

புத்தர்கள், சௌத்திராந்திகர், அறியப்படும் பொருளெலாம் அநுமான முதலான வைகளா லுணரப்படு கின்றன என்று கூறுகின்றார்கள். மற்றையவரோ, (வைபாடிகரோ) அப் பொருளனைத்தும் கட்புலத்தாலே அறியப் படுகின்றன என்கின்றனர்; இவ் விருவருக்கும் பொருளெலாம் ஒரு கணப்போதில் அழிவனவா மென்பது சமமேயாம்; இவர்களுக்குள்ள வேறுபாடோ, பொருள், இலிங்க முதலானவற்றா லறியப்படல், நேத்திரத்தாலே அறியப் படல், என்னு மித்துணையே வேறுபாடாம். 75)

மற்றும், விஞ்ஞானவாதிகள், விஞ்ஞானங்கள், க்ஷணிகங்கள் (கணப்போது நிலைப்பன) என்றும், அநேகங்கள் என்றும் உடன்பட்டுள்ளார்; வேதாந்திகளோ, ஞானம் (சைதன்யம்) நித்தியம், ஒன்று, என உடன் படுகின்றனர், ஆகையால் இவ் விருவருக்கும் பெரிதும் வேறுபாடாம், என்றனர் அதைக் கேட்ட பௌத்தர் நீங்கிவிட்டனர். (76)

## சைன மதத்தர் வினா

பின்பு, திகம்பர மதத்தைத் தழுவியவர் (திக்கையே ஆடையாக வுடையார்) சங்கரபகவற்பாதரை நோக்கி, நீர் சருவக்ஞரெனின், ஒரு இரகசியம் எமக்குக் கூறுவீராக; (அஃது தென்னையோ வெனின்?) சைன மதத்தில் 'காயம்'

என்னும் பதத்தை அடுத்துள்ள சத்தங்கள் (வாக்கியங்கள்) இருக்கின்றனவன்றோ, அவ் வாக்கியங்களுக்குப் பொருள்கள் யாவை? ஆசிரிய, இதை நீர் விரைவிற் கூறுவீராக என்று வினவினர். (77)

## சைனருக்குச் சங்கரபகவற்பாதர் விடை

அதற்குச் சங்கரபகவற்பாதர் சைனரை நோக்கி, "சைன மதத்தர்காள், ஆண்டு உங்களுக்கு விருப்புளதேல், அதைக் கூறுகின்றேன் கேட்பீர்களாக, அந்தச் சத்தங்களுக்குப் (வாக்கியங்களுக்கு) பொருள்கள், சீவன் முதலான ஐவகைப் படுவனவாம், என்றனர், மற்றும், சிறப்பற்ற சைன மதத்தில் மற்றேதேனும் பொருள் ஒன்று உணரப்பாலதாமாகில், அதையும் எனக்குத் தெரிவிப்பீர்களாக, (அதையுங் கூறுகின்றேன்) என்றனர், அதிலிருந்து சைன மதத்தர் நின்று விட்டனர். (78)

## சைமினி முனிவர் மதத்தரின் வினா

மறைக்குப் புறம்பான வாதிகளுக்கு (மேற்கூறிய வாங்கே) மறு மொழிகள் கூறிய விடத்து, அங்குள்ள சைமினி மதத்தன் ஒருவன், (சங்கரபகவற்பாதரை நோக்கி அறிஞ,) சைமினி முனிவரின் மதத்தில், சத்தம், என்ன உருவ முடையது? அது பொருளா? அல்லது, குணமா? இதன் உண்மையைக் கூறுவீராக, கூறிவிட்டு நீர் தேவாலயத்திற் செல்வீராக என்று வினவினன். (79)

## சைமினி மதத்தருக்குச் சங்கரபகவற்பாதர் விடை

கருமகாண்டியே, எழுத்துக்கள், நித்தியங்களாம்; வியாபகங்களாம்; செவிப்புலனு லறியப்படுவனவாம், அவை

களின் வடிவமோ, ஒலித்திரளின் வடிவமாம், அதுவும் நித்தியமாம், பொருளாம், வியாபகமாம், என்று சைமினி மதத்தர் கூறுகின்ருர் என, அவனுக்கு; ஆசிரியருக்குள் இந்திராகிய சங்கரபகவற்பாதர் மறுமொழி கூறி யருளினர். அதிலிருந்து சைமினி மதத்தர் நின்றுவிட்டனர். (80)

சங்கரபகவற்பாதர் சருவஞ்ஞ பீடமேறுதல்.

சங்கரபகவர்பாதர், இவ்வாறு சாத்திரங்கள் யாவற்றிலும் (எல்லா மதத்தர்களுக்கும்) மறு மொழி கூறிவிட்டமையின், அவரை அவர்கள் (நாத்திகர் ஆத்திகர் அனைவரும்) நன்கு பூசித்தனர், பின்னர் (அச் சருவஞ்ஞ பீடத்தின்) வாயிலையுந் திறந்து விட்டனர், பின்னர், (சங்கரபகவற்பாதர் அப் பீடத்தின் வாயிலுக் கருகிலுள்ள உட்பாகத்துஇடத்திற் புகுந்தனர். (81)

புகுந்து சங்கரபகவற்பாதர், அங்கிருந்து தம்முடைய திருக்கரத்தால் சனந்த ஞசிரியரைப் பற்றிக் கொண்டு சாரதா பீடமேறும் மனமுடையராய்ச் சென்றனர் ; அதற்கிடையில், தேவதைகளுள் முதலில் எண்ணப்பட்ட (தேவர்களிற் சிறந்த) பிரமனது மனைவியராகிய சாரதா தேவியார், அவருக்கு அசரீரி வாக்கால் கீழ் வருமாறு கூறியருளினர்.()

சாரதாவின் ஆசங்கை.

"சங்கரதேசிக,—உனக்கு சருவஞ்ஞத் தன்மை (முற்றுணர்தற்றன்மை) இருக்கின்றது (இதில் ஐயமில்லை) எல்லா வகையாலும் முன்னமே என்னுல் பரீட்சிக்கப்பட்டிருக்கின்ருய், ஆதலின் நீ முற்றுணர்ந்தவ னன்றெனின் முன்னர் பிரசித்தமானவர்கள் என்ன எண்ணப் படுபவருட் சிறந்த

வரும், பிரமனது மற்றொரு வடிவருமாகிய விசுவரூபர்: நினக்கு எவ்வாறு மாணாக்கராவர்? (83)

சருவஞ்ஞ பீட மேறுவதில் முற்றுணர்தற் றன்மை மாத்திரம் நிமித்தமன்று, மற்றோ, பரிசுத்த முடைமையு மாம்; ஆகையால் உனக்குப் பரிசுத்த முடைய தன்மை, இருக்கின்றதோ? அல்லது இல்லையோ? என ஆராய்ச்சி செய்தல் வேண்டும், ஒரு கணப்போது இங்கு நிற்பாயாக, விளையாடாதே, (84)

மற்றும், நீ, துறவில் ஒழுக்க முடையவனா யிருந்தும், கருங் குழலாள்களைப் புணர்ந்து காமகலை யிரகசியத்தில் வல்லுந ராயினை ஆகலின் இத்தன்மைய சருவஞ்ஞ நிலை மையை யடைவதற்கு உனக்குத் தகுதி எவ்வாறுளது? (இல்லை) சருவஞ்ஞ நிலைமையி லேறுவதற்கு நிருமலமாந் தன்மையுங் காரணமா மாதலின்.'' (85)

## சாரதாதேவிக்குச் சங்கரபகவற்பாதரின் மறு மொழி.

(சங்கரபகவற்பாதர் சாரதா தேவியை நோக்கி) அம் மையாரே, யான் யிவ் வுடம்புடன் பிறப்புத் தொட்டு ஒரு குற்றமுஞ் செய்திலேன்; இதில் ஐயமடையேன்' வேறுடம் பைக் கொண்டு யாது செய்தேனோ, அக் கருமத்துடன் இப்போது வேறாயுள்ள இவ்வுடம்பு சம்பந்தப் படாது. (86)

சங்கரபகவற்பாதர் இவ்வாறு சாரதா தேவிக்கு வேறு பேச்சொழிந்த மறு மொழியைக் கூறிவிட்டு சருவஞ்ஞ பீடத்திலேறி யமர்ந்து. சந்தோட மடைந்தனர்; மற்றும்,

அவர், கஹோல முதலானோர்களாலும், கார்க்கியாலும், யாக்ஞவல்க்கியர் ஆராதிக்கப் பட்டது போன்று, சாரதா தேவியாலும் மற்றைய பண்டிதர்களாலும் இனிது பூசிக்கப் பெற்றனர். (87)

சங்கரபகவற்பாதரின்
சாரதா பீடவாசத்தை விதத்தல்.

விவாதத்தாற் றோன்றின விளையாடல்களையுடைய பிரதிவாதிகளென்னும் பண்டிதர்களுடன் விவாதமாடுவதில் உளதாகும் நீக்கற் கரிதான தருக்கங்களை பழித்துத் தள்ளுவதில், சுவதந்திரமானபுகழ்களாற் சூழப்பட்ட திக்குக்குக்களால் விதந்தோதப்படும் பெரும் பிரபாவமுடைய, சங்கரபகவற்பாதர், சருவஞ்ஞரே யாவர்; அதனால் பல்லோராற் போற்றப்படுபவரும், இப் பீடத்தில் வசித்தற் குரியருமாவர், என்று பெருங் குரல்கொண்ட பயனுடைய தோத்திரங்களால் அனைவராலும் போற்றப்பட்ட எதிகளுக் கரசர் சருவஞ்ஞ பீடத்தமர்ந்திருத்தல் எல்லாவற்றினும் அழகுடையதாய் விளங்கியது. (88)

பிரம வித்தைக்கு ஆசிரியராகிய சங்கரபகவற்பாதருக்கு முன்வந்த மதவாதிகளுடன் விவாதமென்னும் தந்திரவிளையாட்டிலெழும், திம், திம், என்னும் ஒலியால், பூமியில் அட்சபாதருடைய கதைப் பேச்சு யாண்டோ ஒடுங்கிவிட்டது; காபில மதத்தின் கதை வார்த்தையோ, எவ்விடத்திலோ இலயமாகி விட்டது; முதலில் பாதகமின்றிய பிரபாகராரின் வார்த்தைகள் கேடுற்றன; பட்டபாதருடைய இன்சொற்கள் யாண்டோ ஓரிடத்தில் தனியாய் வெளிப்பட்டு விளங்கின; பாதஞ்சல, காணாதர்களின் மதங்களை முக்கியாய்க் கொண்ட, பேதம் என்னும் வார்த்தையே தகுதி யிலாததாகி விட்டது. (89)

பாகண்டரின் கூட்டங்க ளென்னும் இருளைத் தொலைப் பதையே தொழிலாகவுடைய சூரராகிய நீத்தர்களுக் கரசர் (சங்கரபகவற்பாதர்) சாரதா பீடத்தி லமர்ந்து விளங்கும் போது, கணாத மதத்தர்களின் நல்ல விவாத மெங்கே? கபில மதத்தர்களின் வார்த்தை யாண்டையது? பட்டமதத்தர் களின் வாக்கின் பெருக்கு எங்கே, பட்டபாஸ்கரரின் பேதா பேத விவாத மெங்கே? யோகமதத்தின் பழங்கதை யெங் கே? பிரபாகரருடைய மதம் இருளாகாது நிற்பதெங்கே? குரு மதம் இலகுவாகாது இருப்பது யாண்டு? சைனமதத் தர்களின் விரிவுரைக ளெங்கே? (எல்லாம் ஒழிந்தன வென்பதாம்). (90)

இவ்வாறு சங்கரபகவற்பாதர் சருவஞ்ஞ பீடமேறி யமர்ந்த பின்னர், தேவ மார்க்கத்தில் வரிசையாய் ஆகுதி யுண்பவர்களுக்கு (தேவர்களுக்கு) அரசன் (இந்திரன்) என் பவனால் ஏவப்பட்ட தேவர்களின் உள்ளங்கைகளா லடிக்கப் பட்ட அதிசயிக்கத்தக்க துந்துபியின் (பறைவிசேடத்தின்) கடலைச் சுழலச் செய்யும் மேகத்திரளின் கர்ச்சனை போன்ற ஒலிகளால் திக்குக்களின் சந்துக்கள் அடைப்பட்டன. (91)

அதன் பின், அமுத மருந்துவார் (தேவர்கள்) களிப் பால் இந்திராணியின் மயிர் முடியிலிருப்பனவும், சிலநாள் விரியாதனவுமான கற்பகத்தருவின் மலர்களை, சங்கரபகவற் பாதரின் சிரசில் புட்ப மழையாகப் பெய்தனர். (92)

இவ்வாறு, களிப்புற்ற சங்கரபகவற்பாத முனிவர், சருவஞ்ஞ பீடத்திலமர்ந்து விளங்கினர், இவர் இச் சரு வஞ்ஞ பீடமேறியதும், தம்முடைய அத்துவித மதஞ்சிறப் படைதற் பொருட்டேயன்றி தமது பெருமையின் பொருட்

டன்று; அதன் பின்னர், தமது சுரேசுரர் முதலான சில மாணுக்கரைச் சிருங்ககிரி முதலான் ஆசிரமங்களுக்குத் தலைவராய் ஏற்படுத்திவிட்டு, சில, மாணுக்கருடன், வதரி காசிரமத்தை யடைந்தனர். (93)

பின்னர், சங்கரபகவற்பாதர் வதரிகாசிரமத்தில், ஏனைய தரிசன நூல்களனைத்தையும் வெற்றி கொண்டவர்களும், உடன்படாதவர்களும், பாதஞ்சல தந்திர நூலில் மாத்திரம் நிட்டை யுடையவர்களுமான சிலர்களுக்குக் கருணையால் தம்மா லியற்றப்பட்ட பாடியங்களைப் போதித்துக்கொண்டு அங்குச் சிலநாட் போக்கினர். (94)

அங்குப் பரந்த சந்திர கிரணம் போன்று விரிந்த தமது புகழையுடைய சங்கரபகவற்பாதர், சாத்திரங்களைப் போதித்து புத்திமான்களுடைய மனதை எப்போதும் களிப்படையச் செய்து கொண்டு அழகுடன் உள்ளவாறு விளங்கினர், (95)

மேற்கூறிய இயல்புடையவைகளும், கலிமலத்தைத் தொலைப்பவைகளுமான நற்சரிதங்களால் விளங்கிய புகழ்க் களஞ்சியராகிய சிவாவதாரருக்கு (சங்கரபகவற்பாதருக்கு) உண்மையாய் அப்போது வயது முப்பத்திரண்டாயது. (96)

## சங்கரபகவற்பாதர் கேதாரத்தை யடைதல்

சங்கரபகவற்பாதர், நற்குண முடையோர்களால் விரித்துரைக்கத் தக்கதும், கலி தோஷத்தைப் போக்குவதும், முத்திக்கு மூலமுமாகிய பாடியத்தை யியற்றி யருளினர்; தீய மதியுடையவர்கள் வணங்குதலா லுண்டாகிய (புறமதத்தரான) பண்டிதர்களின் செருக்கைத் தொலைத்தனர்,

தீய நெறிகளைத் தொலைத்ததாற் குற்றமற்ற முத்திக்கு ஒரு மரபை (வழியைச்) செய்தருளினர். பிரம வித்தை யையும் போதித்தருளினர், இதன்மேற் சிறந்தன எவை இனி அவரால் செயற்பாலனவாம். (97)

மூவுலகத்தும், மந்தாரைமலர், வெண்மல்லிகைமலர், சந்திரனுடைய நிலவு, முத்துமாலை, சந்தனம், வச்சிரமணி, நீர்ப்புகை, நட்சத்திரம், என்பவைகளுக் கொப்பான கரு ணையமுதப் பெருக்குக்களால், நல்லார்களின் தீனத்தன்மை யாகிய அக்கினியை இல்லாது செய்தருளினர், இப்போது அவரால் நறுமண முடையது மேல் யாது செய்யற்பாலதாம் (யாதும் இல்லை யென்பதாம்)? (98)

சங்கரபகவற்பாதருடைய உறுதிப்பட்ட பெரும் புக ழால் மத்திய திக்குக்கள் நிறைந்தன; சிறந்த அவருடைய அற்புதத் திருவிளையாட்டால், மத்திய திக்குக்கள் வியப் புற்றதாகச் செய்யப்பட்டன; அவருடைய அன்பர்கள், அவ ரவர்கள் விரும்பின போக, முத்திகளின் உபாயங்களை அவர் களுக்குச் செய்ததால் கிருதார்த்தர்களாக்கப் பட்டார்கள்; அந்த எதிச் சக்கரவர்த்தியாரால் இனிமேல் செய்யத் தக்கது யாது? (99)

பின், யோகிக்குழாங்களுக்குத் தலைவரும், துறவி களுக்கு வேந்தருமாகிய சங்கரபகவற்பாதர், ஆபத்தினின் றுங் கைதூக்கி விடுவதும்; வழிபடுவோருக்கு அளவிலாத நலத்தைக் கொடுப்பதும்; பாவ மென்னுங் காட்டுத் தீயின் வெப்பத்தைப் போக்குவதுமாகிய கேதாரத்தை யடைந் தனர். (100)

அங்கு, மிகுந்த குளிராற் பீடிக்கப்பட்ட மாணுக்கர் குழாங்களைக் காப்பாற்றுதற் பொருட்டு, அளவிலாத ஆற்ற

லுடையவரும், நூலாசிரியரிற் சிறந்தவருமாகிய சங்கரபக வற்பாத தேசிகர், இளம்பிறை யணிந்த இறைவனை வெந்நீர் வேண்டுமெனப் போற்றினர். (101)

நீத்தார்களுக் கிறைவர் பரசிவனைப் பிரார்த்தித்தவுடன் அச் சிவன் தனது திருவடியிலிருந்து ஒரு வெந்நீர் ஆற்றை உண்டாக்கி யருளினன்; எதிகளுக் கரசரின் புகழைப் பிர சித்தியாக்கிய அவ் வெந்நீர் நதி இப்போதும் அங்கு ஓடிக் கொண்டிருக்கின்றது. (102)

## சங்கரபகவற்பாதர் கைலைக் கேகல்

இவ்வண்ணம், தெய்விகச் செய்கைகளைச் செய்த பர சிவாவதார ராகிய சங்கரபகவற்பாதரை உயர்ந்த கைலையங் கிரி முகட்டிற்கு அழைத்துச்செல்ல, பிரமன், இந்திரன், உபேந்திரன், வாய்வு, அக்கினி, முதலான சிறந்த தேவ கணங்கள், இருடிகணங்களுடனும், சித்தர் கணங்களுடனும் வந்தனர். (103)

அவர்கள் வந்து, அளவற்ற மின்னற் கொடிகளைப் பழிக்கத்தக்க அளவிலாத தேவ விமானங்களால் விண்முழு தையும் மறைத்தவர்களாய் சந்நியாசி வேடந்தாங்கிய முப் புரதகன மாதேவரைத் துதித்து அளவற்ற மந்தார தரு வின் பூக்களால் அருச்சித்துக் கீழ் வருமாறு கேட்டு கொண் டனர். (104)

அனைத்திற்குங் காரணமாகிய தேவர், விடத்தை யருந் தியவர், காமனைக் காய்ந்தவர், முப்புரத்தைச் சங்கரித்தவர், உலகத்தின், தோற்றநிலை யொடுக்கங்களுக்கு நிமித்த மான வர் என்னும், மாதேவராகிய தாங்கள் எதன் பொருட்டு இத்தரையை யடைந்தீரோ, அதைச் செய்தருளினீர், ஆத

வின், பவத்தைப் போக்குபவரே, கிரீசரே, இப்போது எங்களுக்குப் பிரியமுண்டாக்குதற் பொருட்டு கைலையங் கிரிக்கு எழுந்தருள்வீராக. (105)

பெரும் வினயமுடைய தேவர்கள் இவ்வாறு கூறி முடிக்கவும், மாதேவராகிய சங்கரபகவற்பாதர்; தம்முடைய நிலயத்தையடைய விருப்புற்றபோதே, உருத்திர கணங் களால் அலங்கரிக்கப்பட்ட அழகுடையதும்; சரத்காலநீர், பால், பெண்ணன்னம், என்பவைகளின் வெண்மை நிறத் தைப் பழிக்கத்தக்கதுமாகிய இடபம் முன் வந்து நின் றது. (106)

இந்திரன், உபேந்திரன் முதலான தேவர்களின் தலை வர்களால் துதிக்கப்பட்டவராயும், திவ்ய புட்பங்களால் அர்ச்சிக்கப் பட்டவராயும், பிரமனால் தமது திருக்கரங் களைத் தாங்கப்பட்டவராயும், (இருந்த சங்கரபகவற்பாத வராகிய மகாதேவர்) அரிய இடபவாகனத்தின் மீது ஆரோ கணித்து கற்றைச் சடையையும், கலைமதி யணியையும் வெளிப்படுத்தியவராய் இருடிகளாற் கூறப்பட்ட அடிமை வாக்கொலியைச் செவிமடுத்துக் கொண்டு தம்முடைய திருக் கைலைக் கெழுந்தருளினர். (107)

வித்தியாரணிய முனிவரியற்றிய
சங்கர திக்கு விசயச் சுருக்கத்தில் சங்கரபகவற்பாதரின்
சருவக்ஞபீடமேறலை மேற்கோண்ட
பதினாறுவது சருக்கம்
முற்றும்.

---

சங்கர திக்கு விசய வசன காவியம்
முடிந்தது.

---

முருகக் கடவுள் துணை.



## வாழ்த்து.

அறுசீர்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

*அருமறை முடிவு வாழ்க வதன்பொரு ளென்றும் வாழ்க*
*பெருநெறி யினிது வாழ்க பிரமநன் குற்றார் வாழ்க*
*மருவுமத் துவிதம் வாழ்க மலமிலம் முத்தி வாழ்க*
*குருவெனுஞ் சங்க ராசான் குவலயம் வாழ்க மாதோ.*

## ஸ்ரீ முருகக்கடவுள் துதி.

*அறுசீர்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.*

*அமரர்க ளிட்டம் வேண்டி யானரு ளேக்கை யேற்றுக்*
*குமரில பட்ட ராகிக் குவலயங் காத்த வாறே*
*எமதுள மொட்டிற் சார்ந்து விதற்கொரு தீபம் போன்று*
*தமமற முட்ட றுத்தாள் தணிகையன் றாள்கள் போற்றி.*

குகப் பிரமம் வாழ்க.

சென்னை சூளை, எவரொடி பிரஸ்ஸில் அச்சிடப்பட்டது.—1-'34.